உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று

மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

பதின்மூன்றாந்தொகுதி.




பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1914—1915

# செந்தமிழின்

## பதின்மூன்றாந்தொகுதியுள்ளுறை.

---

## செந்தமிழ்ப் பதின்மூன்றாந்தொகுதியில் வெளிவந்தநூல்கள்.

(முற்றுப்பெற்றவை.)

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-௧௩.] ஆனந்த ௵ கார்த்திகை ௴ [பகுதி-௧.

Vol. XIII. November—December, 1914. No. 1.

## சோழர் தமிழ்ச்சங்கம்.

“செந்தமிழ்” (தொகுதி-௧௨ பகுதி ௧௨-ல்) [illegible]



சோழன் குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளி வளவன், தன்னிடத்துப் பரிசுபெற்றுப்போகின்ற ஆலத்தூர்கிழாரைநோக்கி நீ யெம்மை நினைத்து வருவையோ*வென்ன, அதற்கு அவர் உன்னை எந்நாளும இருபொழுதும வாழ்த்திப் பாடியிரேனாயின் நான் செய்ந்நன்றிகொன்றேனாவேன் என்றகருத்தொடு பாடிய பாட்டொன்று புறநானூற்றுள் உள்ளது. அப்பாட்டிற்காட்டியசெய்ந்நன்றி யின்னதெனத்தெளிதலாலும, அப்பாட்டிலுள்ள பிறகுறிப்புக்களாலும் சோழராட்சியில ஒரு தமிழ்ச்சங்கமிருந்திருக்கவேண்டுமென்றுதோன்றுகின்றது. அவற்றுள் முதலில அப்பாட்டிற்காட்டியசெய்ந்நன்றியின்னதென்பதையாராய்ந்துகொண்டு அதற்கிணங்கியகுறிப்புக்களையும பின்பு தெரித்துக்காட்டுதும். அப்பாட்டு வருமாறு:—

*எம்மை என்றது தானுந் தன் தேவியுமாகிய விருவரையுங்குறித்துநின்றது. இதற்கு ஆயிழைகணவ என்றது துகைக்கு. (தியோதகம்) நினைத்துவருவையோ வென்றது, அடிக்கடி எங்களைநினைத்து ஆசீர்வதித்திருக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டபடி.

"ஆன்முலையறுத்தவறனிலோர்க்கு
மாணிழைமகளிர்கருச்சிதைத்தோர்க்கும
பார்ப்பார்த்தப்பியகொடுமையோர்க்கும
வழுவாய்மருங்கிற்கழுவாயுமுளவென
நிலம்புடைபெயர்வதாயினுமொருவன்
செய்திகொன்றோர்க்குய்தியில்லென
வறம்பாடிற்றேயாயிழைகணவ
காலையந்தியுமாலையந்தியும
புறவுக்கருவன்னபுன்புலவரகின
பாற்பெய்புன்கந்தேனொடுமயக்கி
குறுமுயற்கொழுஞ்சூடுகிழித்தவொக்கலொ
டிரத்திநீடியவகன்றலைமன்றத்துக்
கரப்பிலுள்ளமொடுவேண்டுமொழிபயிற்றி
யமலைக்கொழுஞ்சோறார்ந்தபாணர்க
ககலாச்செல்வமுழுவதுஞ்செய்தோ
னெங்கோன்வளவன்வாழ்கவென்றுநின
பீடுகெழுநோன்றாள்பாடேனாயிற
படுபறியலனேபல்கதிர்ச்செல்வன்
யானோதஞ்சமப்பெருமவிவ்வுலகத்துச
சான்றோர்செய்தநன்றுண்டாயி
னிமயத்தீண்டியின்குரல்பயிற்றிக
கொண்டன்மாமழைபொழிந்த
நுண்பஃறுளியினும்வாழியபலவே" (புறம்-செய்-௩௪.)
திணை - பாடாண்; துறை - இயன்மொழி*

இப்பாட்டினுட்பாராட்டப்பட்ட செய்ந்நன்றிக்கு அடையாயுள்ள தொடர்களுள் "இரத்திநீடியவகன்றலைமன்றம்" என்று ஒருமன்றம் சொல்லப்பட்டிருக்கிறது. அது முன்கூறியவாறு நியாயசபை அல்லது ராஜசபையாயிருக்கவேண்டுமென்றுகொள்வோமாயின், பின்வரும் "கரப்பிலுள்ளமொடுவேண்டுமொழிபயிற்றி" என்பதற்கு வஞ்சனையில்லாத உள்ளத்தோடு உனக்கனுகூலமான நீதிமொழிகளைப்பயிற்றியெனப்

*இப்பாட்டின் துறை இயன்மொழி எனக் காட்டினமையால் இது புனைந்துரை வகையாற்பாடியதன்றென்பதும், வளவன் இயல்பினை யுள்ளவாறுரைத்தசெய்யு ளென்பதும் தெளிவின் விளங்குவனவாம்.

பொருள்கொள்ளவேண்டும். கொள்ளவே அது தன்செப்பங்கூறுத லாகிய தற்புகழ்ச்சியின்பாற்பட்டுப் பெற்றபரிசையும் இதற்குக் கைமா றுக்கிக்காட்டலால் நன்றிபாராட்டுங்கூற்றொடு சேராததாகும். ஆதலால் இங்கு மன்றமென்றதற்கு நியாயசபை அல்லது ராஜசபையென்று பொருள்கொள்வது பொருந்தாது.

இனி "மன்றப்பலவின" என்புழிப்போலப் பரிசின்மன்றமெனப் பொருள்கொள்வோமெனில், பாட்டு அல்லது கூத்துப்பயிற்றி யென னுமையாலும்,வேறு சிறப்புக்குறிப்பில்லாமையாலும் முற்கூறியவாறே "கரப்பிலுள்ளமொடுவேண்டுமொழிப்பயிற்றி" எனபது தன்செப்பங் கூறிப் பரிசிலைக் கைமாறுக்குதலாலும் நன்றிபாராட்டிற் கியையாமை யால் அதுவும் பொருந்துவதன்று •

பின்னை யாதெனில் "மொழிப்பயிற்றி" என்றமையால் அம்மன்றம், ஒரு கல்விச்சங்கமாயிருக்கவேண்டுமென்றும், தமிழ்நாட்டரசனமாட் டுத் தமிழ்ப்புலவர்கூறுதலால் அது தமிழ்ச்சங்கமாகவுமிருக்கவேண்டு மென்றுங் கொள்ளவேண்டும். பயிற்றி என்றமையால் அச்சங்கத்தைச் சார்ந்த ஒரு கலாசாலையில் அவர் இருந்திருக்கவேண்டுமென்றும் கொள்ளவேண்டும். கொள்ளவே, பயிற்றி எனபதற்கியைய அக்கலா சாலையில் ஓராசிரியராயிருந்தனரெனக் கொள்வோமெனின், "கரப்பி லுள்ளமொடுவேண்டுமொழிப்பயிற்றி" எனபது முற்கூறியபடி நன்றி பாராட்டுடன் சேராததாகும். ஆதலால் நன்றிபாராட்டுதற்கியையுமபடி பயிற்றியென்பது "நடபாட்டேற்றுதவா" (தேற்றுதவா) என்புழிப்போல ஈண்டுப் பயின்று எனனும் தன்வினைப்பொருளுணர்த்திநின்றதெனக் கொள்வது சாலவும் பொருத்தமுடையதாகும் இப்பொருள் நன்றி பாராட்டற் குறுப்பாயிருப்பதுடன் "ஒக்கலொடு......பயிற்றி" என்ற உடனிகழ்ச்சிக்கும் பொருத்தமுடையதாயிருக்கிறது

இங்குக் கரப்பிலுள்ளமொடு (பயின்று) என்றது கல்வியைச்சாக கிட்டு அமலைக்கொழுஞ்சோறு விரும்பியேனும், நின்தம்மானம்பெற விரும்பியேனுமவந் துன்னையடைந்தோமல்லோம்; உண்மையாகவே கல்வியொன்றையேபொருளாகக்கருதி யுன்னைவந்தடைந்த நாங்கள் அக்கல்வியைப்பெற்றதோடு, கரும்புதின்னக் கூலியும்பெற்றாற்போல அமலைக்கொழுஞ்சோறு ஆரவும்பெற்றேம்; அதனமேலும் பரிசிலும்

பெற்றேமென்று முமமடி நன்றிபாராட்டற்குறிப்பாயிருந்து பொருந்துமாறுகாண்க. "கரப்பிலுள்ளமொடு" என்றது தாம் முன்புகல்லாதிருந்த குறையைத் தோன்றக்காட்டினமையால் அது தற்புகழ்ச்சியாகாதவாறுங் காண்க.

இங்ஙனங்கொண்டு பொருளுரைப்பது உரைகாரர்க்குங்கருத்தென்பதைப் பயிற்றியென்பதற்குக் கற்பித்து என்று உரையெழுதாது "அப்யாஸ: ஸ்நாஸ: ஸம்ஸ்ராவ்ருத்தி:" என்னும் வடமொழிநிகண்டுப்படி அப்பியசித்து என்னும் பொருள்தோன்றப் பலகாலுஞ்சொல்லியென்த் தன்வினைப்பொருள்கொண்டே உரையெழுதிப்போந்தமையாலும், பின்னும் விசேடவுரையுள் "புனகம் - இவன்பாற்செல்வதற்கு முன்புபெற்றவுணவு, அமலைக்கொழுஞ்சோறு - இவன்பாற்பெற்றவுணவு" என்றுரைத்துப் பின்பு (அமலைக்கொழுஞ்சோறு) கற்றுவல்லரான்பிறகு "சென்று இடந்தோறும் பெற்றவுணவாகவுரைப்பினும் அமையும்" என்றுகூறிய குறிப்பினாலும் அறியலாம்.

ஆகவே ஆலத்தூர்கிழார், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனது ஆட்சியிலிருந்ததொரு பல்விச்சங்கத்தைச்சார்ந்த கலாசாலையிற் றங்குற்றத்தாரொடு கற்றுத்தேர்ந்து பட்டமும் பரிசும்பெற்றவரென்பது பெறப்படுகின்றது

இன்னும், தமிழ்மொழிப்பயிற்றியென்னாது "வேண்டுமொழிப்பயிற்றி" என்றதனாலும், "அகன்றலைமன்றம்" என்றதனாலும், "அமலைக்கொழுஞ்சோறார்ந்த" வென்றதனாலும் அக்கல்விச்சாலை அக்காலத்துக் கற்பவர் விரும்பும் வடமொழிமுதலிய பலபாஷைகளுங் கற்றற்கேற்றவாறிடம் பெறவமைக்கப்பெற்றிருந்ததென்பதும், கற்பவர்கள் நன்கு போஷிக்கப் பெற்றுவந்தனரென்பதும், ஆலத்தூர்கிழார் தமிழொன்றேயன்றி வடமொழிமுதலிய வேறுசிலமொழிகளும் பயின்றுள்ளாரென்பதும் வெளியாகின்றன. இனி, அப்பாட்டின்கண் இக்கருத்தமைந்த பிறகுறிப்புகள்வருமாறு —

லயறுத்தவறனிலோர்க்கும்
மாணிழைமகளிர்கருச்சிதைத்தோர்க்கும்
பார்ப்பார்த்தப்பியகொடுமையோர்க்கும்

*வழுவாய்மருங்கிற்கழுவாயுமுளவென
நிலம்புடைபெயராவதாயினுமொருவன்
செய்திகொன்றோர்க்குய்தியிலலெனை
அறமபாடிறறே"

(இதன்பொருள்) பசு, சிசு, பாரப்பனரைககொன்றபாதகர்ககும அப்பாவநதீருமாறு பிராயச்சித்தகாண்டத்திற பரிகாரஞசொலலிய தரும சாஸ்திரங்கள, செய்நனறிகொனறோாககு ஊழிபேரினும உய்யுமாறிலலை யென்றுரைத்துள்ளன எனபதாம இதனகுறிப்பு'—முனனமேகூறிய அறநூலாணையுளகபபட்டு உன்னிடதது நனறியறிதறபொருட்டுன்னை யெநநாளுமநினைதது நககககடவேனுககு உனசொறபடி இனித தனியே செய்ய இடமிலலையே! எனசெயவேன? எனபதாம.

இக்குறிப்புணாநதவளவன நீ யஙஙனஞசெய்ய யா னுனககுசசெய்த நனறியென? என்னக கலவிகறபிததது மறியாயோவெனகிறா; **ஆயிழை கணவ** எனபதனால.

ஆய்இழைகணவ — ஆராயநத இழையணியுடையாட்குக கணவனே இஙகு ஆயிழையெனனுநதொடா கணவன என்னும முறைப்பெயாககு அடையாகியும அதனைவிசேடியாது கணவனெனனுந துணையேயுணர வாளாநினறமையால அது இஙகொரு ஞாபகமாக வேணடும. (அதாவது கணவன எனனும முறைபபெயரானே ஆயிழைககுரியன் எனனுமபொருள தானேபெறபபடுதலாலும **ஆயிழை கணவன்** எனறதனால, இஙகு வளவனுககு வேறுவிசேடமொனறுந தோனறுமையாலும 'நினறுபயனினமை' யெனனுங குறறநதஙகும; இது சஙகமருவியசானறோராவாககாதலால அது தீாதறபொருட்டு எடுததுககொண்டவிஷயததுககுப பொருததமான பிறகுறிப்புணாததிப பயனுளதாகவேண்டுமென்பதாம ) அககுறிப்புபபொருளாவது '— உனபககலுள்ளதேவிககுக கணடஸத ஹ்ருதயஸ்தஙகளாக நீதரிபபிதத

*வழுவாயமருஙகு - பாதகஙகளையுமிடம (அதாவது அறநூலுளுள்ள பிராயச்சித்தகாண்டமெனனுமபகுதி. உயதியிலலேன்பவெனறுது "உய்தி யில்லென அறம் வழுவாய்மருங்கிற் பாடிற்று" (தர்மசாஸதிரம் பிராயச்சித்த காண்டத்திற் சொல்லிற்று) எனறு வடநூலுட பிரமாணவசனமிருககுமிடத தைககண்டு சுட்டிககாட்டியிருப்பது 'வேண்டுமொழிபயிற்றி' என்றதனகுறிப் பாற்பெறப்பட்ட பிறமொழியுள வடமொழிபயின்றவரென்பதற்குசசானறுமி அப்பொருளை வலியுறுததுகின்றது.

மங்களசூத்திரமுதலியசூத்திராபரணங்கள் சரீரபூஷணங்களாய்விளங்கு வதுபோல எனக்கும கண்டஸ்த ஹ்ருதயஸ்தங்களாக நீதரிப்பிதத பிங்களசூததிரமுதலிய சாஸ்திராபரணங்கள் ஆதமபூஷணங்களாக விளங்குவதும கணகூடாககாணுயோ எனபதாம. இதுவும வேண்டு மொழிபயிறறி எனறதை யாதரிககிறது.

இககுறிபபுணாநதவளவன, நீ புலவாகுடிபபிறநதவியலபானே பலவுஙகறறனே; யானுனைறுஞசெய்திலேன. எனறுனுக, ஆலததூர் கிழாா, பிறவும அவனசெயதநனறியினபெருமைதோன்றககூறி நனறி பாராடடவேண்டி, முனபு தாமுற்றவறுமையின்கடுமையைத தா முண் டிருநத வுணவினசிறுமையாறகூறததொடஙகி, அவவுணவு தமககுதவி யதுபற்றி, அதனையிகழாது வேதஙகூறியவாறேதெயவமாகபபாவிதது, அதன்மாட்டும நனறிபாராடடிநினறு, அதனருமைகாடடிய பெருமைப படுததி யுபசரிததுக்கூறுகினறுர் புறவுககருவனனவென்றுதொடஙகி.

புறவுக்கருவன்ன (வரகு) '—எனபது புறுவினதுகருபபையுட செறிநதிருககும முடடைககருபபோனற நுணணிய (வரகரிசியை) என்பதாம. பருககையாயரிததுணணறகும அ க ப ப ட ா ெ த ன ப து வறுமைககுறிபபு. அதுவும புறுககருபபோறபுசிக்கபபடடதென்பது அருமைககுறிபபு.*

புன்புலவரகு —பிறதானியங்களவிளையாத புலலிய உவாநிலதது விளைநத வரகு சாரமறறதெனபது வறுமைககுறிபபு. நனனிலததின் மாததிரமவிளையும பிறதானியஙகளபோலனறிப புனனிலததும விளைந ததவியது எனபது அருமைககுறிபபு.

வரகு '—பிறதானியஙகளெலலாம மடிநதுபோகநீண்டவறகட† (க்ஷாம)காலததில மடியாதுநினறு உணவாயிருநதது இதுவொனறே யென்றபொருடகுறிபபு இங்கு இருதிறததினும இசையுமாறுகாண்க.

---

*இன்னோன்னகுறிப்புககள் ஈண்டுரைககவேணடாவாயினும் முனனும் பின்னுந் தொடர்புபறறியும, அசசஙகததுப்பயினறபுலவரதுசம்பாஷணமிருநத படிகாட்டுதல்பற்றியும் இஙகு விரிக்கப்பட்டன.

†இவ்வற்கடம, களவியலுரைப்பாயிரஙகூறியதோடுபொருநதுமோவென ஆராயத்தக்கது.

பாற்பெய்புன்கம்:—பாலின்பரியாயமாகிய (பயஸ்) பயம் என்னும் பெயரால்வழங்கப்படும் தெண்ணீரிற் (சுத்தசலத்தில்) பெய்துகாய்ச்சிய கஞ்சியை. (தெண்ணீர்) பால் என்றதனுற காடிநீருமில்லையென்பது வறுமைகுறிப்பு. தெண்ணீ ா பாலாகவேகருதபபட்டதென்பது அருமைக்குறிப்பு.

தேஞெடுமயக்கி என்றது சிறிது சுவைபெறவும் பசிதணியவும் வேண்டி வடிகட்டெளிவு (பதனியின்றெளிநீா) கலநது என் ற ப டி. இதனுல, உபயிலலாககஞ்சியெனபதுங தேன்போற சிறிதுகலந்தென் பதும வறுமைக்குறிப்பு. அக்கள்ளும தேன்போனறிருந்ததென்பது அருமைகுறிப்பு.

மயககி:—கலந்துண்டு. உண ணுமளவின்சிறுமையால உண்ணுமை யோடொககும என்பதுதோனற உணணலைசசொலலாதுவிடுததது வறுமைக்குறிப்பு. அதுவும (பாற்பெய்புன்கந்தேஞெடுமயககி) பாய சததிறமேறன்கலந்துணபதுபோல (சிறிது) உண்ணப்பட்டதெனபது அருமைகுறிப்பு

குறுமுயல(கொழுஞ்சூடு):—காலுங தோலும வாலும தலையும் முதலியபோக வெஞ்சியவிறைசசி சிறிதேயெனபதும,வளர்ப்புவிலஙகின் றசையில்லையெனபதும வறுமைகுறிப்பு. மிகவுமெலலியதசையென் பது அருமைகுறிப்பு.

கொழுஞ்சூடு:—கொழுநதீயிறசுட்டெடுதத சூட்டிறைசசி. பிறி தொருசமபாரமுஞ்சேர்ககபபெருததெனபது வ று மை க கு றி ப பு. அதுவே கொழுஙகறியாககொள்ளப்பட்டதென்பதுஅருமைகுறிப்பு.

கிழிதத:—பி ய் த து த தின் ற. வயிறுரவுண்ணுமைதோனறத தின்றவென்னது கிழிதத என உபசரிததாா.

ஒக்கலொடு:—"ஒருவினையொடுசசொலலுயர்பின்வழித்தே" என் பதனுற் றனனினுயாநதுள்ள சுற்றததாாவறுமை யிங்ஙனமாகத தன் வறுமை கூறவேண்டாதாயிற்று. அதனுனே யானுமெனக்கூறுது விடுததார். விடுததாராயினும கிழித்தவொக்கலொடு யானும என எச்சச்சொல் வருவிததுக்கூட்டுக.

ஒக்கலோடு:—(பயிற்றி) நானொருவனேயன்றி யென்சுற்றத்தாரெல்லாம் கல்வி பயிலும்படி உன்னாலுபகரிக்கப்பெற்றாரென்கிறார். இதனால், உயர்தரக்கல்வியை நிலைநிறுத்தக்கருதி அதுபயிலுதற்குரிய புலவர்குடிப்பிறந்தாரபலரும் கூட்டங்கூட்டமா யூட்டப்பெற்றிருந்து முத்தமிழ்க்கல்வியும்பயிலுமாறு சில கல்லூரிநிறுவியிருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது.

இரததிநீடிய அகன்றலைமன்றம்:—இலந்தைமரம்வளர்ந்த பரந்த இடத்தையுடையமன்றம் என இம்மன்றத்தை விசேடித்தமையால இதுபோலும் வேறுபலமன்றங்கள் அங்கிருந்தனவென்பது பெறப்படும். பெறவே, அவை ஒவ்வொன்றும் வழங்குதற்பொருட்டு வெவ்வேறு பெயர்பெற்றிருக்கவேண்டுமென்பதும், இம்மன்றத்துக்கும் ஒருபெயரிட்டிருக்கவேண்டுமென்பதும் உணரத்தக்கன. அப்பெயர் யாதாயிருக்குமென்றாராயின, வடநாட்டுள்ள மதுரை, காசி என்னும் ஊர்ப்பெயர்களைப் பெருமையுந் தூய்மையும்பற்றித் தென்னாட்டுண்டான விரணோகளுக்குத் தென்மதுரை, தென்காசியெனவைத்துவழங்குதல்போல வடநாட்டுள்ள பதரிகாசிரமம்* எனனும் பொதியிலின்பெயரைக் கல்வியறிவொழுக்கங்களைவளர்க்கு மொப்புமைபற்றி இம்மன்றப்பொதியிலுக்கும் தக்ஷிணபதரிகாசிரமம்; அல்லது தெனனிலந்தைமன்றம்; அல்லது இலந்தைமன்றம் எனவைத்து வழங்கிவந்திருக்கவேண்டுமென்றும், அதற்கு நிரூபகமாகவே இம்மன்றப்பொதியிலின்முன்றிலிலிலந்தைமரங்களைவைத்து வளர்க்கப்பட்டிருந்தனவென்றுந் தோன்று

அகன்றலைமன்றம்:—பரந்த இடத்தையுடையமன்றம். இதனால் இப்பொதியில ஆங்காங்குப் பலவகைப்புலவரு மொருங்குகூடுதற்கேற்ற மண்டபங்களும், அவர்தங்க வுறையுளும், வேண்டுமொழிபயிலுதற்கிசைந்த பல கலாசாலைகளும், கற்குமமாணவர்க் குறையுளும், அவரவர் வருணவொழுக்கத்துக்கிழுக்கின்றி யமலைக்கொழுஞ்சோறுருமாறமைக்கப்பட்ட வெவவேறாட்டுப்புரைகளும், அவற்றிற்குவேண்டும்பொருள்களைப் படைத்துவைத்துதவும் பண்டசாலைகளும், ஜலாதாரங்களுமுடையதாய்ச் சுகாதாரத்துக்குவேண்டுஞ் சோலையும், வெள்ளிடையுஞ் சூழ்ந் திடமகன்றிருந்ததென்பது பெறப்படுகிறது.

*ஆசிரமம் பொதியிலோடொத்ததென்பதற்கு அகஸ்தியாசிரமம் பொதியில் என்னும்பெயரால்வழங்குவது சான்றாகும்.

பயிற்றி:—பலகாலுஞ்சொல்லி. (அதாவது கற்றற்குரிய நூல்களைச் சந்தை திருவைச்சொல்லிச் சிந்தித்துக் கண்டஸ்த ஹ்ருதயஸ்தங்களாக்கிக் கொண்டென்றபடி) இது அம்மன்றத்துக் கல்விபயிலுமுறையைக்காட்டி "ஆயிழைகணவ"என்றதிற்காட்டிய குறிப்பினைப்பகுதியை யாதரிக்கிறது. இனிப் பயிற்றி என்பதற்குக் கற்பித்து எனப் பிறவினையாகவேகொண்டு பொருளுரைப்பினு மிழுக்கின்றாம். என்னை? "குறுமுயற்கொழுஞ்சூடு கிழித்தவொக்கலொடு, அமலைக்கொழுஞ்சோறார்ந்தபாணர்க்குக், கரப்பிலுள்ளமொடுவேண்டுமொழிபயிற்றி, அகலாச்செல்வமுழுவதுஞ்செய்தோன்" என அடிமாறிக்கூட்டிப் பிறவினையாகவேகொண்டு பொருளுரைப்பினும் அமையுமாறுகாண்க. இங்குப் பாணராகிய எம்பொருட்டுப் பயிற்றுதற்றொழிலைச்செய்து, அகலாச்செல்வமுழுவதுஞ் செய்தோன் எனக் குவ்வுருபுக்குப் பொருந்துமாறு பொருளுரைத்துக் கொள்க. இப்பொருளுக்கிசையக் "கரப்பிலுள்ளமொடு" என்பதற்கு (வளவன்)தன்னயங்கருதாது என்று பொருள்கூறிப் பயிற்றற்றொழிலுக் கடையாக்குக. இம்முடிபிற் கிழித்தவொக்கலொடு யானுமார்ந்த பாணர்க்குப் பயிற்றிச் செய்தவெனக் கூட்டிப் பொருளுரைக்க. முன் முடிபிற் கிழித்தவொக்கலொடு யானும் பயிற்றி ஆர்ந்தபாணர்க்கெனக் கூட்டிப் பாணராகிய எமக்கெனப் பொருளுரைக்க.

பயிற்றி, அமலைக்கொழுஞ்சோறார்ந்தபாணர்க்கு — முன்பு, பயிலாமையின்வேற்றுமைதோன்றப் பயிற்றி என்றும், தாம்பருகிவந்த கஞ்சியின்வேற்றுமைதோன்ற அமலை(கட்டிச்சோறு)என்றும், வரகின் சோற்றின்வேற்றுமைதோன்றக் கொழுஞ்சோறென்றும், வயிறாரவுண்ணாதிருந்தமையின்வேற்றுமைதோன்ற ஆர்ந்த( வயிறாரவுண்ட ) என்றும், பாடத்தெரியாதிருந்தமையின்வேற்றுமைதோன்றப் பாணர்க்கென்றும் கூறப்பட்டன.

பாணர்க்கு—சாதிதருமமாகவே பாடுதற்றொழிலைமேற்கொண்ட குடியிற்பிறந்த என்சுற்றத்தார்க்கும் எனக்கும். இங்குப் பாடுதலைச் சாதிதருமமாகக்கொண்டமையால் அதற்குப் பரிசில் கைமாறாகா தென்பதும், அது நன்றியின்மேல் நன்றியின்மேல் நன்றியாகிய மூன்று முறைநன்றியாம் என்பதும் குறிப்பு.

அகலாச்செல்வம்—நீங்காதசெல்வம். அதாவது குடிவாழ்க்கைக் குடனுறைவதாகி யின்றியமையாதசெல்வம் என்றபடி.

முழுவதுமசெயதோன் — ஒன்றுனுங்குறைவின்றியிருக்கசெய்தோன். இதனுற் குடிவாழ்க்கைககுவேண்டும்பொருள்தேடுதற்குரிய காளைப்பருவத்தில் அதனைத்தேடா துலகநன்மையைநாடிப் பெருங்கல்வி பயின்றும் பின்பு பயிற்றியுங் காலங்கழிப்பாக்கு, அவர்குடிவாழ்க்கைக்கு வேண்டும்பொரு ளொன்றுங்குறைவின்றியுதவிக் குடும்பக்கவலையற வைத்தாலன்றி யககல்வி நிலையாதென்பதுணாநது அங்ஙனஞ்செய்தா னெனத்தோன்றுகின்றது.

எங்கோன் எனபதறகுப புலவாகூட்டமாகிய எங்களுக்கிறைவன் என்பது பொருளாகிறது இதனுல, வளவன் இலநதைமன்றம் என்னுந தமிழ்ச்சங்கத்தின்றலைமைவகித்திருநதவனெனபதும, ஆலததூாகிழாா அச்சங்கததினரு ளொருவரேன்பதும் வெளியாகினறன இபபொருட கிசைய வளவனும் கல்விச்சஙகததலைமைவகித்தற்குரிய கல்வித்திற மையுமுடையானேன்பதைச் சிறுகுடிகிழான்பண்ணன்மே லவன்பாடிய புறப்பாடடாலும் அறியலாம.

வளவன:—பொருட்செலவததாலுமமிகக சோழன. இதனுல அசசஙகததை மிககசெலவபபொருளபடைததுச சிறபபிததிருநதன னென்பது கருததது. ஆதலால "எஙகோனவளவன" என்றது கலவியால ஆதமபுஷ்டியையும செலவததால் சரீரபுஷ்டியையும புலவாகருதவியவ னென நனறிபாராட்டியவாறுயிறறு

வாழ்கவென்று:—வாழககடவனெனறு.

நின், பீடுகெழுநோன்றுள்பாடேனுயின்:—பெருமைபொருநதிய தவவொழுககமபோனற நினதுதாளாணமையைப பாடாதிருபபேனு யின், நனறிகொனறேனுவேன என்பது குறிபபெசசம. இவ்வா றுலக நன்மைநாடித தமிழசசஙகமநாட்டி, உயாதரககலவியூட்டி யுலகளிததது வருமுயறசியே பெருமைபொருநதிய(நிஷ்காம)தவவொழுககமபோனற தாளாண்மையென நன்குமதிககபபடுவதென்பதும இங்குநோககததக் கது.

இஙஙனம உன்னைக காலையு மாலையும பாடியிரேனுயின் நன்றி கொன்றேனுவேனெனறபுலவரைநோககி வளவனும, நீ சொலலிய வெலலாம உலகோமபுங்குடிபபிறநதாாதமககுரியசாதிதருமமாதலால என்குறைதீரசசெய்திருநதேனேயன்றி, உனககெனறு ஒ ன் று ஞ செய்தேனலலேன்; ஆதலால என்னைநினைததுவரவேண்டிககொண்டேன் என்ன, அதுதன்னையும புலவா மேற்கொண்டுகளைவாராகிப"படுபறிய லனேபலகதிரசசெலவன" எனகிறுா.

பல்கதிர்ச்செலவன்படுபறியலன் -(நீ செய்தநன்றியைநினைந்தன்றி யும ஒருவன உன்னை நினையாதிருப்பானாயின்) பலலாயிரங் கிரணங்களை யுடைய கதிரோனன்றேறறமுங காணாதிருப்பானவன. கதிரோன ன்றேறறங காணாதிருக்க இயலாதவாறுபோல உனதுகீர்த்திப்பிரபாவம ஒருவரானுங கருதாதிருக்கவியலாதெனபது கருத்து

அதுகேட்டவளவன யான அதுவேண்டிநின்றேனலலேன், அடிக கடிநினைத தெமமைம யாசிரவதித்திருக்கவேணடினேனெனன, புலவா, யான (தனுசம)மிகவுமெளியேனாதலால அது வுஞ்செயதறகுரியேனலலே னெனன, வளவன பினனையாவருளரெனன, புலவா அதுசெய்தற்குரியா சானன்றேரெனன, வளவன, நினனினுஞ்சானன்றேரை யான்கணடிலேன், நீ காணவலலையாகில அவரைக்கொண்டு செயவிப்பியெனன, புலவா, (பெருமம)ஒன்றானுங்குறைவிலலாவுனக்கவரானுஞ்செய்யககடவதினறே யெனன, வளவன இனியொருகுறைவாராதிருக்கவேண்டியேனும அது செயயறபாறறேயெனன, புலவா உன்குறை சானன்றோர்குறையாமாத லால அதுவாராமைப்பொருட்டு அவா செயதநனமையுண்டாகை யால ஒருகுறையுமினறி நீடூழிவாழவாயாக(வெனறா)எனபது எஞ்சிய தொடாகளின கருத்தாகககொளக.

இப்பாட்டிறகாட்டிய குறிப்புகளாறபலவுங கலவிசசஙகத்துக்குரிய அஙகஙகளை நன்குவிளக்கிச சோழராஜதானியில இலந்தைமன்றமென் றொரு தமிழசசஙகமிருந்ததெனபதை யுணாததுமாறுகாண்க.

பணடைககாலத்து லௌகிககாரியநிர்வாகசங்கங்களுக்குப்பெய ராய்வழஙகப்பட்டுவந்த மன்றமெனனுஞ்சொல பினபு காலகதியால கூடடஙகூடுமெமாப்புமைபறறி,(இககாலத்துக கசசேரியெனனுஞ்சொல் பாடடுககசசேரி, சீட்டுககசசேரி என வழஙகப்படுவதுபோல)கூததாட ரஙகம், சுடலைததோப்பு, சாறுயசசாவடிமுதலிய பலாகூடுமிடஙகளுக கெலலாம பெயராயவழஙகப்படடமையால அதனாறறலகுறைந்தது பற்றி, சமயநடை ஒழுக்கநடைகளைககறபித்தற் தனனிலையிலநிறுததி வநதசபைகளைப புததசமயத்தார சஙகமெனனுமபெயராலவழங்கியது கொணடு மறறவிதவதஸபைகளும சஙகமெனனுமபெயரால வழஙகத் தலைபபடடன.

ஆதலாற சஙகமெனனுமபெயரே தமிழ்மொழியில்லாமையால, தமிழநாட்டில முனபு தமிழசசஙகஙகளிலலையெனபது பொருநதாதென வுணாக

திரு. நாராயணையங்கார்,
பத்திராதிபர்.

# இலங்கைமஹாவம்சமும், தென்னிந்திய சரித்திராராய்ச்சியும்.



**“செந்தமிழ்” (தொகுதி ௧௨ பகுதி ௧௨-ல்) ௪௮௪-ம்பக்கத் தொடர்ச்சி.**

நாம் இதுகாறுங்கூறிய இவ்விதிஹாஸங்களிலடங்கிய விவரங்களில் வெளிப்பட்ட உறுதிப்பாட்டினாலும், இவைகள் முழுதும் நம்பத்தகாதவைகளல்லவென்றும் பரிசோதிக்கத்தக்கவைகளேயென்றும் நன்கு விளங்கும். ஆனால் அவைகள் முழுதும் பிழையற்றனவென்று கொள்ள முடியாது. இவைகளிலடங்கிய செய்திகள் நிகழ்ந்த காலத்திற்கும் வர்ணனைபெறுங்காலத்துக்கும் நடுப்பட்ட அவதி யதிகரிக்கவதிகரிக்கப் பிழைகள்கலந்துவழங்குவது சாத்தியமென்றும், கற்பனைக்கதைகள் கலக்கப்படுவது அதிகமென்றுங் கொள்ளவேண்டும்.

இப்பொது நோக்கம் முக்கியமாய விஜயன்வரவுக்கும் அவனுக் காருந்தலைமுறையவனான தேவானம்பியதிஸ்ஸனுடைய ஆட்சிக்கும் நடுப்பட்டுக்கிடக்கும் பழையகாலத்துக்கு மிகவும் ஒத்ததாயிருக்கின்றது. இக்காலத்திய செய்திகளில் ஸந்தேகிக்கத்தக்கவிஷயங்களில் முதலது விஜயன் இலங்கைத்தீவைச் சேர்ந்ததினம் பௌத்தர் நிர்வாணத்தையே யடைந்ததினமென்பது. தவிர இக்காலத்திய அரசர்களின் ஆட்சிக் காலங்களெல்லாம் முழுவருஷங்களாகவே வரையறுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளிற் கடைசியான பாண்டுகாபய மூடசிவர்களின் ஆட்சிக் காலமோவென்றால் அஸாத்தியமான அளவினதாய் நிற்கின்றது. இவ்விருவரில் முதல்வனாய பாண்டுகாபயன் முப்பத்தேழாம்வயதிற் சிங்காதனமேறி எழுபதுவருஷம் ஆண்டானாம். அப்படியாயின் இவனாயுட்காலம் நூற்றேழுவருஷமாகின்றது. இவனுக்குப்பின்வந்தோனான இவன்மகன், இவனரசுரிமைக்குவருமுன்மணந்தவளிடம் பிறந்தோன். இவன், தந்தைபிறந்தகாலத்தில் வயதுசென்றவனாயிருந்திருத்தல்வேண்டும். ஆயினும் இவனுக்கு அறுபதுவருஷம் ஆட்சிக்காலம் கொடுக்கப்பட்டுள்ளது. இவ்வாறு முரண்படுங்கூற்றுக்களைவிளக்க வழியொன்றுதான் உள்ளது. அதாவது இவ்விதிஹாஸங்களையியற்றியோர், விஜயன் வரவும் பௌத்தநிர்வாணமும் ஒரேசமயத்தில்நேர்ந்ததாகக் காலவரை

யறையைபெழுதியோராவரென்பதாம். ஏனெனில், இக்கதைகளியற்றிய காலத்தில இவ்வொற்றுமை யொருவாறு நமபப்பெற்றதாயிருந்தது போலும். ஆகையா லிவ்விருவராட்சிககாலத்திலே அறுபது அல்லது எழுபதுவருஷத்தியகாலவழுவுக்கு இடமுண்டு. ஆயினும, இக்காலத்து வரலாறுகளெல்லாம நமபவொண்ணுதனவேயென்றுகொள்ள லவசிய மிலலே. ஏனெனில, பாணடுகாபயன நடத்திய போாசசெய்திவர்ணனே சிறிதும கற்பனேயாகததோனறுவதிலலே. இததறகுப பிறபட்டகாலத திலுங்கூட இமமாதிரியாகவே இடைவெளிகள நிரபபபபெறறதெனறு சொலலத தெளிவானசானறுகளதோனறும இதறகுதாரணமாக இவனுககடுதத ஆறு அரசாகளின ஆட்சியளவையெடுததுநோக்கின, ஒருதகபபன், நானகுமககள, இரணடுராஜயாபகாரியரசாகள், இவாக ளாணடகாலம தொணணூறறிரணடுவருஷங்களாகின்றன. என்ருல் இரண்டுதலேமுறையாககுத தொண்ணூறறிரண்டுவருஷகாலமவருத்த தாயிறறு. துஷ்டகாமணியின ஆட்சிக்காலமவநதவுடன் ஆட்சிககால வரையறை நமபததககதாயும, இயலபாயிருபபதாயும ஏறபடுகினறது. ஆனுல நமபவொண்ணுததாய் எலலேயிடபபட்ட மேறகூறியகாலநியதி யிலுங்கூடத தேவாநமபியதிஸ்ஸனுடைய ஆட்சியும, மாஹிநதனுடைய வரவும ஐயததுககுககாரணமான முனபினகாலங்களினின்றும தனிப பட்டு வியககதமாயிலலேபெறுகினறன இலஙகாதீவததிருநத பௌதத ஸஙபாசிகளால இததீவத நிதிஹாஸங்களிற குறிபபிடபபட்ட கால வரையறைககுத தொடசகம பௌததாநிரவாணமடைநதவருஷம. இசசெய்திவிஷயமானகதைககுப பௌததககுழுவினவளாசசிககு எவ் வளவு சாதனங்களாக ஏறபட்டனவோ அவவளவுமட்டுந்தான் சாதா ரணமானவிளேவுகளும, சரிததிரஸமபநதிகளான பாததிரங்களும முககியமானவை. ஆயினும மிகவும பிராசீனமானகாலததிலுங்கூடப பௌததநிர்வாண காலததினினறுஞ் செனறகாலததைககுறிபபிட்டுக் காட்டுஞ சிலதனிமையானவிளேவுகளுடன சிறபபுவாயநதமஹான்களுங காணககிடைககிறுர்கள. இவைகளுககு இடையிடையேகிடககும வெளிகளேநிரபபக்கட்டுககதைகளேறபடுவதியலபே. இமமாதிரியாகவே தான இலஙகாதீபததிய சரிததிரகாலவரையறையேறபாடு மமைநது அர்த்தககதையினினறும எடுததாளபபட்டிருககவேண்டுமென்பது சரியான ஊகமாய்த்தோன்றுகிறது.

மிகப்பூர்வகாலத்தினின்றுநிலைபெற்று, இக்காலவரையறையேற்பாட்டுக்கு மிகவும்இன்றியமையாத ஆதாரமாய்நிற்கும்வருஷம் பௌத்தநிர்வாணத்துக்குப்பின் இருநூற்றுப்பதினெட்டாவதும், அசோகமஹாராஜாவுக்குப் பட்டாபிஷேகமானதுமானவருஷமொன்றேயாம். இச்செய்தி அசோகனாட்சிபெற்று நான்குவருஷத்துக்குப்பிறகு நிகழ்ந்ததென்ப. அப்படியாயின் பௌத்தநிர்வாணத்துக்குப்பின் இருநூற்றுப்பதினாலாம்வருஷம் அசோகன் அரசுரிமைபெற்றதாகும். இதினின்றும் இவன்தகப்பன் பிந்துஸாரனாட்சியளவு இருபத்தெட்டுவருஷத்தையும், பாட்டன் சந்திரகுப்தனாட்சியளவு இருபத்துநான்குவருஷத்தையும் கழிக்கச் சந்திரகுப்தன் அரசுரிமைபெற்றகாலம் பௌத்தநிர்வாணமடைந்து 162-வருஷத்துக்குப்பின்னென்று விளங்கும். இச்செய்தி, அதாவது சந்திரகுப்தன் ஆட்சிபெற்றது, கி. மு. 321-ம்வருஷமென்று சாதாரணமாயங்கீகரிக்கப்பட்டதாகவிருக்கிறது. இதினின்றும் பௌத்தநிர்வாணகாலம் கி. மு. 321+162 அல்லது 483 என்று ஏற்படும். இவ்விரண்டுவருஷங்களும் உறுதியாக உண்மையானவையென்று சொல்லத்தகாதனவாயினும், இவ்விரண்டில் அசோகமஹாராஜாவின் அபிஷேகம் பௌத்தநிர்வாணத்துக்கு 218-வருஷஞ்சென்றபின் என்பது அவ்வளவு ஐயப்படத்தக்கதன்று. ஏனெனில் இவ்விரண்டு நூற்றாண்டளவு இம்மாதிரியான கர்ணபரம்பரை உண்மையினின்றும் தவறுதிருந்திருத்தல் அசாத்தியமன்று. சந்திரகுப்தன் ஆட்சிபெற்ற வருஷமோவென்றால் சிலவருஷங்கள் முன்பின்னாகலாம். ஆனால் இது மிகவுஞ் சிறியகாலமாயத்தான் இருத்தல்வேண்டும். இவ்விருவரதாட்சிக்காலத்தைப்பற்றியோவென்றால், சந்திரகுப்தனது 24-வருஷம் என்பது கர்ணபரம்பரைகளால் நிச்சயமாம்.

பிந்துஸாரனாட்சிக்காலம் மூன்றுவருஷம் முன்பின்னாகலாம். இச்சிறுபிழைகளும் வித்தியாஸங்களும் புலப்பட்டபோதிலும் பௌத்தநிர்வாணத்தைப்பற்றி யேறக்குறைய ஒருவாறான ஒற்றுமைக்கொள்கை வந்துகொண்டிருக்கிறது.*

---

*இது கி. மு. 483 என்பது ஐரோப்பியர்கள் அங்கீகரிப்பது. மகா-ள-ள-ஸ்ரீ L. D. ஸ்வாமிக்கண்ணுப்பிள்ளையவர்கள் ஜோதிஷகணிதப்பிரகாரம் கி. மு. 477 என்பர்.

பௌத்தர்நிர்வாணமடைந்ததாய்ச்சொல்லப்படுகிற ஒவ்வொரு வருஷத்தையும் இங்கு ஆராயப்புகுவது அவசியமில்லை. இச்சந்தர்ப்பத்திற் கவனிக்கவேண்டியது பாமா, சீயம, இலங்கைமுதலிய இடங்களில் எடுத்தாளப்படும் கி. மு. 544 ஒன்றே. இது தவறென்றும், இதிற சற்றேறக்குறைய அறுபதுவருஷம் பிழைபட்டிருக்கிறதென்றும் சாமானியமாய் எல்லோரும் ஒத்துக்கொள்ளுகிறார்கள். தவிர பளீட் என்பவா எடுத்துக்காட்டியபடி இது தொன்றுதொட்டு இடைவிடாமற் பரம்பரையாய்வழங்கிவந்ததுமன்று. இது பிற்காலத்தியகற்பனையாய் கி. பி. பதினோரா நூற்றாண்டில ஏற்பட்டது. ஆய்ந்துநோக்குங்கால் கி. பி. பதினோரா நூற்றாண்டினமுற்பட்டகாலத்தில, தொன்றுதொட்டு வழங்கிவந்த பௌத்தசகம ஒன்று கி. மு. 483-ல தொடங்கியதென்பதற்குவேண்டிய சூசனைகளநேகம காணக்கிடைக்கின்றன. கி. மு. 544-ல தொடங்கும இச்சகமோவெனறால கி. பி. பதினொன்றாநூற்றாண்டுக்குமுன் ஆட்சிபிலில்லாமல, இந்நூற்றாண்டின இடையில் ஆரம்பித்து இன்னும நடைபெறுகிறதுபோலும.

இவ்விஷயத்தைச சோதிக்கப்புகுமுன் பராக்கிரமபாஹுமுதல, இவாக்குமுன் மூன்றாமஉதையன்வரைக்கும ஆண்டவாகளின ஆட்சிக் காலவரையறை ஏற்படலவேணடும. பராக்கிரமபாஹுபட்டாபிஷேகம பௌத்தநிர்வாணத்துக்கு 1696-வருஷத்துக்குப்பின் ஒன்பது (அதாவது 1697-ம வருஷத்தில என்பது) கல்வெட்டுக்களினின்றும ஏற்பட்டு, பிறகாப்பியசசாதனங்களாற் பூரத்தியடைந்து உறுதிபெறுகிறது. இதற்கு எட்டுவருஷத்துக்குப்பின அதாவது பௌத்தவருஷம 1705ல் இரண்டாம அபிஷேகம எனபது புலப்படுகிறது. இதினின்றும நான்காமவருஷம (பௌத்தநிர்வாணத்துக்குப்பின் 1708-வருஷமாய் 1709-ம வருஷத்தில) இவ்வரசாபெருமான் ஒருபௌத்தஸங்கத்தைத் தாபித்தனராம. இலங்காசகப்பிரகாரம் இவ்வருஷங்கள் கி. பி. 1153, 1161, 1165, ஆகின்றன. பராக்கிரமபாஹுவுக்கு, இக்காலம, தென்னிந்தியாவில ஆற்பாக்கத்தில, திருவாலீசவரர்கோயிலிற்கண்ட கல்வெட்டொன்றினால உறுதியடைகிறது. ஆகையால கி.பி. பன்னிரண்டா நூற்றாண்டின்பிற்பாதியில், கி. மு. 544-ல தொடங்கும பௌத்தசகம ஆளப்பட்டதென்பது திண்ணம்.

சூளவம்சப்பிரகாரம் இவற்குமுற்பட்ட ஆறரசர்கள், (அதாவது பராக்கிரமபாண்டியனின்றும் விஜயவிம்மமுதலியார்பட்டி 1-1-ம் அரசன் பராக்கிரமபாஹுவரைக்கும்) 107-வருஷம் ஆண்டவர்கள். பராக்கிரமபாண்டி பட்டம்பெற்றது பௌத்தசகம் 1590, என்றால் அது இலங்கைச்சகப்படி கி. பி. 1046-ஆம். இது இதேவருஷத்திய மணிமங்கலம் கல்வெட்டால் வலியுறும். எப்படியென்றால் இக்கல்வெட்டின்படி இப்பராக்கிரமபாண்டி முதலராஜாதிராஜனென்னும் சோழவரசனால் கொல்லப்படைந்து, உயிரிழந்தான். இவனுக்கு இரண்டுவருஷம் ஆட்சிக்காலமென்று சூளவம்சத்தினின்றும் தோன்றும். இவ்வரசன் ஒருவருஷத்தில் ஆளத்தொடங்கி மறுவருஷத்தில் இறந்து இவ்விருவருஷபாகமும் கி பி. 1046-ல் அடங்கியிருத்தல்கூடும். இதினின்றும் இலங்கைச்சகம் கி. பி. பதினோராநூற்றாண்டினிடையில் நடைபெற்றதெனபது வெள்ளிடைமலை.

இதைவிட்டு மூன்றாமஉதையனைநோக்கின(விஜயவிம...பட்டி.111) இவனவிஷயமான தென்னிந்தியகல்வெட்டொன்று இச்சக்கணக்கை வேறுவிதமாகத்திருப்பிவிடும். சூளவம்சப்பிரகாரம் இவவுதையனுக்கும் பராக்கிரமபாண்டிவுக்கும் இடைப்பட்ட காலம் 93-வருஷம் 8-நாளாகும் பராக்கிரமபாண்டி சிங்காதனமேறியது கி. பி. 1046-ம் வருஷமென்று மேற்கூறியுள்ளோம் ஆகையால் உதையன அரசரிமையடைந்தகாலம் பௌத்தசகம் 1497 அல்லது கி. பி. 953 ஆனால், தஞ்சாவூர்க்கல்வெட்டொன்றின்பிரகாரம் உதையன் ஆட்சி பெற்றது கி. பி. 1015-றபோலும்.

இக்கல்வெட்டு இலங்கையினமேற்செலுத்திய யுத்தயாத்திரையொன்றை விவரிப்பது. இதன்விவரம் சூளவம்சத்தில் (53. 40) உதையன ஆட்சியாரம்பத்திலவிளைந்ததாய்வாணிக்கப்பெற்ற படையெடுப்போடு ஒற்றுமைப்படுவதாயிருக்கிறது. கீலஹாரன் கணிப்பிரகாரம் இச்சோழன ஆட்சிபெற்றது கி. பி. 1011 முடிவுக்கும் 1012-ன் நடுவுக்கும் உடபட்டகாலத்திலாம். இப்போர்ச்செலவு இச்சோழனுடைய (அதாவது கங்கைகொண்டசோழனுடைய) நான்காம் வருஷத்துக்கும் ஆறாமவருஷத்துக்கும் இடைப்பட்டது, என்றால் கி.பி. 1015-க்கும், 1018-க்கும் இடைப்பட்டதாம். ஆகையாற் பௌத்த சக 1497, 1498-ம் வருஷங்கள் இதற்குட்படவேண்டும். இவ்விரண்டிலும் முன்வருஷத்தையே யெடுத்துக்கொண்டாற் பௌத்தநிர்வாண காலம் 1497-ல 1015-க்கழிக்க எஞ்சிய கி. மு. 482-மவருஷம் அல்லது 483-ம வருஷமாம்.

ஆகையால் விக்கிரமஸிங்கரபிப்பிராயப்படி நாம் கொள்ளவேண்டியது என்னவென்றால், சூளவம்சம் எழுதியவர்களில் உதையன்முதற் பராக்கிரமபாகுகாலம்வரைக்குமுள்ளபாகத்தை எழுதியவர், கி. மு. 544-ல் தொடங்கும் சகம் ஆட்சிபெற்றகாலத்தில் வதிந்தவரென்பதும், உதயன், பராக்கிரமபாண்டி, பராக்கிரமபாஹு இவர்கள் முறையே பட்டம்பெற்ற பௌத்தசக 1497, 1590, 1693, என்னும் இம்மூன்று நிலைபெற்றவருஷங்களைத் தெரிந்தாண்டவரென்பதும், ஆனால் இதில் முதல்வருஷம் பின்னிரண்டினின்றும் விலகி கி. மு. 483-ல் தொடங்கிய மாறுபட்டசகமொன்றற்குச்சேர்ந்ததென்பதுமாம். இவரபிப்பிராயப்படி உதையனுக்கும் பராக்கிரமபாண்டிக்கும் நடுப்பட்டகாலம் 93-வருஷமாயினும் உண்மையாயிக்காலவளவு (1046-1015) வருஷம் முப்பத்தொன்றேயாம்.

இக்காலத்தியசெய்திகளையெல்லாம் சூளவம்சம் மிகவும் விவரமாய் வர்ணித்திருப்பதால் மேற்காட்டியமாதிரி யதிகப்படியாய்த்தோன்றும் 62-வருஷங்களை எங்கிருந்து நீக்கவேண்டுமென்று தீர்மானிப்பது கஷ்டம். ஆயினும், கைகராசிரியர் இவ்வறுபத்திரண்டுவருஷத்திற் பெரும்பாகத்தை ஐந்தாமமாஹிந்தன் ஆட்சிக்காலத்தினின்றும், அதற்கடுத்த தான அநாயககாலத்தினின்றும் தள்ளல் நலமென்பர். இவ்விருகாலத்தையும் ஒன்றாகச்சேர்த்தால் 48-வருஷங்கள்தான் ஆகின்றன.

இவ்வாராய்ச்சியால், இவ்விலங்காதீவத்தின் இதிஹாஸங்களில் ஒருபாகமும் பொய்யேயென்றுசொல்லவொண்ணாதென்பதும், இவைகளின் முற்பாகத்தியகாலவரையறையுங்கூடச் சரித்திரநோக்கத்தில் அங்கீகரிக்கத்தக்கதாகவளவு பிழைப்பட்டதல்லவென்பதும் தெளிவாகின்றன. கைகராசிரியருடையபலவகையாராய்ச்சிகளெல்லாம் இன்பம் பயந்து புத்திக்குப் புதிதானவிஷயத்தைப் புகட்டினவேயாயினும் இத் தென்னிந்தியசரித்திர காலவொற்றுப்பாட்டுக்குச் சம்பந்தப்படாததால் அவைகளை யிங்குவிடுத்துள்ளோம்.

(தொடரும்.)

எஸ். கிருஷ்ணஸ்வாமிஐயங்கார், எம். ஏ.

உ

# * நூலாராய்ச்சிமுறை—ஆங்கிலமும் தமிழும்.

———:0:———

"ஆவியந்தென்றல்வெற்பினகத்தியன்விரும்புந்தென்பால்
நாவலந்தீவம்போற்றிநாவலந்தீவந்தன்னுண்
மூவாதக்கரியானிற்பமுத்தமிழ்ச்சங்கத்தெய்வப்
பாவலர்வீற்றிருக்கும்பாண்டிநன்னாடுபோற்றி"

அமிழ்தினுமினிய தமிழ்மடவரல்செய் யருந்தவத்தின்பயனே யென்னும்படிதோன்றி நெடுநாளாகப் படிப்போருங் கேட்போருமற்று ஏட்டுப்பிரதிகளிற்கிடந்த சிறந்த பழங்காப்பியங்களை யாவருங் களிப்புடன்கற்கும்படி உரை, அபிதானவிளக்கம், ஆராய்ச்சிவிளக்கம், மேற்கோளகராதிமுதலிய மிக்க உபயோகமான ஆராய்ச்சிக்குறிப்புக்களுடன் பதிப்பித்துத்தந்தவர்களும், நூலாராய்ச்சியிலும் கல்வியிலும் மேம்பட்டும் நற்குணநற்செய்கைகளாற் றிகழ்வுறலும், புலவர் திலகமாகவீற்றிருக்கும் மகாஉபகாரியாகிற மஹாமஹோபாத்தியாய பிரஹ்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள்முன்பாகவும், இன்னும் அநேகபண்டிதர்கள்முன்பாகவும், 'உரைப்பார்வாயுரைப்பவை தம் புகழேயாம்படி யுயர்ந்து' அரியபெரியகாரியங்களையெல்லாம் மிகத் திருத்தமாகச்செய்தும் பாஷாபிவிருத்தியில், தமது முழுக்கவனத்தைச்செலுத்தியும் புகழ்பெற்ற 'குன்றுநல்லிசைச்சென்றோரும்ப' லாகி, 'தவலருந்தொல்கேள்விததன்மையுடையார்' அளவளாவிப்பேசி மகிழும்படி எல்லாச்சௌகரியங்களையும் அமைத்துதவும் ஸேதுபதியவர்கள்முன்பாகவும் சிற்றறிவினேன் நூலாராய்ச்சி என்றவிஷயத்தைப்பற்றி உபந்யஸிக்கப்புகுந்தது, 'கற்பனவூழற்றார்கல்விக்கழகத்தாங்கு' என்று தொடங்கியசெய்யுட்பயனுக்கு ஓர் இலக்கியமாவதையொக்கும். எனினும், 'அறையுமாடரங்கும்மடப்பிள்ளைகள், தறையிற் கீறிடிற் றச்சர்' கோபியார்களாதலாலும், 'புல்லாவெழுத்திற் பொருளில்வழுக்கோட்டி, கல்லாவொருவனுரைப்பவுங் கண்ணோடி, நல்லார் வருந்தியுங்கேட்பர்' என்ற தைரியம்பற்றியும், இம்மஹாஸபையின் கண் இன்று எழுந்துநிற்கத்துணிந்தேன். எடுத்துக்கொண்டவிஷயத்தின் பெருமையையும் என் சிற்றறிவையும் உய்த்துணரவல்ல பெரியோர்கள் இதிற்காணப்படும்பிழைகளைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.

---

*இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பதின்மூன்றாம்வருஷக்கூட்டத்தில் வாசிக்கப்பெற்றது.

## நூலாராய்ச்சி.

ஒவ்வொருதேசத்துப்பாஷாசரித்திரத்திலும், நூலாராய்ச்சி என்பது அநேகநூல்கள்தோன்றியபிறகே முன்னுக்குவரும் ஒரு கல்விவிசேஷமாம். நூலாராய்ச்சியின்நோக்கம் "நூல்நுட்பம்" கொள்வதாம். எனவே, பழையநூல்களிற் காணக்கிடக்கும் அரிய வுண்மைகளை ஆதாரமாகக்கொண்டு அவற்றை உரையாணியாக வைத்து மற்றநூல்களின் அருமைபெருமைகளை யுய்த்துணர்வதே ஆராய்ச்சிக்குப்பொருத்தமானவழியாகும். உலகத்தில் மனிதர்களின் நடையுடைபாவனைகளிற் சிலவற்றை யிழிந்தகுணங்களென்றும் சிலவற்றைச் சிறந்தகுணங்களென்றும் யாவருஞ்சொல்லுவார்கள். இவ்வுணர்ச்சியையே உரையாணியாகக்கொண்டு மனிதர்நடை நல்லதென்றும் கெட்டதென்றும் நாம் ஆராய்கிறோம். அதுபோலவே சில சிறந்தநூல்களிற் காணக்கிடக்கும் அழகிய குணவிசேஷங்களைக்கண்டனுபவித்தபெரியோர்கள் மற்றநூல்களைப்படிக்கும்போது தாம் பழையநூல்களிற்கண்ட குணவிசேஷங்கள் புதியநூல்களிலும் இருக்கின்றனவாவென்று ஆராய்ந்துபார்த்தே புதிய இலக்கியத்தின்றன்மையை எடுத்துரைப்பார்கள். நூல்கள் இத்தன்மையனவென்று ஆராய்ந்தனுபவித்தலே ஆராய்ச்சி

## நூல்கள்.

'உரத்தின்வளம்பெருக்கியுள்ளியதீமைப, புரத்தின்வளமுருக்கி' 'மாந்தர்மனக்கோட்டந்தீர்க்கும்' காரணத்தாலும், 'நெஞ்சத்து நல்லம் யாம் என்னும் நடுவுநிலைமை' யைத்தருவதாலும் நூல்களைவாசித்தே நாம் ஒழுக்கத்தில் மேம்படவேண்டுமென்று பெரியோர்கூறுகின்றனர். இத்தகையநூல்களின்றொகுதியே பாஷையெனப்படும். உலகத்திற் காணக்கூடியவுண்மைகளை நூல்கள் நமக்கு இரண்டுவிதங்களாகத் தெரிவிக்கின்றன. இவற்றை முறையே பொறியுணர்ச்சியால் தெரிந்துகொள்ளக்கூடியவுண்மைகளென்றும், மனவுணர்ச்சியால் அறியக்கிடக்கின்றவுண்மைகளென்றும் பிரிக்கலாம். விழிகளாலும் மற்றப் பொறிகளாலும் அறியக்கூடியவை ஸாமானயமானவை. மனத்தாலாராயக்கிடப்பனவே அரியவுண்மைகள். காதுக்கு இனிமையுயக்கும் ஓசைநயத்தை முதலவகுப்பிலும், மனத்திற்குத் திருப்தியையுண்டுபண்ணி

இத்தேசத்திலும் பிறதேசங்களிலுமுள்ள புலவர்கள் உலகவிஷயங்களை எவ்வாறு உணர்ந்தார்களென்றுதெரிவிப்பதை இரண்டாவது வகுப்பிலும் சேர்க்கலாம். இவையிரண்டும் நூல்களுக்கு இன்றியமையாதவை எல்லாரும் எளிதிலறிந்து ஞாபகத்தில்வைத்துக்கொள்ளக்கூடியதும் பிறருக்குத்தெரிவிக்கக்கூடியதுமாக அமைவது ஓசைநயமே. நூல்களில் ஓசைநயம் அமைந்திருக்கவேண்டுமென்று எமர்ஸன் என்ற ஆங்கிலவித்வான் அடியில்வருமாறு வற்புறுத்துகின்றார்.

"நாமெல்லாரும் ஸங்கீதத்திற் பிரியமுள்ளவர்களாகவேயிருக்கிறோம். ஓரேசத்தமோ அல்லது வேறுவேறுசத்தங்களோ ஒழுங்காகவும் கணக்காகவும் முறைமுறை திரும்பிவரக்கேட்பதில் நம்மனம் செல்லுகின்றது. குழந்தை தாலாட்டைக்கேட்டுத் தூங்குகின்றது. போர்வீரன் யுத்தபேரிகைகளைக்கேட்டு வீரத்தன்மையில் மேம்படுகிறான். காலவரையறை இதயத்தின் ஓசையிலிருந்து உண்டாகின்றதெனலாம் நவரஸங்களையும் செம்மையாகத்தெரிவிப்பதற்குப் பொருத்தமான ஓசைகளும் அவ்வோசைகளைநிரப்புவதற்குரிய வாக்கியங்களும் தாமே இனிதின் அமைவன. சொல்லும் பொருளும் போலவும் பூவும் மணமும்போலவும் அவை பிரியாதன." ஆதலால் இவற்றின் உதவியாலேயே அரியபெரியகருத்துக்களை எடுத்துரைத்தல் எளிதாகும்.

இனி, மனத்தாலாராயவேண்டியவுண்மைகளைத் தெரிந்துகொள்ள மூன்று முக்கியமானவழிகளுண்டு. நூல்களை ஆராய்ச்சிசெய்பவர்கள் ஒவ்வொருநூலிலும் மூன்றுவிஷயங்களைக்காண முயற்சிசெய்யவேண்டும்.

முதலாவது விஷயத்தின்பெருமை அதாவது மனத்தாலாராய்ந்தறியவேண்டிய நுணணியவுண்மைகளை நூல் தெரிவிக்கின்றதாவென்று கவனிக்கவேண்டும்.

இரண்டாவது எடுத்துச்சொல்லும்விதம். அதாவது எடுத்துக்கொண்டவிஷயத்துக்கும் நூல்வகைக்கும் பொருத்தமானமுறைப்படி விஷயங்கள் தகுந்தவிதமாக எடுத்துச்சொல்லப்பட்டிருக்கின்றனவாவென்று பார்க்கவேண்டும்.

மூன்றாவது, நூல் இன்பம்பயக்கின்றதாவென்று கவனிக்கவேண்டும். அதாவது ஒவ்வொருவிஷயமும் உள்ளது உள்ளவாறே படிப்பவர்மனத்திற்றோன்றுமாறு எடுத்துக்காட்டப்பெற்றிருக்கின்றதாவெனறும், அவை படிப்பவர்க்கு ஆனந்தத்தையுண்டுபண்ணுகின்றனவாவென்றும் ஆராயவேண்டும்.

முதலது: சிறந்த அறிவாளரென்று யாவரும் ஒப்புக்கொண்டபுலவர்கள்கூறியவற்றை நாம விஷயங்களைத்தெரிந்துகொளவதன்பொருட்டு ஆராய்கின்றோம். மற்றவர்கள் இயற்றியநூல்களை ஆராய்ச்சிசெய்வது அவர்தமநூல்களைச் சீர்தூக்கிப்பார்ப்பதன்பொருட்டே. 'முன்னோர் மொழிபொருளேயன்றியவர்மொழியும், பொன்னேபோற்போற்றுவது' வழிநூலுக்கும் சார்புநூலுக்கும் இலக்கணமாதல்பற்றிப் புதிய நூலைப் பழையநூலோடு ஒப்பிட்டுப்பார்ப்பது மரபு. இவ்வாறு ஆராய்ச்சிசெய்வதில் விஷயத்தின்பெருமையையறிய உரையாணியாகவுள்ளது உண்மை. நூலிற்சொல்லப்பெற்றவிஷயம் யாவரும் ஒப்புக்கொள்ளுமபடியான பழையவுண்மையாக இருத்தல்வேண்டும். செய்யுளில் எடுத்துரைக்கப்பெறும் உண்மைக்கும் தேசசரித்திரம் வியவகாரமமுதலியவற்றைக்கூறும் உண்மைக்கும் தன்மையில் வித்தியாஸமுண்டு. அதாவது நியாயஸ்தலத்திற் சாக்ஷிசொல்வதுபோலத் தேசசரித்திரத்தில் உண்மை விரிவிவரும். மற்றநூல்களோ அவவுண்மைகள் ஆசிரியர்மனத்துக்கும் மற்றவர்மனத்துக்கும் எவவாறுபுலப்பட்டனவென்பதைத் தெரிவிப்பன. ஆதலால் முக்கியமானதென்று எடுத்துக்கொண்ட சிறந்ததோர் உண்மையைமட்டும் விஸ்தாரமாக எடுத்துச்சொல்லி அதனை நடுநாயகமாகவும் மற்றவுண்மைகளை ஸாமான்யமாகவும் நூல்களிற்பாவிப்பது முறை. ஏனெனறால், தேசசரித்திரத்திற்சொல்லப்பெற்றவர்கள் உண்மையில் அநேக குணங்குற்றமமைந்தவர்கள், ஆனால், காப்பியத்தலைவன்முதலியோர்களோ தன்னிகரில்லாத்தலைமையும் சீலமுமுடையவர்கள். உலகத்தில் யாவரும் உயர்த்திப்பேசுமபடியான சிறந்தநற்குணங்கள்யாவும் திரண்டு வடிவமெடுத்து உலாவியதென்று எண்ணுமபடியாகவே நூல்களில், தலைவன் தலைவியர் கூறப்படுவர். தலைவன் தலைவியர்தமக்குள் இருக்கவேண்டிய அன்பு, ஆண்டானடிமைத்திறமுதலிய சிறந்தநற்குணங்களுக்கு இலக்கியங்களை இதிகாசபுராணங்களுக்குள்ளேயே நாம

தேர்ந்தெடுக்கின்றோம். 'கொடுக்கிலாதானைப்பாரியேயென்றுகூறி னுங்கொடுப்பாரிலை' என்றவிடத்துக் கொடைவிசேஷமமைந்த பறம் பிற்கோமானாகிய பாரியே பாராட்டப்பெறறிருக்கின்றான்.

தலைவன் வெளியே பொருள்வயிறபிரிந்திருக்கநேர்ந்தபொழுது அவன்வருமளவும அவனக்ஷேமததையுததேசித்து நோறறுக் கொண்டு அவனவரவை அதிகஆவலோடு எதிர்பாாததுத தனித்திருக் கும் தலைவியைபபறறிககூறுமிடதது, ஸாமான்ய உதாரணங்களை எடுததுசசொல்லுவதைவிட, 'பாசறைத்தொழில விறல்தந்து இன்னே முடிக' என்று கொறறவையைபபரவும நெடுஞசெழியன்றேவியையே எடுத்துச்சொலலுதல தக்கது.

இரண்டாவது. நூலகளில் விஷயததுக்கேறறவிதமாக நடையும, ஓசையும், நூறபரபபும் அமைந்திருக்கின்றனவாவென்று கவனிக்கவேண்டும. ஒருகுறிததவிஷயம அல்லது உணமையையே முக்கியமாககொண்டு எழுதபபுகுமகவி தான எடுததுககொண்ட விஷயததுக்கேறறவிதமாக நூலை வரையறுததுக்கொண்டு எதை அதிகச் சிறபபாகசசொலலவேண்டுமோ அதைமடடும சிறபபிததுச சொலலி, தனதுகருதது, படிபபவர்மனததிறபதியுமபடி இடததுக் கேறறவாறு இசைநயததையும அமைதது விளக்கவேண்டும. இந்தச சிறப்பு, கவிஞரிடததிற றோறறவேணடுமானால் அவர்கள் தாமே நூலாராய்ச்சியிலவல்லுநராக இருததல்வேண்டும். தமிழ்பபாஷையில் அநேககவிஞர் ஆராய்சசியிலும வல்லுநராக இருந்தார்களென்ப தற்கு அவர்கள் இயறறிய நூலகளில மேற்சொனனநயங்கள் மிக்கிருப பதே தக்கசான்றாகும. இநநயங்கள செவவனே அமைய இசையும் பதமும் மிக்க உபயோகமாக இருக்கினறன. ஆதலாற கவிகள் பதங் களைத தேர்நதெடுப்பார்கள்

சுக்கிரீவன் இலக்குமணனை உணணுமாறுவேணட, உணணுவ தற்குமனமொபபாத இலக்குமணன்கூறிய,

"வருததமுமபழியுமேவயிறுமீககொள
இருததுமென்ருலெமககினியதியாவதோ
ரருததியுண்டாயினும்வலந்தான்றழீஇக்
கருத்துவேறறிறபினமிழ்துங்கைககுமால்" (கிஷ-கிஷகிந்தைப்படலம்)

என்ற செய்யுளிலுள்ள ஒவ்வொருபதமும் இலக்குமணன் துயரத்தின் அளவைத்தெரிவிப்பதாக அமைந்துள்ளது. விசயை நந்தட்டனையும் சீவகனையும் அருகேயணைத்து நற்புத்திசொன்னதைக்கூறுவனவாகிய 'சிறகராற்பார்ப்புப்புல்லித் திருமயிலிருந்ததேபோல்' என்றற்றொடக்கத்துவார்த்தைகள் அவர்கள் அன்பையும் அவர்கள் ஆலோசித்தவிஷயத்தின் அருமையையும் தெரிவிக்கின்றன. 'தூம்பியாதுமில்லாக்குளம்போன்றதென்றேமில்பண்டம்' என்றற்றொடக்கத்தனவற்றில் உள்ளவார்த்தைகள் சீவகன்வரும்வரையில் ஸாகரதத்தன்கடையில் வியாபாரமேநடக்கவில்லையென்றவிஷயத்தைச் செவ்வனே தெரிவிக்கின்றன. இடத்துக்கேற்றபடி செய்யுளும் ஓசையும் இனிதினமைவதைச் சிறந்ததமிழ்நூல்களிற் பரக்கக்காணலாம். "பெண்ணுக்கணிகலமே பேரழகுக்கோருருவே" என்று தொடங்கிய கந்தபுராணச்செய்யுளில் உள்ளவார்த்தைகள் விருத்தையிறந்ததைக்குறித்து அவள்தோழியர்வருந்துவதை உள்ளவாறு புலப்படுத்துகின்றன. விரிவஞ்சி அதிக உதாரணங்களை எடுத்துக்கொள்ளவில்லை.

மூன்றாவது: நூலில் மனத்தாலாராய்ந்தனுபவிக்கத்தக்க குணவிசேஷங்களில் நூலின் வெளித்தோற்றத்தால் அழகும் பொருளால் இன்பமும் தோன்றும். சொல்லழகும் பொருளின்மேன்மையும் பிரியாதன.

"சேலனையசில்லரியகடை சிவந்துகருமணியம்
பாலகத்துப்பதித்தன்ன[படியவாய்முனிவரையும்
மாலுறப்பமகிழ்செய்வமாண்பிணஞ்சுமமிர்தமுமே
போல்குணத்தபொருகயற்கண்செவியுறப்போந்தகன்றனவே"]
(சீவக—நாமக)

என்றசெய்யுளில் நூலாசிரியர்மனத்திற்கொண்டகருத்தைப் புலப்படுத்துவோராகிய ஆசிரியர்நச்சினார்க்கினியர் 'மாயோனையும் பாற்கடலையும் முகத்தேவைத்தபடி; கருமணியைப் பாலிற்பதித்தாற் பால்நிறம் கெடும் என்றறிக' என்று விசேஷவுரை எழுதியுள்ளதிலிருந்து அறியக்கிடக்கும் உண்மைகள் பல.

நூலைமுடிக்கும்போது ஒரு ஸந்தோஷச்செய்தியோடு முடிக்கவேண்டுமென்று கவிஞர் எண்ணுவார்கள். ஆன்மகோடிகளுக்கு

இன்பமேபயக்கும் ஈசன் ஒருவன் உளன் என்றவுண்மையைவிளக்க வேண்டி அவர்கள் இவ்வாறு நூலைமுடிக்கிறார்கள். சிலப்பதிகாரத்தைப்போல வேறுவகையாக முடிவுபெறும்நூல்களில், கவிஞர் உலகத்தில் துன்பத்துக்குக்காரணம 'தற்செய்தகிழவனை நாடிக்கொளற்குவல்லதாய தொல்லைபபழவினையே'எனறுகூறி உத்தமநீதிகளைச சொலலுவார்கள.

இபபடி விஷயததின்பெருமையையறிய உணமையும, விஷயம் அடங்கியிருக்கும் உறுபபாகிய செயயுள்நடையையுணரத தகுதியும, மனததாலாராய்நதறிந்துகளிக்கவேணடிய சிறபபுக்களையுணர அழகும நூலாராய்சசிசெய்யும் புலவர்களுககு உரையாணிகளாக அலமகின்றன.

சிறந்தநூலகளைப்படிக்குநதோறும நமதுமனம் யாதொருதடையுமின்றிக் கவியின்மனததூடுசெல்லுகின்றது அபபோது சில அரிய வுண்மைகள் ஆசிரியர்மனத்துக்குததோறறியவாறே படிபபவர்மனத்துக்குநதோறறும். இநதபபழககததைக்கொணடு மறறபபுத்தகங்களிலும் இபபடிபபட்டசிறபபு இருநதால அநநூலகளிலவிருபபமும இல்லாவிட்டால் வெறுபபும தோறறும. கவியின் சிறநதகுணஙகளிற களிப்பும சிறநதவையல்லாதகுணங்களில வெறுபபுந்தோற்றுவது ஒருவருக்குப பாஷையிற சுவையிருக்கின்றதென்பதைத்தெரிவிக்கும.

ஸாமான்யலங்கதிகளையும் கவிகள் எவவாறு எடுததுசசொல்லுகிறார்களென்பதை யாராயவதில் நாம மனமகிழ்வோம. யாற்று நீர் ஸமுத்திரததிறகலபபதைக் கவிகள் எடுததுச்சொல்வதில் விசேஷ நயங்கள் தோற்றுகின்றன.

> "திரைபொருகனைகடற்செல்வன்சென்னிமேல
> நுரையெனுமாலையைநகரசசூட்டுவான
> சரவெனும்பெயருடைததடங்கொளவெம்முலை
> குரைபுனற்கன்னிகொண்டிழிநதசென்பவே" (சீவக.)

என்ற செய்யுளிலும்,

> "நால்வகைமலர்சேரைம்பானதியெனும்பருவக்கன்னி
> கால்வழிக்கலிங்கமார்ப்பக்கனதனம்பணைப்பப்பாங்கின்
> பாலவளைத்திரைக்கைவீசிப்பன்மலர்த்தொடைகளசூடிச்
> சேல்விழிகளிப்பவேலைச்செல்வனை மணந்ததன்றே"
> (திருக்குற்றால......திருநதி.)

என்ற செய்யுளிலும், இயற்கை எவ்வளவு அழகாகவர்ணிக்கப்பட்டுள்ளது?

இவ்வாறு நூல்நுட்பங்களையறியச் சிறந்தகருவியாகவுள்ளது நூலாராய்ச்சியாதலால் இது ஆங்கிலத்திலும் தமிழிலும் எவ்வாறு செய்யப்பெற்றுவந்ததென்பதை யோசிப்போம். இப்படி யோசிப்பது அவ்வப்பாஷையின் ஏற்றத்தாழ்வை நிச்சயிப்பதற்கன்று. ஏனெனிற் காலதேசபேதங்களாற் கவிகள்மனத்தில், தற்செயலாக அநேக எண்ணங்கள் தோற்றலாம். இவற்றை ஒப்பிட்டுப்பார்ப்பது மனத்துக்கு உற்சாகத்தைக்கொடுக்கும். ஆங்கிலபாஷாநிபுணர்கள் அநேக காலங்களில் இதரதேசத்துநூல்களை ஆராய்ச்சிசெய்து ஒற்றுமை நயங்களைக்கண்டு ஆனந்தித்திருக்கின்றார்கள்.

## ஆங்கிலநூலாராய்ச்சி

ஆங்கிலநூலாராய்ச்சியென்பது ஸமீபகாலத்தில் தோற்றியதொரு விசேஷம். ஆங்கிலபாஷா சரித்திரங்களால் அப்பாஷையிற் சிறந்தநூல்கள் கி. பி. 670-ம் ஆண்டுமுதலே எழுதப்பெற்றுவந்தனவென்று தெரிகின்றது. ஆங்கிலநூலாராய்ச்சி 1580-ம் ஆண்டுமுதல் ஆரம்பித்ததாகச்சொல்லலாம். நாடகங்களைக்கண்டித்து காஸன் (Gosson) என்பவர் ஒருபுத்தகம் எழுத, நாடகம் அவசியம் என்று லாட்ஜ் (Lodge) என்பவர் விளக்கிக்காட்டினார். பிறகு பழையநூல்களிலுள்ள சிறப்புக்களை யெடுத்துக்காட்டினாலன்றிச் சிறந்த வழிநூல்கள் ஏற்படாவென்று எண்ணி, பட்டன்ஹாம் (Puttenham) (1520—1700) என்பவரும் வெப் (Webbe) என்பவரும் ஆராய்ச்சி விளக்கம் எழுதினார்கள். அவர்களுக்குப்பிறகு டிரைடன் (Dryden) என்பவர் (1631—1700) நூல்களிலுள்ள விஷயங்களை மட்டும் பாராட்டுவதோடுநில்லாமற் காலத்துக்கேற்றபடி இசையும் செய்யுள் வகையும் எவ்வாறு பேதப்பட்டுவந்தனவென்பதையும் ஆராயவேண்டுமென்று வற்புறுத்தினார். பிறகு (Johnson) ஜான்ஸன் (1709-1784) என்பவர் குற்றங்கூறலையியல்பாகக்கொண்டு ஆராய்ச்சி செய்தார். இவர்காலத்து ஆராய்ச்சி அகத்துணைச்சிறப்புள்ளதன்று. பிறகு (Goldsmith 1728—1774) கோல்ட்ஸ்மித் இயற்கையை யுள்ளவாறேகூறுவதுதான் கவிசாதுர்யம் என்று கொண்டாடினார்.

இவர் (Gray 1716—1771) க்ரே என்றகவிக்கு உபாயங்களைக்கூறு மிடத்து 'ஜனங்கள் இயற்கையை ஆராய்ந்து உண்மைகளைக் கண்ட வண்ணமே எழுதுக' என்று சொன்னாராம். இந்தக்கவி பழைய நூல்களைப்படிப்பதிற் பற்றுள்ளவர்.

பிறகு சிலபத்திரிகைகள் தலையெடுத்துத் தமக்குவேண்டியவர்கள் எழுதியநூல்களைச் சிலாகித்தும், மற்றவர்கள் எழுதியநூல்களைக் கண்டித்தும் உண்மையான ஆராய்ச்சியைச்செய்யாமல் அநேகம் சிறந்தபுலவர்கள் மனம்புழுங்குமாறுசெய்தன. இதனால் ஆராய்ச்சி செம்மையாக நடைபெறவில்லையென்று பிற்காலத்திற் சொல்லவந்த ஆராய்ச்சியிற்போபெற்ற (Mathew Arnold) மாத்யூ ஆர்னல்ட் என்பவர் இந்தியர்களின் மனநிலைமையை ஓரிடத்தில் மிகப்பாராட்டி எழுதியிருக்கிறார். காயந்துவத்தலகற்றிப் பொருள்களை ஆராயுங் குணம் இந்தியர்களிடத்தில் இருக்கின்றதென்றும் அந்தமேன்மை யானகுணத்தை ஆங்கில ஆராய்ச்சிப்புலவர்கள் கைப்பற்றவேண்டு மென்றும் இவர் எழுதியிருக்கிறார்.

பிறகு [Coleridge (1772—1804).] கோல்ரிட்ஜ் என்பவர் நூலாராய்ச்சிமுறைகளைச் சீர்ப்படுத்தினர். இவர் செய்யுள் இப்படி யிருக்கவேண்டுமென்றும் அதிற்காணவேண்டியசிறப்புக்கள் இவை யென்றும் நிச்சயித்தார். இவர்கருத்து, பெரும்பாலும் 'புவியினுக் கணியாயான்றபொருடந்து' என்றற்றொடக்கத்து வாக்கியங்களிற் கம்பர் செய்யுளைப்பற்றிப் பொதுவாகக்கூறியகருத்தைத் தழுவி யுள்ளது. நவீனநூலாராய்ச்சி, (Carlyle 1795—1881) கார்லைல் என்ற ஆராய்ச்சிப்புலவர் தோன்றியபிறகே முன்னுக்குவந்ததென்று சொல்லலாம். நமது ஸொந்த அபிப்பிராயங்களைக் கவிக்கூற்றிற்காண முயற்சிசெய்யக்கூடாதென்றும், வெளித்தோற்றத்தைமட்டுங் கண்டு பிரமிக்காது, கவிஞர்கருத்தையும் அவர்கள் எடுத்தாளும் சொற்களை யும், அச்சொற்களிலமைந்துள்ள பொருளையும், ஆராய்ச்சிசெய்ப வர்கள் உய்த்துணரவேண்டுமென்றும் இவர் வற்புறுத்தினர். இவர் கருத்துமுழுமையும் இன்னும் அனுஷ்டானத்துக்குவரவில்லை யென்று (Vaughan) வான் என்ற அறிவாளர் தெரிவிக்கிறார். தற் காலத்தில் ராலே (Raleigh) என்பவர் நூலாராய்ச்சிசெய்வதில் மேம் பட்டுவிளங்குகிறார்.

இதுவரையில் ஆங்கிலநூலாராய்ச்சியின்விருத்தாந்தங்களைக் கவனித்ததில், ஆங்கிலத்தில் நூல்களையாராயுமவகைகள் இவை யென்று தெரிந்தன. அவை வருமாறு:—வெளித்தோற்றவாராய்ச்சி: இதிற் சொல், ஓசைமுதலியவற்றைக் கவனிக்கவேண்டும். கருத் தாராய்ச்சி: இதிற் சொல், பொருள், ஓசைமுதலியவற்றுள் உள்ள ஒற்றுமைநயம், கருத்தினமேன்மை, நூற்பயன்முதலியவற்றை யாராயவேண்டும்.

அநேகநூல்கள்தோன்றியபிறகே நூலாராய்ச்சி தலையெடுக்கின்ற தென்பதையும், சிலப்பதிகாரத்துக்கு அரும்பதவுரைக்குமுன்னே உரையொன்றிருந்ததையும், சிந்தாமணிமுதலியநூல்களுக்கு நச்சி னார்க்கினியரெழுதியுள்ள உரைகளுக்குமுன்னே உரைகளிருந்தனவென் பதையும் உய்த்துணருங்கால், தமிழ்மொழியின்பழமையும் தமிழ்க் கவிஞர்களுடைய ஆராய்ச்சியின்விசேஷமும் செம்மையாகவிளங்கு கின்றன. கூர்த்தகலவிகேள்வியுடைய உரையாசிரியர்களாகிய மஹா உபகாரிகள் எழுதியுதவிய உரைநூடபங்கள் நமக்கு மிரமப இன்பம் பயக்கின்றன.

ஆங்கிலபாடசாலைகளில் பாஷையைக்கற்பிக்கும்போது தொகை யானபொருளை முன்னேகூறிப் பிறகே பதங்களின் அர்த்தத்தையும் மற்றவிசேஷங்களையும் போதிக்கவேண்டுமென்று இப்போதுதான் வற்புறுத்துகிறார்கள். இது புதுமுறைப்படிபாடம்போதித்தல் எனப் பெயர்பெற்றுள்ளது. சிலப்பதிகாரப்பதிகவுரையில் அடியார்க்குநல் லார் அகத்திணைப்பொருட்பாகுபாடுகளையும் புறத்திணைப்பொருட் பாகுபாடுகளையும் விவரித்தால் கேட்போர்க்கு இன்பம்பயவாது உணர்வுசலிக்குமாதலின் வந்தனவந்துழிக்காட்டுதலைக்கருதிற்று இவ் வுரை என்று கூறியிருத்தலையும், உரையினதுபொதுவிலக்கணங்களைக் கூறுமிடத்து, நன்னூலில் அவ்விலக்கணங்களைப் பாடம், கருத்து, சொல்வகை, சொற்பொருள்முதலாக வகைப்படுத்தியிருத்தலையும் நோக்குங்காலத்தில் மேற்கூறியநவீனமுறையில், தமிழகம்ஸம்பந்தப் பட்டவரையில் நவீனம் ஒன்றுமில்லையென்பது விளங்கும். உதாரண மாக,

"குணவாயிற்கோட்டத்தரசுதுறந்திருந்த
குடக்கோச்சேரலிளங்கோவடிகட்கு"

என்றவிடத்தில் 'இளமைப்பருவத்தே இராஜபோகத்தைத் துறத்தலருமையால் துறந்து என்றும் அங்ஙனம் போகம்நுகர்ந்தவிடத்தே மீட்டும் தவவுருவந்தாங்கியிருத்தலருமையான இருந்தென்றுங்கூறினர்' என்று உரையாசிரியர் அடியார்க்குநல்லார் சொற்பொருள்விசேஷங்களைப் பாராட்டியெழுதிய உரைநயம் வியக்கத்தக்கது

இனி ஆங்கிலத்தில் இயல் இசை நாடகநூல்களை ஆராய்ச்சி செய்யுமமுறைகளைச் சுருக்கமாக எடுத்துச்சொல்லும் க்ராஷா (Crashaw) என்பவர் நாடக இலக்கணவுறுப்புக்களைப்பற்றி எழுதியிருப்பதையும், அடியார்க்குநல்லார் "இனிப் பொருளாராய்ச்சி எணவகைய, அவை திணை, பால, செய்யுள, நிலம், காலம், வழு, வழக்கு, இடம என்ப திணை 2; பால 14; செய்யுள 6; நிலம 4; காலம 12, வழு 14; வழக்கு 2; இடம 2, என்று பொருளாராய்ச்சியைவகைப்படுத்திக் கூறியிருத்தலையும், சீர்தூக்கிப்பார்க்குமிடத்துத் தமிழுரையாசிரியர்களின் ஆராய்ச்சியின்விசேஷம் நன்குவிளங்கும்

## பிரதிகள் ஆராய்ச்சி.

பழையபிரதிகள் சாஸனங்கள்முதலியவற்றை ஆராய்ந்து ஒப்பிட்டுப்பார்த்துப்பதிப்பித்தல் மிகச்சிரமஸாத்தியமானது. இவற்றைச் செம்மையாக ஆராய்ச்சிசெய்பவர்களே தேசசரித்திரத்தை நன்கு உணர்வார்கள் தேசசரித்திரஸம்பந்தமான ஆராய்ச்சியில், பாஷைநடையைவிட விஷயங்களின் உண்மையையே மிகக்கவனமாக ஆராய வேண்டும். பழையபிரதிகளையாராய்வதிலேயே தமது உடல், பொருள், ஆவிமூன்றையும் செலவழித்துவரும் பெரியோர்களே இவ்வித ஆராய்ச்சியின் நுட்பங்களை எடுத்துக்கூறத்தக்கவர்கள்.

பிரஞ்சுபாஷையில் இவ்வித ஆராய்ச்சியைப்பற்றி லாங்ளாயி ஸீனோபாயி (Langlois Seignobois) என்றபுலவர்கள் விஸ்தாரமாக எழுதியிருக்கின்றார்கள் அவர்களின் அபிப்பிராயங்களை முறையே வாசித்தல், ஆராய்தல், தெளிதல் என்று மூன்றுவகையாகப் பிரிக்கலாம்.

## வாசித்தல்.

ஒருபிரதியைப்பார்த்து எழுதுவதில் அநேகம்பிழைகள் நேர்ந்திருக்கலாம். மூலப்பிரதியே ஒப்பிடுவதற்குக்கிடைக்காமலிருக்கலாம். சிலவிஷயங்களை ஊகித்தே யறியவேண்டியிருக்கும். ஒரேதவறு

அநேகம்பிரதிகளிற்காணப்பட்டால், அதனைச் செம்மையாகப்பரிசோதிக்கவேண்டும். நூலாசிரியர் இன்னதென்பதை நியாயங்கொண்டு நிச்சயிக்கவேண்டும்.

## ஆராய்தல்.

நூலைச் செம்மையாக ஆராய்ச்சிசெய்தபிறகே அதன் உண்மையான வடிவம் புலப்படும். குறிப்புகளைத் தொடர்ச்சியாக எழுதிக் கொண்டேவருவதைவிடத் தனித்தனி காகிதங்களில் எழுதிவருவது சிறந்தமுறை. ஆராய்ச்சிசெய்பவர்களிடத்தில் சில குணவிசேஷங்கள் இயல்பாகவே அமைந்திருக்கவேண்டும். (1) எடுத்துக்கொண்ட முயற்சியில் அதிகப்பிரியமிருக்கவேண்டும். (2) நெடுநாட்களாகத் தெரியாதவுண்மைகளைக் கண்டுபிடிப்பதில் ஊக்கமும், அவற்றைத் தெரிந்துகொள்வதில் ஸந்தோஷமும் இருக்கவேண்டும். தமக்குத் தோற்றியவாறெல்லாம் பதிப்பிக்காமற் கண்டவண்ணமேபதிப்பிக்க வேண்டும். (Froude) பிரவுடென்ற ஆங்கிலவித்வான் அவஸரப்பட்டு ஆராய்ந்து, கண்டது ஒன்றிருக்க வேறொன்றை எழுதிவிடுவாராம். இவ்வாறு யோசியாமற்பதிப்பதைப் பிரவிடவியாதி (Froude's disease) என்று சொல்லுவார்கள். ஆராய்ச்சிசெய்பவர்கள் இவ்வியாதி தம்மையணுகாவண்ணம் தடுத்துக்கொள்ளவேண்டியது அவசியம்.

## தெளிதல்.

ஆசிரியர்மனத்தில் என்னகருத்து இருந்திருக்கலாமென்பதை அவர் எழுதியதிலிருந்தே ஊகிக்கவேண்டும். இவ்வாறு ஆராய்ச்சி செய்ய ஒருவருக்கு நிறைந்தபாஷாஞானம் இன்றியமையாதது. ஸாதாரணமாகப் பாஷையிற் பழக்கமட்டுமிருந்தால் அது போதாது. சிலகாலங்களிற் சிலபதங்களுக்குச் சிறப்பாகச் சில அர்த்தங்களிருக்கலாம். அவற்றைத்தெரிந்துகொண்டு இடத்துக்கேற்றவாறு வாக்கியங்களின்பொருளைத் தெளிந்துகொள்ளவேண்டும். மனத்தாலாராய்ந்து தெரிந்துகொள்ளவேண்டிய அரியவுண்மைகளைக் கவிகள் கதைகள்மூலமாக ஸுலபமாகத்தெரிவித்திருக்கலாம். இவற்றிற் கவியின்கருத்தை ஆராய்ந்துதெரிந்துகொள்ளவேண்டும். யாதொரு ஆதாரமுமின்றி, கர்ணபரம்பரையாக அநேகவிஷயங்கள் வழங்கி

வரலாம். இவற்றின் உண்மையை நிச்சயித்துக்கொள்ளவேண்டியது அவசியம். தமிழ்க்கவிகளைபபற்றி அநேகஞ்செய்யுட்கள் கர்ணபரம பரையாகவேவழங்கிவருகின்றன. அவறறைக் கறறறிந்தபெரியோர் களே சீர்தூக்கிப்பார்த்து அவற்றின் உண்மையை நிச்சயிக்கவல்ல வர்கள்.

மேறகூறிய ஆராய்ச்சிமுறைகளுக்கு இலக்கியஙகளாகப் புறநா னூறுமுதலிய சங்கநூறபதிபபுககளைசசொலலலாம. லாங்கிளாயி ஸீனுபாயி இயறறியுள்ளகிரநததததிறகூறப்பட்டமுறைகளையெல்லாம் இப்பதிப்புக்களிற்காணலாம விரிவஞ்சி ஒவ்வொன்றுக்கும் உதா ரணங்கொடுக்காமற சில முக்கிய அமசங்களைமட்டும இங்கு எடுத்துக கொண்டேன்.

(1) புறநானூறறுசசெய்யுட்களிற பிரதிகளிற சொறகள் சிதைநதவிடஙகளைக்காட்ட ஒறறைபபுளளிநிரைகள அமைககபபட் டுள்ளன.

(2) புறநானூறறிலிருநது, வேறுநூல்களிலுடைய பழையவுரை களின் இடையிடையே உரையாசிரியர்களாற பூாததியாகவும சிறிது சிறிதாகவும எடுததுககாட்டப்பெறறசெயயுடகள்மூலமாகச் சில குறைந்தபாகங்கள நிரபபபபட்டுளளன.

(3) சிநதாமணிமுகவுரையில, திருசசிறறமபலம பெருமபறறப புலியூர் என்பவறறை முறையே ஆறெழுததொருமொழிக்கும ஏழெ ழுததொருமொழிக்கும உதாரணமாககககாட்டியதிலிருந்து ஆசிரியர் நச்சினாக்கினியாமதததைநிச்சயிபபது ஓா ஆராய்சசிவிசேஷம்.

(4) சிலபபதிகாரததில இககாலததுவழங்கபபெறாத சில இயற றமிழ்ச்சொறகள் விளங்காதிருபபன, மறறநூலகளாலும பழைய வுரைகளாலுமே ஆராயசசிசெய்ய விளங்கக்கூடுமென்றுதுணிதல் மேலேகாட்டிய ஆராய்சசிமுறையில் அடங்கும.

(5) திருப்பெருநதுறை மிழலைககூற்றததிலுள்ளது. மிழலைக் கூற்றம் "நெல்லரியுமிருநதொழுவர்" என்ற புறநானூற்றுசசெயயு ளால் நெய்தனிலத்தைச்சார்நததென்று தெரிகின்றது. ஆதலால், திருப்பெருந்துறை கடறகரையிலுள்ளதோரூர். திருவாதவூரர் உப தேசம்பெற்றவ்தலம் இதுவேயெனத திரிசிரபுரமவித்வான் மீனுக்ஷி

சுந்தரம்பிள்ளையவர்களியற்றிய திருப்பெருந்துறைப்புராணமுகவுரை யிற்குறித்திருப்பது சரித்திரசாஸன ஆராய்ச்சிவகையிற்சேரும்.

(6) அநேகநூலகளை ஆராய்ந்து கருத்துக்களைப் புலவர்கள் எப்படிதெரிவித்திருக்கிறார்களென்பதையறிந்து படிப்போர்களிக் கும்படி சிந்தாமணியின் இரண்டாம்பதிப்பிறசேர்க்கப்பெறறுள்ள ஆராய்சசிவிளக்கம 'ஒற்றுமைநயததைக்காணும்' ஆராய்ச்சிவகையிற் சேரும.

இன்னும் ஆங்கிலததிலும் தமிழிலும் நூலாராய்ச்சியைககுறித்துச் சொல்லக்கூடியவிஷயங்களை எவவளவோவுள்ளன. நூலாராய்ச்சியே இனபததுளினபமெனக்கொண்டுவாழும அறிவாளாகளே இதைப் பறறி மிகவிமரிசையாகச்சொல்லககூடும. இதனை நான் விவகரிக்கப் புககது 'ஆசைபறறியறையலுறறதாகக்கொணடு' இதிற்காணும் வழுக்களை அ றி வா ள ர் பொறுததருளுமாறுவேண்டுகின்றேன். நூலாராய்ச்சியாற் பாஷையின்விரிவும், பாஷையிற சொறகளின் பயனும், எல்லாவிஷயங்களைபபற்றியுஞ்சொலலப பொருள்நிரம்பிய சொறகள் பாஷையில் உணடென்னுமுண்மையும, தேசத்துச்சரித் திரமும, நாகரிகமும, மற்று மறியவேண்டிய அநேக உண்மைகளும் தெரியும. முன்னோ ஆராய்சசிசெய்தமுறையையே நாமுங்கைபபறறி நூல்களை ஊனறிபபடிததோமானல் அநேகஞ் சிறநத உண்மைகளைத் தெரிந்துகொள்ளலாம்.

நூல்களின்நடபங்களைச செம்மையாக அறிவதற்கு அனுகூல மாக உரையெழுதியருளிய உரையாசிரியாகளுக்கும், அவ்வுரைகளையும் மூலப்பிரதிகளையும தெளிவுபெற ஆராய்ந்து அச்சிறபதிப்பித்ததவும் அறிவாளராகிய மஹாவுபகாரிகளுக்கும், தமிழ்பபாஷாபிவிருததியில் விசேஷஅபிமானமுளளவர்களாகிய ஸேதுபதியவாகளுக்கும் தமி ழுகம்செய்யக்கூடியகைமாறு யாதுளது?

'கைமாறுவேண்டாகடப்பாடுமாரிமாட்
டென்னாற்றுங்கொல்லோவுலகு.'

---

C P. வேங்கடராம ஐயர், எம். ஏ.; எல். டி.

# செல்வநூல்.

# ECONOMY.

"செந்தமிழ்" (தொகுதி-கஉ-பகுதி-அல்) உகூஉ-ஆம்பக்கத் தொடர்ச்சி.

——.o(—)o——

## அத்யாயம்—20.

## ஸர்க்காரவரி.

## Taxation.

118. ப்ரஜாபரிபாலனமுதலான ராஜகார்யங்களை நடத்துவதற்குப் பொருளுதவிவேண்டுமல்லவா? ஒவ்வொருதேசமும் ஏதாவதொருவித அரசாட்சிக்குட்பட்டேதானிருக்கவேண்டும். அப்படிக்கில்லாவிடில், அராஜகம் (Anarchy) எனனும குறையால், தேசம், கலகத்துக்கும், கொள்ளைக்கும், பஞ்சத்துக்கும் இரையாய் அன்னியர் ஆதீனத்துக் குட்படடுப்போம். அவ்வாறுநேரிடாது சரிவர ஸர்க்கார் முறைகளை நடத்துவதற்காகக் குடிகள் ஸர்க்காருக்குச்செலுத்துங் கடமையே வரி அல்லது ஸர்க்காரவரி எனப்படும். இவை, விசேஷமாய் உள்நாட்டில் மெலியோரை வலியோர் எதிர்த்துக் கலகம், கொள்ளைமுதலானவைசெய்யாமல் அவ்வரசாட்சிக்குட்பட்ட சகல ப்ரஜைகளும் சமமாக அவ்வரசாட்சியின்பயனை அனுபவிக்குமாறு போலீஸ், க்ரிமினல்ந்யாயஸ்தலங்கள்முதலான பந்தோபஸ்துகள் செய்யவும், அன்னியதேசத்தார் தம்தேசத்திற் படையெடுத்துவந்து ஹிம்ஸிக்காதுகாப்பதற்குத்தக்க ராணுவமுதலானவை தயாரித்து வைத்துக்கொள்ளவும், தரைவியாபாரங்கள், ஜனப்போக்குவரத்து முதலானவைகளுக்குச் சாலைகள்முதலான சௌகரியங்களும், கடல் வியாபாரத்துக்குவேண்டிய துறைமுகங்களும், தேசவஸதிக்குவேண்டிய குளங்கள், தாமவைத்யசாலைகள்முதலான சௌகரியங்களும் செய்துகொடுக்கவும் உபயோகிக்கப்படுகின்றன.

### வரிவிதிப்பதைப்பற்றிய சில முக்யவிதிகள்

(1) வருமானத்துக்குத்தக்கவரிவிதிக்கவேண்டும். எவன் ராஜாங்கத்தின் ஆதரவால் அதிகலாபத்தையடைகின்றானோ அவன் அந்த லாபத்துக்குத்தக்கபடி, அந்தராஜாங்கத்துக்கு வரிமூலமாய் உதவி

புரியவேண்டும். தரித்திரனைப்பார்க்கிலும் தனிகன்தான் தேசத்தின் க்ஷேமத்தை யதிகமாய்க் கோரவேண்டியவன். தேசக்ஷேமத்துக்குச் சத்ருமுதலானவர்களால அபாயமநேரிடுமானால், அப்பொழுது அதிக நஷ்டபபடத்தக்கவன் அதுவரை அதிகலாபமடைந்த தனிகனே. தரித்திரனுக்கோ 'இந்தமடமிலலாவிடிற சநதமடம' என்றவாறு என்றுமுள்ள கூலிவேலை யவனுக்குணடு. ஆகையால், சமாதான காலத்தில், இவ்விதியைககவனியாது தாாதரமினறி வரிசுமத்துவது, கலகங்களுக்கு ஆஸபதமாய்முடிகினறது. பரான்ஸ்கலகத்துக்குக் காரணம, தனிகர் தரித்திரரைவருததியதெனறே சொலலபபடும.

(2) திட்டவரி. வரி, திடடமாய் இவவளவுக்கு இவ்வளவுதான் எனறு நிர்ணயிக்கபபடடிருக்கவேணடும. அபபடியன்றி 'தடியெடுத் தவனெல்லாம தண்டறகாரன்' எனறபடி, ரிவினியூஉத்தியோகஸ் தர்கள தங்களிஷ்டபபடியெலலாம், யாதொருவிதிக்குங் கட்டுப்படாது வரிபோடுவதென்று ஏறபடடுவிடடால, குடிகளுக்குப பலவிதத் துன்பங்கள் ஏறபட்டுவிடும்.

(3) ஸௌகரியங்கள். குடிகளுக்குச சௌகரியமான இடம், காலம, விதம முதலானவைகளைக்கவனிதது வரிவசூலிக்கவேணடும்.

இடஸௌகரியம்:-வரிசெலுததுவோர் தங்களிருபபிடததிலேயே செலுத்தும்படியானசௌகரியம செய்யவேணடும. திருநெலவேலிக் குடியானவன் சென்னையில் வரிசெலுததுவதெனறால் அவனுக்கு எவ் வளவுகடினமாயிருக்கும. இதை உததேசிததுததான் மணியகாரர், பில்கலெகடர்முதலான சிபபநதிகள, வீடுவீடாய்பபோய் வரிவசூ லிததுவருகினறார்கள்.

காலஸௌகரியம்:-எதைக்குறிதது வரி வசூலிக்கபபடுகின்றதோ அந்தலாபம், அல்லது பலன் அடைந்தபிறகுவசூலிபபதே நலம். மகசூல் அறுவடையாகுங்காலமான, மாசி, பங்குனிமாதங்களில் வசூ லிப்பது ஜனங்களுக்கு நன்மையேயொழிய, தசகூலிமுதலானவைக ளுககுத் திண்டாடிக்கொண்டிருக்கும சாகுபடிக்காலங்களில் வரி வசூலிப்பது ஜனங்களுக்கு மிகுந்தகஷ்டமாகும். தவிரவும், சில வரிகளைத் தவணைவாரியாய்வசூலிப்பது மிகவுஞ்சௌகரியம. ஒரே தடவையில் முழுவரியையுஞ் செலுததுவதைப்பார்க்கிலும 4, 5 தவணையாய்ச்செலுத்துவது எல்லோருக்கும் சௌகரியமாயிருக்கும்.

(4) லாபகரமாயிருக்கவேண்டும். ஏதாவது ஒருவரியைவிதிக்குமுன் அது செலுத்துவோனுக்கும், வசூலிக்கும் ராஜாங்கத்துக்கும் லாபகரமாயிருக்குமா, என்பதைக் கவனிக்கவேண்டும் வசூலிப்பதிற்செல்லுஞ் செலவைப்பார்க்கினும் வசூலாகுந்தொகையில் தக்கமீதம் இல்லாதவிஷயத்தில், அதனாற் குடிகளுக்குக்கஷ்டமேயொழிய ராஜாங்கத்துக்குத் தக்கலாபம் ஏற்படமாட்டாது. மேலும், வரிசெலுத்தியபிறகு செலுத்துவோனுக்கு மீதம் ஒன்றும் இல்லாவிட்டால், அதனால் அவன்தொழிலே கெட்டுப்போம்.

119. உப்பு, அரிசிமுதலான காலக்ஷேபத்துக்கு அவசியமான வஸ்துக்களுக்கு வரிவிதிப்பதால ஜனங்களுக்கு மிகுந்தகஷ்டமும், கொள்ளைநோயும் பஞ்சமும் ஏற்படும். அபின், சாராயம், கஞ்சாமுதலான லாகிரிபதார்த்தங்களுக்குத் தீர்வை ஏற்படுத்தலாம். அது, ஸர்க்காருக்கு லாபத்தைக்கொடுப்பதுடன, ஜனங்களும் லாகிரிவஸ்துக்களை யதிகமாயுபயோகிக்காது தவிர்க்கவும் சாதகமாயிருக்கும்.

(Raw Materials)

120. விளைபொருள்களுக்கு வரி ஏற்படுத்தலாகாது என்பது ஓர் அபிப்ராயம். பருத்திமகசூலுக்கு விளைவுக்குத்தக்கவாறு வரி ஏற்படுத்துவதானால், நிலத்தீர்வையைத்தவிர வேறு இரண்டாந்தீர்வை யேற்படுத்தவேண்டிவரும். அப்படியாயின ஒப்படிகாலங்களில் ஸர்க்காருக்குத்தெரிவித்துத்தான் ஒப்படிசெய்யநேரிடும். அதனால் அதைக் கங்காணம்செய்ய, ஸர்க்கார்சிப்பந்திகள் அதிகப்படுத்தவேண்டியதுடன் ஜனங்களுக்கும் மிகுந்தகஷ்டமேற்படுமேயொழிய அதற்குத்தக்கலாபம் ஸர்க்காருக்கு ஏற்படமாட்டாது.

நேர்வரி. பொறுப்புவரி.

Direct and Indirect Taxations.

121. வரிகள் நேர்வரிகள் என்றும் பொறுப்புவரிகள் என்றும் இரண்டுவகையாய்க்கூறப்படும்.

நேர்வரி. வரிசெலுத்துவோனிடம் நேரேவசூலிப்பது, நேர்வரியாகும். வருமானவரி (Income-tax) ஆள்வரிமுதலானவைகள் இவ்வகுப்பைச்சேர்ந்தவை. இதிற பொறுப்பவனும் செலுத்துபவனும் ஒருவனே.

**பொறுப்புவரி.** அப்படிக்கல்லாது உண்மையாய் வரியைப் பொறுத்துக்கொள்பவனிடம் வாங்காது வேறு நடுமனிதனிடம் வாங்குவதே பொறுப்புவரியெனப்படும். துணிமுதலான செய்பொருள்களுக்குவிதிக்கும்வரி, நெசவுகாரர்களால் செலுத்தப்படுகின்றது. ஆயினும், அவ்வரிக்குத்தக்கவாறு, அவர்கள் விலையை யுயர்த்திவிடுவார்களாதலால், கடைசியாய் அத்துணியை உபயோகிப்பவனே அவ்வரியைப்பொறுக்கிறான். இதிற் பொறுப்பவன் வேறு. செலுத்துபவன் வேறு.

## வருமானவரி.

## Income-tax.

122. குடிகளில் அவரவர்வருமானத்துக்குத்தக்கபடி வரிவிதிப்பதே வருமானவரியெனப்படும். வைத்யம், வியாபாரம், வக்கீலுத்யோகம், ஸர்க்காருத்யோகம், லேவாதேவிமுதலான எண்ணிறந்த வருமானங்கள் இவ்வரிக்குட்பட்டுவிடுகின்றன. உண்மையில் இந்த வரிதான் குடிகளியாவரும் தங்கள்செலவநிலைக்குத்தக்கவாறு செலுத்தக்கூடியவரி. ஆயிரமரூபாயவருமானத்துக்குக்குறைந்தோருக்கு இவ்வரிகிடையாதாதலால் ஏழைகளுக்கு இதனாற் பாதகமில்லை.

இவ்வரி முதன்முதற் சொற்பகாலத்துக்கென்றே ஸர்க்கார் அவஸரசெலவையுத்தேசித்து விதிக்கப்பட்டது. முடிவில் அது ஸ்திரமாக நிலைத்துவிட்டது.

## நிலவரி

## Land-tax.

123. நிலத்தின் தரத்துக்கும் விஸ்தீர்ணத்துக்குந்தக்கவாறு விதிக்கப்படும்வரியே நிலவரியெனப்படும். பொதுவாய் நிலவரி செலுத்துபவன் நிலஸ்வான்தாராம். ரயத்வாரி என்றும் ஜமீன்தாரி என்றும் முக்யமாய் நிலவரி இரண்டுவகைப்படும். ரயத் அல்லது குடிகளிடமிருந்து அயன நிலத்தீர்வையைப்போல நேரேவாங்குவது ரயத்வாரி எனப்படும்.

124. ஜமீன்தாரி. ஜமீன் என்றால் ஹிந்துஸ்தானியில் பூமி என்றர்த்தம். ஜமீன்தாரி எனபது, ஜமீன்தார் எனனும் நடுமனிதன அல்லது பூஸ்வான்தாருக்குச் சாசுவதத்தீர்வைவிதித்து ஏராளமான பூமியைக் குத்தகைவிடுவதும், அவன் குடிகளிடமிருந்து மேல்வாரம் பகிர்ந்துகொள்ளுவதும், ஸர்க்காத்தீர்வைக்கு ஜமீன்தாரே ஜாமீன்தாராயிருப்பதுமான ஏற்பாடு.

இதைப்பற்றி விசேஷமாய் அடுத்தப்ரகரணத்திற் சொல்லப்படும்.

(தொடரும்.)

உ

# செல்வநூல்,

# ECONOMY.

## அனுபந்தம்.

## APPENDIX.




| | | | |
|---|---|---|---|
| | வேலை | 1 | |
| | வேலைபபிரிவு (Division of Labour) | 2 | சாதகம. பாதகம. |
| வேலை | தனிவேலை | 3 | |
| | கூட்டுவேலை | 4 | |
| | கலப்புவேலை | 5 | |

முதல். செல்வவிருத்திக்கு உபயோகமானசெல்வமே முதல் எனப்படும் இதனால் முதலெல்லாம் செல்வமாகும். ஆனால் செல்வமெல்லாம முதலாகாது. ஆகாரமமுதலான அவசியபபொருள்களும் நகைகள்முதலான அதிபோக்ய (Luxury) வஸ்துக்களும, செல்வமாகும். ஆயினும அவைகள் உடையவர்களுககு உபயோகமாயினும் அவைகளைக்கொண்டு செலவததை விருத்திசெய்யமுடியாதாகையால் அவைகள் முதலாகமாட்டா. யநதரமமுதலானவைகள செலவவிருத்திக்குச்சாதகமானவையாதலால அவைகள் முதல் எனப்படும்.

Fixed capital

Circulating capital.

## Investment of capital.

### வேலை ஒரு முதலல்ல.

104. வேலையும் ஜாஸ்திப்பலனும். ஒருவேலையைக்கொண்டு ஜாஸ்திப்பலனையடைவதற்கு மூன்றுவழிகள் உண்டு. அவை யாவன:—

(1) தக்கபருவத்தில்

(2) தக்க இடத்தில்

(3) சிறந்தமாதிரியாய்ச்

செய்யப்பட்டவேலைகளெல்லாம ஜாஸதிபபலனைத்தருகின்றன.

தக்கபருவம். காற்றுள்ளபோதேதூற்றிக்கொள் என்றபடி, பருவம்பார்த்துப் பயிரிட்டால், சரியானபலனுண்டு. தீபாவளிசமயததிறசெய்தவெடிகள் சீக்கிரம்விறபனையாகும். மழைகாலத்துக்கு முன், விறகுமுதலானவை சேகரிததுவைக்கவேணடும்.

தக்க இடம். இடததுக்குததககபடி பயிரிடவேண்டும். குளிர்நத தேசங்களில் வாழைமுதலான உஷ்ணதேசபபயிர்கள் உண்டாக மாட்டா. அதேமாதிரி மலைகளிற குளிரநதஇடங்களில உணடாக வேண்டிய காபி, தேயிலை, பளுகமுதலானவை தரையில் உஷ்ண பரதேசங்களிலுண்டாகமாட்டா. ஆதலால் நிலததின்தன்மையையும், சீதோஷ்ணநிலைமைகளையும் கவனிதது அதறகுததக்கவாறு பயிரிடுவதே தக்கபலனைததரும.

சிறந்தமாதிரி. வேலைசெய்யுமமாதிரிக்குத்தக்கபடிக்கும் பலன் ஏறபடுகின்றது. அது வேலைக்காரனுடையபுத்தியையும், சாமர்த்தியத்தையும் பொறுத்தது. சிறந்தமாதிரியாய்வேலைசெய்ய இரண்டு முக்யமானவழிகள்:—

(1) சாஸ்தரப்பயிற்சி.

(2) வேலைவிபாகம்.

சாஸ்த்ரப்பயிறசி. இன்னபலனடைவதற்கு இன்னகாரியம்செய்ய வேண்டுமென்பதும், அக்காரியமுறைகளும், அவைகளைச் சரிவா

நடத்தவேண்டியவிதங்களும் சாஸத்ரஞானத்தால்தான் அறியமுடியும். தண்ணீரைக்காய்ச்சினால் நீராவியாகும; நீராவி வேகமாய்ப் பரவும்; அதனால் ஒருவிதசக்தியுண்டாகும; அச்சக்தியால், கனதத வண்டியிழுததல், பாரமதூக்கல்முதலானவேலைகள் செய்யமுடியும. இவைகளைச்செய்யும யநதிரந்தான் நீராவியந்திரம (Steam Engine) என்னும் அறிவு சாஸ்த்ரப்பயிற்சியால்தான ஏற்படும். சாலைபோடுவதிற் சாதாரணமாய் 100 கூலியாட்கள்செய்யும்வேலையை ஒரு நீராவியுருளை அழகாய்ச்செய்துவிடுகின்றது.

## 11. 5-வதுசாதகம். அதிகவேலைநடக்கும்.

உதாரணம். 2 மைலதூரததிலுள்ள தபாற்பெட்டியில ஒரு கடிததததைக்கொண்டுபோய்ப்போட ஒருவனுககு எவவளவுசரமமோ அவ்வளவுதான் 5 கடிதங்களைபபோடவும ஆகினறது. ஒருகிராமததிலிருந்து ஒவ்வொருவனும தனதனகடிததலைதத தானேகொண்டு போய்ப்போடுவதைபபார்க்கிலும, ஒரு பொதுமனிதனை அமாததியனுப்பினால், அவனுககு அதிகசரமமிலலை. இவாகள வேறுவேலை பார்க்கலாம. எலலோருஞ்சோந்து அனுபபினால, கடிதமனுபபுஞ்செலவும் சுருக்கமாகும இதுதான் தபால்முறை. 10 போ காசியாத்ரை போகையில், எலலோருஞ்சேர்ந்து ஒரேசததிரததில தங்கினால், ஒருவன சாமானகளைபபாாததுக்கொள்ளலாம, ஒருவன சாமானகள வாங்கிவரலாம, ஒருவன அடுபபுமெழுகலாம, ஒருவன் பாததிரம சுததிசெய்யலாம, ஒருவன சமையலசெயயலாம, எல்லோரும் சாபபிடலாம. இவவாறு வேலைவிபாகததால், காரியமவிரைவாய்முடிகினறது. ஆளுக்குக்கொஞசம்வேலையானதால, தனிததனி எல்லாவேலையையும பார்ப்பதுபோல் அதிக ச்ரமமுமில்லை

6-வது அதிகச்சரக்குகளசெய்யலாம. ஒருகுணடூசியந்திரஞ்செய்ய எவ்வளவோ வேலையாகும். செய்தாய்விட்டால ஆயிரக்கணக்கான குண்டூசிகள் அதேதொழிலாயிருபபவன் விரைவிற் செய்துமுடிப்பான். அவைகளை ஆயிரக்கணககானஜனங்கள், சொற்பவிலைக்குவாங்கி உபயோகிப்பார்கள். அப்படிக்கல்லாது குண்டூசிதேவையான ஒவவொருவனும தானேசெய்துகொள்வதென்றால், எவ்வளவுகாலதாமதமும் எவ்வளவுபணச்செலவும் எவ்வளவு ச்ரமமுமாகும்?

இதேமாதிரி, புஸ்தகம் அச்சடிப்பதேதொழிலாயுள்ளவன், ஷேக்ஸ்பியாநாடகமொன்றை ஆயிரக்கணக்காய் அச்சடித்து, ப்ரதி ஒன்று இரண்டணுவீதம் விற்பான். அப்படியன்றி ஒவ்வொருவனும் தானே ஒருப்ரதி தயாரிப்பதென்றால் எவ்வளவுசிரமமும், எவ்வளவு காலமும், எவ்வளவுபணச்செலவுமாகும்.

7. ஆளுக்குத்தக்கவேலை. (Personal Adaptation) வேலை விபாகத்தால், ஒவ்வொருவனும் தன்தன் சரீரபலத்துக்கும் புத்தித் திறமைக்கும் தக்கவாறு தொழிலைத்தேடிக்கொள்ளலாம். கைவலு வுள்ளவன் கொல்வேலைசெய்யலாம். வலுவில்லாதவன், பருத்திநூற்க லாம். யந்த்ரயூகமுடையவன், கடிகாரம்செய்தல், யந்த்ரநிர்மாணம் முதலான யூகவேலைகள்செய்வான். யூகமில்லாதவன், கல்புரட்டல் முதலான முரட்டுவேலைசெய்யலாம். அதிகப்படித்தவன் உயர்ந்த உத்யோகங்களுக்குப்போகலாம். சொற்பப்படிப்புள்ளவன் குமாஸ் தாவாயிருக்கலாம்.

8. இடத்துக்குத்தக்கவேலை. (Loeal Adaptation) எந்த இடத் தில் என்னஸாமான்கள்கிடைக்குமோ அதை அங்கேயே சரக்குச் செய்வது சௌகரியம். கரும்பு உண்டாகும் இடத்திலேயே ஆலை வைத்து வேலைசெய்தால், கரும்புச்சக்கையையும் தூக்கிச்செல்லும் சிரமமும் பணச்செலவும் லாபமாகும். நெல்லை அனுப்புவதைப் பார்க்கிலும் நெல்விளையுமிடத்திலேயே அதைக் குத்தி அரிசியாக ஏற்றுமதிசெய்தால், உமியையுமனுப்புஞ்செலவு லாபமல்லவா?

மேற்கூறியவைகளினின்றும் நாம் முக்யமாயறிவதென்னவென் றால், ஒவ்வொருவனும் பல வேலைசெய்யத்தொடங்கிப் பாழாய்ப் போவதைப்பார்க்கிலும், ஒவ்வொருவேலையில் தேர்ச்சியடைந்தால், பலவேலைதெரிந்த பலர்சேர்ந்து பெரியகாரியங்களைச் சரியானபடி சாதிக்கலாம் என்பதே.

விபாகமுறை.—செல்வவிருத்திக்குச சாதனமாயுள்ளவை, இடம், பொருள், ஏவல் என்றும அவை எவவாறு முறையே செல்வத்தை உண்டுபண்ணுகின்றனவென்றும் முன்விவரிக்கப்படடது. அவவாறுண்டானசெல்வம் எவ்வாறுபிரிததுக்கொள்ளபபடுகின்றதென்பது இனிவிவரிக்கப்படும். இடம அல்லது நிலத்தையுடையவன் நிலக்காரன என்றும, பொருள் அல்லது முதல்போடுபவன் முதலாளியென்றும், ஏவல் அல்லது வேலைசெய்பவன் வேலைக்காரன் என்றும் சொன்னோம. உண்டானசெல்வத்தை அவர்கள் தம்தம உரிமைக்குத்தக்கபடி பிரிததுக்கொள்ளுகின்றார்கள்.

| | | |
|---|---|---|
| நிலம் | வேலை | முதல் |
| நிலக்காரன் | வேலைக்காரன் | முதலாளி |
| வாரம் | கூலி | லாபம் |

வாரம், கூலி, லாபம, என்னும விபாகங்களைத்தவிர, ஸர்க்காருக்குச்சேரக்கூடிய வரி அல்லது தீர்வையென்பதும் 4-வதுபாகமாய் ஏறபடுகின்றது. ஆகையால், உண்டானசெல்வம்,

=வாரம்+கூலி+லாபம்+வரி.

பரிவர்த்தனை (Exchange) தன்னிடத்து அதிகமாய் உள்ளதைக்கொடுத்துத் தனக்கவசியமானதைக்கொள்வதே பரிவர்த்தனையாம். ஒருவனுக்குவரும் 100-கலம்நெல்லில், வருஷச்செலவு 50 கலம்போக, பாக்கியான 50 கலத்தைக்கொண்டு தனக்கு அவசியமானதும், தன்னிடமில்லாததுமான துணிகள், உளுந்து, பருப்பு, பருத்தி முதலானவைகள்வாங்குவான். இதைத்தான் பரிவர்த்தனையென்பார்கள்.

R. S. நாராயணஸ்வாமி ஐயர், B.A., B.L.

உ

கடவுள் துணை.

செந்தமிழ்

தொகுதி-கங.] ஆனந்த௵ மார்கழிமீ [பகுதி-உ.

Vol. XIII. December–January, 1915. No. 2.

# சேதுநாடுந் தமிழும்.*

தெய்வங்கொள்கையானும் தெய்வஞானங்களானும் அவைபற்றிய பெருநூல்களானும் எவ்வுலகுந் தொன்றுதொட்டே ஏத்துஞ்சிறப்புடைய இப்பரதகண்டத்துக்கு இருபெருவரம்பாகவுள்ளன ஸேதுவும் இமயமும் என்ப; "ஆஸேதுஹிமாசலபர்யந்தம்" என்பது வழக்கு. இங்ஙனம் சேதுவையும் இமயத்தையும் இருபேரெல்லையாகக்கொண்ட இப்பரதகண்டத்தை வடநாடு, தென்னாடு என இரண்டாகப்பகுத்திடைநின்றுவிளங்குவது திருவேங்கடமென்னுந் தெய்வமாமலையாம். திருவேங்கடத்துக்குவடக்கிலுள்ளமக்களவழங்குவது ஆரியம், வடமொழி எனவும், அதற்குத்தெற்கிலுள்ளமக்கள்வழங்குவது தமிழ் தென்மொழியெனவும் பெயர்பெறும். கல்வியிற்பெரியகம்பரும் "வடசொற்குந்தென்சொற்கும்வரம்பிற்றாய்நான்மறைக்குமற்றைநூற்கு, மிடைசொற்றபொருட்கெல்லாமெல்லையதாய் .. .. .....ஓங்கியவேங்கடத்திற் சென்றுறுதிர்மாதோ" என்பதனா லிதனைவிளக்கியுரைத்தார்.

சேது என்பது சீராமமூர்த்தி கடன்மேலிட்ட திருவணை. இது கன்னியாகுமரிமுதற்றென்பது, மணிமேகலைநூலுள் மணிமேகலா தெய்வம்வந்துதோன்றியகாதைக்கட் "குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறைப், பரந்துசென்மாக்களொடுதேடினன்பெயர்வோன்" என வருதலா னறியப்படும். இதனாற் குமரியையெல்லையாகக்கூறுமிடனெல்லாம் சேதுவைக்கூறின் அது தவறாகாதென்றுதெளியலாம். இச்சேதுவையணித்தாவுள்ளபூமி சேதுநாடு, ஸேதுராஜ்யம் என்று பெயர் சிறக்கும். இது மண்ணியனாடுபலவற்றுளும் புண்ணியநாடென்று போற்றப்படும்.

---

* இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பதின்மூன்றாம்வருஷக்கூட்டத்திற் படிக்கப்பெற்றது.

இத்தகைராஜ்யம பண்டுதொட்டே ஒன்றுண்டென்பது, சங்கர சோழனுலாவென்னும பழையதமிழ்நூலில,

… .. … . . "போதகலா
மா தமணக்குமணவாளன-சேதுகரு
தஞ்சைக்குநகோழிக்குநதாமப்புகாருக்கு
மூஞ்சைக்குமேனையுதகைககும-வஞ்சிக்கு
கொற்கைக்குநகூடற்குநகோசலைக்குங்காஞ்சிக்கும்
விற்கைக்குநில்லாமிதிலைக்கு-நிற்கு
மரசனரசர்குலாந்தகனரப
பிரசனபயாபெருமான"

எனப் பலநாடுகட்கும முறைபடலைவைததுச சேதுநாட்டைவழங்குதலாற் றெளிந்துகொளளலாம. இததமிழநூறகேற்பவே ஆகனேயபுராணத தர்க்கதமான புலலாரண்யக்ஷேதரமஹாதமியததிற் சீராமமூர்த்தி, ஆங்குத தன்சீபாதஙகளைப பாகிப்பபெறறுறறெழுதுநின்ற நிஷாதத தலைவனொருவனைத தானசடியசேதுவைப பரிபாலித்துவருமாறு நிய மிததருளினன் என்று கேடகபபடுதலானு மிதனுண்மை வலியுறும.

இநநிஷாதததலைவனு மிவனவழியினருமே குறுநிலமனனராய்நின்று செந்தமிழ்வளாதத செலவபபாண்டியரெனனும முடியுடைப்பேரரசர்க் குப்போர்ப்படைததலைவராய் முறகாலததிலிருநதனராவர். இவ்வொற் றுமையாற் பாண்டிநாடடுள்ளசேதுவுககும பாண்டியரேபேரரசராதல பற்றி, மதுரைத்தமிழ்க்கூத்தனா கடுவன்மள்ளனார் என்னும பழைய சங்கப்புலவா எழுபத்தோராம அகபபாடடில,

… "புதுவது
பொனவீனாழலொடுபுனனைவரிககும
கானலம்பெருந் துறைககவினிமாநீாப
பாசடைககலிததகணைககாலெய்தல்
விழவணிமகளிர்தழையணிக்கூட்டும
வென்வேற்கவுரியாதொன்முதுகோடி
முழங்கிரும்பௌவமிரஙகுமுன்றுறை
வெல்போரிராமனருமறைக்கவித்த
பல்வீழாலமபோல
வொலியவிந்தனறிவ்வழுங்கலூரே"

என்பதனுற றிருவணையாகிய சேதுமுன்றுறையைக கவுரியராகிய பாண்டியருடையதெனறுசொறறார்.

இதன்கட் ஸ்ரீராமமூர்த்தியார் தாமும் நவகோள் இலக்கமாகவும் விளங்கச் சியமவிசாரிக்கப்புக்கபோது இக்கடற்கரையிலுள்ள [illegible]கோயில் பறவைகள்கூக்குரல் அதற்குத் தடையாதல்கண்டு அவ்வொலியடங்கக் கையமைத்தருளினார் என்பது கேட்கப்படுகின்றது. இச்செய்தி நிகழ்ந்ததலம் இப்போது நவபாஷாணமென்று பெயர்சிறந்ததென்பதும் இக்காரணம்பற்றியே ஆங்குக் கடலும் ஒலியவிந்துள்ளதெனபதும் நாம் பழைமையாய்க் கேட்பனவேயாம்.

சேதுபாண்டியனென்றபெயர்வழக்கம் இச்சேதுகாவலர்மரபினர்க்குள் அதிகமாகக்காண்டலானும் சேதுபற்றிப் பாண்டியர்க்குள்ள தலைமை நன்றாகிக்கப்படும். இப்பாண்டியரும், இவரோடொருதன்மையராகிய சேர சோழரும் படைப்புக்காலந்தொட்டே மேம்பட்டுவருதலுடைய பழையதமிழ்க்குடியினராவர். "வழங்குவதுள்வீழ்ந்தக்கண்ணும்பழங்குடி, பண்பிற்றலைப்பிரிதலின்று" என்னுந் திருக்குறளுரையில் ஆசிரியர்பரிமேலழகர் பழங்குடியென்பதற்குத் தொன்றுதொட்டு வருகின்றகுடியின்கட்பிறந்தாரென் றுரைகூறித் தொன்றுதொட்டுவருதல்-சேர சோழ பாண்டியரென்றாற்போலப் படைப்புக்காலந்தொடங்கி மேம்பட்டுவருதல் என விளக்கினார். இதனாலும், வான்மீகிபகவான் ஸ்ரீராமாயணத்து ஸுக்ரீவன் வானரசேனையை நாடவிட்டதருணத்துப் பாண்டியர்செல்வச்சிறப்பையும் அவர்துகபாடபுரத்தையும் சேரசோழராசச்சியங்களையும் எடுத்தோதுதலானும் இவர்பழைமை நன்குணரப்படும்.

இத்தமிழ்வேந்தர்மூவரும் ஆறங்கமுநிரம்பிய முடியுடைப்பேரரசராதலான் இவர்பழைமைகூறியதனானே இவர்க்குப்படைத்துணையாய்த் தொன்றுதொட்டுமுள்ள வீரர்பழைமையுங் கூறியதேயாம். இவ்வீரர் பாண்டியன்மறவர் சேரன்மறவர் சோழன்மறவர் என்று வழங்கப்படுவர். இம்மறவரைப்பற்றி யான் செந்தமிழ்ப்பத்திரிகைக்கடாத்தியகாலத்துச் சேதுபதிகள் என்றவிஷயத்தில் நிரம்ப எழுதினேனாதலானீண்டைக்குவேறெடுத்துக்கூறாமல் விடுகின்றேன்.

பாண்டியர்தலைமைக்குள்ளாய இச்சேதுநாடு, சோழர் பாண்டியரைவென்று பாண்டிநாட்டிற்பெரும்பகுதியைத் தந்நாடாக்கிக் கொண்டகாலந்தொடங்கிச் செம்பிநாடாய், இந்நாட்டுமறவர், சோழன்

இத்தலைகராஜ்யம் பன் சம்பிநாட்டுமறவரெனப்பெயர்பெற்றனராவர்.
சேர்ழனுலாவென்னும் ப ... பாதும், சேதுநாட்டினைச்சேர்ந்ததாகவுள்ள 'மணக்குடி' என்ற ஊரையுடைய இடையளநாட்டை,

> "வளவர்காக்கும்வளநாட்டுளளு
> நாடெனச்சிறந்தபீடுகெழுசிறப்பிற
> கெடலருஞ்செலவத்திடையளநாட்டுத
> தீதில்கொள்கைமூதூருள்ளு
> மூரெனச்சிறந்தசீர்கெழுமணக்குடி"

என நெடுந்தொகைக் கருத்துரைப்பாயிரத்துக்கூறியதனானும், சேதுநாட்டுத் தொண்டிப்பட்டினத்தையுடையராகவைத்துச் சிலப்பதிகார வூர்காண்காதைக்கண் " வங்கவீட்டத்துத்தொண்டியோ "ரென்று சோழரைக்கூறியதனானும் பாண்டியராட்சிக்குள்ளாய இச்சேதுநாட்டுப்பெரும்பகுதி சோழராட்சிக்குள்ளாயசெய்தி துணியப்படும்.

இச்சேதுநாடாண்டமறவர்தலைவரெல்லாம், இவ்விருவேந்தர்க்கும் போர்த்துணையாய்நின்றகாரணம்பற்றியே பாண்டியமண்டலஸ்தாபனாசாரியன், சோளமண்டலபரதிஷ்டாபகன் என்னும் விருதாவளிசூடினராவர். இவ்விருதாவளி இவருடைய பழையசாசனங்களிலெல்லாங் காணலாம்.

இனி மூவேந்தருட் செந்தமிழ்ச்சங்கஞ் சீர்பெறஓம்பியகாரணத்தால் தமிழுடையாரென்று நல்லிசைப்புலவராற்புகழப்பட்ட அறிவுடைப்பாண்டியராட்சிதொட்டே புண்ணியமுடைமையானன்றிச் செந்தமிழ்க்கல்வியானும் இச்சேதுநாடு சிறந்ததென்பதற்குச்சான்றாகச் சில கூறுவேன்.

கொற்கையினும் மதுரையினும்வளர்ந்த நறுந்தமிழ்மணம் அவற்றுக்கு மிகவும் அணித்தாய இச்சேதுநாட்டுவீசாதென்றறியாதாரு சொல்லத்துணிவர். பொன்னுங்கா ...முத்தகவிராயரும் ரகுநாதசேதுபதியைப்புகழுமிடத்து,

> "பாலவாயப்பசுந்தமிழ்வீசியவாசம்பரந்தலைவைகைக
> கால்வாய்த்தவீரையாகோன்ரகுநாதன"

எனப் பாடுதல்காண்க. பட்மேகிகாசக்ஷேத்ரமாகவும், சரணாகதிதர்மம் விளைந்தபெருநிலனாகவும், கருணாகரன் ஸாவஜீவர்க்கும் அபயப்ரதானம

அருளிய திவ்யஸ்தலமாகவும், இச்சேதுநாட்டுக்கோர் திலகமாகவும் விளங்கும் திருப்புல்லாணி எனப் பெயர்பூண்ட தர்ப்பசயனத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸர்வேச்வரன் ஞானஸ்வரூபியாதலை உலகெலாமறிந்துய்யவேண்டி ஆழ்வார் திருமங்கையார் பெரியதிருமடலென்னுந் திவ்யப்பிரபந்தத்து, புல்லாணித்தென்னன் தமிழை வடமொழியை என்றுபணித்தருளிய சிறப்பு இந்நாட்டின் கல்விச்சிறப்புப் பற்றியதென்று நன்குணர்ந்துகொள்க. தெய்வமே தென்மொழி வடமொழியாக மூர்த்திகரித்தமாந்தருளியது இச்சேதுநாட்டுக்கே சிறந்ததென்று துணியப்படும்.

இன்னும், அத்தலத்துமூர்த்தியை "வேதமுமானு"னென்றும், "அன்னமாய் நூல்பயந்தா"னென்றும் ஆழ்வார் வழங்கியருளுதலையும் நோக்குக. இப்பெருமையெல்லாங்கருதியே சேதுபதிகள் இத்திருக்கோயிற் பெருந்திருப்பணியெல்லாம் முற்றுவித்தனராவர்,

"என்றனமமாயினுந்தான் கற்பகாலமிருக்கவுன்போன
மனதினிலெண்ணந்தபடி செய்யயாருக்குமவராதுகண்டாய்
கனதனமால் திருப்புல்லாணிக்கோபுரங்கட்டிவைத்த
தனதவிஜயரகுநாதசேதுதளசிங்கமே"

என மிதிலைப்பட்டி அழகியசிற்றம்பலக்கவிராயர் பாடியதனானிதனை யுணர்க. சேதுநாட்டுக்குமூலகாரணனான சீராமமூர்த்தியைக் கல்வியிற்பெரியரான கம்பர், "தென்சொற்கடந்தான் வடசொற்கடற்கெல்லை தேர்ந்தான்" எனறே பாடினர். சீதாபிராட்டியாரைத்தேடவிடும்போது அநுமானை வேறுகொண்டு சீராமமூர்த்தி, "இராவணன் தேவபாஷையறிந்தவனாதலான் அதனைச் சீதைமுன்போதாது மானுஷபாஷையில் இரகசியங்களெல்லாவற்றையும் ஓதுக" என்று கூறியருளினனென்று வான்மீகிபகவானிராமாயணத்துக்கேட்கப்படுதலாற் சீராமமூர்த்திக்கும் சீதாபிராட்டிக்கும் அநுமானுக்கும் அவ்விருமொழிவன்மையும் உண்டென்று நன்றுதெளியலாம். அவர் திருவருள்பெருகிய இச்சேதுநாட்டுக்கு அவ்விருமொழிவன்மையுமுண்டாதலொருதலை. இச்சேதுநாட்டினொருபகுதியாய நாட்டரசன்கோட்டையூர்ப்புறத்துநாடு வடகலைவேள்விநாடாதலையும் தெளிந்துகொள்க.

இனிப் "பத்தரெல்லாம்பார்மேற்சிவபுரம்போற்கொண்டாடு, முத்தரகோசமங்கையூர்" என்று திருவாதவூரடிகளார், திருவாய்மலர்ந

தருளப்பெற்ற திருவுத்தரகோசமங்கைத்தலத்தைத் தன்கட்கொண்ட பெருஞ்சிறப்பானும் சேதுநாட்டின்கல்விஞானமேம்பாடே தெளிவிப்ப தாகும். வடகட கைலையங்கிரியினிருந்தஞான நூல்களும் உமாதேவி யாரும் ஒருகாரணத்தான் இத்திருவுத்தரகோசமங்கைப்பாகத்துத் தோன்றியருளி, உமாதேவியார் முன்கேளாதனவெல்லாம் இத்தலத்தே சிவபிரான்பாற்கேட்டருளினுள எனபது இத்தலபுராணத்தாற் றெரிந் தது. இது திருவாலவாயுடையார்திருவிளையாடற்புராணத்தானுந் தெளியத்தகும்.

இஃதன்றி, அறிவாற்சிவனென்றுசிறப்பிக்கப்பட்ட திருவாதவூ ரடிகள் சிவஞானம்பெற்ற திருப்பெருந்துறையும் இச்சேதுநாட்டதே யாயின் இதன்பெருமையை யாமே எடுத்துரைக்கவல்லேம்? இச்சேது நாட்டுள்ளாய திருவுத்தரகோசமங்கைத்தலத்தைத் தன்கட்கொண்ட தென்பாண்டிநாட்டையே "ஏழ்பொழிற்கு நாதனமையாளுடையா னூடு" என்று திருவாதவூரடிகள்சிறப்பித்தவாற்றானும், உலகெலா முடையசிவபிரானைத் "தென்னுடையசிவனேபோற்றி" என்று இச் சேதுநாட்டுடைமையாற் புகழ்ந்தருளியவாற்றானும் இதன்ஞானமேம் பாடு நன்றுணரலாகும்.

இக்காரணங்களானும், இதன்புண்ணியவிசேடங்களானும் இச் சேதுநாடொன்றே நாடென்றுவழங்கப்படும்போலும்; இதனை, "ஊரெ னப்படுவதுறையூர்" "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" "கோயி லென்பது கோன்றிருவரங்கம்" "கோயிலெனபதுகுளிர்பொழிற்றில்லை" என்பனபோலக்கொள்க. நாட்டரசன்கோட்டையென்பதுகருச் சேது நாட்டரசனுடைய அரண் என்பதே பொருளாதலானும், புகார்ப்பட்டி னமவிட்டுச் சேதுநாட்டுக்குடிபுகக பணடையோர்வழியினராகியவணிக நன்மக்களெல்லாம் இன்றும் நாட்டுக்கோட்டையாரென்றே பெயர் சிறந்தலானும், திருமலைச்சேதுபதியைப் படிக்காசுப்புலவர் "நாட்டிற் சிறந்த திருமலையார்" என்று விளித்துப்பாடுதலானும் இதனுண்மை ஊகிக்கப்படும். முன்பு புகார்நகரத்தராய்ப் பின்பு இப்புண்ணியநாடுபுக்க வணிகநன்மக்கள் நாட்டார் என்று பெயர்சிறந்த சேதுநாட்டாரினின்று தம்மை வேறுபிரித்துணரவே நகரத்தார் என்று வழக்குப்பெற்றாராவ ரென் றுன்னுதல்கூடும்.

இங்ஙனம் புண்ணியமும் ஞானமுந்தழைத்த இச்சேதுநாடாட்சி பெற்ற பாக்கியவான்களாகிய சேதுபதிகளை வைணவரெலாம் "திருவுடைமன்னரைக்காணிற் றிருமாலைக்கண்டேனேயென்னும்" என்னு முறையாற் சீராமமூர்த்தியாகவும், சைவரெல்லாம் சீராமநாதமூர்த்தியாகவும் உபசரித்து உசிதமரியாதைசெய்தலும் இந்நாட்டுத் தொன்று தொட்டமரபாம். இதனை,

"சேதுபதியென்றுநரசென்மமெடுத்தாய்கமல
மாதுபதிக்குன்பேர்வாய்க்குமா—பூதலத்தி
னீயோரகுராமனினையேபெற்றெடுத்த
தாயேயருட்கோசலை"

எனவழங்கும் பழையவெண்பாவானும்,

"ஆதிபதியானமண்டலாதிபதிவம்சபதியரசர்கென்று
நீதிபதிசத்ரபதிசமஸ்தானபதிவிஜயநிறைந்தேநிற்கு
மாதுபதிதுரகபதிகஜபதிநராதிபதிவளாதென்றேவைச
சேதுபதிதரிசனமேராமலிங்கதரிசனமாச்செப்பலாமே"

என்றுவழங்கும் பழையவிருத்தத்தானும் நன்கறிந்துகொள்க.

இவருடையபுண்ணியநாடு தமிழிற்பெரியஞானிகட்கு மிடமாயதென்பது, சைவத்திற்சிறந்த ஞானயோகியாகிய **ஸ்ரீ தாயுமானவர்** நெடுநாட்டங்கிச் சமாதியடைந்தருளிய முகவையும், விசதவாக்சிகாமணியாய் வைஷ்ணவாசாரியராய்த் தெய்வமும் அழைத்துப்பேசுந் தூயஞானமும் உடைய மணவாளமாமுனிவர் வளர்ந்துசிறந்த சிக்கற்கடாரமும் தன்பாற்கொண்டுவிளங்குவதனாற் பலரும் அறியத்தக்கது. இவ்விரண்டுஞானாசாரியர்களும் பாடியருளிய தமிழ்ப்பாடல்களின் பெருமை கற்றோரறிந்ததே. மணவாளமாமுனிவரைத் தெய்வமழைத்துப்பேசியருளியசெய்தி,

"நாமார்பெரியதிருமண்டபமார்நம்பெருமாள்
தாமாகவென்னைத்தனித்தழைத்து—நீமாறன்
செந்தமிழ்வேதத்தின்செழும்பொருளைநாளுமிங்கே
வந்துரையென்றேவுவதேவாய்ந்து"

என்று அவர் ஈடுபட்டோதியருளியவெண்பாவானறிந்தது. இவரவதாரஸ்தலம் குந்திநகரமென்ப. இதுவே தொந்தகையென்று இப்போது வழங்குவதாகும்.

இனிப் பழையசங்கப்புலவர்க்குள்ளும் இச்சேதுநாட்டேபிறந்தார் பலருண்டென்பது அவரவர் ஊரா னுணரப்படுவது. நல்லந்தையார் என்பார் நற்றிணை 211 ஆம்பாட்டுப் பாடியவர். இவருடையவூர் கோட்டியூர். இது சிவகங்கையைச்சார்ந்த பெரியதிவ்யஸ்தலமென்பது பலருமறிந்ததே. இத்திருப்பதியைப்பாடியருளிய ஆழ்வார் திருமங்கை மன்னர், "கோவையின்றமிழ்பாடுவார்தொழுந் தேவதேவன் திருக் கோட்டியூர்" என்று சிறப்பித்தருளுதலான் இவவூர்க்கண் அகப் பொருட்டமிழ்பாடும்புலவரிருந்தனரென்றுகுறித்தருளினராவர். அள்ளூர் நன்முல்லையார் குறுந்தொகை 32-ஆம்பாட்டும் நெடுந்தொகை 46-ஆம்பாட்டும் பாடியவர். இவ ரள்ளூர் இச்சேதுநாட்டுச் சிவகங் கையைச்சார்ந்துள்ளது. வெள்ளைக்குடி நாகனார் நற்றிணை 158-ஆம் பாட்டுப் பாடியவர். இவரூர் சேதுநாட்டுத் திருவேகம்பத்துச்சேகரத் துள்ளது. ஒக்கூர் மாசாத்தியார்பாடியன குறுந்தொகையினு நெடுந் தொகையினும் பலபாடல்களுள்ளன. இவருடைய ஒக்கூர் மேற்காட் டிய கோட்டியூர்பக்கத்தேயுள்ளது. பதினெண்கீழ்க்கணக்கினுளொன் றாகிய கைந்நிலைபாடியவர் புல்லங்காடரெனப்படுவர். புல்லங்காடு - புல்லாரணியம்; இது திருப்புல்லாணியேயாகும்.

இத்தகைய பெருந் தமிழ்ச்சங்கப்புலவரெல்லாம் பிறந்துசிறந்த இச்செந்தமிழ்ச்சேதுநாட்டு விழிகுலச்சிறுவரும் அறிவான்முதிர்ந்தவ ராவரென்பது பாண்டியனைக்காண்பான் இச்சேதுநாட்டுநெறியேபுக்க கம்பர், நாட்டரசன்கோட்டைக்காட்டில் எருமைமேய்ப்பார் இளையர் சிலரைக்கண்டு முடிக்கரைக்குநெறி யாதென்றுவினவியபோது அவர் அடிக்கரைபிடித்தேகின் முடிக்கரையெய்தலாகுமென்றுகூறக்கேட்டு அதன்பொருள்தெரியாது திகைத்துப் பின் றெளிந்து,

> "கருங்காலிக்கட்டைக்குநாணுகைகோடாரி
> யிருங்கதலித்தண்டுக்குநாணு—மருங்காகக்
> காட்டெருமைமேய்க்கின் றகாளையர்க்கேயாந்தோற்றேம்
> நாட்டரசன்கோட்டைநகர்க்கு"

என்றுபாடியதனான் அறியலாகும். இதனை, முத்துநாயகப்புலவர் தா மியற்றிய "கண்ணுடையம்மைபள்ளு" என்னுநூலில்,

> "வாசமானதென்பாண்டிநன்னாடு மதுரைகாட்டில்வளருமிந்நாடு
> காசினிக்குட்கதிர்க்கின்றநாடுமுன் கம்பர்வந்துதுதிக்கின்றநாடு
> பூசார்க்கின்னதானஞ்செய்நாடு புலவர்மேல்பிமானஞ்செய்நாடு
> ராஜலக்ஷுமிகண்ணுடையாளருள் நல்குநாட்டரசன்கோட்டைநாடே"

எனப் பாடியவாற்றா னறிந்துகொள்க. இச்சிறப்பெல்லாந்தெரிந்தே இந்நாட்டரசன்கோட்டைக் கண்ணுடையம்மைகோயிற் கொடிக்கம்ப மண்டபம் முதலியதிருப்பணிகள் சேதுபதிகளாலியற்றப்பட்டனவென் றெண்ணுகின்றேன். அந்நூலிற் "கனவிஜயரகுநாதசேதுபதிசெய்த கொடிக்கம்பமண்டபம்புகழக்கூவாயக்குயிலே" எனவருதலான இஃதறியப்படும். இச்சேதுநாட்டு நாட்டரசன்கோட்டைக்கண் இவ்வம்மையருளால் அவித்தநென்முளைப்பதை யின்றுங்காணலாம்; இதனை,

"கண்ணுடையதாய்மகிமைகாசினியோரிவ்வளவென
றெண்ணுடையதாய்மதிக்கவேலாது—மண்ணுடைய
புன்முளைக்கவெத்தனைநாட்போகுமுடனேயவித்த
நென்முளைத்தல்சான்றுநிசம்"

என்னும்பாடலா னறிக.

இங்ஙனம், கல்விப்பிறப்பெரியகம்பராற்புகழ்பாடப்பெருஞ்சிறப்பே யல்லாமல், உலகெல்லாம் கவிராக்ஷஸன் எனவும், கவுட்டப்புலவனெனவும், கூத்தன்கவிச்சக்கரவர்த்தியெனவும் ஏத்தும் கல்விச்சிறப்புடைய ஒட்டக்கூத்தரைப்பிறப்பித்ததும் இச் செந்தமிழ்ச்சேதுநாடேயென்பது காட்டுவேன். கம்பர்திருமகனார் அம்பிகாபதியார்க்குத் திருமகனாராகிய தண்டியென்னுந் தமிழாசிரியர், தாம்பாடிய அலங்காரநூற்கண்,

"சென்றுசெவியளக்குஞ்செம்மையவாய்ச்சிந்தையுள்ளே
நின்றளவிலின்பநிறைப்பவற்று—ளொன்று
மலரிவருங்கூந்தலார்மாதர்நோக்கொன்று
மலரிவருங்கூத்தன்றன்வாக்கு"

என்னும்வெண்பாவாற் செவியளந்துகொண்டு சிந்தையுள்ளேநின்று அளவிலின்பநிறைக்கும்வாக்கையுடைய கூத்தரை மலரியென்னும் ஊரின்கண்வந்தவரென்றார். இந்நூலுரைகாரரும், மலரி-ஓரூர் என்று உரைத்தார். இவ்வூர் இச்சேதுநாட்டு ராஜசிங்கமங்கலச்சேகரத்துள்ளது. இதன்கண்ணேவாழ்ந்த செங்குந்தர்வழியினர்பலர் வேற்றூர் புக்குவாழ்கின்றனர் இவர் முதலிகள் எனப்படுவர் தமிழ்நாவலர் சரிதையுடையாரும் கூத்தரைக் கூத்தமுதலியாரென்றே வழங்குதல் காண்க.

இத்தொன்னூலாசிரியரேயன்றிச் செந்தமிழ்த்தொன்னூல்கட் குரையிட்டநல்லாசிரியரும் இச்சேதுநாட்டினரென்றுகாட்டுவேன்.

“நெடுந்தொகைக்குக்கருதது அகவலாற்பாடினுன் இடையளநாட்டு மணக்குடியான் பால்வண்ணன்றேவனுனவில்லவதரையன்” என்று அகநானூற்றுரையேட்டிற காணபபடடது.

மணககுடியென்பது சேதுநாடடு உபபூருககுவடககணுள்ளதோரூர். இதன்பககததே இன்றும உபபளமுள்ளது. இவவூருடையநாடடை அளநாடேன்றும, அநநாடடுககுவடககும அநநாடடுககுததெறகும பல அளங்களிருததலபறறி அதனை இடையளநாடு என்று வழஙகபபடட தென்றுந தேறலாகும

இனித தமிழிற சிறநத பெருநூலாகியதிருக்குறடகு உரையியற றினுர்பலருள, பரிப்பெருமாள் எனறு பெயாசிறநதாா பிறநதுவளாநத தும இததமிழ்சசேதுநாடேயாம இதனை,

> “தெள்ளிமொழியியலைததோநதுரைததுத்தேமொழியா
> ரொள்ளியகாமநூலோாந்துரைதது—வள்ளுவனுா
> பொயயற்றமுப்பாற்பொருளுரைததானறென்செழுவைத்
> தெயவப்பரிபபெருமாளதோநது”

என்னுஞ சிறபபுபபாயிரததாலறிக. இவருரை தலையாய பரிமேலழக ருரைபபின்சாரநன்று என்று தெளியலாகும. பரிபபெருமாளைப் பரி என்றுகொண்டு, அவரினும உரைவனமையான் அழகுடையராதலாற பரிமேலழகரெனபபடடாரோ என்று ஊகிகக இடனுகின்றது. அத தகைத திருக்குறளுரையாளருடைய தேன்செழுவை இசசேதுநாட் டதேயாம மேறகாடடியவெண்பாவினுல இபபரிபபெருமாள் சொல விலககணநூலொன்றும, காமநூலொன்றும ஆராய்நதுரைதகுள்ளா ரென்று தெளியபபடும.

இவாக்குபபின இசசேதுநாட்டுப்பிறநதுசிறந்தபுலவர்தொகையை எண்ணி இனைததெனல் இயலாததொனறேனும என்சிற்றறிவுககியன்ற வரைமுயன்று சிலரைபபற்றிக கூறவெழுகினறேன்.

சேதுநாட்டைசசாாநத வேம்பற்றூா ஒன்றிலே செவ்வைச்சூடுவோா் என்பார் பாகவதபுராணம தமிழிற்பாடினுா. இஃது ஆரியப்பப்புலவா பாகவதம் என்று தவறுகவெளியிடபபட்டது. இததவற்றைபபற்றி முன்னரே செவ்வைச்சூடுவாரும் அனதாரியும் என்ற தலைபபிடடவியா சததில யான் செந்தமிழ்ககண் எழுதியுள்ளேன. ஆளவந்தாரென்பாா

வாசிட்டநூலைத் தமிழிற் பாடினார். பெரும்பற்றப்புலியூர்நம்பி என்ற மாதவப் பட்டர் திருவாலவாயுடையார் திருவிளையாடலைப் பாடினார். கவிராஜபண்டிதர் என்பார் சௌந்தரியலகரியைத் தமிழிற் பாடினார். பெருமாளையர் நெல்லைக்கோவை பாடினார். சாமிகவிகாளருத்திரர் என்பார் அழகர்பிள்ளைத் தமிழ் பாடினார். கவிகுஞ்சரபாரதி என்பார் அழகர்கலம்பகம் பாடினார். இவ்வோரூர்ப் புலவரைப் பற்றி எழுதப்புகுங்கால் அஃதொரு பெருநூலாகுமென்பது திண்ணமாக இவ்வூர்போலப் பலவாயிரமூர்களையுடைய இச்சேதுநாட்டுப் புலவரை அளக்கப் புகுக என்மதியின்மைதானென்னே?

இவ்வோரூரில், செவ்வைச்சூடுவார் முதல் நம்காலத்துத் தமிழ்க் கவிதைகளைச் சுவைபலவமைத்து விரைவாகப் பாடுதலாற் பெயர்சிறந்து இம்மகாசபைக்குச் சிரோரத்தினம்போலவிளங்கும் நம் மாட்சிமை பொருந்திய சேதுபதிமஹாராஜரவர்களாலும் அவர்கள் அறிவுடைத் தந்தையாராலும் சிலேடைப்புலியென்று பட்டஞ்சூட்டி ஆதரிக்கப் பெற்ற பிச்சுவையரிறுதியாக நூற்றுக்கணக்கான புலவர்கள் தமிழறிவாற்சிறந்துவிளங்கினராவர்.

இவருட் டேவியருள்பெற்ற கவிராஜபண்டிதர் இச்சேதுநாட்டு வீரசோழனென்னும் ஊரிலே நெடுங்காலம்வதிந்து இறுதியிற்றுறவியாய் ஆங்கே சமாதிகொண்டனர். இவர்க்குச் சௌந்தரியலகரிவடநூலைத் தமிழிற்பொருள்கூறியஆசிரியர் பிரமாதிராயர் என்பார். இவர் சத்தியருள்பெற்றவர். இவர் மதுரைமீனாக்ஷியம்மையடியிட்ட பூமாலை திருக்கழுத்திற்றானே ஏறப்பாடித் தன்னொடுவாதித்தபுலவனைவென்று, *நல்லூர், கடம்பை இவ்வூர்களைப் பரிசிலாகப்பெற்றவர்.

கவிராசபண்டிதருடையதிருக்குமாரர் நெல்லைவருக்கக்கோவை பாடியவர். அவரிளம்பிராயத்தே பிற்காலத்துப்பாண்டியனொருவன் தென்காசி, மதுரை, திருநெல்வேலி, கருவை என்னும் நாலூர்ப்பெயரும் இந்நாலூர்ச்சுவாமிபெயரும் அம்மைபெயருமமைத்து ஒருகவித்துறைபாடுக என்றபோதுபாடிய,

* நல்லூர் - நல்லூர்க்குறிச்சியென்பது. கடம்பை - கடம்பங்குளம்; அதனையடுத்துள்ளது.

"இலகேழிலத்தாசொக்கர்முத்தீசரிபங்தொழுவோர்
கலைதோதென்காசிமதுரைநெல்வேலிகருவைவந்த
பலர்கேளவருளளிரெமபஙகுநிற்பீரவந்துபாதந்தொழ
வுலகேகயற்கண்ணியேவடிவேயெங்களொப்பனையே"

என்றசெய்யுள் தமிழ்வல்லார் அறிந்ததே இவரை, "வீரையம்பிகா பதி" யென்றே நெல்லைவருக்கக்கோவைப்பாயிரத்திற்கூறுதல்காண்க. சேதுபதிநாட்டு வீரசோழனிற் கவிராசபண்டிதாசமாதிபுண்மை பலரு மறிவர்.

இவரேயன்றித் **திருச்சேந்திற்பிள்ளைத்தமிழ், சீவகசிந்தாமணிச் சுருக்கம்** இவற்றைச் செய்தும் இனிக்கப்பாடிய பெருந்தமிழராகிய **பகழிக் கூத்தர்**, இச்சேதுபதிகள் செம்பிநாட்டுச் சனகைசிக்கிராமத்தவரேயாவர். இஃது,

"ஆரநாணமலர்நெட்டிதழ்க்குவளையகவயலி
லகடுநொந்தொருகோடிசங்
கடைகிடக்கக்குருகுபெடையெனச்சிறகா
லணைத்திடுஞ்செம்பிநாட்டு
வீரநாராயணச்சதுர்வேதமங்கலம
விளங்கவேவந்தநெடுமால
வேதியாகுலாதிபதிதாப்பாதனன்புதல்வன
மிக்கபகழிக்கூத்தனே"

எனச் சிந்தாமணிச்சுருக்கத்த தலைவயடக்கச்செய்யுளிலவருதலாற் கண்டது. **பகழிக்கூத்தர்** என்பது சேதுநாட்டுப் **புகலூரையனார்**திருப்பெயர். **தாப்பாதனன்** என்பது **திருப்புல்லாணித் திருமால்பெயர்.**

**வீரை ஆசுகவிராயர்** - இவர் அரிச்சந்திரபுராணவிருத்தம்பாடியவர் இவருடையசெய்யுணடை தமிழ்மக்களுக்கு அளவிலின்பம்பயப்பது. இவரது ஊர் நல்லூர்வீரையெனப்படுவது. நல்லூர்வீரையென்பது சேதுநாட்டுவிசயனூர்ச்சேகரத்துள்ள நல்லூரையடுத்தவீரையேயாம். இந்நல்லூர் குலோத்துங்கசோழநல்லூர் எனப்பதாம் இதுவே சேதுபதிகள்பழையசாசனங்களிற் கண்டவூராம். இவர் தம் அரிச்சந்திர புராணத்தைத் திருப்புல்லாணிச்சக்கரதீர்த்தக்கரை மேன்மண்டபத்தில் அரங்கேற்றினாரென்பது அந்நூற்பாயிரத்தா லறிந்தது.

"விதியினரசிழந்தவரிச்சந்திரன்றன
வியனகதையாமவெணகதையைவிருத்தமாகி

அதிவிதமாங்கலியுகத்தில்வருசகாத்த
மாயிரத்துநானூற்றுநாற்பத்தாறிற்
சதுமறைதேர்புல்லாணித்திருமான்முன்னே
சக்கரதீர்த்தக்கரைமேன்மண்டபத்துட்
கதிதருசீநல்லூராவாழ்வீரையாசு
கவிராசனகவியரங்கமேற்றினனே"

என்பது இந்நூற்பாயிரம். "வீரையாசுகவி" என்னும்பாட்டமாயின் நல்லூர் இவருடைய ஊர் என்க.

இனித் தண்டலையார்சதகம், தொண்டைமண்டலசதகம்முதலிய நூல்களையியற்றிப் புகழ்படைத்த படிக்காசன் என்னும் புலவர் இந்நாட்டுக் கீழைக்கரையில் ஔரங்கசீப்முதலிய மகம்மதிய அரசர்மெச்சவாழ்ந்த சீதக்காதியென்றுபெயர்சிறந்த பெரியதம்பிமரக்காயரென்னும் பெருங் கொடைச்செல்வரை வாயாரவாழ்த்திய இனியபாடல்களும் அவ்வள்ள லிறந்ததற்கு ஆற்றாது உள்ளமுடைந்துருகிப்பாடிய பாடல்களும் யாண் டும் பலருமறிந்தனவேயாதலா னவற்றை யான் டெயாத்துக்கூறேன். இச்சீதக்காதிவள்ளல் சேதுபதியாற் பெரிதும் அன்புபாராட்டப்பட்டவ ரென்பது இவர்பேரானுள்ள நாடகநூலான் அறியப்பட்டது. அத் தகைப்புலவர்,

"மூவேந்தருமற்றுச்சங்கமும்போயப்பதின்மூன்றொருபெட்டிக்கே
கோவேந்தருமற்றுமற்றொருவேந்தன்கொடையுமற்றுப்
பாவேந்தர்காற்றிலிலவம்பஞ்சாகப்பறக்கையிலே
தேவேந்தரதாருவொத்தாய்ரகுநாதசெயதுங்கனே"

என்றுபாடி இச்சேதுகாவலருடைய பெருங்கொடையும் தமிழாதரிப் பும் உலகறியப்புகழ்ந்தனர்.

மற்றும், மகம்மதியமதத்தினரெல்லாம உச்சிமேற்கொண்டுபோற்றும் நபிநாயினாசரிதமாகிய சீறாப்புராணத்தை அம்மதத்தினரல்லாத தமிழறி வாளரும் கல்வியின்பத்தால் விழைந்துகற்குமாறு அத்துணைச்சுவைத் தாக ஐயாயிரம்பாட்டாற்பாடிய உமறுப்புலவரென்னுந்தமிழ்நாவலர் இச்சேதுநாட்டுக் கீழைக்கரையிற்சிறந்தாராவர். இவருடைய கவித்து வத்தையும் உயர்குணத்தையுந்தெரிதற்கு ஸ்தாலீபுலாகநியாயமாக இரண்டுசெய்யுட்களை யெடுத்துக்காட்டுவல்.

"புரசைக்கடக்கரிகணிரைதட்டறக்குவிரர்புவியைப்படக்கடவியே
சரகுற்றநற்பதவிவழியிற்புகுத்தியுயர்தலைமைகுலைத்தபெரியோர்
பிரசத்துளித்திவலைசிதறிக்கிடக்குமிருபிணையற்புயத்துநயினர்
அரசுக்குலைத்தநெறிவரிசைக்குமிக்கதுரையப்பகரைப்புகழுவாம்"

"படித்தலத்தெழுகடல்குலகிரிநிலைபதற
வெடித்துவீசியசண்டமாருதத்தினுக்கெதிரே
மிடித்துநொந்தசிற்றெறும்பொருமூச்சுவிட்டதுபோன்ம்
வடித்தசெந்தமிழ்ப்புலவர்முன்யான்சொலுமாறே"

இவற்றின் சொன்னோக்கும் பொருணோக்கும் தொடைநோக்கும் நடைநோக்கும் கற்றார்க்குப் பெரிதும் இன்பம்பயக்குமென்றெண்ணுகின்றேன். இவர்வழியினர் **மீசலவண்ணக்களஞ்சியப்புலவர்** வண்ணம் பலபாடியவர். அவர்வழியினர் இன்றும் இச்சேதுநாட்டுத்தலைநகராகிய **முகவைக்குப்**பக்கத்துப் **பனைக்குள**மென்ற ஊரிலுள்ளனர்.

இவ்வும்மறுப்புலவரும், **திருப்பூவணவுலா,ஆப்பனூர்ப்புராணம்** இவை பாடிய**கந்தசாமிப்புலவரும்** கீழைக்கரையிலிருந்த சீதக்காதிப்பிரபுவிடத்திருந்து அவரானாதரிக்கப்பெற்றவரென்பது, சீதக்காதிபேரிலுள்ள **நொண்டிநாடகத்தா**னறியப்படுவது. நல்லதமிழறிஞராகிய இக்கந்தசாமிப்புலவர் இச்சேதுநாட்டின் ஒருபகுதியாகியசிவகங்கையையாண்ட **முத்துவடுகநாதேந்திர**னைத் தம் உலாவில் "மன்போசன முத்துவடுகநாதேந்திரனருள், பொன்போலுமாடைபுனைந்தருளி" என்பதனாற் சிறப்பித்துரைத்தார். இவ்வுலா நூல் உலகம்புகழுந்தமிழாசிரியராய் இந்நல்லவையை யலங்கரித்துவிளங்கும் நம் மஹாமஹோபாத்யாயரவர்களால் நன்கச்சிடப்பட்டுள்ளது.

இன்னும், இம்மதத்தினராகிய **சவ்வாதுப்புலவர்** சேதுபதி வசூரியான்வருந்தியபோது இராசராசேசுவரிபஞ்சரத்தினம்பாடி அவரை வச்ரதேகியாக்கிச் **சுவாத்தன்** என்னும் விளைபுலவூரை முற்றூட்டாகப் பெற்றசெய்தி இந்நாடெலாமறிந்ததேயாம். இவர் **முகைதீன்ஆண்டவர் பிள்ளைத்தமிழ்**பாடியவர். இவர் இச்சேதுநாட்டு **எமனீச்சரத்**திற்பிறந்து சிறந்தவர். இவர் திருவனந்தைவேந்தர்முன்போய்த் தம் சேதுபதியைப் புகழ்ந்துபாடிய,

"இளையாளன்சேதுபதிரகுநாயகன்கிஞ்சுகவாய்
இளையார்கலவியிடத்துநம்மீசரிடத்துமன்றி

வளையாதபொன்முடிசற்றேவளையுமகுடமன்னர்
தளையாடியகையிற்காளாஞ்சியேந் துஞ்சமயத்திலே"

என்னு மினியபாடல்கல்லாததமிழருமுண்டோ?

"கலவிதறுகணிசைமைகொடையெனச
சொல்லப்படடபெருமிதநானகே"

என்றபடி கல்வியாலுண்டாயபெருமிதம மிகவும உடையார எனபது, " கலைமதங்கொண்டிடுசவாதுககவிசசரப காமபீரயதுஙகனென்றும " எனத தமபிபடடி முத்துவேலாயுதக்கவிராயர் ஓலைததூககிற்கூறுதலா னறியபபடடது.

"வெணடாமரையனநதனவேறுருக்கொண்டுற்றனளோ
தண்டாமரையனநதன்றுனிவனோ—வண்டமிழி
னெண்ணேயெழுத்தோவிசையோவியற்புலவா
கண்ணேசவாதுககவி"

எனனும பழையபாட டிவர்கல்விததிறததைவிளக்கும.

இனனும, இவாகாலததே சருக்கரைப்புலவரென்பார தம் கவித் திறததானும, இராமாயணமுதலியபெருஙகாபபியங்கடகு உரைசொல் லுமவன்மையாலும இசசேதுபதிகளாற பெரிதுமபாராடடப்பட்டுப் பொன்நெட்டிமாலையும் ஊருமவாகனங்களுமஅளிககப்பெற்றனராவர். இவா சேதுபதியைபபாடிபபெறற ஊாகள் சிறுகமபையூர், கொந்த லாங்குளம, கோடிகுடிமுதலியன கணணஙகுடிசசேகரததுள்ளன. இவர் பாடியது திருச்சேந்தூரக்கோவை. இவரியற்றிய உரை வேதாந்தசூடா மணிச்சித்தாநதவுரை இவர் இவ்வுரைநூல சேதுபதிமநதிரியாகிய தாமோதரனென்பார்வேண்ட இயற்றியதென்பது,

"உரைதருவேதாநதசூளாமணியுட்பொருளை
யுலகிலுளோருணரவுரைசெய்கவெனககடல்சூழ்
தரையரையன்சேதுபதியமாததியனாநதாமோ
தரன்கங்காகுலதிலகன் றகுதிபெறசசாற்ற
வரையறுததுசிததாநதப்பொருட்டிறனுந்தோன்ற
வகுத்தனனறுறைசைநமச்சிவாயதேசிகன்றாள்
பரவுசிவககொழுந்துநிதியருளகல்விக்கடலைப்
பருகுமுகில்சர்க்கரைநற்பாவலவர்கோனே"

என்னும் பாயிரத்தா னறியப்படுவது. இப்பாயிரப்பாட்டுச சருக்கரைப் புலவருடன்கற்ற இராமநாதபுரம் சாமிநாதப்புலவர்பாடியது. ஈண்டுக் குறித்த சேதுபதிபிரதானி தாமோதரனென்பார் வேள்விக்கோவை கொண்டவா. இச்சருககரைபபுலவாவழியிற புலவராய்ப்பெயாசிறந் தார் பலருளர். மிழலேச்சதகம், வண்டுவேனப்பெருமாளூசல், திருவாடா னைச்சித்திரகவிமஞ்சரி இவை சின்னச்சருககரைப்புலவாபாடியன. திருச் செந்தூரப்பரணி, துறைசைக்கலம்பகம் இவை சீனிப்புலவாபாடியன. பொன்பற்றிச்சேல்லியம்மையூசல் சருக்கரை அருணசலப்புலவ ரியற்றி யது. வைரவக்கடவுள்பதிகம் சருக்கரை முத்துக்கருப்பப்புலவ ரியற்றி யது. இபபுலவாவழியினா இக்காலததும இசசேதுபதியளிககும வருஷாசனமபெற்றுத தழைககினறுராவா இவரொபப வருஷாசனம் பெற்றுவரும புலவாவழியினாபலா ஊருணிககோட்டை கமுதைமுதலிய பல இடங்களிலுள்ளனா. ஊருணிக்கோட்டையிலுள்ளவர் மாசிலாமணிபபுலவாவழியினா. கமுதையிலுள்ளவா குமாரபபுலவாவழியினர்.

இனி, அழகியசிற்றம்பலக்கவிராயர் தளசிங்கமாலேபாடியவா. இந நூல சேதுபதியைபபுகழ்நதது. இதனகண இவா சேதுபதியை, "கல்வி சோவிற்பன்னன்" 'அடுததாாககு எநதநாளுமவளாநதசெலவநதருவா' னென்றும, ராமேசருக்கு முன்மண்டபஞசெய்தானெனறும, "திருப் புல்லாணிககோபுரங்கட்டுவிததததனத"னென்றும, சேதுவிற்சோடசதானஞசெய் புண்யகுணசாநதனெனறும, "காவிலெட்டனறலேயையணிந தவ"னெனறும, வேதியர்ககெனறுஞசெய்புநதட்ககைபுடையவனென் றும, புன்மைசெய்தாருககும நன்மைசெய்து புரககுநதன்மையனென் றும, "காணயினீசாபதமபோறறியேததினவன்"எனறும, "மதுரையுங காததுவளருநதெயவத, தனுககோடிகாததவ"னெனறும கூறுகினறுர். இவறறுல இசசேதுபதிவரலா றொருவா றுணரலாகும. இவர் இவரைப் பாடிப்பெற்றபரிசில மிதிலேப்பட்டி என்ற விளேபுலவூா. இப்புலவாவழியினா இன்றைககும இவ்வூரை முற்றூட்டாக அனுபவிககின்றனர். இவரும இவாவழியினரும, சேதுபதிபுரிநதருளிய நன்றிபாராட்டி நாளும் தாமதாம உணவருநதுமுன்னே சேதுபதிக்கு ஒருவாழ்த்துக் கவிபாடுவதுவழககம. இவாவழியில மங்கைபாகக்கவிராயர் கோடுங் குன்றப்புராணமும்பாடினுர்.

அமுதகவிராயர் ரகுநாதசேதுபதிமேல் ஒருதுறைக்கோவைபாடினார். இந்நூல் தமிழ்மக்களாற் பெரிதும்பாராட்டப்படுவதொன்று. இதன்கண் இவர் இரகுநாதசேதுபதியைத் "தளவாய்குமாரன்" எனவும் "இயலைத்தலைபெற்றமுத்தமிழ்வாணர்கெழுமடங்கு, புயலைப்பொருவு கையான்" எனவும், "மக்கக்கணிற்சிலமறையோரைவாழ்வித்துவான் கொணர்ந்து, சக்கக்கண்ணிற்சோத்தவன" எனவும், "மனுக்கலைநூ றெறிந்தவெங்கோன" எனவும், "முறையாலணிநாவசைந்து, கறங்கா மணிமுன்றிலான்" எனவும், "செங்காவியங்குடையான்" எனவும், "கலைவாணர்சங்கத்தமிழ்க்குருகிச்சித்தங்களிப்பவ"னெனவும், "புகலூர ஞானாகரன" எனவும், "ஆரியர்போற்றும்இராமீசர்தாளிணைக்கன்பு வைத்த சூரியன" எனவும், "பாவுக்கிசையும்பெயரேபுனைந்துமெய்ப் பாவலர்த, நாவுக்கிசையும்பெரும்புகழான" எனவும், ஒருகாலத்தும் பொய்புரையான எனவும், "நடைகற்றவன்றேகொடுப்பதுங்கற்றவன்" எனவும், "கலைக்கேநெடுங்கடலன்ன ஞானமடைந்கலங்காத்தவன" எனவும், "காக்குங்கருணையுங்கல்வியும்வாழ்வுங்கவிமதுர, வாக்குந்தழைத்தவன" எனவும், "பனனூந்தமிழ்ப்பயிர்வாடாதுமாரியிறபாரினமுத்தும், பொன னுஞ்சொரியுமரகுநாதன" எனவும், (நம சேதுபதிமஹாராஜரைப் போல) "செந்தமிழுங் கீதக்கலையும்வல்லான" எனவும், "சொற்பாவலர் தங்கிளைவாழச்செம்பொன்சொரியுமவண்மைய" னெனவும், "நாகர முந்துதமிழ்ரின்மைக்கங்குனையச்செய்திவாகர" மெனவும், "நாலாம பனுவனவரசச்சொற்றமிழ்நாவலர்க்கு மேலாம்பரிசருணமால்" எனவும், "குஞ்சத்தைவெள்ளைக்குடையைத்தமிழ்க்குக்குலவுசபர, மஞ் சத்தையீயுங்கொடைரகுநாதன" எனவும், "பம்புவியாகரணங்கலை ஞானங்கொள்பண்டிதர், னம்புமவியாழனரகுநாதன்" எனவும், "கோவைத்துறைக்குப்பதினாயிரம்பொன்கொடுத்திசைகொள், தேவைத் துறைக்குத்துரை" யெனவும் கூறினார். இவற்றால் இச்சேதுபதி யுடைய அறிவும், நீதியும், புலமைத்தகையும் பெருவண்மையும், தமிழபிமான மும், நம மஹாராஜரவர்களைப்போலக் கவிமதுரவாக்குடைமையும் நன்குணரலாகும்.

ஆசிரியநிகண்டுடையரான மேற்கோள் நூலாகக்காட்டப்பட்டதும் கவித்துறையிலமைந்ததுமாகிய *கயாகரநிகண்டு என்னும்நூல் சேது

*இக்கயாகரநிகண்டு இத்தமிழ்ச்சங்கத்துக் கொண்டுவரப்பட்டுள்ளது

பதிகளுடைய இராமீச்சரமாகிய தேவைநகரத்துவேதியரும் பெரும் புலவருமாகிய **கயாதரரா**லியற்றப்பட்டதென்பது, அந்நூலோரவ்வொரு தொகுதி யிறுதிச்செய்யுளானுணரப்படுவது. இத்தேவைக்கயாதரர் **இராமீசர்கோவை**யும்பாடியவரென்பதும் உணர்ந்துகொள்க.

**"ஓங்கிடபகேதனன் பற்றுமறவாததேவைக்கயாதரனன்றலவேதியன்" எனவும்,**

*"காசிபகோத்திரம்வாழவந்தோனென்றெனக்கலைத்தமிழ்தோ*
*மாசில்பெருந்தகைமாருவதிபன மலரயனும்*
*கேசவனும்புகழ்தேவைநன்னுடனெகயாதரன" எனவும்,*

*"இராமீசரக்கோவைசொற்றகுருபரன" எனவும்,*

அந்நூற்றொகுதியிறுதிகளிலவருதலானறிக

**பலபட்டடைச்சொக்கநாதப்புலவர்** இசசேதுநாட்டுத் **தேவையுலாப்** பாடியவர். இவரினிய நால உலகம்புகழும் பெருந்தமிழாசிரியராய் இந் நலவைவயை அலங்கரித்துவிளங்கும நம மஹாமஹோபாத்தியாய ஐய ரவர்களால் அச்சிடப்பட்டுள்ளது. மற்றும இவரியற்றியது இசசேது வேந்தர்க்கு மந்திமந்திரியாயிருந்த **தெய்வகன்னி**யென்பார்பேரில **விஞ் சைக்கோவை** என்பது ஒன்றுண்டு. இதனை,

*"கொல்லாதமானென்றுமீசனகைமமானிக்குவலயத்தில*
*வெல்லாதயானைவெள்ளானையானறேமெய்யப்புனமகலா*
*இல்லாதவீரமிவரதன்றேவினியாதவன்சொல*
*கல்லாதமுத்துரகுநாதனவிஞ்சையிறகாவலரே"*

*"எத்திக்குமபோற்றும்ரகுநாதனவிஞ்சைக்கிருந்தியாய்*
*வர்த்திக்குமந்திரிமாலதெய்வகன்னிவரையிடத்தே*
*முத்திக்கையாறன்றொட்டுக்கட்டிக்கொண்டாளமமொழிக்குமொழி*
*தித்திக்குநெஞ்சுக்குநாவுக்குங்கண்ணுக்குந்தித்திக்குமே"*

என்னுங் கவிகளானுணர்க. விஞ்சையென்பது நெட்டூர். இவர் இக் கோவையரங்கேற்றிய மட்டாநாளில, தெய்வகன்னி இறந்தாராதலான், **சுப்ரதீபக்கவிராயர்** தெய்வகன்னிபாலுள்ள அன்பால இக்கோவையின் ஆனந்தங்காரணமாக இறந்தாரென்றுகொண்டு பலபட்டடைச்சொக்க நாதரைவெறுத்தது,

*"தேவைரகுநாதனமெச்சுந்தெய்வகன்னிமீதினிலே*
*கோவையென்றுபிலவிவைத்துக்கொன்றாயே—பாவியுன்றன்*

இட்டடைசசொல்லார்பொறுப்பாரேண்டாமடையபல
பட்டடைசசொககாமுழுவமபா"

என்று பாடினுரெனபா. இததெய்வகன்னிமநதிரியே இசசேதுபதி யரசர்குலநிதியாய்ப்போற்றும சீராசராசேசவரியினபலிபீடததை ராய வேலூரினின்றுகொணர்நதவரெனபது,

"கலியாணசோமன்னநலவேனவாருகாத்தாககளமெசசுஞ
சலியாமதிமந்தரிமாலதெய்வகன்னிதனறநதிரதததால்
நலியாதுராயவேலூர்புகுந்தேயன் றிராததிரியே
பலிபீடஙகொண்டுவநதான் சேதுவாசல்பலககவென்றே"

என்னுமபழையபாடலா னறியபபடுகிறது. இராமேசருககுப பொற் குததுவிளககிட்டவரும, இராமேசாதேவைபிற சோமவாரமடங்கட்டி அதறகு நம்புதழை எனனும ஊரை யளிததவருமஇததெய்வகன்னி மநதிரியாரே இவ்வாறே இசசேதுநாட்டாசாமநதிரியைபபற்றிய தமிழ்பபாடலகள் எணணிறநதனவுளளன.

"வாசமலாமடநதைபோல்வாரவணகானப்பே
ரீசனறன்மககளெழுபதினமா—தேசத
திரவலாமேனீட்டுவாகைமீண்டுலகஙகாககும்
புரவலாமேனீட்டுவாபொறகால"

கணிகையருமபொய்யாமொழியார்க்கு எழுபதிஞயிரம்பொன்னளித துததமிழ்பபாடலபெறறசிறபபுடைய சேதுநாட்டுத திருக்கானப்பேர்த தலததையும விளுவைசயெனனும நெட்டூரததலததையும் திருப்பணி செய்தவன் சேதுநாட்டுச சேதிராயனென்னும மநதிரியென்பதும், பாண்டியநாட்டைச சோழாவென்றுகொண்டபோது பாண்டியன் நாடு வேண்டிவர அவனைத தன்னகததுச சிறக்கவைததுததாங்கினுன் இச் சேதுநாட்டுக் கொடுமளூரிலிருநத பெரியபிரபுவாகிய வேளுடன் என்ப துமட, அவனே இசசேதுநாட்டுச சாளைக்கிராமங்கண்டவன் என்பதும் பின்வருமபழையபாடலகளா னறிநதுகொள்க.

"தருக்கொளும்விண்பொழில்சூழுந்திருசசாளையெனுமூலத்தலத்தைக்கண்டு
வெருககொளுமவெம்புலிககாடானவையெல்லாம்வேரறவேவெட்டிச்செய்ய
தெருக்களுமாடமுங்கூடகோபுரமுநதூபிதிருமதிளுஞ்செய்து
திருக்குளமுங்கரைகண்டான்மந்திரியாந்திருஞானச்சேதிராயன்"

"நட்டேரிற்சோமேசாகோவிற்லமான தனைநகத்தாற்செய்து
மட்டேருங்குழலுமையாளுலகுடையநாயகியைவகுததங்கேற்றிக
கட்டேரனகிளைவாழச்சேதுபதிரகுநாதனகருணைவாழ
நெட்டேருங்காணியுங்கொணடாண்டுகொண்டானிறைஞானச்சேதிராயன"

இப்பாட்டாற சேதுபதிமந்திரி சேதிராயனுதல தெரிக.

பாண்டியன் தெனகொடுமூரவேணுடனைபபாடியது:—

"சென்றுமகாமேருவினமேற்சேலேற்றியேபுடைத்தே
யன்றிருந்தேனுசஙகத்தவரோடு—நன்று
விருநதோமபுநதெனகொடுமூரவேணுடனகூட
விருந்தோமபடிவேண்டியினறு"

இதன்கட்கூறபபட்ட வேணுடன கூறதால விக்கிரமசோழனுலா
வில், "வெமபிக, கலககியவனுசககலிபுதனைபபாரில, விலக்கியவேணுடர்
வேநதும்" என்று புகழபபட்டவனுவன். இசசேதுநாட்டு இவனைச
சிறபபிததுரைககுங்கதைகள் பலவழங்குகின்றன இவன் வரையாது
சோறிட்டுப புகழ்பெறறவன "நனறுவிருநதோமபும்" எனனும விசே
டததானும, "கலியதனைபபாரிலவிலககிய" எனனும விசேடததானும
உணரலாம. இவனே இநநாட்டுச சாளைக்கிராமஙகண்டவனென்பது,

"மாறுகொணடமன்னவரைவடவரையிலேற்றி
வலலாரைததிறைகொணாந்தவரகுணவீச்சுரனுக்
காநிரண்டுபன்னிரண்டினடியளந்தகோலா
லகமகிழ்நதேதெனனுன்குகிழமேலெட்டுக
கூறுகொண்டமடைகுழிமுப்பத்திரணடு
குறுந்தெருவும்பெருந்தெருவுஙகுறித்துநாட்டிச
சேறுகொண்டவயற்சாளைக்கிராமங்கண்டான்
றென்கொடுமூர்வேணுடச்செல்வன்றனே"

என்பதனுலறிக

வெண்பாப்புலிக்கவிராயர்:—இவர் சேதுநாட்டுச செவ்லூரினர்.
இவர் வசைபாடுதலிலவலலவரென்பது,

"கந்தனேநீயாறுற்கற்றவனேநாறுனு
விந்தவுருடம்போயெதிராண்டில்—வந்தவினை,
தீராவினையாப்பதிரும்பாவியாதியாய
வீராசாமிகசேவிதி"

என்னும் வெண்பாவா லறியப்படுவது. இவர் நண்டுக்கறிவேட்கைமிக்க கருத்தான் என்பான் புலாலுண்டலையொழித்ததாகக்கூறியதுகேட்டுப் பாடியது,

> "வணடுவெந்தாற்றெரியும்மலர்வாசம்வழிநடத்திக
> கொண்டுவெந்தாற்றெரியும்பரிவேகங்குணத்துடனே
> கணடுவெநதாறறெரியுமபிறாவாஞ்சைகறிக்குதவு
> நணடுவெநதாறறெரியுங்கருததானுடைநாயமே" என்பது.

**மதுரகவி:**—இவர் இசைப்பதங்களபாடுதலில அதிகமவல்லவர். இவர் இச்சேதுநாட்டு மதிமந்திரி **முத்திருளப்பபிள்ளையவர்களையும்,** சிவகங்கையாண்ட **மருதுபாண்டியனையும்** மிகவும அரியபெரிய இசைப்பதங்களாற புகழ்ந்துளா. இவர் இச்சேதுநாடாண்ட **மங்களேச்வரி**ராணியாரைப்பாடிக் **காக்கைகுளம்** என்ற விளைபுலவூரைப் பரிசிலாகப்பெற்றவா. "அன்னைமஙகளேசவரியென்னைககடைககண்ணாலேபார்த்தாள் காக்கைகுளமறுபததுநாறகலமுநிருபததுடனேதாரைவாாததாள்"என்றிசைப்பததது வருதலா னிதுணரலாம. இககாககைகுளம் இவர்கருக் கிடைததகாலையி லிவாக கிடாபலவியற்றியவன் அக்காக்கைகுளதது **உடையான்** எனபான். அவவுடையானைததொலைதது மதுரகவியைக் காததவன் **வீரசோழ**னிலிருநத **ஆறுயிரம்** என்பான். இவ்வாறுயிரத்தின் நன்றிபாராட்டி இமமதுரகவிபாடியவெண்பா,

> "காக்கைகுளமாங்கடிமலாப்பூமபொய்கையந்த
> ஊர்க்குட்கராவாமுடையானே—நீக்குவந்த
> வாரணமேநல்லமதுரகவிநேமிதொட்ட
> ஆரணனே ஆறுயிரம்"

என்பது. இவர் மதுரைமீனாக்ஷியைபபாடிய "எப்படியாட்கொள்வாயே" என்னும்முதலையுடையபாட்டு எவருள்ளததையும உருக்கும். இச்சேதுநாட்டுப் பெருங்கரையில இசைபபதமபாடுதலிற்சிறநதவராயிருந்த **கவிகுஞ்சரமையரும்** இவர்பாற்பயின்றவராவர். இவர் **அழகர்குறவஞ்சி** பாடிச சிவகங்கையரசர்பால்அரங்கேற்றிக் **கோட்டாங்காய்ச்சியேந்தல்** என்னும் ஊரைப் பரிசிலாகப்பெற்றார். இவர்பாடியது கந்தபுராணக் கீர்த்தனை.

**தலைமலைகண்டதேவர்**:—இவரூர் காடடார்ந்தகுடியென்பது; சேது நாட்டு நயினார்கோவிலெனப்பெயரிய மருதூரையடுத்துளது. இவர் பாடிய மருதூரந்தாதி கற்றோபலருமறிந்ததே. இவர்சேதுவேந்தர்குலத் தவர்.

**சிற்றம்பலதேசிகர்**:—இவரூர் திருமறைக்காடாயினும் இச்சேது நாட்டுச்சிவஸ்தலமாகிய திருவாடானையென்னுந்திருப்பதிமான்மியந் தமிழாற்பாடிப் பலவரிசைகளும் வருஷாசனமும் சேதுவேந்தரால் அளிக்கப்பெற்றோராவர்.

**பெருங்கருணைமுத்தழகர்**:—இவர் பெரியஅவதானி. அக்ஷராவதானம் ஆயிரம் அக்ஷரத்தை எங்ஙனமாற்றினும் முறைசெய்துரைக்கவல்லவர். அன்னியபாஷைகளையுங்கேட்டவண்ணமே திருமபச்சொல்லும் ஞாபக சக்திவாய்ந்தவர். இவர்பாடியது திருக்கோட்டியூர்க்கலம்பகம்.

மாமபழக்கவிராயர்:—இவர் கவிச்சிங்கநாவலர் என்று பட்டம் பெற்றது சேதுபதிவேந்தராலே. இவர் சேதுபதிவண்ணமென்றொன்று பாடினர். பிறரா லாச்சரியப்படத்தக்க ஞாபகசக்திவாய்ந்தவர். இவர் ஒருபுலவன்பாடிய நூறுபாட்டையும் தாமபாடியபழம்பாட்டென்று தாம ஒருதரங்கேட்டதுகொண்டேசொல்லிக்காட்டியது இந் நாடறிந்தது. இவர்காலத்தே கல்போதுப் பிச்சுவையர் என்னும் வித்து வான் எளிதிற்பொருளறியலாகாதபடியாத்த திருவாடானையந்தாதிஎன்ற நூலைக்கொண்டு சேதுபதிபாலெய்த அதனைக்கேட்டு,

> "உச்சிதமா முன்னோருரைத்ததமிழையெல்லா
> மச்சரங்களச்சரங்களாகவே—நிச்சயமாப்
> பிச்சுவைப்பதாலேநின் பேர்பிச்சுவையனென
> வைச்சனனகல்போதுமன்"

என்று பாடினராம். கல்போதுப் பிச்சுவையர்பாடிய திருவாடானை யந்தாதியில் ஒருபாட்டு:—

> "முன்னவனைப்பாம்பிரவிகொடுநரகிற்புகுவனெனமொழியும்வேதம்
> அன்னவனைச்சிறுகாலோதிமம்பழனம்பவன்கயிலையடைவானென்றும்
> கன்னனெடுங்கமுகினஞ்சூழ்பொழில்பெருகுமாடானைக்கருத்தன்பேரை
> யிந்நிலத்திறகீர்த்திசெல்லிதரித்திடுமோவென்றுமடியேற்குத்தானே"

பாமபிரவி-பணியாதவன். சிறுகாலோதிமம்பழனம்பவன் - வந்த னருசெய்பவன். கீர்ததிநெலவிதரிததிடுமோ-புகழாமலகந்தரிததிடுமோ (எ-று) இநநூ லரஙகேறியது சேதுவேநதரவைககளததேதான்.

**சோமசுந்தரகுரு:**—இவா இவவிராமநாதபுரதது **நெல்லையப்பரென்** பவாபுததிரா. இவருடனபிறநதா வேதாநதசூடாமணியுரைககுப பாயிரஞ்செய்த **சாமிநாதன்** என்பாா. இதனை "வடிதமிழ்ககுமபன் சுவாமிநாதன்றனைவன வளாநெலலையபபனமைநதன, **வளாபெருங** குணஞான சோமசுந்தரகுருபதாமபுயமபரவுதாசன" எனச சரவணப பெருமாடகவிராயாபாடுதலா னறிக. ஆதியில இசசேதுவேநதராற பலஊாகளை அளிககபபெற்றகாரணததா லநநன் றிபாராட்டிச சேதுபதியன்னமும, காவிரிநீரும ஆவுடையபபநீழலும யா மென்றூ முடையோம எனறு ஆதீனகாததாகள நாளுமபுகழுஞ் சிறப புடையதும, செநதமிழ்பபயிரைச சீாபெறவளாததுதும,சைவசிததாநத சாஸ்தரஙகடகெலலாம விளைநிலமாயதும, இனறைககும என்றைககும புலவாககெலலாந தாயகமபோனறதுமான **திருவாவடுதுறையாதீனதது** வடகலைத தென்கலைககடனிலைகணட ஆசிரியா **சிவஞானமுனிவா**பாற் கலவிகற்ற பெருஞ்சிறபபுடையாரவா. இசசோமசுநதரகுருமாணாககா அட்டாவதானி**பெரியசரவணக்கவிராயா**. இராமநாதபுரம இயறறமிழா சிரியா எனறு பெயாசிறநது நனனூறகுக காணடிகையுரையும, ஆததி சூடியுரையும, கொனறைவேநதனுரையும இயற்றியவரும, தமிழ்க கலவியானிரமபிய **சரவணப்பெருமாளையா விசாகப்பெருமாளையரிவா**கட குத தமிழாசிரியருமான **இராமாநுஜகவிராயா** இவாமாணாககராவா. இவா சேதுபதியா லனபுபாராட்டபபட்டவ ரென்பதுமுதலியவற்றை, " துங்கமிகுசேதுபதிமகிழுநேசனசோமசுநதரசசுவாமிதாசன், சோட சவதானசசரவணப்பெருமாடசுயமபரகாசனகையோலை " எனச **சர வணக்கவிராய**ரோலைததூககினவருதலா னறிக **நன்னூல** இராமாநுஜ காண்டிகைககண், " தவககொழுநதெனனமாதவததினாதுதிததுறூஉ சிவஞானதேசிகனசேவடிககனபுபூண, டவனூலுணாததிய வைநதிய லோாநதனன், சோமசுநதரனெனுநதொனனூற்குரவன்" எனவும, "தகைகெழுசோமசுநதரகுருவருளுக, கென்னுலெனுமகததினைபபலி யீநது" எனவும வருதலானும இவை புணரபபடும. இசசோமசுந்தர குரு இயற்றியது **திருக்கழுக்குன்றக்கோவை.**

இராமாநுசகவிராயர் இவ்விராமநாதபுரததரென்பது அஷ்டாவ தானம வீராசாமிக்கவிராயர் "முகவைவருசெலவனெங்கோன் முறைத் தமிழாசிரியனிராமா நுசனுமுனனுகவிராயன்" எனப பாடுதலா னறிய லாம. இவரே அககாலதது முறபடத் தமிழ்நூல்களை அசசிடத தொடஙகியவா. தமிழிற்சிறநத திருவள்ளுவாதிருககுறளைப் பரிமே லழகருரையுடனும அதறகுத தெளிபொருள்விளககததுடனும அசசி டததொடங்கினு ரிவரே. இவரே டூரு, தாம்ஸன்கிளாாக்கு, ரானஸ், போப், வின்ஸிலோ முதலிய பெரிய ஆங்கிலேயாகடகுத தமிழறிவை யூட்டியவா. வின்ஸிலோ அகராதி இவருதவியானே நிறைவேறியது.

இப்போதும யூனிவாஸிட்டி லெகஸிகன ஆபீசுக்குத தமிழ்பபண் டிதராயமாநது அதற்குரியசபையாராலும சம்பந்தத்லைவராலும பல காலும அறிவாலும் குணததாலும புகழபபடுகினறதமிழ்ப்பண்டிதரான என்னருமையமமான்சேய் ஸ்ரீமான மு. இராகவையங்காரவாகள் இவ விராமநாதபுரச சேதுபதிகளாலாதரிககபபடட விதவதபரமபரையின ராய் நம மாடசிபொருநதிய சேதுபதிமஹாராஜரவாகளனபுககுரியரா யிவவூரராயிருததல ாண்டைககுநோககததகும.

தமிழிலுள்ள எலலா நூலகளிலும தொலகாபபியம திருவள்ளுவா இரண்டும மிகசசிறநதன. அவவிருநூலையும முதறகண உலகுககு அச்சிடத்தொடஙகினாிருவருமஇசசேதுநாடடாரே. தொலகாபபியம எழுததகிகாரததை நசசினாககினியருரையுடன முதறகண அசசிட டுதவினா சேதுநாடடு மழவராயனேந்தல மகாலிங்கையா எனபாா. இவர் சென்னைச சாவகலாசாலைத தலைமைபபணடிதராக இருநதவா. திருக்குறள் 63 அதிகாரஙகளைப பரிமேலழகருரையுடனும, அதற்குத தெளிபொருளவிளககததுடனும, டூருதுரையின் ஆங்கிலமொழிபெயாப் புடனும முதற்கண்வெளியிடடவா இவவிராமாநுசகவிராயரே. இவா பாறபயின்ற டாக்டாபோப தாமியறறிய திருககுறளாங்கிலமொழி பெயர்ப்புமுகவுரைககண இவருடையகலவிததிறததைப பல்லாறறானும புகழ்ந்துளர். கலவியிலலாமல நெடிதுகழிததுப பின கலைமகள்கோயில் புக்குப பன்னாள்வேண்டியும கலவிபெறுது மனநொந்து உயிர்துறப்பா னெண்ணித் தங்கழுத்தை வாளாலறுககுமபோது நாமகள்தோன்றி யனுக்கிரகிததனு லுடனே இவர்ககுக கலவிவன்மையுண்டாயிற்றென் றும் பின் அறுத்தபுண்ணுறித் தழுமபாயிற்றென்றும் அதை, தாங் கண்

கூடாதக்கண்டதென்றும், இவ்வரலாறு அவர் பொய்யாவாயானே கேட்டதென்றும் டாக்டர்போப் தம் திருக்குறண்முகத்து வரைந்துளார்.

**பெரியசரவணக்கவிராயர்**:—இவர் சேதுநாட்டு முதுகுளத்தூரினர். இவர் அவதானசத்தியைப் பலருமவியப்பர். இவருடையகல்விப்பெருமிதம் சவ்வாதுப்புலவருக்குமேம்பட்டது. இவர் சேதுமுதற் சென்னைவரை ஆங்காங்குள்ளபிரபுக்களாற் கொண்டாடப்பட்டுச் சம்மானிக்கப்பட்டவர். சோமசுந்தரகுருவினிடத் தளவிலாஅன்புபூண்டவர். சேதுபதிநன்றியையே எந்தப்பிரபு இடத்தும் வாயாரப்புகழ்ந்துபாடுபவர். இவர் ஒருவனைக் கெடவும் வாழவும் பாடவல்லவர். இவருடையசெய்யுணடை கற்றோர்க்குப் பெரிதும் இன்பம்பயப்பது. இவர்பாடிய பிரபந்தங்களின்பெயர்களையும் பிரபுக்கள்பெயர்களையும் இவர் அவர்பாற்பெற்றவரிசைகளையும் எண்ணியெழுதின் இவ்வியாசம் இடம்போதாதாதலால், சேதுபதிசம்பந்தமாக இவர்பாடலிற்காணப்படுவனவற்றை ஈண்டைக்கோதுவேன்.

"அரசரிலுயர்ந்ததுரையாரெனிற்சேதுபதி
யாகுமவனணிவாயலி
லகத்தியமுனிக்குமதிகங்கற்றபேர்கள்
ஆயிரங்கவிவாணருண
டவரிலொருசிறுவனயானபாடவறியேனென
றகற்றிவிட்டார்களென்னை
யாதலாற்பூமியிற்சஞ்சரித்தேனின
னகந்தனின்மகிழ்ந்தருளவையே"

"மகாராஜராஜருந்திறைதருஞ்சேதுபதி
வாசற்கவிப்ரசங்கன
வண்டமிழிலக்கணசசோமசுந்தரகுருசு
வாமியடிமைக்குமடிமை"

"அட்டதிசைபணிசெயுஞ்சேதுபதிமணிவாச
லட்டாவதானசிங்கம"

"விதவசனசேகரன்சேதுபதிவாசலில்விளங்குநவரத்னதீபம்"

"மகபதிநராதிபதிநீதிபதிசேதுபதிவாசற்ப்ரசண்டவாக்கி"

இது கற்பவர்களுக்கெல்லாம் வரையறையின்றிவழங்கும் வண்மையாதலால் ஒப்புரவறிதலென்னும் பேறத்தினபாற்படும். இன்னோரன்ன அறங்களே "ஒப்புரவினாலவருங்கேடெனினஃதொருவன், விற்றுக்கோட்டக்கதுடைத்து" எனத் தெய்வப்புலவராலும் சிறப்பிக்கப் பட்டிருக்கின்றன. இவ்வுதவி சிறிதாயிருப்பினும் "தினைத்துணை நன்றிசெயினும்பனைத்துணையாக்,கொள்வாபயனறெரிவார்" என்றபடி பயனால் மிகப்பெரியதாகவே அறிவுடையோரால் பாராட்டற்பாலது.

இம்முறையே மற்றுமுள்ள நகரத்தார்களிற்சிறந்த தர்மசீலர்களும், பிற தனவந்தர்களும் தத்தம தகுதிக்கேற்றவாறு மற்றும் வெவ்வேறுபுத்தகத்தைப் பதிப்பித்து விலையின்றி யுதவிவர முன்வருவாராயின அது இலவசக்கல்விபுகட்டுமுறையின் ஏதுவாய்நின்று எண்ணிறந்த புகழ்புண்ணியங்களாகிய இம்மைமறுமைப்பயனிரண்டையும அளிக்கத்தக்கதாயும, "ஒல்லுமவகையானறவினையோவாதே, செல்லும வாயெல்லாஞ்செயல்" என்னுந திருக்குறளுக் கிலக்கியமாயுமிருக்கும.

---

உ

## புத்தகமதிப்புரை.

——o——

(1) ஜகஜ்ஜோதி:—இது, மதுரை சேதுபதி ஹைஸ்கூல் உதவியுபாத்தியாயர் பிரும்மஸ்ரீ எஸ். சாமிநாதையரவர்களால் இனியதமிழ் நடையிலெழுதப்பெற்றதொரு புதியநாவல். இதில் தெய்வபக்தி, குருபக்தி, தாய்தந்தையர்வழிபாடு, மாதராடவரொழுக்கம, விருந்தோம்பல், நட்பு, அறிவு, கலகக்கேடு, வீரம், முயற்சி, சாந்தமுதலிய பலகுணங்களின் நலங்களும் ஆங்காங்குக் காட்டப்பட்டிருப்பதுடன், வனம, உத்தியானம, மாலைக்கால முதலியவற்றின் இயற்கையானவருணனைகளும், சமயோசிதச்செய்யுள்களும காணப்படுகின்றன. சிறுவர் சிறுமியர்களும் படிக்கும்படி தெளிவானநடையிலெழுதப்பட்டிருக்கும் இப்புத்தகத்தையும், இவர்கள் பாடிய திருவாலவாயுடையார் திருப்பள்ளியெழுச்சியையும் படிப்பவர்களுக்கு இவர்களது தமிழ்

நடையெழுதுஞ்சாமர்த்தியமும், செய்யுளியற்றுந்திறமையுஞ் செவ்விதின் விளங்கும். இப்புத்தகத்தின் விலை அணா—8. வேண்டுவோர் எஸ். சாமிநாதையரவர்கள், உபாத்தியாயர், சேதுபதிஹைஸ்கூல், மதுரை என்ற விலாசத்திற்கெழுதிப்பெறலாம்.

(2) ஜாமன்தேசவிளக்கமும், பிரிட்டிஷ் ஆளுகையின்நன்மைகளும்:- இது திருவுறந்தை ராஜகோபாலன் என்பவரால் அவ்விரண்டையும்பற்றிச் சுருக்கமாய் ஒருவாக்கொருவாசம்பாஷிப்பதாகவைத்துப் பதினாறுபக்கத்திலெழுதப்பட்டிருக்கிறது. இதைத் தனிப்புத்தகமாக வெளியிட்டிருப்பதைவிடப் பத்திரிகைகளில்வெளியிடுவது பயன்படத்தக்கது.

(3) முரஹரி :—(துப்பறியுமநாவல்) இது, ஸ்வதேசநண்பன் எனப்பெயர்பூண்ட ஒருவரால் எளியதமிழ்நடையிலெழுதித் திராவிடாபிமானி என்னும்பத்திரிகையில் வெளியிடப்பட்டுப் பின்பு வேலூர்க்காலேஜின் பிரதமதமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத் பு. க. ஸ்ரீநிவாஸாசாரியரால் புத்தகமாகப் பதிக்கப்பட்டிருக்கிறது. இதன்விலை அணா 5. வேண்டுவோர் பதிப்பித்தோராக கெழுதிப்பெறலாம்.

(4) ஆத்திசூடிநீதிகதைகள்:—இது, ஆத்திசூடிவாக்கியங்களை ஆதாரமாகக்கொண்டு, அவ்வவ்வாக்கியத்துக்குப் பொருத்தமான இதிகாசபுராணங்களிலும் பிறவற்றிலுமுள்ள கதைகளைத் தெளிவாகவும் சுருக்கமாகவுங்காட்டி, மாணக்கர்கள் விரும்பிக்கற்குமாறு அம்பாசமுத்திரம் தீர்த்தபதி ஹைஸ்கூல்தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்—ஆர். ஹரிஹரையரவர்களால் எழுதப்பட்டு வேலூர்க்காலேஜின் பிரதம தமிழ்ப்பண்டிதர் பு. க. ஸ்ரீநிவாஸாசாரியரால் வெளியிடப்பட்டிருக்கிறது. இப்புத்தகம் கலாசாலைமாணவர்களுக்கும் பிறர்க்கும் மிகப் பயன்படத்தக்கது. இதனவிலை அணா எட்டு. வேண்டுவோர் வெளியிட்டவர்க்கெழுதிப்பெறலாம்.

(5) 1. பக்திவிளக்கம், 2 தத்துவஞானபோதினியென்னும் அத்வைதமஞ்சரி, 3. மஹாத்துமாக்கள் என்னும் மூன்று புத்தகங்களும் யோகானுகூலன்பத்திராதிபர் ஸி. எஸ். இராதாகிருஷ்ணையரவர்களால் முறையே பக்தியைப்பற்றியும், அத்வைதத்தைப்பற்றியும், மஹாத்துமாக்களைப்பற்றியும் தமக்குத்தெரிந்தவிஷயங்களைப் பிறரும் அறியும்படி விரித்தெழுதப்பட்டுள்ளன. இவற்றின் விலை முறையே அணா 12, 8, 4. வேண்டுவோர் ஆக்கியோர்க்கெழுதிப்பெறலாம்.

குறிப்பு:—மேற்கண்ட ஏழு புத்தகங்களும் "பாண்டியன்புத்தகசாலை"க்குக் கொடுக்கப்பட்டன.

பத்திராதிபர்.

௨

## "திருப்பெருந்துறையென்பது தமிழ்நாட்டு ஆளுடையார்கோவிலே" என்பதன் குறிப்பு.*

IX-ஆம் ஆதாரமாக அச்சிட்டிருக்கும் சிலாசாசனம், ஆளுடையார்கோவில் வடக்கூர்க் கைலாசநாதர்கோவில் அர்த்தமண்டபத்தின் தூண்ஒன்றிற் காணப்படுகிறதென்றும், அது திரிபுவனவீரதேவர்க்கு "யாண்டு முப்பத்துநாலில" வெட்டப்பட்டதென்றும், அவ்வூர்த் தென்னங்கோட்டைபோனறிலுள்ள வீற்றிருந்தபெருமாள் எனப்படும் ஆதிகேசவப்பெருமாள்கோவிலின்மதில்வெளிப்புறத்திற் பின்கண்ட வேறொருகல்வெட்டுக் காணப்படுகிறதென்றும் என் நண்பர் மகா-ா-ா-ஸ்ரீ வெங்கடேசுவரஐயர் அவர்கள் மறுபடி எனக்குப் பட்டுக்கோட்டையினின்று எழுதியிருக்கிறார்.

"ஸகாப்த ௲௩௱ அ மேல் செல்லாநின்ற ஸ்ரீவிருப்பண உடையற்கு செல்லாநின்ற க்ஷயஸம்வத்ஸரத்து கும்பநாயற்று பூர்வபக்ஷத்து திதியை உ௦ வியாழக்கிழமையும் பெற்ற ரேவதிநாள் மிழலைக்கூற்றத்து நடுவில்கூற்று ப்ரஹ்மதேசம் தனியூர் திருப்பெருந்துறையார் பண்டாரத்துக்கு ஸ்தானவேதமங்கலத்து ஸபையோம் (ஸ) யாமோம் . "

இச்சாசனம், கி பி 1379-ஆம்வருஷம்முதல் கி. பி. 1400-ஆம் வருஷம்வரை விஜயநகரத்தில் அரசாண்ட (இரண்டாம்) விருபண்ண உடையார் எனப்படும் (முதல்) விரூபாக்ஷமகாராஜா அவர்கள்காலத்திலவெட்டப்பட்டது. இச்சாசனம் ஏற்பட்டு ஐஞ்ஞூற்றுமுப்பது வருஷம் ஆகிறது. இரும்பாநாட்டைப்போல் திருப்பெருந்துறையும்

*இது இச்செந்தமிழ்முழுதும் பதிப்பானபின்பு கிடைத்தமையால் "திருப்பெருந்துறையென்பது தமிழ்நாட்டு ஆளுடையார்கோவிலே"என்பதையடுத்துச் சேர்க்கப்படவில்லை.

மிழலைக்கூற்றத்து நடுவிற்கூற்றில் அக்காலத்தில் இருந்ததென்று இச் சாசனத்தால் அறிகிறோம்.

ஆதலால் வேம்பத்தூரார் திருவிளையாடற்புராணமும், வடமொழி ஹாலாஸ்யமாஹாத்மியமும், கானநாட்டுவிருத்தாந்தமும், (நான்கு) திருப்பெருந்துறைப்புராணங்களும், சிவயோகாம்பிகைபிள்ளைத்தமிழும், சிவயோகாம்பிகைதிருப்பொன்னூசலும், மிழலைச்சதகமும் புதுக்கோட்டைச்சீமைக் கல்வெட்டுக்களும், ஆளுடையார்கோவிலிலேயே உள்ள சிலாசாசனங்களும், மேற்குறித்த விடுகதைபோன்ற பழமொழியும், செப்பேட்டுச்சாசனங்களும் ஒரேவாக்காக எள்ளளவும் சந்தேகத்திற்கிடமில்லாமல் "ஸ்ரீமகாதீர்த்தம்" என்னும் திருப்பெருந்துறை, "ஜநவந்நாதஸ்வாமி"யான ஆளுடையசுவாமிவீற்றிருக்கும் ஆளுடையார்கோவிலே என்றும், மாணிக்கவாசகர் கீழ்சமுத்திரக் கரைக்குப்புறப்பட்டுப்போகும்வழியிற் சிவனைச்செயலாற் செயல்வேறு பட்டுக் கடற்றுறையல்லாத திருப்பெருந்துறையிலேயே வாழ்நாளைக் கழிப்பதாகத் தீர்மானித்து அங்கே தங்கிவிட்டாரென்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோற்காட்டுகின்றன.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கங.] ஆனந்த௵ மாசி௴ [பகுதி-ச.
Vol. XIII. February—March, 1915. No. 4.

## இலங்கைமஹாவம்சமும், தென்னிந்திய சரித்திராராய்ச்சியும்.

"செந்தமிழ்" (தொகுதி கங பகுதி க-ல்) கஎ-ம்பக்கத்தொடர்ச்சி.

இலங்கையிதிஹாஸங்களின் சரித்திரோசகமானமதிப்பை ஆராய்ந்தபின்னர் இவ்விதிஹாஸங்கள் தென்னிந்தியசரித்திரத்தோடும் காணபரம்பரையோடும் எவ்வாறு சம்பந்திக்குமென்றாராய்வ தவசியம். இவ்வகையான ஆராய்ச்சிக்குச்சாதனமானவிஷயங்கள் இலங்கைக்கு மஹாவம்சம் முதலிய இதிஹாசங்களிற்பரவிக்கிடக்கத் தென்னிந்தியாவுக்குத் தமிழ்க்காப்பியங்களினின்றே தேடியெடுத்த லவசியமாயிருக்கிறது. கி.பி. மூன்றுநூற்றாண்டில்வாழ்ந்த மஹாஸேனமஹாராஜாவுக்கு முற்பட்டகல்வெட்டுக்கள் கிடைப்பதரிது. காப்பியவழியானசாதனங்கள் கல்வெட்டுக்களைப்போல அவ்வளவு திட்டமானவையாயும், அம்மாதிரியான சரித்திரமதிப்புப்பெறுவனவாயுமிராவாயினும், வேறுசான்றுகளில்லாவிடத்து எடுத்தாளப்பெறின் அவைகளே தக்கசான்றாகநிற்கும். மொத்தத்தில் இம்மாதிரியானபிரமாணங்களின்மதிப்பு இவ்வளவேயென்றுதெளிதல் அஸாத்தியமாயினும், ஊக்கத்தோடு ஆராய்ச்சிசெய்வோர்க்கு அவர்க ளவ்வச்சமயத்திலெடுத்தாளும் ஒவ்வொருசெய்தியும் எவ்வளவுமதிப்புப்பெறுமென்பதைக் கண்டறிதல்கூடும்.

இம் மஹாவம்சத்தில் யாம் எடுத்தாளப்புகுங்குறிப்புக்களில்முற்பட்டது இலங்கைத்தீவின் ஒருபாகத்துக்கு 'நாகதீபம்' என்னும்பெயர் உண்டென்பது. இத்தீவின்குடிகளெல்லோரும் ஒருகாலத்தில் நாகரென்றுபெயர்வாய்ந்திருந்தனர். மாமனும் மருமகனுமாகிய மஹோதர சூளோதரரென்போர் ஒரு மணியாஸனத்துக்காகப் போர்புரிந்து,

புத்தருடைய இடைப்பாட்டாற் போரொழிந்து அவ்வாஸனத்தையு மவர்களேயளித்தனரென்னுஞ்செய்தி மஹாவம்ச முதலத்தியாயத்திற் காணலாம். இச்செய்திதான் மணிமேகலையிற் கீழ்வருமாறுகூறப்பட் டிருக்கிறது. அதாவது,

"அறவோற்கமைந்தவாசனமென்றே
நறுமலரல்லதுபிறமரஞ்சொரியாது
பறவையுமுதிர்சிறைபாங்குசென்றதிராது
தேவர்கோனிட்டமாமணிப்பீடிகை
பிறப்புவிளங்கவிரொளியறத்தகையாசனம்
கீழ்நிலமருங்கினாகநாடாளு
மிருவர்மன்னவரொருவழித்தோன்றி
யெமதீதெனவேயெடுக்கலாற்றா
தம்பெரும்பற்றுநீங்கலுநீங்கார்
செங்கணசிவந்துநெஞ்சுபுகையுயிர்த்துத்
தம்பெருஞ்சேனையொடுவெஞ்சமம்புரிநா
ளிருஞ்செருவொழிமினெமதீதெனவே
பெருந்தவமுனிவனிருந்தறமுரைக்கும்
பொருவருசிறப்பிற்புரையோரேத்துந்
தருமபீடிகைதோன்றியதாங்கென"

என்பதாம்.

இரண்டாவது -இலங்கைத்தீவில் சமந்தகூடம் அல்லது சமனொலை யென்னும் மலையினுச்சியிற் புத்தருடைய அடிச்சுவடுபதிந்திருக்குஞ் செய்தி. புத்தர் ஒருகாலத்து இலங்கையினதென்மேற்குப்பாகத்திலுள்ள கலியாணநகரத்தரசனான மணியக்கிகனளித்த விருந்துணவையுண்டு, அதற்குமாறாகத் தன் னடிச்சுவட்டைச் சமந்தகூடத்தில் நிலைபெறச் செய்துபோயினரென்று மஹாவம்சஞ்சொல்லும். இவ்வடிச்சுவட்டை யும் அத னற்புதசக்தியையும் மணிமேகலை,

"ஈங்கிதனயலகத்திரத்தினதீவத்
தோங்குயர்சமந்தத்துச்சிமீமிசை
யறவியங்கிழவோனடியிணையாகிய
பிறவியென்னும்பெருங்கடல்விடூஉ
மறவிநாவாயாங்குளதாதலின்"

என்று சொல்லும்.

மூன்றுஞ்செய்தி:-விஜயனுமவனுடன்வந்தவர்களும் பெண்வேட்டுப் பாண்டியனுக்கு வேவுசெலுத்த, அவ்வேண்டுகோட்கிணங்கிய பாண்டியவரசன் தன்மகளையும் இன்னுஞ்சிலபெண்களையும் பதினெட்டுத்தொழிலாளர்களான குடிகளாயிரவரையும் அனுப்பியதாக மஹாவம்சம் சொல்லும். இச்செய்திக்கு எனக்கெட்டியமட்டும் இத்தேசத்தியப்பிரமாணம் ஒன்றுங்கிடைக்கவில்லை. இவர்களெல்லாம் மன்னார் தீவுக்கெதிரி லிறங்கிப்போந்தனராம். இலங்கையிலும் இரண்டுசாலைகள் குறுக்கிட்டிடத்துக்குச் சதுக்கமென்னும்பெயர் வழங்கிவந்ததென்பது நாகசதுக்கமென்பதால்விளங்கும். காவிரிப்பூம்பட்டினத்திற்பூதசதுக்கமென்று ஒரு இடமிருந்ததென்பது மணிமேகலை சிலப்பதிகாரங்களிற் காணலாம்.

பசியால்வருந்துபவர்களுக்கு அன்னமளிக்கும் அற்புதசக்தியுடைய பிச்சைப்பாத்திரமொன்று மணிமேகலையில்வர்ணிக்கப்பட்டிருப்பது எல்லோருக்கும் தெரிந்திருத்தல்கூடும். அது, முதன்முதற் சிந்தாதேவியினிடத்திருந்து வற்கடகாலத்திற் பசியாற்றுன்புறும்ஜனங்களின் உஜ்ஜீவனத்துக்காக ஒருபார்ப்பனன்பெற்றது. வற்கடம்நீங்கிப் பசிப்பிணியொழியவே இப்பாத்திரம் மணிபல்லவத்தினிடையே ஒரு செய்தி,

"மாமலர்க்குவளையுநெய்தலுமயங்கிய
கோமுகியென்னுங்கொழுநீரிலஞ்சி
யிருதிளவேனிலெரிகதிரிடபத்
தொருபதின்மேலுமொருமூன்றுசென்றபின்
மீனத்திடைநிலைமீனத்தகவயிற்
போதித்தலைவனொடுபொருந்தித்தோன்று
மாபுத்திரனகையமுதசுரபியெனு
மாபெரும்பாத்திர.... . .
அந்நாளந்நாளப்பொழுதிப்பொழுது
நின்னாங்குவருவதுபோலுமநேரிழை"

என்பதனால் அறியப்படும்.

மஹாவம்சத்தில் புத்தர்யாண்ட பிச்சைப்பாத்திரத்தைப் பௌத்த ஞாபகசின்னங்கள்நிரம்பினதாய மாஹிந்தர் ஏவலால் சுமனர் அசோக மஹாராஜரிடத்திருந்து தந்தாரென்றும், அஞ்ஞாபகக்குறிகளெல்லாம்

அவைகளுக்கேற்பட்ட இடங்களிலடக்கம்பெற்றவுடனே அப்பாத்திரம் தேவானம்பியதிஸ்ஸனென்னு மரசனால் அரமனையில்வைத்துப் பூசிக்கப் பெற்றுவந்ததென்று காணப்படுகிறது. இவ் விருபாத்திரங்களையும் சம்பந்தப்படுத்தும் ஒருசான்றும் இதுவரைக்கும் கிடைத்திலது.

இதுகாறும் எடுத்துக்காட்டிய உதாரணங்களெல்லாம் கதைத் தன்மையனவாய் ஒன்றினின்றும் மற்றொன்றுபிறந்திருக்குமோ? அல்லது இருவகைக்கதைகட்கும் மூலம் ஒன்றேயாயிருக்குமோ? என்று அநுமானிக்க இடமுள்ளவைகளாயிருப்பதோடு சரித்திரவாராய்ச்சியில் வேறுவிதமானமதிப்புக் கிடங்கொடாமலுமிருக்கின்றன. பின்வரும் மேற்கோள்களோவென்றால் அத்தன்மையனவல்ல. இவைகள் விவரங்களவேறுபட்டிருப்பனவாயினும் பொதுநோக்கத்தில் ஒற்றுமையுடையனவாய் நிகழ்ந்தசெய்திகளைப்போற் சரித்திரநோக்கத்தில் மதிப்புப்பெறுவனவாய்த்தோன்றும்.

கைகரவர்கள்காலவரையறைப்படி கி. மு. 187-ல் இப்பாகுபாடு ஏற்படும். இவ்வருஷத்தில் திஸ்ஸன் என்பவன் தம்பியர்களில் ஒருவனாகிய ஸூரதிஸ்ஸன் இலங்கையாட்சி பெற்றான். இவனுக்குப் பட்டம் பெறுமுன் ஸுவர்ணபிண்டதிஸ்ஸனென்று மறுபெயர்வழங்கியதாக மகாவம்சஞ்சொல்லும். தன்னுடைய பிதாத்தாற் பசுவயிற்றினின்றும் பொன்முட்டையிற்பிறந்தானென்று மணிமேகலையிற்சொல்லப்பட்டுள்ள ஆபுத்திரன்செய்திக்கும் இப்பெயர்க்கும் ஸம்பந்தங்கற்பிப்பது அதிகாரமற்றகூற்றாகும். இவனாட்சியிற்றான் முதன்முதல் தமிழர்கள் ராஜ்யாபகாரஞ்செய்து இலங்கையாட்சிபெற்றதாக மஹாவம்சத்தில் எழுதப்பெற்றுள்ளது. ஒரு குதிரைவியாபாரியின்மக்களிருவர் அரசனை வலிந்துவென்று இருபத்திரண்டுவருஷம் நீதியோடு அரசாண்டாரென்று காணக்கிடக்கிறது. பழையராஜவம்சம் மறுபடியும் தம் முரிமைபெற்றுப் பத்துவருஷஞ்சென்றபின் இளாரன் (ஏலேலசிங்கன்) என்னும் தமிழன் அரசையபகரித்து ஆட்சிபூண்டான்.

இவ்விளாரன் உயர்ந்தகுடியிற்பிறந்தவனென்றும், சோழதேசத்தினின்றும்வந்து நாட்டை அசேலனென்னுமரசனிடம் கவர்ந்தவனென்றும், நாற்பத்துநான்குவருஷம் உற்றார், மாற்றாரிடம் வேறுபாடின்றிச் செங்கோன்முறைதிறம்பாமற்செலுத்தியவனென்றும் சிறப்பிக்கப்பெற்றுள்ளான். இவ்வரசன் தன் படுக்கைத்தலைமாட்டில் ஒருமணியைக்

கட்டிவைத்து அதை நியாயம்வேண்டுவோர் இடையூறுசிறிதுமின்றி யசைத்து நியாயம்பெற்றுப்போகச சௌகரியஞ்செய்திருந்தானென் றும, இலங்கைசசரிததிரஙகூறும. பெரியபுராணத்திற்கூறப்பட்ட மனுநீதிகண்டசோழனைபபோல இவனும ஒருபசுவின்கன்றின்மேற் றேரோட்டிய தனமகன்பேரில தேரோட்டினுனென்றுதெரிகிறது. இவ் வொற்றுமையையும சிலப்பதிகாரத்தில் இகருறிபபடடிகிய,

" அறனறிசெஙகோன்மறநெறிநெடுவாட்
புறவுநிறைபுககோனகறவைமுறைசெய்தோன்
பூம்புனற்பழனப்புகாஙகர்வேந்தன்"

என்று மேற்கோளையுங்காட்டியுள்ளார் ஹூலஷ் ஆசிரியர்.

இஃதொன்றேயனறிப பாணடியறகு மிததகைய ஆராய்சசிமணி யிருநதது,

" குடையொடுகோல்வீழநின்றுநடுங்கும்
கடைமணியின்குரலகாண்பெண்காணெலலாம"

" மறைநாவோசையலலதியாவதும
மணிநாவோசைகேட்டதுமிலனே"

என்றுமேறகோள்களாலும, சோழன் கறவைமுறைறசெய்தது,

" எள்ளறுசிறப்பினிமையவாவியப்பப்
புளளுறுபுனகண்டீாத்தோனன்றியும்
வாயிற்கடைமணிநடுநாநடுங்க
வாவின்கடைமணியுகுநீர்நெஞ்சுசுடததான்ற
னருமபெறறபுதலவனையாழியின்மடிததோன
பெருமபெயர்ப்புகாரெனபதியே"

என்று மேறகோளாலும நன்குவிளங்கும.

மனுசசோழன்கதைக்கும, இலங்கையிதிஹாஸததிதான இளாரன் செய்திககும ஒரேமூல மிருநதிருககலாம. ஆயினும, இரண்டுகதைக ளிலும மூலமயாவதெனறுதெரியுமவழி சிறிதுங்கிடைக்கவிலலை. சிலபபதிகாரமேறகோளகளில இவ்விஷயம விசதமாகிறது. இசசெய்தி புறவுநிறைபுக்கோன் சோழன் ஒருவனுககுச சொலலபபட்டுள்ளது. இது சிபிசககிரவாததியின்புராணகதையாயும, பௌததஜாதககதைக ளில ஒன்றாயு மிருககின்றது. பிறகாலததிய சோழபரமபரைபபட்டிக ளில, சிபி சோழவமசததரசர்களிலொருவனுய்விளங்குகிறான்.

ஒரு குருவியின்முட்டையைவிழுங்கிய பாம்பைக்கிழித்துத் தாய்க்குருவிக்கு இளாரன் முறைசெய்தானென்னுஞ்செய்தியைநீக்கி னும் பின்வருஞ்செய்தி கவனிக்கத்தக்கதாயிருக்கிறது. மஹாவம்சத் தின்படி இளாரன் பௌத்தனன்று. ஆயினும் தான் சவாரிசெய்யுங் கால் அறியாமற்சேதப்படுத்திய ஸ்தூபத்தினுருவருக்காகத் தன் தலை யைத் தேர்ச்சக்கரத்திலிட்டுத்துணிந்தவன், அவ்வாலயத்தார் வேண்டு கோளால் தவிர்ந்து இடிந்தபாகத்தைக் கட்டிப்போந்தசெய்தி,

> " உதவாவாழ்க்கைக்கீரந்தைமனைவி
> புதவக்கதவம்புடைத்தனனொருநா
> ளரசவேலியல்லதியாவதும்
> புரைதீர்வேலியில்லெனமொழிந்து
> மன்றத்திருத்திச்சென்றீரவ்வழி
> யின்றவ்வேலிகாவாதோவெனச்
> செவிச்சூட்டாணியிற்புகையழல்பொத்தி
> நெஞ்சஞ்சுடுதலினஞ்சிநடுக்குற்று
> வச்சிரத்தடக்கையமரர்கோமா
> னுச்சிப்பொன்முடியொளிவளையுடைத்தகை
> குறைத்தசெங்கோற்குறையாக்கொற்றத்
> திறைக்குடிப்பிறந்தோர்க்கிழுக்கமின்மை"

என்னும் மேற்கோளிலெடுத்தாண்ட பாண்டியன்முறைகண்டதன் மையையொக்கும்

இவன் மூன்றாஞ்செய்தி, காப்பரப்பிரிருந்தநெலலை அகாலப் பெயலானமழை நீக்கம், அதனாற் றுயருண்டாகிழவிக்காகப் பட்டினி கிடந்து இந்திரனை வருவித்துக் காலத்துப்பெயல்பெறுமாறு ஏற்பாடுசெய் தானென்பது இச்செய்தி காப்பியச்சிறப்பத்துக்கிணங்கிய சிலவிவரங்களிற் றவிர விஷயத்தில் "முடிவளையுடைத்தோன்முதல்வன்சென்னியென், றிடியுடைப்பெருமழையெய்தாதேகப், பிழையாவிளையுட்பெருவளஞ் சுரப்ப, மழைபிணித்தாண்டமன்னவனாகிய" உக்கிரபாண்டியன்செய் தியையொக்கும்.

விவரங்களில் ஒற்றுமையில்லாவிடினும் நியாயத்தில் இதே மாதிரியான உயர்ந்த அபிப்பிராயம் கரிகாற்சோழனுக்குரியதாய்ச் சொல்லும் இந்நியாயசம்பந்தமானமணி பொதுவானவிவரமாய்த் தோன்றுகிறது. முறைதவறியதால் அரசுகட்டிலிற்றுஞ்சிய பாண்டி யன் நெடுஞ்செழியனுக்கு இவ்வுறுப்புண்டென்று முன்னமேகூறியுள் ளோம். இம்மணி கி. பி. பதின்மூற்றுமநூற்றாண்டினனாகிய குமார குலோத்துங்கனுக்கு முண்டென்பது,

" ஆடுங்கடைமணிநாவசையாமலகிலமெங்கும்
நீடுங்குடையைததரிததபிரானிநதநீணிலததே
பாடுமபுலவாபுகழொட்டககூததனபதாம்புயததைச
சூடுஙகுலோததுஙகசோழனெனறேயெனைசசொல்லுவரே"

என்னுஞசெய்புளால விளஙகும.

இசசெய்திகளின்விவரங்க ளெவவாறாயினும இளாரன் என்பான் தமிழாகளில உயாகுடியிற்பிறநதவனெனபதும, சோழதேசததினின் றுமவநதவனெனபதும கவனிககததக்கவை இவன் கரிகாலனேயாகக் கூடுமோ ? அலலது அவன் முனனோர்களிலொருவனாயிருக்கலாமோ வென்னும ஐயம தோனறுகின்றது. ஏனெனில ராஜாவளி, ராஜரதநா கரியெனனு மிலஙகையிதிஹாஸஙகளில், சோழவரசன் ஒருவன் படை யெடுததுவநது, பன்னீராயிரம இலஙகைககுடிகளைச சிறைகொண்டு போ யவாகளைக காவிரிபபூமபட்டினங்கட்டுநதொழிலிலேவினனென்று கூறபபட்டிருககிறது இவன கரிகாலனமுனனோர்களிலொருவனா யிருநதிருததலகூடுமாயினும கரிகாலனேயெனறுசொலலககிடைக்குஞ சான்றுகள மிகவும குறைவாகவுளளன.

மஹாவமசம் இந்தியாவைபபறறிபபிரஸ்தாபிக்கும் சந்தர்ப்பம் இலங்கையரசனாகிய துட்டகாமணியென்பான மஹாஸ்தூபததைக கட்டிப் பிரதிஷ்டைசெய்ததைசசொலலுஞசமயமாம. அக்காலததிற் பரதகண்டததில எலலாபபாகஙகளினினறும பௌததஸஙநியாசிகள் ஏராளமாய் வரவழைககபபெறறனா. ராஜகிருகம, ஈசிப்பட்டணம (காசி) ஜேதவனம, கோஷிதாராமம (கோசமபி) தககணகிரி (உஜ்ஜேனி) அசோகாரமம (புட்பபுரம) காஸ்மீரம, பல்லவபோக்கம், அலஸந்தா (யோணநகரம) விநதியாரணயப்பாதை, போதிமணடம (புததகயை) வனவாஸம, கேளஸவிஹாரம இவவிடங்களிலிருநது பிக்ஷுககள் வநது சோநதனா. இவைகளில தென்னிநதியாவிலுள்ளதென்று ஐயமின்றிச சொல்லககூடியது ஒரே இடநதான; அதாவது தககணகன்னடமென்று இபபோது பெயர்வாய்நத வனவாஸமாம. பலலவபொக்கமென்பது தென்னிநதியாவிலுள்ளதென்றுகொள்ளலகூடும. ஆனால இது யவன நகரமான அலஸநதாவுடன்சேர்தது எழுதபபட்டுள்ளது. இப்படி யெழுதுவதனால இவவிரணடிடஙகளும ஒன்றறகொன்று சமீபத்திலே யேயிருநதிருததலவேண்டுமென்ப தவசியமன்றேயாயினுமிவ்விடத்தில

சந்தர்ப்பத்தைநோக்கின், பல்லவபொக்கமென்பது விந்து ஸௌராஷ்டிரங்களுக்குச சமீபததிலிருநதிருததல்வேண்டுமெனறுதோன்றுகிறது. இதனுற் பலலவர்கள் இககாலததிற் காஞ்சிநகாபபுறததுக் குடியேறினுரலலரென்றுகொள்ளலாம. காபபியங்கள், கலவெட்டுககள், தாமரஸாஸனங்க ளிவைகளாற பெயாபெற்று கி. பி. ஐந்தாம நூறருண்டுமுதல தமிழ்நாட்டில உயாவுற்றோங்கியபலலவாகள் மஹாவமசபபிரகாரம இக்காலததில தெனறிசைவந்தவரலலா.

தமிழ்க்காபபியங்களேயேசோதிககுமிடததும இதேகொள்கை காணக்கிடைபபதால இது தமிழ்ப்பாஷைசசரிததிரததுள் மிகவும் முக்கியமானகொள்கையாய்நிலைபெறும்.

கி. மு. 44-ல அரசுபெறறு, உடனே தமிழர்பா லரசிழநது கி. மு. 29-ல மறுபடியும தன்னுரிமையைபபெற்ற வட்டகாமணியின் ஆட்சிககாலததில மஹாவமசம தென்னிநதியசரிததத்தோடு சமபநதபபடுகிறது. ஆட்சிபூண்டவுடன் இவ் வட்டகாமணிக் கிரணடபாயஙகள் நோநதன. ஒன்று, வெளிநாட்டுத தமிழாகள் படையெடுததுவநதது. இரண்டாவது உள்நாட்டு ரொஹணத்திலிருநத திஸ்ஸனென்னும பார்ப்பனன் படையெடுததததாம. வட்டகாமணி முதலில இபபாாபபணனேயும தமிழர்களேயும போாபுரியவிட்டுத திஸ்ஸனே அழிவுபெறசசெய்தான். தமிழர்களேத் துரத்தத தனனுலியலவிலலே. அவர்களிடம தோலவியடைநது,புறஙகொடுததோடிப பிறகு ஒரு பிக்ஷுவினுபகாரமூலமாய்த தன்குடிகளில் ஒருவனிடம பதினுன்குவருஷம மறைநதுவதிநதான். தன் இரண்டு ராணிமாாகளோடும இரண்டு இளஙகுமாரர்களோடும உயிர்மீட்கவோடுவோன் இளேயளாகிய ஸோமலாவென்பவளேயும, தன் கிரீடததையும், பௌததபிசசைபபாததிரத்தையுமவிட் டோடவேண்டியதவசியமாயிற்று. ஓடுங்கால, தன்முடியைமாததிரம ஸோமலாவினிடங்கொடுததுப் பிசசைப்பாததிரததை வெஸ்ஸகிரிக்காட்டில் ஒளித்துவைததுவிட்டுபபோனுன். இததருணம் படையெடுத்துவநத ஏழு தமிழர்களில ஒருவன் ஸோமலாதேவியையும அரசன்முடியையும தன் பாற்படுததிக்கொண்டு திரும்பிப்போய்விட்டான். மற்றொருவன் பௌத்தபாததிரததைக்கொண்டு திரும்பினுன். மற்ற ஐவர்களும் பதினுன்குவருஷம ஏழுமாதம ஆண்டார்கள். இவ்வைவரில் முதல்வன்

புலஹத்தன் என்போன். இவன் கபிலர்பாடிய குறிஞ்சிப்பாட்டுக்குக் காரணனாயிருந்திருக்கலாமோவென்னும் சங்கை யுண்டாகிறது. இவன் தன் படைத்தலைவனாகிய பாஹியன என்பவனால் கொலையுண்டான். இப்பாஹியன தன் தளகர்த்தனாகிய பணையமாறனாலும், இவன் பிளைய மாறனாலுமிவன் தாடிகனென்பவனாலும் முறையே நாசமடையத் தாடிகன் வட்டகாமணியாற் றொலைவியடைந்தான். ஸோமலா, பிசசைப் பாத்திரம என்பவற்றுககும பணையமாறன், பிளையமாறன இப்பெயர்களுக்கும ஏதேனும குறிப்புககள் தமிழ்நூலாராய்சசியில நேரலாம். பிளையமாறனுககும பழையன்மாறன்என்னும மோகூர்த்தலைவனுககும் ஏதேனும் பொருத்தமுண்டோவென்றுபார்ககவேணடும. இச்செய்திகளில இரண்டுசிறுவிவரங்கள் அககாலத்திய மதநிலைமைவிஷயத்தைப் புலப்படுததும. வட்டகாமணி ஓட யத்தனிககுந்தருணத்தில, கிரியென்னும ஜைனமுனிவரொருவர் "பெரியகரியசிஙகம ஓடுகிறது" என்று களிப்புற்றுககூவினாராம. இவ் வபசாரத்திற்காக வட்டகாமணி தன் பதமபெற்றபிறகு அந்த ஜைன ஆசசிரமத்தையழித்து அபயகிரிவிஹாரமென்னும பௌத்தவிஹாரத்தைக கட்டினனாம. இதனால, ஜைன ஆசசிரமங்களையழித்துப் பௌத்தவிஹாரங்கள் கட்டபபெற்ற தரிதன்றென்பது ஒருதலை. வட்டகாமணிக குதவிபுரிந்த ஏழுபடையாளரும, தங்களிலொருவனுக கரசன் நடாத்திய கொடுமையேகாரணமாக வட்டகாமணிக்குப்பகைவாகளாய்த் தமிழருடன்சேர்ந்து படைத்தொழிலபுரியமுயன்றபொழுது பௌத்தபிக்ஷு ஒருவர் நடுநின்று தருமம அவ்வரசனால் நிலைபெறுமோ? தமிழரால நிலைபெறுமோவென்றுகேட்டு, அரசனொற்றுன் என்றுரைத்து, அவர்களைச சமாதானப்படுத்தி, யரசனோ டுடன்படுத்தினா. இதனால, தமிழாகள் பௌத்த மதத்துக்குவிரோதிகளாயிருந்தாாகளென்றுவிளஙகும.

இவ்வரசன் தன்னுரிமைபெற்றவுடன் ஸோமலாதேவியைவரவழைத்து, அவளைமுன்போல் மஹாதேவியாய்விளங்கசசெய்து அவள் பெயரால் மணிசோமாராமம என்னும் பௌத்தபள்ளியையும் சமைத்தான். இப்பெயரில், தேவியின்பெயரும சூளாமணியின்பெயருங் கலந்துநிலவ இப்பெய ரளித்தனனென்ப. இவ்வரசனுடைசிக்காலத்திற்றான் மூன்று பௌத்தபிடகங்களும், அட்டகதையும் எழுதப்பெற்றன.

வட்டகாமணிக்குப்பின் அவன்மக்க ளிருவர் வரிசையாயாண்டார்கள். அதி லிரண்டாமவன் பௌத்தனல்லன். ராஜத்துரோகி. இவன்பெயர் சோரநாகன். இவன் ராணி அநுலையென்பவள். இவளுக்கு ஒருவர்பின்னொருவராய்வந்த காதலர்களில் இருவர் தமிழராவர். இவர்கள், பட்டணத்துத்தச்சன வடுகனும், தமிழ்ப்பார்ப்பனன் நீலியனென்பவனுமாவர்.

இதற்குப்பின் தென்னிந்தியர், இளநாகனுடைசிக (கி. பி. 95-101) காலத்திற் குறிப்பிடப்படுகிறது. இவ் விளநாகனுடைசிககால ஆரம்பத்திலேயே லம்பகன்னரென்னுங்குழுவினர் குடிக்கலகஞ்செய்தெழுந்தனர். இளநாகன் தேசப்பிரஷ்டனாய் இந்தியாவில் மூன்றுவருஷம் வதிந்து, ஒரு படையோடு திரும்பிவந்து துரோகஞ்செய்த லம்பகன்னரைத்தோற்கச்செய்து மறுபடியும் தன னுரிமைபெற்றனன். சில காலஞ்சென்றபின் மறுபடியும் லம்பகன்னர்கள் கலகஞ்செய்து அரசனைச் சிறைப்படுத்தினார்களென்றும், அத்தருணத்தில் அரசி தன்மகனாகிய சண்டமுகசிவனென்னும் சிறுகுழந்தையைப் பட்டத்துயானையின் முன்வைத்து "இவன் நின்னரசன்மகன், அரசன் சிறைப்பட்டான்; சத்துருக்கள்பாற்பட்டு இக்குழந்தை மரணமடைவதைக்காட்டிலும், நின்னிடம் மரித்தல்பெறுவது நலம். ஆகையால் நீ இக்குழந்தையைக் கொல்லக்கடவாய்" என்று சொல்லியனுப்ப, அந்த யானையானது கட்டுத் தறியைமுறித்து அரமனையுட்புகுந்து அரசன் சிறைப்பட்டிருந்த அறையைத்திறந்து அரசனைத் தன்பிடரியிலேற்றிச்சென்று கடற்றுறையிற்காத்திருந்த மரக்கலஞ்சேர்த்துப் போயதென்றும் மஹாவம்சம் சொல்லும். இத்தகையகதை வேறுமாதிரியானவிவரங்களோடு கரிகாற்சோழனுக்குவழங்குவது எல்லோர்க்குந்தெரிந்ததேயாம். இச் சண்டமுகசிவனுடைய ராணிக்குத் தமிழ்த்தேவியென்றுபெயர்.

கி. பி. 263—285-ல் வோஹாரிகதிஸ்ஸனாட்சியிற் சகோதரசச்சரவுகாரணமாக யுத்தம் ஒன்று நிகழ்ந்தது. இவ்வரசன் தெளிந்தாளும் திறத்தனாய்ச் சரீரஹிம்சைத்தண்டனைவிதிப்பதைத் தவிர்த்தனன். இவனாட்சிக்காலத்தில் மதக்கொள்கைமாறுபாட்டங்கள் நிகழ்ந்தனவென்றும், இம்மாறுபாட்டங்களில் வேதுல்ய அல்லது வைபுல்யக்கொள்கை யதிகரித்து இவனு லடக்கித்தணிக்கப்பட்டதென்றுங் கூறுப. இவன்றம்பியாகிய அபயனென்போன் மகாராணியிடங் களவொழுக்கஞ்செய்து,

அது கண்டறியப்பட்டு உயிர்பிழைக்க இந்தியாதேசத்துக் கோடிப் போந்தவன் துரோக எண்ணமுள்ள மாமனொருவனாலும், தமிழர்களாலும் உதவிபெற்றுப் படையெடுத்துவந்து தன்முன்னோனரசையும், அரசியையு மபகரித்துக்கொண்டான்.

கி. பி. 296-ல் இருந்து 315-வரைக்கும் இலங்கை லம்பகன்னர் வசப்பட்டு அவர்களா லாட்சிபெற்றிருந்தது. இவ்வரசர்கள் ஸங்கதிஸ்ஸன், ஸங்கபோதி, கோட்டகாபயன் என்னும் மூவருமாவர்.

இவர்களி லிரண்டாமவன் மதாபிமானி. புராதனகாலத்திய அபிப்பிராயப்பிரகாரம் இத்தகைய அபிமானமும் ஆட்சித்திறமையும் ஒருங்கு நிற்பதில்லை. மந்திரி-கோசாதிகாரியாகிய கோட்டகாபய னதீனமாய்க் கலகம்பிறக்கவே அரசன் உயிர்பிழைக்க ஓடினன். இந்நிலைமையில் ஒரு பிச்சைக்காரனையெதிர்ப்பட்டு அவன்கொடுத்தவுணவையுண்டு அவ்வுதவிக்குக்கைம்மாறாகத் தன்தலையைவெட்டியெடுத்துக்கொண்டு போய் ராஜ்யாபகாரியான கோட்டகாபயனுக்குக்கொடுத்து, அதற்காக ஏற்படுத்தியிருந்த விலையைப்பெற்றுக்கொள்ள அனுமதிகொடுத்தான். அப்பிக்ஷுக னதற்கிணங்காமற் பின்வாங்கியதைக்கண்டு தானிருந்த இடத்திலேயே உயிரைவிட்டுக் கொலைக்குற்றமின்றி விலையைப்பெறு மாறுசெய்தான்.

இம்மாதிரியானகதைகள் ஏராளமா யெங்குங்கிடைப்பனவேயாயினும், தமிழ்நாட்டில்வழங்கும் புறநானூறு (பண்டித சாமிநாதையரவர்கள்பதிப்பு) 152, 162-ம் பத்திரங்களிற்கண்ட குமணன்கதைக்கும் இதற்கு முண்டானவொற்றுமை நோக்கற்பாலது.

இவர்களில் இறுதியிலிருந்த கோட்டகாபயன் ஆட்சிக்காலத்தில் (கி.பி. 302—315-ல்) வேதுல்யக்கொள்கைமாறாட்டம் அதிகரிக்கவே அபயகிரிவிஹாரத்திற்சேர்ந்திருந்த இச்சார்பினரான அறுபதுபிக்ஷுக்களைத் தேசத்தைவிட்டோட்டி எதிர்த்தட்டான கடற்கரைப்பிரதேசத்திற் செல்லவிட்டான். இப்படித் தேசப்பிரஷ்டர்களானவர்களில் ஒருவரிடமடைந்து அவர்கள்கொள்கைகளை நன்குணர்ந்த, சோழதேசத்தவனான ஸங்கமித்தன் என்னும் பிக்ஷு ஒருவன், சிறந்தமந்திரவாதியென்று பெயர்வாய்ந்து மஹாவிஹாரத்துடங்கிய பிக்ஷுக்களிடம் மிகவும்

வைரம்பூண்டவனு யிலஙகைககுவநது இவவிருகொள்கைகளின்றிறமை யையும பரிசோதிததுத தீாமானிக்ககககூடிய கல்விககழகததில முனை நதுநின்றுவாதிததுப் பெருமைபெறறனன. இவ்வாததில் ஸங்க மித்தனின் மேமபடடதன்மையை மெசசினவனுன அரசன், இசசங்க மிததனைத தனமகககளிருவரான ஜேட்டதிஸ்ஸ, மஹாசேனாககு ஆசிரி யனுகநியமிததான. ஸங்கமிததன இளையவனிடமபாராட்டிய அன்பின்மேலீட்டால, கோட்டாபயனுககுப்பின் பட்டததுக்குவந்த ஜேட்டதிஸ்ஸனுடைய அபிமானததிற் காளாகாமறபோயினன். இவ் விருசார்பார்ககும விரோதமதிகரிகக, வைதுலயசசாாபார், இறந்து போன அரசனசவததுககுசசெய்யவேணடியமரியாதையையுஞ செய் யாமல நிறகவே, ஜேட்டதிஸ்ஸன்வெகுணடு, இததன்மையரான நியம மற்றசநநியாசிகளையெல்லாந கொலைபுரிய ஆகஞைசெய்தான. தன் னுயிரககுப பயநதவனுன ஸஙகமிததனே தன பிரியசிஷ்யனுன மஹா ஸேனனுககு ஆட்சிவருமளவும இநதியாதேசததிலேயே நிலைபெறும எண்ணததோடு அஙகேபோயசசோநதான்.

கைகராசிரியாகொள்கைககேறப, கி. பி. 325-ல நின்று 352-வரைககும ஆண்ட மஹாசேனன ஆட்சிமுழுமையும இமமாதிரியான மதபேதசசசசரவிலும, இதேகாரணததால ஒருசார்பாா மறறைச சார்பினேருடைய ஆசசிரமங்களையழிப்பதிலுமே கழிந்தது. ஸங்க மிததனும சோணன எனனு மொரு மநதிரியும புதியதான வைதுலயச சார்பினா. மேகவாணபயனென்னும மறறோரமைசசன் பழையசார் பினன். இவன் கலகஞசெய்து அரசன்மேறபடையெடுததுச சிறிதுமட்டு மழிவுபெறற மஹாவிஹாரததை முனனிருநதாற்போற கட்டிககொடுப பதாயரசன்வாககளிததபிறகுதான் கலகததினின்றுநீஙகினான். இவர் களுக கெதிரியாயிருநத சோணவமைசசனும, சோழதேசததியஆசிரிய னும ராணிமாரகளி லொருததியினசகாயததாற கொலையினின்றுநீககப் பெற்றாகள். ஆனால இறநத ஆசிரியனிடததுக்குத திஸ்ஸனென்னு மறறொருவன்வநதுசேர மஹாவிஹாரம மறுபடியும பாழுபடவேண்டிய தாயிற்று. இசசெய்திகளால நாட்டிற சமாதானநிலை சிறிதும இலலா திருநததெனறு தோனறும. இததகையவிவாதஙகளில மிகவும உபயோகமான ஒருகூறறுத தெனபடுகிறது. அதாவது இமமஹா ஸேனன பராமமணதெயவஙகள தங்கிய அநேகஆலயங்களை யழிததா னென்பதாம. இவைகளையெல்லாமழிததது மணிஹீரவிஹாரங்கட்டுவ தறகாகவென்றும வரைநதுள்ளது.

இம்மஹாவம்சத்துட்கண்டுள்ள காலவரையறைவிவரங்களில் எவ்வளவு அபிப்பிராயபேதங்களுக் கிடனிருப்பினும் கைகராசிரியராராய்ச்சிக்குப்பின் இவ்விதிஹாசங்களிலடங்கிய காலக்கூற்றின் பெரும்பிரிவுகளைப்பற்றிச் சிறிதும் ஐயப்பட இடனில்லையென்னலாம். கைகர் என்பவருடைய சித்தாந்தத்திற் பொதுப்படையான ஆக்ஷேபணையொன்றுந் தோன்றவில்லை. இவர்கூறியுள்ளவருஷங்களும் பொதுப்படையாயங்கீகரிக்கத்தக்கவையே. இம்மஹாவம்சத்தி லடங்கிக்கிடக்கும், இந்திய தேசசம்பந்தமானகுறிப்புக்களையெல்லாம் ஒருங்கேதிரட்டி, இவைகளைப்பற்றி இத்தேயத்தினின்றுகிடைக்கக்கூடியசான்றுகளையும் சேர்த்து ஒத்துநோக்கி ஆராய்ச்சிசெய்தாற் சிலவிஷயங்களேனும் உறுதிபெறும். ஆனால் மஹாவம்சத்தைப்போன்ற காலவட்டவணை கொண்ட கிரந்தங்கள் நம்பால் யாதுமில்லையென்பதை மறத்தல்கூடாது. இது வியசனிக்கத்தக்கதேயாயினும் இதினின்று சில அனுகூலங்களுமுண்டு. எப்படியென்றால் நமக்குக்கிடைக்கும் சிலவிஷயங்கள் முற்கால நிகழ்ச்சிகளைத் தற்செயலாய்த்தெரிவிப்பனவாகையால், வாஸ்தவக்கூற்றென்றுகொள்ள இடமுண்டு.

இத்தகையவாராய்ச்சிக்குச்சாதனங்கள் தமிழ்க்காப்பியங்களே. இவைகளிற் சிலவேனு மிக்காலத்தனவென்றுசொல்லவேண்டியவையாயிருக்கின்றன. இம்மஹாவம்ச மிவ்விஷயத்தி லேதேனு முதவிபுரியுமா? என்று ஒத்துப்பார்த்த திவ்வகையாராய்ச்சியைச்செய்வதற்குவேண்டிய சாதனங்களை எம்மாலியன்றமட்டுமுதவவேண்டுமென்னும் எண்ணத்தாலேயே இவ்வியாசம் எழுதப்பட்டது. இங்கு யாமெடுத்துக்காட்டிய விஷயங்களினின்றும் ஒருவிஷயம் நன்றாய்ப்புலப்படுகிறது. அதாவது இலங்கைத்தீவுக்கும், இதற்கெதிர்ப்பட்ட கடற்கரைமாகாணங்களுக்கும், முக்கியமாய்ச் சோழதேசத்திற்கும், வெகுவாய்ப் போக்குவரத்துண்டென்பதாம். தவிர இலங்கையில் பிராம்மணர்குடியேறியிருந்தார்களென்பதும், பிராமமணர்களின் ஆலயங்கள் நிலைபெற்றிருந்தனவென்பதும், சோழதேசத்திலிருந்துவந்தபௌத்தசாலைக மஹாயானமென்பதும், மேல இந்தியாவினின்றுவந்தது ஹீனயானமென்பதும் காணக்கிடக்கின்றன. இக்கொள்கைகளையுறுதிப்படுத்தும் சாதனங்கள் தமிழ்க் காப்பியங்களினின்று ஏதேனுங்கிடைத்தல் சாத்தியமோ?

இவ்வாறுன பலவினுக்களுக் குத்தரஞ்சொலல யாம இப்பொழுது முயற்சிசெய்வது முடியாது. இவைகளையெலலாம் முன்னிட்ட ஆராய்ச்சி சாவகாசமாய்சசெய்யததக்கது. மஹாவமசததிற் கஜபாகு இந்தியாவுக்குவநததாகவாவது, பததினிதேவிககுக கோயிலசமைதத தாகவாவது சொலலவிலலை. சிலபபதிகாரததில ஒரு கஜபாகு இவ் விரண்டுசெய்தியையுமநிகழததியதாகக் காணககிடைககிறது. இவ்விரு செய்தியும பௌததாகள் சொலலியேதீரவேண்டுமெனபதறகு நிரப்பநத மானகாரணந தோன்றவிலலை. வேறு இலங்கை இதிஹாஸங்களில இச செய்திகள் சொலலப்படடுள்ளன. அவைகள பிறகாலததன. தென் னிந்தியாவிற் கிழமைகள் கி. பி. ஆறுமநூறறுண்டுக்குமுன ஆடசிபெற விலலையென்பா பலீட. இககொள்கையை ம-ா-ா-ஸ்ரீ ஸ்வாமிககண் ணுப்பிள்ளையவர்க ளங்கீகரிபபாபோலும. இததகையகொள்கைககுத தென்னிநதியபிரமாணம ஏதாவதுண்டாவெனபது விசாரிககததகக செய்தி. இவைகளையெலலாம வேறொருமுறைவிசாரிபபோம.

எஸ். கிருஷ்ணஸ்வாமிஐயங்கார், எம் ஏ.

---

உ

## மழவர்*

---

மழவரென்னுஞ்சொல சாதாரணமாக இளையோர் (வீரா) என் னுமபொருளைத தரும. "மழவுங்குழவுமிளமைப்பொருள" "ஏவலிளை யர்தாய்வயிறுகரிபப" என்பனவறறுல இது பெறபபடுவதாம; இனிப் புறநானூறறுரையாசிரியருமஇசசொறகு வீரா என்றபொருளையே எழுதிசசெலவதூஉங காண்க. (புறம 88, 90)

இஃ திவவாறிருநதும, சரித்திரம, பூகோளம, கலைஞானம, (Science) முதலிய எலலாவறறுலும உறறுநோககின், தற்காலம

---

* இது, மதுரைததமிழ்ச்சஙகத்தின பதினமூனருமவருடோறசவத்தில் (18-5-15) ஸ்ரீமான்-உ. வே. சாமிநாதஐயரவாகளின் அக்கிராசனததின்கீழ்ப் படிககப்பெற்றது.

மேனாட்டுக்கலையுணர்வுடையாருக்கும் பெருந்த உவப்பும் வியப்புந் தரத்தக்கதும், உலகமலைவு, ஆகமமலைவுமுதலிய எவ்வகைமலைவுமின்றி நேரா வண்ணம் மிக நுணுகி ஆழ்ந்துசெலவதுமாகிய உரையையெழுதும் நமது பெருவாழ்வாகிய ஆசிரியர்நச்சினார்க்கினியர், 'மழவர் - சிலவீரர்' எனவுரைத்து "உருவக்குதிரைமழவரோட்டிய, நெடுவேளாவி" யென ஆதாரமுங்காட்டிநிறுவினர். (மதுரைக்காஞ்சி 395)

நான் பண்டிதபரீக்ஷைக்கு மதுரைக்காஞ்சிபடிக்குங்கால அதனுரையாசிரியர் இச்சொற்குச் சிலவீரர் எனறெழுதுவானேனென்னும் ஐயம் எழுந்து என்மனத்தி லுறுத்துவதாயிற்று. பின்னும் அதனைப் பற்றி யாராய்வுழி யெனக்குக்கிடைத்த சிலஆதாரங்கள் ஒருவாறு விளக்கமெய்துவித்தன. அவற்றையே யிங்கு எழுதத்துணிந்தனன்.

"நிலப்பெயர்குடிப்பெயர்" என்னும் பெயரியற்சூத்திரப்படி, கொங்குநாட்டிலுள்ளோர் 'கொங்கர்' குடநாட்டிலுள்ளோர் 'குடவர்' என நிலம்பற்றிப் பெயரெய்தினமைபோல, மழநாட்டிலுளளோர்களாதலின இவர்கள் 'மழவர்' எனப் பெயர்பெற்றவராவர்.

தமிழகத்தின் பண்டைய பெரும்பிரிவுகளாகிய சேரசோழபாண்டி மண்டலங்கள், தமமுட் பல சிறுபிரிவுகளையுடையவாயிருந்தன. அவற்றுள், சோழமண்டலம், மேற்காநாடு ("அகன்பணைநீர்நாட்டுமேற்கா நாட்டாதனூர்"1) கோனாடு ("செழுந்தளிரின்புடைமறைந்தபெடைகளிப்பத்தேமாவின், கொழுந்துணர்கோதிக்கொண்டுகுயிலுறு கோனாடு"2) மழநாடுமுதலிய உண்ணாடுகளையுடையதாயிருந்தது. இம் மழநாடே மழவரது தாய்நாடாம். இஃது இந்நாட்டினதென்பதை, "நீடுவளத்ததுமேன்மழநாடெனுமந்நாடு"3 என்னும் சேக்கிழார்சுவாமிகளின்திருவாக்கான் அறிக.

இந்நாடு, கொள்ளிடத்தின்வடகரைதொட்டுச் சிலகாததூரம்வரை பரவியிருக்கின்றது. 'ஐயன்வாய்க்கால்' 'பெருவளவாய்க்கால்' பங்குனியாறு' என்னுங் காலவாய்கள் இந்நாட்டிற் பெரும்பாகங்களிற்பாய்கின்றன.

---

1 பெரியபுராணம் திருநாளைப்போவார் (1)
2 ஷை இடங்கழிநாயனார் (1)
3 ஷை ஆனாயநாயனார் (1)

திருமழபாடி அன்பிலாலந்துறை* திருமாந்துறை* திருப்பாச்சிலாச்சிராமம் என்னும் பாடல்பெற்றதலங்களும் "பண்டெழுவர்தவத்துறை4" என்னும் வைப்புத்தலமாகிய லாலகுடியும் இந்நாட்டினகத்தன.

"அங்கணகன் றம்மருங்கிலங்கணர்தம்பதிபலவுமணைந்துபோற்றிச
செங்கமலப்பொதியவிழச்சேல்பாயுமவயன்மதுவாற்சேறுமாறாப்
பொங்கொலிநீர்மழநாட்டுப்பொன்னிவடகரைமிசைப்போய்ப்புகலிவேந்தர்
நங்கள்பிரான் திருப்பாச்சிலாச்சிராமம்பணியநண்ணும்போதில்"

என்னுஞ்செய்யுள்5 திருப்பாச்சிலாச்சிராமம் இந்நாட்டினதென்பதைத் தெளிவுறுத்தும். மேற்கூறியதலங்களுள் மழபாடி என்னுந் தலத்தின் பெயர்க்காரணமும் இங்குக் கவனிக்கத்தக்கது. இன்னும், நமது ஆனாயநாயனாரின்சென்மஸ்தலமாகிய மங்கலம்* என்னுந் திருப்பதியும் இந்நாட்டினகத்ததே. இதனை,

"பொங்கரில்வண்டுபுறம்பலைசோலைகள்மேலோடும்
வெங்கதிர்தங்கவிளங்கியமேன்மழநன்னாடாம்
அங்கதுமண்ணிலருங்கலமாகவதற்கேயோர்
மங்கலமாயதுமங்கலமாகியவாழ்மூதூர்"

என்னுந் தெய்வவாக்கானும்6 அறியலாம். மணக்காலநம்பியென்னும் ஒரு வைணவ அடியாரின் ஊராகிய மணக்கால்* என்னும் பதியும் இந்நாட்டினதே.

மேற்கூறிய திருப்பாச்சிலாச்சிராமத்தில் ஒரு சிவனடியார் கொல்லிமழவரெனப் பெயர்பெற்றிருந்தமை பெரியபுராணத்தாற் றெரிகின்றது. இதனால் இந்நாட்டினார்க்கு மழவர் என்னும் பெயருண்மை தெற்றென விளங்கும். இப்பிரதேசத்தின் ஒருவகை வேளாண்மாந்தர் (கள்ளர்)க்கு மழவராயர் என்னும்பெயர் இன்றும்வழங்குகின்றது. இன்னும், ஸ்மார்த்தமறையோரில் ஒருவகையினர் (பிரகச்சரணர்) மழநாட்டார் என வழங்கப்பெறுகின்றனர்.

இவற்றால் மழநாடென்பது இவ்விடத்ததென்பதூஉம் இந்நாட்டினார்க்கே மழவரென்னும்பெயர் உரியதென்பதூஉம் பெற்றாம்.

---

* இவைகள் லால்குடிக்குச்சமீபத்திலிருக்கின்றன.

4 திருநாவுக்கரசுசுவாமிகள் அடைவுத்திருத்தாண்டகம் (11)

5 திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம் (310)

6 ஆனாயநாயனார்புராணம் (7)

தற்காலம் நமது இந்தியப்படைஞர்களிற் சீக்கியர்களும், கூர்க்கர்களும் சிறந்தவராயிருந்ததுபோல இவர்கள் அக்காலத்துப்போர்வீரர்களிற் சிறந்துவிளங்கினவராவர். இவர்க ளிவ்வாறிருந்தமையானே பண்டை நெடுமுடிவேந்தரும் குறுமுடிவேந்தரும் இவர்களைப் போர்த் துணைமைகொண்டிருந்தனர்.

" குவியறகண்ணிமழவர்மெய்ம்மறை"
" வாலூண்வல்சிமழவர்மெய்ம்மறை"

எனவரும் பதிற்றுப்பத்தால (21, 55) முறையே இமயவரம்பன்தம்பி பலயானைச்செலகெழுகுட்டுவனும், ஆடுகோட்பாட்டுச்சேரலாதனும் படைத்துணைமைகொண்டதும,

" ஒளிறிலங்குநெடுவேலமழவர்பெருமகன"
" வழுவில்வண்கைமழவர்பெரும"

எனவரும் புறப்பாட்டால (88, 90) அதிகமானெடுமானஞ்சி படைத்துணைமைகொண்டதும அறியப்பெறும.

இவர்கள் ஓரரசனகீழ்ப போர்வீரராயமைந்து போர்புரிந்தது மன்றித் தாங்களே யொரு பெருங்குழுவினராய்ச்சேர்ந்துகொண்டு போர்புரியுமவழக்கமுடையராயு மிருந்தனர். இது, "உருவக்குதிரை மழவரோட்டிய" (அகம) எனவும, "ஏனைமழவரைப்போரிற்சுருக்கி" (பதிற்றுப்பத்து) எனவும வருஞ் செய்யுட்களால அறியப்படுகின்றது.

ஒரு சேரமானுடன் அதிகமானெடுமானஞ்சி நேசமுடையனா யிருந்தானென்று புறநானூற்றாற றெரிகின்றது. சேரவரசர்களும அதிகமானும மழவர்களைப் படைவீரராய்ப்பெற்றிருந்தமை முன்னாப் பெறப்பட்டது; இதனால, இவர்களுள் மழவரைப் படைஞராகக் கொண்டிருந்த ஒருவர் மற்றொருவருக்கு இப்படையையுதவினரோ? அல்லது இம்மழவர்களே தனித்தனி யிவர்களிடத்திற் படைமை யமைந்தனரோ? என்று எண்ணவேண்டியிருக்கிறது.

"மழவர்மெய்ம்மறை" எனக்கூறப்பட்ட ஆடுகோட்பாட்டுச்சேரலாதன், "ஏனைமழவரைப்போரிற்சுருக்கி"னன் எனக் கூறப்படலால் ஒவ்வொருபெருங்கூட்டமாய்ச்சென்று அரசரோடெதிர்க்குமிவர்களிற் சிலகூட்டத்தை அவன்வென்று தன்கீழ்ப்படுத்திக்கொண்டானென்றும், கீழ்ப்படிய உடன்படாதவர்களைச் சிதறவடித்துத் துரத்தினன் எனவும தெரிகின்றது.

இனி, இவர்களது பழக்கவழக்கங்களாவன :—

"தீம்புழல்வல்சிக்கழற்கான்மழவர்" (மதுரைக்காஞ்சி)

"செவ்வூன்றோன்றாவெண்டுவைமுதிரை
வாலூண்வல்சிமழவர்" (பதிற்றுப்பத்து)

என்பவற்றால், இவர்கள் உண்ணும் உணவுக்குப் பண்டங்களையும், வீரர்க்குரிய வேறுவித உணவினையும் பெரும்பாலும் உபயோகித்து வந்தனரென்பது தெரிகின்றது; இனிப் பதிற்றுப்பத் துரையாசிரியர் "செல்வச்செருக்காற் சோறுண்பதுபெரிதன்றி ... .....(இ)வற்றை யுணவாகவுடையவீரர்" என்றெழுதுவதும் ஈண்டுணரத்தக்கது.

"பூந்தலைமழவர்" என்னும் மதுரைக்காஞ்சியானும், "குவியற்கண்ணிமழவர்"* என்னும் பதிற்றுப்பத்தானும் இவர்கள் (போர்ப்பூமாலையும், தங்கள் அடையாளமாலையுமாகிய) பூச்சூடிக்கொள்வதில் மிக்க விருப்பினரென்பதும் தெரிகின்றது.

இன்னும், "மழவர்முழவின்நோன்றலைகடிப்பப், பிடகைப்பெய்த கமழ்நறும்பூவினர்" என்னும் மதுரைக்காஞ்சியால், இவர்கள் ஒரு வகைப் போர்ப்பறையினைத் தங்களிற்கொட்டிக்கொண்டுசெல்லும் வழக்கமுடையரென்பதூஉம், "உருவக்குதிரைமழவர்" (அகம்) "மைபடுபெருந்தோண்மழவரோட்டி, யிடைப்புலத்தொழிந்தவேந்து கோட்டியானை" (மதுரைக்காஞ்சி 607.) என்பவற்றால் இவர்கள் குதிரைப்படைஞராயும், யானைவீரராயுமிருந்தனரென்பதூஉம் முறையேபெறப்படும்.

பின்வரும் புறப்பாட்டுக்கள் இவர்கள் வீரத்தை விளக்குகின்றன:— அவை,

"யாவிராயினுங்கூழைதார்க்கொண்
டியாம்பொருதுமென்றல்லோம்புமினோங்குதிறல்
ஒளிறிலங்குநெடுவேன்மழவர்பெருமகன்
கதிர்விடுநண்பூணம்பகட்டுமார்பின்
முழவுத்தோளென்னையைக்காணாவூங்கே" (88)

---

* 'வெட்சிமுதல் வாகையீறாகியபூக்களெல்லாம் குவிதற்குக் காரணமாகிய கண்ணி' என்பது அதன் பழையவுரை.

(மழவர் தலைவனை என்னை (அதிகமானை)க் காணுதவிடத்தில், யாவராயினும் யாம் அவனோடு பொருவோம் என்று சொல்லுவதைப் பாதுகாவுங்கள் என்பது இதன் கருத்து.)

" ... ... ..வழுவில்வண் கைமழவர்பெரும
இருநிலமண்கொண்டு சிலைக்கும்
பொருநருமுளரோநீகளம்புகினே" (90)

(மழவரையுடையாய் நீ களம்புகின் வேறு பொருநரும் அங்கு உளராவரோ என்பது இதன் கருத்து) என்பனவாம்.

இன்னும், வேளிர் தலைவனை ஆவியென்பானோடும், சேரமானோடும், பாண்டியனோடும் எதிர்த்துப்பொருதவீரர்கள் இவர்களென்பது மேற்கூறியவற்றாலவிளங்குகின்றமையானும் அவ்வரசர்களைப்புகழ்வந்த புலவர்கள் இவ்வீரர்களைவென்ற சிறப்பினைப் பாராட்டிக்கூறுகின்றமையானும் இவர்களவீரம் நன்கு அறியக் கிடக்கின்றது.

இவர்கள் இவ்வாறு சிறந்திருந்தகாலம் ஸ்ரீமத் மு. இராகவையங்காரவர்களின் தீர்மானப்படி*பாரதகின் இரண்டாயிரவருடங்கட்கு முற்பட்டதென்னலாம்.

இதுகாறுங்கூறியவற்றாற் கொள்ளிடத்தின் வடகரைக்கண்ணதாகிய மழநாட்டினரே மழவரென்பதூஉம், இவர்கள் தமிழகப்போர் வீரர்களுள் மிகச்சிறந்தவரென்பதூஉம், அவர்களின் பழக்கவழக்க முதலியன இன்னவென்பதூஉம்,மழவரென்னுஞ்சொல தற்காலத்தமிழ் மக்கட்குப் புதுவதாய்க்கேடகப்படினும், மழவராயர் என்னும்பெயருடையோர் அதன் தொன்மையை ஞாபகப்படுத்திக்கொண்டிருக்கின்றனரென்பதூஉம் பெறும்.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் குறித்தகுறிப்பையடியாகக்கொண்டும், இங்கு அகதிராசனராகவீற்றிருக்கும் நமது பேராசிரியர் (மஹாமஹோபாத்தியாயர்) உ. வே சாமிநாதையரவர்கள்செய்துவைத்த பேருதவியானும் எழுந்த இவ்வியாசம் இத்தோடுமுடிகின்றது.

அ. கந்தசாமிப்பிள்ளை.

* வேளிர்வரலாறு 19-ம்பக்கம்.

உ

## ஒருதாய் தன்குழந்தையைப்பற்றிக்கூறியது.



("சிலட்ரன் மகஜீன்" என்னும "ஆங்கிலபபிள்ளைகள்பததிரிகை"யின் 1914-ம் வருஷதது ஜனவரிமாதசசஞ்சிகையின் 83-வதுபககததிற் பிரசுரமாயிருக்கிற ஒருபாடலின்கருததைததழுவியெழுதியது.)

"துணிவுடைச சிறுநர ! சொலலுதி இன்னே,
உன்றற் பெறலாம ஊதியம என்னே ?
என்பயன் நின்ற லெனப தறியேன
சொல்ல வலலையேல், சொலலுதி வலலே
தாமரை யிதழெனத தயங்குகை விரலாய் !
திங்களை வளைந்து திகழ்கரு முகிலபோற்
சுநதர வதனம சூழ்ந்து தொஙகி
இருணடு சுருண்டெழில எறிககுங குஞ்சியாய !
ஒருநாள போல உறுபல நாளுமநீ
செய்சிறு குறுமபுக கெயதள விலையால
யாவது நின்னல ஆவ தென்ன
உனறற் சொலல ஒலலு மெனனில்,
நன்குசிந் திதது நவிலுதி வலலே"
என்றனன். என்றலும் இருசிற றடிகள
குறுகுறு நடந்தெனைக் குறுகியென் மடிமேல
உறறன மிகுகளி ஒளிரெழில் இளவிழி
கூாந்தெனை நோககின. குறுநகை அரும்பின.
இருசிறு செஙகைகள் எனனிரு கதுப்பினை
இறுகுறப் பற்றியீாத தினிதி னணைத்தன.
"உனது வினவுக குறுவிடை கேட்டி
அனனய ! யானனைக கனபு செயதலே
எனனல் ஆமபயன்" எனனப்
பவளவாய பகாநதெதென் பாககியந தானே

வெ. ப. சு.

# செல்வ நூல்.

# ECONOMY.

"செந்தமிழ்" (தொகுதி-௯ பகுதி ௧-ல்) ௩௫-ம் பக்கத்தொடர்ச்சி.

## அத்யாயம்—21.

### கோடுக்கல்வாங்கல்.

### Money lending.

125. பணமுள்ளவன், தேவையுள்ளவனுக்குக் கடன்கொடுத்துக் குறிப்பிட்டவட்டி அல்லது லாபத்துடன் பிறகு வாங்கிக்கொள்ளுவதே **கோடுக்கல்வாங்கல்** அல்லது லேவாதேவியெனப்படும். இது செல்வ நூலில் அறியவேண்டிய முக்ய அம்சங்களில் ஒன்றாகும். ஒருவனுக்கு ஏராளமான பணமிருக்கலாம். அதை வியாபாரம், தொழில் முதலானவைசெய்து விருத்திசெய்யப் போதுமான அறிவாவது, ஆசையாவது இராது. அவனிடத்தில் அம் மிருந்தபணம், விருத்தியடைய மார்க்கமில்லாமற் கட்டிக்கிடக்கும். இன்னொருவன் சீமைக்குப்போய் நெசவு சாயங்காய்ச்சல்முதலானதொழில்களில் ஏதாவது கற்றுவரலாம். அவன் கற்றவித்தையைப்ரயோகித்துத் தன்க்ஷேமத்தையும் தேசக்ஷேமத்தையும்விருத்திசெய்யஹேதுவான தொழிற்சாலைகள், வாத்திகங்கள்முதலானவை ஆரம்பிக்கப் போதுமானமுதலிராது. அவனிடத்தில் அறிவும் ஆசையுமிருந்தும் பயனில்லை. ஆகையால், பணமுள்ளவன் மற்றவனுக்குக் கடன்கொடுத்தால் அப்பணத்துக்கு வட்டியுங்கிடைப்பதோடு அறிவுள்ளவனும் அவனினத்தாரும் கடைசியாய்த் தேசமும் க்ஷேமமடையலாம். இதுதான் லேவாதேவியெனப்படும்.

126. **நாணயம். (Credit)** லேவாதேவி சரியானபடி நடப்பதற்கு நாணயம் என்பது முக்யமான அம்சம். இராமன் சேஷனுக்கு 1000 ரூபாய் கடன்கொடுக்கிறான் அப்பணத்தைக் குறிப்பிட்டகாலத்திற் சேஷன் திருப்பக்கொடுக்கச் சக்தியுள்ளவனாகவும் கொடுக்க மனமுள்ளவனாகவும் இருக்கவேண்டும். இவ்விருதன்மைகளும் சேஷனிடமிருந்தாற் சேஷனை நாணயமுள்ளவன் என்று சொல்லுவார்கள். இவ்விரண்டில் ஒருதன்மைகுறைந்தாலும் சேஷனிடம் நாணயமில்லையென்பதோடு, அவனைநம்பி யாரும் கடனுங்கொடுக்கமாட்டார்கள்.

127. கடன். (Loan) திரும்பக்கொடுப்பதென்ற ஒப்பந்தத்தின் பேரிற் பணமுள்ளவன், தேவையானவனுக்கு பணவுதவிசெய்வதே கடன் எனப்படும். இதிற் கடன்கொடுப்பவனைக் கடன்காரன்* (Creditor) என்றும், கடன்வாங்குபவனைக் கடனாளி (Debitor) என்றும் சொல்லப்படும்.

கடன்கள் வெண்கடன் (Simple Loan) என்றும் பொறுப்புக் கடன் என்றும் இருவகைப்படும்.

128. வெண்கடன். யாதொருசொத்தும் ஆதாரமில்லாமற் கடனாளியின் நபரையும், நாணயத்தையுமாத்திரங்குறித்து வாங்குங்கடன் வெண்கடன் எனப்படும். இதனால், கடன்காரன் கடனாளியின்சொத்தை ஜப்திபண்ணமுடியாதென்பதல்ல. அவ்வாறு ஜப்திசெய்யுமுன், அந்தச் சொத்தைப் பராதீனஞ்செய்துவிட்டால், அந்தச்சொத்து அந்தவெண் கடனுக்குக் கட்டுப்படமாட்டாது என்பதுதான் இதன்கருத்து.

வெண்கடன் கைக்கடனாகவும் (Oral loan) இருக்கலாம். பத்திர மூலமாகவுமிருக்கலாம். பத்திரங்கள் வெண்ணிலை (unregistered)யாக இருக்கலாம். ரிஜிஸ்தர்செய்யவேண்டுமென்பது கட்டாயமல்ல.

129. பொறுப்புக்கடன். சொத்தைப்பொறுத்து வாங்குங்கடனே பொறுப்புக்கடன் எனப்படும். அது முறையே,

1. அடகு
2. அடமானம் அல்லது ஈடு
3. ஒத்தி

என்று முக்யமாய் மூன்றுவகைப்படும்.

130. அடகு. (Pledge) ஜங்கமசொத்தைப்பொறுத்து வாங்கும் கடன் அடகுகடன் எனப்படும். இதில் விசேஷமாய் நகை, பாத்ரம், சரக்குகள்முதலான ஜங்கமசொத்துக்களைக் கடன்காரனவசத்திலேயே கொடுத்துவிடுவதுவழக்கம். ஆனால், வாத்தகச்சரக்குகள், இலை, கரி, காய்முதலான அழிசரக்குப்பொருள்களை, கடன்காரரின்மேற்பார்வையிற் கடனாளியிடம்வைப்பதுமுண்டு. நெல்வியாபாரி தன்கிட்டங்கியிலுள்ள 10000 மூட்டைநெல்லை ஜாமீன்கொடுத்து 10000 ரூபா கடன்

*கடன்காரன் என்னும்பதம் சிலசமயங்களில் வழக்கில், கடன்வாங்குபவனுக்கு ப்ரயோகிக்கப்பட்டபோதிலும், இதில் மேற்கூறியவாறே உபயோகிக்கப்படும்.

வாங்கினால், அந்தக்கிடங்கித் திறவுகோலைக் கடன்கொடுக்கும் பாங்கிக்காரர்வசத்திற்கொடுத்துவிடுவதுண்டு. நெலவாங்குபவர்வரும்போது பாங்கிக்காரர் நேரேவந்துதிறந்துவிட்டு, நெல் அளந்து வசூலாகும் தொகையைத் தங்கள்கடனுக்குச் செலவைத்துக்கொள்வார்கள்.

131. ஜாமீன். (Charge) இது ஸ்தாவரசொத்தால் ஏற்படுத்தும் ஒருவித பந்தகம்.

132. ஈடு அல்லது அடமானம். (Hypothecation) ஸ்தாவரசொத்தைப் பொறுத்துவாங்கும் கடனுக்கு ஈடு அல்லது அடமானம் என்று பெயர். இது ரிஜிஸ்தர்பத்திரமூலமாய்த்தான் செய்யமுடியும். ஆனால், சொத்து, கடன்வாங்கினவன்வசத்திலதான் இருக்கும். குறிப்பிட்டகாலத்தில் தொகைசெல்லாகாவிட்டால் ஈடுதார (Hypothecator) வியாஜ்யம்செய்து ஈடுசொத்தைக் கோர்ட்டு ஏலத்தில் விற்பனைசெய்து தொகையைவசூலிக்கலாம். ஈட்டுக்குப்பிறகுசெய்யப்படும் எவ்விதபராதீனமும், ஈட்டுக்காரர் தொகைக்குக் கட்டுப்பட்டுத்தான் தீரும்.

133. ஒத்தி. (Mortgage in possession) இதுவும் ஒருவித ஈடுமாதிரிதான். ஆனால் இதில், சொத்து ஒத்திதார்வசம் விட்டுவிடப்படும். 100-ரூபாய்க்குமேற்பட்டதொகைக்கு ரிஜிஸ்தர்ப்பத்திரமூலமாய்த்தான் ஒத்திசெய்யமுடியும்; கடன்செல்லாகாதவிஷயத்தில், ஒத்திதார் கோர்ட்டுமூலமாய்ச் சொத்தைத் தனதாக்கிக்கொள்ளலாம், அல்லது கோர்ட்டு ஏலமூலமாய்விற்பனைசெய்து தொகையை வசூலித்துக்கொள்ளலாம்.

134. நிதிகளும் லேவாதேவிக்கடைகளும். (Banks and Money-lending firms) மேற்கூறியவாறு கொடுக்கல்வாங்கல்செய்வதற்காகவே, பாங்க் அல்லது நிதிகளும், லேவாதேவிக்கடைகளும் ஏற்பட்டிருக்கின்றன. மற்றவியாபாரத்தொழில்களைப்போலவே கொடுக்கல் வாங்கல் என்பது இவற்றின்தொழில். பணமுள்ளவரிடமிருந்து சொற்ப வட்டிக்குக் கடன்வாங்குவதும் பணம் தேவையானவருக்கு அதிகவட்டிக்குக் கடன்கொடுப்பதும் இவற்றின்முறை. அதனால் ஏற்படும் வட்டி வித்தியாசமே இவைகளுக்கு ஆதாயம். இக்கடைகளும் நிதிகளும், தனியாகவும், பலர்சேர்ந்து கூட்டாகவும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளிற்செய்யும் கொடுக்கல்வாங்கல்களின் தன்மைக்கும் அளவுக்கும் தக்கவாறு நாணயம் ஏற்படுகின்றது. அதிகவட்டிக்கு ஆசைப்பட்டுக்

கண்டபடி பணங்களைக் கடன்கொடுத்தால் அப் பணங்கள் வரமார்க்க மில்லாமல இக்கடைகள் முறிந்துபோகின்றன. இதனால், 'பாங்குக ளிற்பணமபோட்டுவிட்டோம. இனிப பயமகிடையாது, வட்டியை வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டிருக்கலாம' என்று இருக்கும பலபேர் திடீரென்று பொருளிழந்து பரிதபிக்கின்றார்கள். நமது ராஜதானியிற் சிலவருஷஙகளுககுமுன் திடீரென்று திவாலான 'அர்பபதநட்' என்னும் பாங்கின்வரலாறு அநேக கிரையாகித தவித்தவா எண்ணிறநதோரலலவா?

## ஐக்யலேவாதேவிச்சங்கங்கள.

## Co-operation credit Societies.

இவைகளைப்பற்றி முன் 80-வது ப்ரகரணத்தில விரிக்கப்பட்டிருக்கின்றது.

135. **உண்டியல்கடைகள்.** மதுரையிலுள்ளசேஷன் கலகத்தா ஸேன்கமபெனிககு 10000-ரூபாய் அனுப்பவேண்டியதாய்வைததுக் கொள்வோம. மணியார்டர்மூலமாய் அனுபபுவதானால ரூபா 100 மணியார்டர் சார்ஜ ஆகும. மதுரையில ரா. ம. என்ற உண்டியல் கடைககுச சென்றால, அவர்கள ஷை தொகையைபபெற்றுக்கொண்டு, சேஷன் அலலது ஷை உததிரவுககு ரூபாய் 10000 வேண்டுமபோது கொடுக்கவும்' என்று தனக்குததெரிந்த கலகததா 'சி. த' கடைக்கு உண்டியல்கொடுதது அதற்கு 100-ரூபாய்ககு 2-அணாவீதம் 'வட்டம' அல்லது கமிஷன் எடுததுககொள்வாரகள். சேஷன இநத உண்டியல சிட்டில், ஸேன்கமபெனிக்காவது ஷை உததரவுக்காவது இநதத் தொகையைச செலுத்தவும என்று எழுதி, அதை ஷை கமபெனிக்குத தபால்மூலமாய் அனுப்புகிறான். ஸேன்கமபெனியார் இதை சி. த. உண்டியல்கடையிற்காட்டிப் பணமபெற்றுக்கொள்ளுவார்கள்.

இதனால, சேஷனுக்கு 100-ரூபாய் மணியார்டர்கட்டணத்துக் குப்பதிலாய் $12\frac{1}{2}$ ரூபாய் உண்டியலவட்டததோடு காரியமமுடிந்து விடுகின்றது. உண்டியலகடைககு வட்டம லாபம.

ஆனால், இம்முறை நடபடிக்கைகள் ஷைகடைகளின்நாணயத் தைப்பொறுததே நடக்கவேண்டியதாயிருக்கின்றன. மற்ற விவரம் உண்டியல் என்னும் பரகரணத்தில அறிநதுகொள்ளலாம.

---

R. S. நாராயணஸ்வாமி ஐயர், B.A., B.L.

௨

# பண்டைத்தமிழரும் மரக்கலப்பயிற்சியும்.*

யான் இங்கு எடுத்துரைக்கப்புகுந்தவிஷயம் சங்கத்தமிழ் நூலாராய்ச்சியுள்ள நுண்மதியாளர்க்கும் சரித்ரப்புலமையிற் கைவந்த பண்டிதர்களுக்கும் சிறிதும் புதிதாகத்தோற்றாது. ஆயினும், செந்தமிழபிமானஞ்செறிந்த நம்மவர்களிற் பலர் அவகாசக்குறைவாலும், அப்யாஸக்குறைவாலும் பண்டைத்தமிழ்நூல்களின்சிறப்பினையும் தமிழர்களின் நாகரிகத்தினையும் உள்ளவாறுணராதொழிகின்றனரன்றே; அவர்களுக்கு இச் சிறு வியாஸம் சிறிதுபயன்படுமென்று இதனை இங்குப் படிக்கலானேன். பெருந்தகையாளர்கள் இதன்கட் காணப்படும் பிழைகளைப் பொறுத்தருள்வாராக.

ஒருதேசத்தார் வேறுள அயல்நாட்டாரோடு பல்லாற்றானும் நெருங்கிப்பழகுவதனால் அவர்நாட்டுக்கு மிக்கநன்மையேவிளையுமென்பது சரித்ரவுணர்ச்சியுடையார்யாரும் முதன்முதல் ஒப்புக்கொள்ளும்விஷயமாகும். ஒருமனிதன் மற்றமனிதர்களோடுறவுகலவாது தனித்துநிற்பானானால், அவன் குறுகியமனஅமைப்புடையவனாய் உலகியலையுணராதொழிதல்போல, ஒருநாட்டிலுள்ளஜனங்கள் பிறநாடு செல்லுதலின்கண் ஊக்கமில்லாதவராயின் அந்நாடு சிறிதும்வளர்ச்சிபெறாது வரவரத் தளர்ச்சியுற்றழியும். இவ்வுண்மையை ஜீவகசிந்தாமணியுடையார்,

> "ஊற்றுநீர்க் கூவலுள் உறையும் மீனனார்
> வேற்றுநாட் டதன்சுவை விடுத்தல் மேயினார்"

என்றுகூறி உவமைமுகத்தால்விளக்கியுள்ளார்.

இஃது இவ்வாறாக, பற்பலதுறைகளிலும் நாகரிகம்மிக்குவிளங்கிய நம்முன்னோர்களாகிய பண்டைத்தமிழ்மக்கள் பிறநாட்டாரோடுபழகுவதிற் கலங்கொண்டு கடல்கடந்துவந்ததன்மையினைப்பற்றிச் சிறிது

* இது, மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் 13-ஆம் வருஷக்கூட்டத்திற் படிக்கப்பெற்றது.

இங்குத் தொகுத்துக்கூறுவதே யான் இன்று எடுத்துக்கொண்ட விஷயமாகும.

ஒருநாட்டின் பண்டைக்காலத்தியவழக்கம் ஒன்றைப்பற்றி ஆராய்ந்துணாதறகுப் பிறசாதனங்களில்லாதவழி, அந்தத்தேசத்தில் வழங்கும் பாஷைகளிலுள்ள நூலகள் சிறந்தகருவிகளாகும. அன்றியும், அந்தப்பாஷையில் பாஸ்தாபவிஷயஸம்பந்தமானகருத்துக்களை வெளியிடற்குள்ளசொறகளின்தன்மையும மிகுதியும தக்ககருவிகளாகும. சீனு, திபேதது இவ்விடஙகளிலுள்ள உள்நாடுகளில் ஸமுத்ரததிறகு ஸொநதபாஷையிற பேரே கிடையாதாம இவ்விடங்களிலுள்ளார் தமக்கு நெடுநதூரததிலிருககும ஸமுதரம எபபடிப்பட்டதெனபதை யுணராாபோலும நம தமிழ்மொழியிலோ, ஸமுத்ரத்துக்கு ஆழி, கடல், பரவை, புணரி, ஆர்கலி, முந்நீர் எனப பல செந்தமிழ்ச்சொறகள் காரணபபெயாகளாய்க் காணப்படுகின்றன இப்பெயர்களாலேயே தண்டமிழ்ககும தண்கடறகும் தக்கஸமபந்தமுண்டென்பது எளிதிலுணரபபடும.

இனிக் கப்பலுககுத் தமிழிலுள்ளசொறகளைச் சோதிபபோம. அவை கலம், மரக்கலம, நாவாய், வங்கம், மிதவை, கப்பல் முதலியன. இவற்றில் வங்கத்தை இடவாகுபெயரென்றும், (வங்கதேசத்திலிருந்து கப்பலுக்கானமைபற்றி) நாவாயை வடமொழித்திரிபென்றும் கொண்டாலுங்கூட மற்றைச்சொற்கள் தனித்தமிழ்மொழிகளேயன்றோ? இச்சொறகள் தமிழ்மொழியிலிருத்தலொன்றே தமிழர்கள் கலமிசைச் சென்றுவந்ததறகுப போதியகுறிப்பாகும. இச்சொறகளும் இவற்றோடியைபுள்ளகருத்துக்களும தமிழ்நூல்களிற பல இடங்களில் மிக அழகாக மலிந்துகாணப்படுகின்றன. அவற்றிற சிலவருமாறு:—

“தாரகை சுடாகள் மேக மென்றிவை தவிரத் தாழ்ந்து
பாரிடை யழுந்து கின்ற படர்நெடும் பனிமாக் குன்றம்
கூருகொக குவவுத தோளான் கூம்பெனக் குமிழி பொங்க
ஆர்கலி யழுவத் தாழுங் கலமென லாயிற் றன்றே” கம்பராமாயணம்

“மேக்குறச் செலவோன் பாய விலங்கிசீ ரிலங்கை வெற்பு
நூக்குறத் தங்கு மிகும் தள்ளுற நுடங்கு நோன்மை
போக்கினுக் கிடையூ றுகப் புயலொடு பொதிந்த வாடை
தாக்குறத் தளர்ந்து சிந்துங் கலமெனத் தக்க தன்றே”
—கம்பராமாயணம்.

"வெங்கட்டின் களிறடர்த்தாய்! வித்துவக்கோட் டம்மானே
எங்குப்போய் உய்கேன்உன் இணையடியே யடையலல்லால்?
எங்கும்போய்க் கரைகாணா தெறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே"

—பெருமாள்திருமொழி.

"மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லோடும் போது
மதனெனும் பாறை தாக்கி மறியும்போ தறிய வொண்ணா
துனைஉனும் உணர்வை நல்காய் ஒற்றியூ ருடைய கோவே"-தேவாரம்.

"போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் புரள நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்று மென்போல ஆர்கலியே! மாதை
இரவகற்றி வந்தாய்கொல் இன்று"—நளவெண்பா.

இவ்வாறு பாடல்கள்பலவற்றுள் கடல் கலம் இவைஸம்பந்தப் பட்டவிஷயங்கள் வெகுஅழகாகவும், ஸுலபமாகவும் அமையப்பெறுதற்கு இயல்பாகவே மிக்க இயைபுடையது நம்முடைய அருந்தமிழ் மொழி. இங்ஙனம் தமிழ்மொழியின்கண்ணுள்ளசொற்களும் அச்சொற்களைத் தொடர்களிற்பெய்துவழங்குங்கால் அமையும் ஆற்றலும் அழகும் தமிழ்நாட்டாருக்கு மரக்கலத்தொழிலில் நல்லபழக்கமிருந்ததென்பதைத் தெள்ளிதில் தெரிவிக்கும்.

இனித் தமிழ்நூல்களிற் காணப்பெறும் சில குறிப்புக்களால் இக்கப்பற்றொழிலைப்பற்றிய பல அரியவிஷயங்களைத் தெரியலாகும். அவற்றுட் சில ஈண்டுத் தொகுத்துக்கூறப்படும்.

தமிழ்நாட்டில், கப்பற்றொழிலுக்கு இன்றியமையாதனவாகும் துறைமுக இடங்கள் பல இருந்தன. இவற்றிற்குப் பட்டினங்கள் என்றுபெயர். புறநானூறு, சிலப்பதிகாரம், பத்துப்பாட்டுமுதலிய பண்டைநூல்களிலிருந்து, தமிழகத்தில் முசிறி, புகார், தொண்டி, கொற்கை இந்நகர்களெல்லாம் வ்யாபாரத்தில் மிகச் சிறந்ததுறைமுகங்களாகவிளங்கின என்பது உணரப்படும். இவற்றுள், முசிறி மேற்குக்கடற்கரையிற் சிறந்ததுறைமுகமாயிருந்தது,

"         ..  ..   .                    . .         சேரலர்
சுள்ளியம் பேர்யாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி"—அகநானூறு.

எனனும் அகப்பாட்டால் அறியலாகும். மேலும் இவ்வூர்,

"கலந்தந்த பொற்பரிசம்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து,*
மலைத்தாரமும் கடற்றாரமும்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங்கள்ளின் பொலந்தார்க்குட்டுவன்
முழங்குகடன்முழவின் முசிறியன்ன"—புறநானூறு.

எனவரும் புறப்பாட்டினும்,

"போரில்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார்† கோமான்"

எனத் தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியலில் 8-ஆம் சூத்திரவுரை மேற்கோட்பாட்டினும் குறிக்கப்பெற்றிருக்கிறது.

புகார் என்பது, காவிரிப்பூம்பட்டினம் என்னும் மறுபெயருடையது. சோணாட்டிற்கு ராஜதானியாய் இலங்கிநின்றது. சிலப்பதிகாரத்தின் முதற்பகுதிக்குக் கதைநிகழ்விடம் இதுவே. இதன் துறைமுகச்சிறப்பைச் சிலப்பதிகாரத்திலும், பட்டினப்பாலையினும் பார்க்கக்காணலாம்.

தொண்டியென்பது இப்போது சிவகங்கையைச்சார்ந்த ஒரு சிறு துறைமுகமாக இருப்பினும், முற்காலத்தில் வ்யாபாரச்சிறப்பு விசேஷமாக வாய்க்கப்பெற்றிருந்தது. இதனையன்றிச் சேரலர்தொண்டியென மேற்குக்கடற்கரையினும் ஒரு தொண்டியிருந்தது. அதுவே,

* சேர்க்கும் என்பது 'சேர்க்குந்து' எனச் செய்யுளில் விகாரப்பட்டது.

† இவ்வூர்ப்பெயர் முச்சிறி, முசிறி, முசுறி என மூவகையாகவும் காணப்படு

"நிலவுமணல் வியன்கானல்
தெண்கழிமிசைச் சுடர்ப்பூவிற்
றண்டொண்டியோ ரடுபொருந!"

என்னுமிடத்தும்,

"கண்ணார் றுமமே கானலந் தொண்டி"

என்னுமிடத்தும் புறநானூற்றிற் குறித்திருப்பதாகக் கருதப்படுகிறது.

கொற்கையும் பாண்டிநாட்டிற்குச் சிலகாலம் தலைநகராயிருந்து முத்துவியாபாரத்தில் முதன்மைபெற்றிருந்தது. அது இப்போதும் முத்துக்குளிக்கும் துறைமுகங்களுள் ஒன்றாக இருக்கிறது. இந்நான்கும் தமிழ்நாட்டில் மிக்க பிரஸித்திபெற்ற துறைமுகங்களாம். இவையன்றி மிகப்பலவாகிய சிறு துறைமுகங்களும் தமிழ்நாட்டில் இருந்திருக்கவேண்டுமென்பது தமிழ்ச்செய்யுட்களில் அரசர்களுக்கு அடைமொழிகூறி அவர்களைவிளிக்குமிடங்களில்,

"  ......... .... ..   .. . .. .. ..நாவாய்
களிறுபோற் றூங்குங் கடற்சேர்ப்ப!" என்றும்,

"நற்றளிர்ப் புன்னை மலருங் கடற்சேர்ப்ப!" என்றும்,

"கள்ளுயிர்க்கும் நெய்தற கனைகடற் றண்சேர்ப்ப!" என்றும்,

"கண்டல் திரையலைக்கும கானலந் தண்சேர்ப்ப!" என்றும்,

" ..    ........... .. . ..   ......போதெலாம்
மாதாவண் டார்க்கும் மலிகடல தண்சேர்ப்ப!" என்றும்,

அவர்களுடைய கடற்கரைச் சிறப்பைத் தமிழ்ப்புலவர்கள் பலபடப் பாராட்டிப்போதலால் உணரலாகும்.

இத்தகைய துறைமுகப்பட்டினங்கள் இருக்குமிடங்களிற் பண்டைத்தமிழர்கள் கலங்கரைவிளக்கம் (Light House) சுங்கச்சாலை (Custom House) முதலியன ஏற்படுத்தியிருந்தனர். கலங்கரைவிளக்கம் என்னும் தொடர்மொழி சிலப்பதிகாரத்தில் 'இலங்குநீர் வரைப்பிற் கலங்கரைவிளக்கமும்' என்னுமிடத்தில் வழங்கப்பட்டுள்ளது. கலங்கரைவிளக்கம் என்பதற்கு ஆசிரியர் அடியார்க்குநல்லார் "பாடைவேறுபட்டதேயத்து நிலையறியாதோடுங்கலங்களை அழைத்

தற்கிட்டவிளக்கு" என்று விரித்து உரைகூறியிருக்கிறார். கலங்கரை விளக்கம் என்னும் இவ்வரிய தொடர்மொழியின்வழக்கே, தமிழர்கள் தங் கப்பல்களையும் பிறகப்பல்களையும் ஆபத்தினின்றுகாத்தற்கு முன்ஜாக்கிரதையாக இருந்தனர் என்பதைத தெளிவுறுத்தும். மேலும் துறைமுகப்பட்டினங்களிற் கப்பல்கள் தம்மீது கொடிகட்டிப் பறக்குந்தன்மையொடுவந்து தங்குவதையும,அவற்றிலிருந்து சாமான்கள் மூடைமூடையாக ஒழுங்காக இறக்கி அடுக்கபபடுவதையும், அவற்றிற்கு அரசருடைய முததிரையிடுதலையும், சுங்கம்வாங்குதலையும், வியாபாரச்சரக்குகளையும விரிததுக்கூறியிருப்பதைக காவிரிப்பூமபட்டினவருணனையாகப பட்டினபபாலையில்,

"நீரினின்று நிலததேறவும்
நிலததினினறு நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபணடம
வரமபறியாமை வநதீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினேன்
புலிபொறிததுப் புறம்போகி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடை" எனவும,

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும
காலின் வநத கருங்கறி மூடையும்
வடமலைப் பிறநத மணியும பொனனும
குடமலைப் பிறநத ஆரமும் அகிலும
தெனகடல் முததும் குணகடல துகிரும்
கஙகை வாரியும் காவிரிப் பயனும்
ஈழததுணவும் காழகத் தாக்கமும
அரியவும பெரியவும நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகில" எனவும,

படிக்குந்தோறும் படிக்குந்தோறும் என்னே பணடைததமிழர்தம் வாணிபமுறைசசிறபபு எனப படிப்பவா எண்ணியெண்ணி வியபபுறுவார் என்பதிற சிறிதும் ஐயமில்லை.

தமிழ்நாட்டார் நெடுங்காலமாகக் கப்பல்வ்யாபாரத்திற்கைவந்தவர் என்பதுாமயில், அரிசி என்னும சொறகட்கு முறையே ஹிப்கு

பாஷையிலும், இங்கிலீஷ்பாஷையிலும் அமைந்துள்ள துகி(தோகை) ரைஸ் (அரிசி) என்னும் சொற்களாலும், பிறநாட்டுப் புராதனநாண யங்கள் தமிழ்நாட்டிற் பல இடங்களிற் புதைந்துகிடக்கக்காண்பதாலும் எளிதில் அறியப்படும்.

மற்றும் தமிழில் அகப்பொருளிலக்கணத்தில், தலைவன் தலைவி யைப்பிரிதற்குக் காரணஞ்சொல்லுமிடத்திற் பொருளீட்டலைத் தக்க காரணமாக இலக்கணக்காரர்கள் வைத்திருப்பதுமன்றி, அங்ஙனம் பொருளீட்டற்குக் கலமிசைச்சேர்ந்து கடல்கடத்தலையும் அவ்விலக் கணக்காரர்கள் எடுத்துச்சுட்டியுள்ளார்கள். இதனால் வாணிபத் தொழிலில் ஊதியம் உறுதற்பொருட்டுத் தமிழ்மக்கள் 'திரைகட லோடியுந்திரவியந்தேடு' என்னும், தமிழ்மூதாட்டியாகிய ஒளவையார் தமது செவ்வியன்மொழியினுக்கேற்பவே கலங்கொண்டு கடல்கடந்து வந்தனர் என்பது நன்குதுணியப்படும். எனினும்,

"முந்நீர் வழக்க மகடூஉவோ டில்லை"—தொல்காப்பியம்.
"குலமட மாதரொடு கலமிசைச் சேறலும்
பாசறைச் சேறலும் பழுதென மொழிப"—நம்பியகப்பொருள்.

என்று இலக்கணநூல்கள் இயம்புதலால், தமிழர்கள் தம் மனைவிமக்க ளோடு பிறவூர்களுக்குக் கலமிசைச்செலலும் வழக்கமுடையவரல்ல ரென்பதும்,வ்யாபாரம் வ்ருத்தியுறறவழியும் பிறநாட்டிலே தம்மனைவி மக்களோடுதங்கி அங்கேயே தங்கள் கிளைக்குடிகளோடு வமசபரம் பரையாய்ப் பெரும்பாலும் வசித்துவந்தவரல்லரென்பதும் அறிய லாகும்.

இதுகாறும் தமிழ்மக்கள் கப்பல்தொழிலால் வாணிபநலம் சிறந் திருந்தசெய்தி குறிக்கப்பெற்றது. இனித் தமிழர்கள் கலங்கொண்டு கடல்கடந்து பிறநாடுவென்றவிஷயத்தினைப்பற்றிச் சிறிது விரித்துப் பேசுவோம்.

ஒருநாட்டரசனுக்கு சேனைபலம் சிறக்கவேண்டுமெனில் அவ னிடம் நிலப்படை நீர்ப்படை இரண்டும் இருத்தல்வேண்டும். நீர்ப் படைவலிகொண்டன்றோ ஜபபான்தேசம் தன்னினும் பன்மடங்கு அளவிற்பெரியதாகிய ருஷ்யாதேசத்தின்மேல் இலகுவாகவெற்றி பூண்டது? நீர்ப்படைவலியாற்றானே கி. பி. 17-ஆம் நூற்றுண்டி

விருந்து ஆங்கிலத்துரைத்தனமும் இணையில்லாதவளர்ச்சியுறுவ தாயிற்று. இவற்றைநோக்கின் ஒருநாட்டின்பெருமைக்கு நீர்ப் படை இன்றியமையாச் சாதனமென்பது எளிதினுணரலாகும்.

இதுநிறக. இலங்கைத்தீவின் பண்டைச்சரித்திரத்தை ஆராய்ந் தால் அது சிலநூற்றாண்டுகளிற சோழ அரசர்களின் ஆட்சிக்குட் பட்டிருந்ததென்பது தெரியவரும். சோழ அரசனாகிய முதற்பராந் தகன் (கி. பி. 907—947) பாண்டியநாட்டையும் இலங்கையையும் கைப்பற்றிககொண்டானென்பது, அவனுக்கு "மதிரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரிவன்மன்" எனறு சாசனங்களில்வழங்கும் பேரால் அறியலாகும். இராமனைபபோலவே இலங்கையைக் கைப் பற்றியதனால் இவனுககு சங்கிராமராகவன் என்னும காரணபபெயரு முண்டு. முதல்ராஜராஜனும் (கி. பி. 985—1012) நீர்பபடைவெற்றி யால் நிரம்பக் கீர்த்தியடைந்தான். இதனைச் சிலாசாசன ஆராய்ச்சி யிற் சிறப்புற்ற ஸ்ரீமான்-து. அ. கோபிநாதராவ எம. ஏ. அவர்கள் எழுதியுள்ள சோழவம்சசரித்திரம் என்னும் நூலில் அனுபந்தமாகச சேர்க்கப்பட்டுள்ள கீழ்வரும,

"முரட்டொழிற் சிங்களர் ஈழமண்டலமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீரா யிரமும்
திண்டிறல வென்றித தண்டால் கொணட
உடையார் ஸ்ரீ ராஜ ராஜதேவர் "

என்னும் மெய்க்கீர்த்தியிற காணலாம்.

மேலும், இராஜேந்திரசோழனென்பான் (கி. பி. 1012—1032) இலங்கையையேயன்றி நக்கவாரததீவுகளையும்* கடாரத்தினையும் பிற இடங்களையும் "அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்தி"ச்சென்று கைப்பற்றிக்கொணடிருக்கிறான். இச்செய்தியும் மேறகுறித்துள்ள புஸதகத்தில் மறறொருமெய்க்கீர்த்தியிலுள்ள,

" ...
தெண்டிரை ஈழ மண்டல முழுவதும்
...... .. ....... ..சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பல்பெருந் தீவும்
சித்தில மெங்கட லுத்திர லாடமும்
... . . .

* The Nicobars.

கலாமுதிர் கடுந்திறல் இலாமுரி தேசமும்
தேனக்க வார்பொழில் மானக்க வாரமும்
தொடுகடற் காவல் கடுமுரட் கடாரமும்
மாப்பெருந் தண்டாற் கொண்ட கோப்பரகேசரிவன்மரான
உடையார் ஸ்ரீ ராஜேந்திரசோழதேவர் . ”

என்பதனால் அறியக்கிடக்கின்றது. இவற்றால் நீர்ப்படையை யுப யோகித்துப் பிறநாடுகவர்தலில், தமிழர்கள் பழகியிருந்தனரென்பது தெளியப்படும்.

ஆயினும் தமிழர்கள் நீர்ப்படையாற் பகைவர்களை மேற்படத் தாக்குதலிற் பண்டைக்காலத்துக் கிரேக்கர்கள், ரோமர்கள் இவர் களைப்போல அத்துணைக் கிளர்ச்சியும் ஆர்வமும் வாய்ந்தவரென்று கூறவொண்ணாது. இதற்குத் தமிழர்கள் தம் நாட்டையடுத்துள்ள இலங்கை, பர்மா இவ்விடங்களைக் கைப்பற்றினரேயன்றி, கிழக்கே சீனு, ஜப்பான் மேற்கே பாரசீகம், அரேபியா என்னும் தூர தேசங்களை அவர்களின் கப்பற்படைவலிகொண்டு கைப்பற்றிய தாகச் சரித்திர ஆராய்ச்சியால் இதுகாறும் தெரியவாராததே போதிய சான்றாகும்.

இத்துணையும் கூறியவாற்றால், தமிழ்ச்சொற்களின்தன்மை கொண்டே தமிழர்க்குக் 'கடல்' 'கலம்' இவற்றோடு மிக்க இயைபுண் டென்பதும், அச்சொற்கள் தமிழ்ச்செய்யுட்களில்வழங்கும்போது தோன்றும் நயத்தால் அவர்கட்குக் கப்பற்றொழிலில் தக்கபழக்க மிருந்ததென்பதும், தமிழ்நாட்டிற் பெரிய சிறந்த துறைமுகப்பட்டி னங்கள் இருந்தன என்பதும், மற்றும் அத்துறைமுகங்களிற் கலங் கரைவிளக்கமும் சுங்கச்சாலையும் பிறவும் இருந்தனவென்பதும், தமிழ் மக்களும் தமிழ்மன்னரும் முறையே வ்யாபாரமேம்பாட்டிற்காகவும், வேறுநாடுகளைக் கவர்தற்காகவும் மரக்கலங்களை விசேஷமாக உப யோகித்துவந்தனரென்பதும், இன்னோரன்னபிறவும் என்சிற்றறிவிற் கெட்டியமட்டில் தொகுத்துச்சொல்லப்பட்டன.

வே. முத்துஸ்வாமி ஐயன், எம்.ஏ., எல்.டி.
பள்ளிக்கூட உதவிப்பரிசோதகர்,
அறப்புக்கோட்டை.

---

ஸ்ரீ:

# சுந்தரகாண்டம். (கம்பர்)

"செந்தமிழ்" (தொகுதி-கஉ-பகுதி சஉ-ல்) சஎஅ-ஆம்பக்கத்தொடர்ச்சி.

" வாங்கினன்முலைகுவையிலவைத்தனன்சிரத்தால
தாங்கினன்மலர்க்கண்மிசையொத்தினன்டடந்தோள்
வீங்கினன்மெலிந்தனன்குளிர்ந்தனன்வெதுப்போ
டேங்கினனுயிர்த்தனனிதினனவெனலாமே"

இ - ள. வாங்கினன் — சேதனன் அஷ்டாக்ஷரமந்திரத்தை "ஜு ஹீத்வா" என்று வான்மீகிபகவான் பிரயோகித்ததற்கிணங்க மனதில்வாங்கினன் என்றா ; மனதில் நிலைபெறுத்தினன் என்றபடி. முலைக்குவையிலவைத்தனன் - பகவதனுபவ முக்கியசாதனமான சேஷத்வபாரதந்தர்யஸ்வரூப ஜ்ஞானத்தை தப பிறப்பிக்கும் த்வயம் என்னும மந்த்ரத்துடன்சேர்த்து அந்தமந்திரத்தை அனுசந்தித்தான். சிரத்தால்தாங்கினன் - அநதத்வயார்த்தத்துக்குள் உததரவாக்கியார்த்தத்தினுன்றினன், அதாவது சர்வசிலாக்கியமானதும் சாரமானதுமான மந்திரத்தை அதனுடையகௌரவமும், தன்னுடைய பாரதந்தர்யமுமதோற்ற அதை பரதானமாகவும் மூலாதாரமாகவும் கொண்டாடினன் என்றபடி. மலர்க்கண்மிசையொத்தினன் - தன்னுடைய ஞானக்கண்களால் அம்மந்திரத்தின் பெருமையயை அனுபவித்தான். தடந்தோள்வீங்கினன் — பெரியதோள்களாகிய பகவத்பாகவதகைங்கரியசாதனங்களைபபெருக்கினன். மெலிந்தனள் - பகவத்கைங்கரியததில தவறையுடையனுய் அது எப்பொழுதுகிட்டுமோவென்னும ஏக்கத்தாற சோர்வுற்றான். குளிர்ந்தனன் - இந்த மந்திரானுசந்தானமே சகலவிதகைங்கரியமுமாகி அவன் திருவடி சேவை கிடைப்பிக்கசெய்வதென்றநிச்சயத்தால் ஸந்தோஷத்தை யடைந்தான். வெதுப்போடேங்கினன்—

"ஒருகணைத்திரண்டுகண்டேனெளிமணியாழியான்ற
திருமுலைததடததுவைத்தாள்வைத்தலுஞ்செல்வரின்பால்
விரகமென்பதனின்வந்தவெங்கொழுந்தீயினால்வெந்
துருகியதுடனேயாறிவலித்ததுகுளிரப்புள்ளூற"

எனபதற்கிணங்க, ஈசனுக்கு உகபபாகச்செய்யும் சதகர்மங்களில் ஏதேனும் குறைவுபட்டுவிடுமோவெனறு மனக்கலக்கஙகொண்டு பரிதபிததான். உயிர்ததனள் - இன்னதென்றுதோன்றாது பெருமூச்செறிந்தான். இது இன்னதெனலாமே - இப்படியாகச் சேதனனாற் செய்யபபட்ட பலசெய்கையை இனனின்ன எண்ணங்கொண்டு இன்ன காரணத்தோடு இனனினனசெய்கைகளசெய்துகொண்டாடினான் என்றுசொல்லுவது எளிதாமோ என்பதாம.

"மோககுமுலைவைததுறமுயஙகுமொளிரானன்னீா
நீககிநிறைகண்ணிணைததும்பநெடுநீள
நோக்குநுவலககருதுமொன்றுநுவலகில்லாள்
மேக்குநிமிாவிம்மலன்விழுங்கலுறுகின்றாள்"

இ - ள். மோக்கும் - சேதனன் திருமந்திரத்தை அனுசந்தானம்செய்துகொணடே அதனர்ததத்தை யனுபவிபபான், முலைவைததுறமுயங்கும - அதை த்வயத்தோடு நன்றாகப்பொருந்தும்படி சேர்ப்பான், அதாவது அத்வைதபாவமின்றி விசிஷ்டாதவைதசித்தாந்தபரமாக அர்த்தத்தை நயிப்பிபபனென்றபடி. கணணிணைததும்ப வொளிர்நிறைநன்னீர்நீக்கி - உயாமழைக்கண்ணீராலாயிரங்கலசமாட்டி, யேங்கினளிருந்ததல்லாலியமபலள்' என்றபடி தனக்குண்டான ஆக்லாதத்தால அக்ஞானம மேலிட்டுத தனனாற சரியானகைங்கரியம்செய்து ஆதரிக்கமுடியுமோவெனறு ஏக்கங்கொண்ட மனோ சாஞ்சல்யத்தைநீக்கி ; நெடுநீளநோக்கும - திருஅஷ்டாக்ஷரததின் ஆழ்ந்துகிடக்கும அர்ததவிசேஷங்களையெலலாம் நெடுந்தூரம் ஆராய்வன். நுவலக்கருதும் - அதன்பெருமையைக்கண்டு பூரித்துப் பலமாக ஸதோததிரம்செய்ய ஆசையை உடையவனானன். ஒன்றும்

நுவல்கில்லாள் - அடங்காத ஆனந்தத்தைப்பெற்றபடியால் யாதொன்றும வாய்திறந்துசொல்லமுடியாது திகைத்துநிற்பான். மேக்குநிமிர் விமலன் - ஜ்ஞாநாநந்தத்தாலுண்டான ஆத்மபுஷ்டியுடையனாய்; விழுங்க லுற்றனள் - அக்காரக்கனியான எம்பெருமானை விழுங்குவது போல அவகாஹிக்கத்தொடங்கினான் என்பதாம்.

மேலேகண்டவிதமாகத் திருமந்திரத்தை அனுபவித்ததன்மேல், பின்வரும் இரண்டுசெய்யுள்களால் இந்தச் சேதனனுக்குண்டான தேஜஸ்ஸையும் அவன் பெற்ற பேருதவியையும் உணர்த்துகிறார்.

"நீண்டவிழிநேரிழைதன் மின்னினிறமெல்லாம
பூண்டதொளிர்பொன்னனையபொம்மனிறமெய்யே
ஆண்டகைதன்மோதிரமடுத்தபொருளெல்லாம
தீண்டளவில்வேதிகைசெய்தெய்வமணிகொல்லோ"

இ - ள். நீண்டவிழிநேரிழைதன - திருமந்த்ரார்த்தஜ்ஞானத்தைக் கியமடைந்த சேதனனுக்கு மின்னினிறமெல்லாம் - அப்பியாசதசையில மின்போற்றோன்றிமறைந்துவந்த ஸ்வரூபஜ்ஞானமெல்லாம்; மெய்யே - பாவநாபிரகாஷத்தாலே பிரத்தியக்ஷஸமானகாரமாய்; - ஒளிர் பொன்னனைய பொம்மனிறம் பூண்டது - தப்தகாஞ்சனம்போல் இடையீடின்றிவிளங்கிறது, அதாவது: சேதனனுடைய மனநிலை நிஷ்களங்கமாயிறது; (ஏனெனில்) ஆண்டகைதன்மோதிரம் - திருஅஷ்டாக்ஷரமந்திரமானது. அடுத்தபொருளெல்லாம - உபதேசம பெற்ற எந்தஜ்வனையும். தீண்டளவில் வேதிகைசெய் - சிரவணமாத்திரத்தாலே ஸவரூபபரகாசத்தை யுண்டாக்குதலால். தெய்வமணி கொல்லோ - ஸ்பாசனவேதியெனனும் தெய்வத்தன்மைபொருந்திய மணிவிசேஷமோ? அல்லது ஞானானந்தசொரூபந்தானோ? மூலத்தில் ஐக்கியந்தானோ என்று வியக்கத்தக்கதாயுள்ளது என்பதாம்.

"இருந்தபசியாலிடருழந்தவர்களெய்தும
திருந்துமமுதாகியதற்றுதவரையண்மூய

விருந்துமெனலாகியதுவீயுமுயிர்மீளும்
மருந்துமெனலாகியதுவாழிமணியாழி"

இ - ள். வாழி - பெருமைபொருந்தி நித்தியமானவாழ்வை அளிக்கததகுந்த; மணியாழி - திருமூலமந்திரமானது; பசியால் - இந்திரியங்களின் ஈடுபாட்டால்; இருந்திடருழந்தவர்கள்-மெய்ந்நெறி செல்லா துய்ந்நெறியறிவின்றித துக்கத்திலாழ்ந்து கஷ்டபபடுகிற ஒரு ஆத்மாவுக்கு; எய்தும அருநதுமமுதாகியது - காலவிசேஷத்தில் இந்திரியானுபோகங்களினின்றும விலகி உய்யும்நெறியடைவதற் கேறபட்டதொரு ஒப்பறற உபாயம் கிடைத்தாற்போலாயிற்று; அறததவரையண்டும - சன்மார்க்கமமைநதவர்களை த தேடிசசேரும். விருந்துமெனலாகியது-விருநதுபோலவே சந்தோஷஹேதுவாயிறறு; வீயுமுயிர்மீளும மருநதுமெனலாகியது - "இறுதியினுயிர்தந்தீயு மருந்தொத்ததனையதெநதாய்" "எம்பிரானுமஞ்சொல்லி,உருக்கினனு ணர்வைத்தந்தானுயிர்" என்பதறகிணங்க, யாதொருபயனுமறறுத் திருவடிகளைச்சேராது வியர்ததமாகபபோகும்நிலையில்நின்ற ஒரு ஆத்மா உஜ்ஜீவிபபதற்கு ஹேதுவான ஒரு அமிருதசஞ்ஜீவிபோலும ஆயிறறு. என்பதாம்.

இவ விருசெய்யுட்களாலும் திருமநதிரத்தின்ஸவபாவத்தையும், அதன்பெருமையையும, அதனல், சேதனனுக்குண்டானமேன்மை யையும் சொல்லி இனி அடுத்துவரும்செய்யுளால அந்தச் சேதனன் கிருதக்ஞதையுடன் ஆசாரியனை ஸ்தோததிரமசெய்ய ஆரம்பித்ததைச் சொல்லுகிறார்.

"இததகையளாகியுயிரேமுறவிளங்கும்
முத்தநகையாள்விழியினுவிமுலைமுன்றில்
தத்தியுகமென்குதலைதள்ளவுயிர்தந்தாய்.
உத்தமவெனுவினையவாசகமுரைததாள"

இ-ள். இத்தகையனாகி - மேறசொன்னபடிக்குள்ள வைபவங்களைப்பெற்று; உயிரேழுறவிளங்கும் முத்தநகையாள் - அத்தியானந்தத்தையடைந்தசேதனன்; விழியினொளி - திருமந்திரத்தின் அர்த்தஜ்ஞானசாரம்; முலைமுன்றில்தத்தியுக - த்வயார்த்தத்தில் ததும்பிவழிய அனுசநதிதது; மென்குதலைதள்ள - மிருதுபாஷியாய் ஸ்தோத்திரபூர்வகமாக ஆசாரியனைப்பார்தது. உயிர்தந்தாய் - உஜ்ஜீவிக்கும்பொருட்டு உபதேசம்செய்து அனுக்கிரகித்த எம்பெருமானே! உத்தம - பரமபுருஷா! என - என்றழைத்து ஸதோததிரததுக்கு ஆரம்பித்து; இனையவாசகமுரைததாள் - பின்வருமாறு சேதனன் சொல்லலுற்றான் என்பதாம.

இச் செய்யுளுக்குப் பிராட்டி கணையாழியைக்கண்டு மகிழ்ந்து ஆனந்தபாஷ்பத்துடன் தனனை உயிர்வைததுக்கொள்ளுமபடிக்கான ஹேதுவைச்செய்து மணியாழியைக்கொடுதது உதவின அனுமனைப பார்த்துத் தன்னுடைய நன்றியறிதலை வெளிபபடுத்தினாளென்பது சாமான்னியக்கருத்தாயினும், வேதாநதபரமாகத் திருமூலமந்திர உபதேசானநதாம் ஞானபபிரகாசமுள்ள சேதனன், ஆத்மானந்தப் பெருக்குடன திருமநதிரசாரததை தவயார்த்தத்திலுன்றி அனுசந்தித்து, உபதேசததால் தன்னை உஜ்ஜீவிக்கச்செய்த பரமாசாரியனுக்குத் தன கிருதக்ஞதையை வெளிபபடுததுகிறான என் னு ங் கருத்துத்தோன்றுமாறுகாணக.

(இன்னும் வரும்.)

எம். எஸ். சேஷையங்கார்.

ஸ்ரீ:

# புத்தகமதிப்புரை.

——:o:——

1. சேரன்செங்குட்டுவன்:—இது, முன்பு செந்தமிழ்ப் பத்திராசிரியராயிருந்து இப்போது லெக்ஸிகன்கமிட்டியின் தமிழ்ப்பண்டிதராயிருக்கிற ஸ்ரீமத்-மு. இராகவையங்காரவர்களால், பழைய தமிழ்நூல்களையுஞ் சிலாசாசனபத்திரங்களையுந் துணைக்கருவியாகக்கொண்டு சிலப்பதிகாரத்தைச் செவ்வனமாராய்ந்தெழுதப்பட்ட பழையசரித்திரங்களடங்கிய புதியபுத்தகம்.

இதில், 1 சேரவமிசத்தோர், 2 செங்குட்டுவனுறவினர், 3 அவன்போர்ச்செயல்கள், 4 அவன்காலத்துத்தோன்றிய பிற சரித்திரங்கள், 5 அவனது வடநாட்டியாத்திரையினிகழ்ந்தசெய்திகள், 6 அவனதுசமயநிலை, 7 அவன்காலத்தரசர்கள், 8 அவனைப்பாடிய புலவர்கள், 9 அவன்செய்த அரசியல், 10 அவனதுகுணாதிசயங்கள், 11 அவனது காலஆராய்ச்சி என்னும்விஷயங்களும், கண்ணகி, பத்தினிக்கல், நடுகல் இவற்றின் பழமையானசித்திரப்படமும் பழைய தமிழ்ச்சரிதங்களெழுதுவோர்க் குபகாரமாகும்படி செம்மையாகவும் தெளிவாகவும் எழுதப்பட்டிருக்கின்றன அவை தமிழ்மக்களால் மிகப்பாராட்டற்பாலன. ஐயங்காரவர்கள் பழையதமிழ்நூற்பயிற்சியிலும், சரித்திரஆராய்ச்சியிலும் மிகத்தேர்ச்சிபெற்றவர்களென்பதை, அவர்களெழுதிய வேளிர்வரலாற்றாலும், 200 ரூ பரிசுபெற்ற பொருளதிகாரஆராய்ச்சியாலும் எவரும் அறியலாம்.

இப்புத்தகத்துக்கு மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் உப அக்கிராசனாதிபதியாகிய ஆண்டிப்பட்டிஜமீந்தார் ஸ்ரீமான்-சா. ராம மு. சித. பெத்தாச்சிசெட்டியாரவர்களாற்செய்யப்பெற்ற பொருளுதவியையும், இச்சங்கத்தின் கௌரவகாரியதரிசியாகிய ஸ்ரீமத்-டி. ஸி. ஸ்ரீநிவாஸையங்கார் B. A., B. L. அவர்களால் வரையப்பெற்ற முகவுரையையும் நோக்கும்போது இத்தகையபுத்தகங்களையெழுதி அச்சிடுவோரை மேன்மேலும் ஊக்குவதற்குத் தமிழ்ச்சங்கத்தார்செய்யவேண்டுங் கடமையைச்செய்திருப்பதாகத் தோன்றுகிறது.

இதுபோலவே சர்வகலாசங்கத்தாரும் இப்புத்தகத்தை உயர் தரக்கலாசாலைப்பாடபுத்தகமாகத்தேர்ந்தெடுத்து ஐயங்காரவர்களுக்கு ஊக்கத்தையுண்டாக்குவாராயின் அவர்களால் இன்னு மித்தகைய புத்தகமெழுதியுபகரிக்கவியலுமென்ப தெனதுதுணிபு. இதன் விலை ரூபா ஒன்று. இபபுத்தகம் வேண்டுவோர் ஸ்ரீமத-மு. இராக வையங்காரவர்கள், தமிழ்ப்பண்டிதர், லெக்ஸிகன் ஆபீஸ், ஸெனட் ஹௌஸ், சென்னை என்ற விலாசத்திற கெழுதிப்பெறலாம்.

2. ஆரியாசத்தியவேதம் :— (புதியஏறபாடு. இதிகாசபுராண முதலியன. இரண்டாம்பாகம. இரணடாமபிரிவு.) இது, கோயமுத் தூர்க் கலாநிதிபபத்திரிகாசிரியர், சேலம் மகா-ா-ா-ஸ்ரீ பகடால நரசிம்மலுநாயுடு அவர்களாற் றொகுக்கப்பெறறது. இதில் ஆரியஸமாஜ ஜனுசாரசீர் திருத்தசமபநதமான அறிவொழுக்கங்களைப் புலப்படுத் தும் பலவிஷயங்கள் எழுதபபட்டிருக்கினறன. அவை, சாதுர்வர்ண யங்களுக்கும் சமானபாவமாயிருக்கும்படி யோசித்து மிகுந்த தாராளசிந்தையுட னெழுதப்பட்டனவாயினும், ஆரியாசத்தியவேதம் என்று பெயர்கொடுததிருபபதைநோக்கும்போது அநாரியர்களுக்கு இது விலக்காயுள்ளதென்று பொருள்கொள்ள இடங்கொடுக்கின்றது. அதறகுமிடமின்றி எல்லோர்க்கும்பொதுவாயிருக்கும்படி விஷயங் களைத்தொகுதது மானுஷசத்தியவேதமென்று பெயரிட்டிருந்தால் இதனினும் மேலான பாசமிர்ததியைபபுலப்படுததியிருக்கும. அன்றி யும், அதிருஷ்டஜனகமான வர்ணுச்சிரமசமயவிசேஷதர்மகர்மானுஷ் டானங்களைத் திருஷ்டபலஜனகங்களாகத் தமக்குததோன்றியவாறு கூறும் யுக்திகற்பனங்கள் பிராமாணிகர்களாற கொள்ளத்தகாதனவா யிருக்கின்றன. அவற்றையொழித்து இப்புததகமுழுதும் ஐககண்டய மாகும்படி திருத்திப்பதிபபிக்கப்பெறுமானுல, பொதுஜனசமூகத் துக்குப் பயன்படத்தக்கதாகும். இபபுததகம்வேண்டுவோர் அதன் ஆசிரியர்க் கெழுதிபபெறலாம.

பத்திராதிபர்.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கங.] ஆனந்த௵ பங்குனிமீ [பகுதி-ரு.

Vol. XIII. March—April, 1915. No. 5.

## சாசனபரீக்ஷை.*

சாசனபரீக்ஷையால் என்னபயனுண்டென்று சிலர் வினவுகின்றனர். சாசனபரீக்ஷையாற் பலபயன்களுண்டு. நம்முடையநாட்டுச்சரித்திரங்களெழுதுவதற்குவேண்டியவிஷயங்களெல்லாம் இந்தப் பரீக்ஷையால் வெளிப்படுகின்றன. இச்சாசனபரீக்ஷையாற்றான் சோழ, பாண்டிய, பல்லவ முதலியவம்சங்களின்சரித்திரங்கள் எழுதிமுடிந்தன. இதைக்கொண்டுதான் மற்ற அரசர்களின்சரித்திரங்களையும் எழுதிமுடிக்கலாம். சாசனபரீக்ஷையின் முக்கிய உபயோகம் சரித்திரத்துக்கு வேண்டியவிஷயங்களைச் சங்கிரகித்தலே. இதைத்தவிரச் சாசனபரீக்ஷையானது தமிழ்முதலியபாஷைகளின்சரித்திரத்துக்கும் பலவிதமாய்ப் பிரயோஜனப்படுகிறது. இந்தப் பிரயோஜனத்தைப்பற்றித்தான் நான் சில சொல்லப்போகிறேன்.

தமிழ்முதலியபாஷைகளினிலக்கணங்களில் எழுத்துக்களின்வடிவைக்குறித்துச் சொல்லப்பட்டிருப்பது எல்லாருக்குந் தெரிந்தவிஷயம். இவ்விலக்கணங்களெழுதியகாலத்து எழுத்துக்கள் எவ்வாறிருந்தனவென்பதைக் கிரந்தகர்த்தாக்கள் சூசிப்பித்தார்கள். அவைகளெழுதியகாலத்துக்குப்பின் பலநூற்றாண்டுகள் சென்றுவிட்டன. இந்நூற்றாண்டுகள்தோறும் எழுத்துக்களும் மாறுபட்டுக்கொண்டேவந்துவிட்டன. இலக்கணசூத்திரங்களிற்சொல்லப்பட்ட எழுத்துவடிவங்கள் இக்காலத்து எழுத்துக்களிற் காணப்பெறா. ஆதலால் இச்சூத்திரங்களின்பொருளை யறியவேண்டுமானால், பழையசாசனங்களின் எழுத்துக்களைப்பார்த்துத்தான் தெளியவேண்டும். எகர ஒகர உயிர்களும்

* இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பதின்மூன்றாமவருஷக்கூட்டத்திற் படிக்கப்பெற்றது.

மெய்களும் புள்ளிபெறுமென்று ஒருசூத்திரம் தொல்காப்பியத்திற் காணப்படுகிறது. இசசூததிரமெழுநதவெகுகாலத்துக்குப்பின் உரைக ளெழுதபபடடன. உரைகாரர்களகாலததிலேயே சூததிரங்கள் நன்கு விளங்கினவோவென்று ஐயுறவேண்டியிருககிறது. பழஞசாசனங்களில இந்தவிஷயம தெளிவாயக காணககிடைக்கின்றது. அககாலததில எ, எ, ஒ, ஓ என்னும உயிரகளும அவறறி னுயிர்மெய்களும ஒரே மாதிரியாய் எழுதபபட்டன. ஆனால எகரததுககும ஒகரததுககும மேல ஒருபுள்ளியிடுவதனால அவ்விரண்டுங் குறிலகளெனறுவிளஙகும். இவ்வாறு புள்ளியிட்ட எகர ஒகர உயிர, உயிரமெய்யெழுததுககளைப் பல பழையசாசனங்களிற் காணலாம. நன்னயபட்டு தாமெழுதிய ஆந் திரவியாகரணததில ழி என்னு மக்ஷரம நாணேற்றினவிற்போலிருககு மென்று எழுதியிருக்க, இபபோதைய தெலுஙகு அக்ஷரததைபபார்த தால் அப்படியிருககவில்லை. ஆனால அவர் எழுதியகாலததில வில வடிவமாயிருந்ததென்பது சாசனங்களால நன்குவிளங்கும.

இரண்டாவது:— பண்டைக்காலஙகளிற சிறசிலபதங்களை எவ் வாறு உசசரிததுவந்தார்களென்பதும ஒருவாறு தெரியவருகிறது. ஈற்று ஏகாரம ஏய் என்று உசசரிககபபட்டுவநதது. (செநதமிழ்த தொகுதி ச, பக்கம ௩௬௬ பார்க்க.)

மூன்றாவது:— சாசனபரீக்ஷையால், தமிழிலக்கியங்களில துர்லப மாய்க்கிடைக்கக்கூடியனவும, கிடைககாதனவுமான பலபதங்கள் வெளி யாகின்றன. நிலத்தின்வகைகளைககுறிகக கரி, முதை, மறறம், புறுய், ஓடி, வளால என்று பலபெயர்கள் சாசனங்களிற் பிரயோகிக்கப்பட்டுள் ளன. அவைகளில, கரியென்பது விவசாயததுககுககொண்டுவரப்ப டாதநிலததுககுபபெயராம. முதையென்பது முதன்முதல திருததிச சாகுபடிசெயயபபட்டநிலததின்பெயா. மற்றமென்பது ஆற்றோரத திற் சரிவாயும தாழ்நதுமிருக்கிறநிலததின்பெயராம. இவைபோலவே மற்றவைகளும வெவ்வேறுவிதமானநிலஙகளைககுறிக்குமபெயாகளாம்.

நான்காவது:— தமிழ்நூல்களின்காலவரையறைசெய்யும்விஷயத திற் சாசனபரீக்ஷை வெகு உபயோகமுள்ளது. பலநூல்களின்கால நிர்ணயம செநதமிழ்வாயிலாய்வெளியிட்டிருக்கிறேன். சாசனபலத தால எங்ஙனம காலநிர்ணயம்செய்யக்கூடுமென்பதை அங்கே கண்டு

கொள்வது. கிரந்தங்களின்காலநிர்ணயமாத்திரமல்ல; சிலசமயங்களிற் பாட்டுடைததலைவன் இன்னுனென்பதும சாசனங்களாற் சுலபமாய்த தெளியவைக்கலாம். நநதிககலம்பகததிற்சொலலப்பட்ட நந்தியும, வீரசோழியததிற்சொலலபபடட பொனபற்றிகாவலன், வீரசோழன்முதலியவாகளும, புறநானூற்றிலவாணிககபபடட பலயாகசாலை முதுகுடுமி, ஆய்முதலியவாகளும இன்னின்னுர் என்றும, அவர்களிருநதகாலஙக ளின்னினன நூற்றுண்டுகளென்றும சாசனஆராய்ச்சி செய்தவாகளாற் சுலபமாய்சசொலலககூடும.

ஐநதாவது:— மேற்கூறியவைகளேயல்லாது இதுகாறுந்தெரியாத தமிழ்நூலகளின்பெயரும, அவைகளை ஆககியோாபெயாகளும சாசனஙகளில ஆஙகாங்குக காணபபடுகினறன. ஒருசாசனததில, பெருநதேவனுர்காலததுககுமமுநதிய பாரதம தமிழில மொழிபெயாக்கபபட்டதென்றுகூறியுள்ளது. மறறொனறில, இலததூாநாட்டு அருமபாககததது அறநிலைவிசாகன திரைலோககியமலலனை வதஸராஜன் என்பவன் பிற்பட்டகாலததிற பாரததததை தமிழிலாக்கினுனென்று சொலலியிருககிறது. பின்னுமொருசாசனததில வீரைததலைவன் இரும்பைப் பரசமயககோளரி என்பவன் கனனிவனபுராணம, பூமபுலியூாநாடகம, அஷ்டாதசபுராணமமுதலியவைபாடினுனென்று தெரியவருகிறது. பின்னையும ஒருசாசனததிற குளககுடையான் அருணிலையாகிய ஸ்ரீகிருஷ்ணன் மூவேநதபபிடவூர்வேளார்தநதையார், திருமாறபேறறிலவீற்றிருககும கோவிந்தபபாடியாழ்வாருக்கு, "கோலநற்குழல்" என் றூரமபமுடைய ஒரு பதிகமபாடினுரென்றுசொலலப் படடிருக்கிறது. அதிவீரராமபாண்டியன்தநதை குலசேகரபாண்டியன், பூமாலையணிநதால்வாடுமெனறு வீரவெண்பாமாலையையணிந்தானென்று பலசாசனங்களிற்கூறியிருககிறது. இவவகையாக, இதுகாறுமுள்ள தமிழிலககியததுளகபபடாத சிற்சில தமிழநூலகளின்பெயாகளும, ஆசிரியாகளினபெயர்களும கிடைபபதால அநநூலகளைத தேடிபபிடிககவியலும.

ஆறுவது:— சாகரமபோற பரநதுகிடககும பொருளதிகாரததிற் காணும பறபலவிஷயஙகளைவிளககச சாசனஙகள் மிகபபயன்படுமென்பது சாசனங்களிலும தமிழிலககணங்களிலும பழகியவாகளுக்கு நன்கு புலபபடும. தொறுககொளல, நிரைமீட்டல, கலநடுதல, மறங்கூறல்,

வஞ்சினங்கூறல், வாள், குடை, நாள் முதலியவைகளின் மங்கலம் என்பனபோன்ற பலவிஷயங்கட்கு உதாரணம் சாசனங்களில் ஏராளமாய்க் கிடைக்கின்றன. அவைகளில், தொறுக்கொள்ளல், நிரைமீட்டல், கலந்துதல் என்பவற்றைக்குறித்துச் செந்தமிழ் 3-ஆம்தொகுதியில் முன்னரே எழுதியிருக்கிறேன். வஞ்சினத்துக்கு உதாரணமாகச் செந்தமிழ் 3-ஆம் தொகுதியிலேயே ஸ்ரீரங்கம்சாஸனங்களென்னும் தலைப்பின்கீழ் என்னன்பர் ஸ்ரீமான்-நாராயணஸ்வாமி ஐயர் எழுதியிருக்கிறார். (Refer to it by reading extracts and also the Kannada portion extracted) அரசர்கள் தங்கள்பெயர்களைத் தங்கள் உத்தியோகஸ்தர்கட்குப் பகுமானித்துக்கொடுப்பதென்னும்வழக்கம் சாசனங்களால் மிகத்தெளிவாய் அறியப்படும். நம்மாழ்வார்க்குப் பராங்குசன் என்னும்பெயர் பாண்டியவரசன் பராங்குசனுடையஸ்மரணைக்காக அளிக்கப்பட்டதாயிருக்கலாம். அதுபோல் மதுரகவிகளுடையபெயர் பராந்தகபாண்டியனென்பவன்மந்திரியாகிய மதுரதரமானபாடல்களைக் கவனம்செய்வதில்வல்லவனாய், அதனாலேயே மதுரகவியென்னும் பட்டம் பெற்ற மாறன்காரியின்பெயராயிருக்கலாம். பின்னும், ஏனாதிமோதிரம்பெறுவது முதலானவிஷயங்களும் சாசனங்களால் விசதமாகின்றன.

ஏழாவது:— சாசனங்களாற் சிலவார்த்தைகளின் தாது, உத்பத்திமுதலியவைகளையு மறியலாம். வயல் என்னும்வார்த்தை பழையசாஸனங்களில் வயக்கல் (அதாவது வசக்கல், வசமாக்குதல்) என்றே காணப்படுகின்றது. இதுபோல் மற்றும் பலவார்த்தைகளுக்கும் பொருள்செய்யலாம். இந்தவிஷயங்களெல்லாம் தமிழகராதியெழுதுவோர்கள் முக்கியமாய்க்கவனிக்கத்தக்கன. இவைகளையெல்லாம் தீர ஆராயாது எழுதும் அகராதி குறைவுடையதாகவேயிருக்குமென்பதிற் சந்தேகமேயில்லை. இப்போதே தமிழ்மொழிகளை இங்கிலீஷ் அக்ஷரத்திலெழுதுவதிற்காணும் பிழைகளும், இன்னம் பலவாறானபிழைகளும் எண்ணிறந்துகிடக்கின்றன. அவைகளையெல்லாங் களையாது எழுதிமுடிப்பார்களேல், அகராதியெழுதச் செலவிட்ட பணமெல்லாம் வீணாய்முடியும்.

மேற்கூறிப்போந்தவைபோன்ற பலபயன்கள் சாசனபரீக்ஷையால் ஏற்படுகின்றதோடு இப்பரீக்ஷையால் இன்னு மநேக உபயோகங்களும் உள்ளன. அவைகளைப் பின்னொருமுறை எழுதுவேன்.

து. அ. கோபிநாதராவ், எம். ஏ.

௳

# மறையாவன

"மறையாவன தைத்திரியமும் பௌடியமும் தலவகாரமுஞ் சாமவேதமுமாம். இனி வேதவியாதர்வரையறைப்படுத்தியகாலத்து ஓதுகின்ற நான்குவேதமுமாம்" எனக் கலித்தொகைக் கடவுள்வாழ்த்துப் பாட்டுரையில் நச்சினார்க்கினியர் எழுதியிருக்கிறார்.

ஆகவே வேதங்கள் இருவகையாகப் பிரிபட்டிருந்தனவென்று இவ்வுரையால் அறிகிறோம். அவை,

(1) இருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வம்;

(2) தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமவேதம்;

என்பனவாம்.

வடமொழியிற் பின்காட்டியபிரிவினையைப்பற்றி ஒன்றும் எழுதப்படவில்லையென்று தெரிந்தவர்கள்கூறுகின்றார்கள். என்ன ஆதாரத்தின் மேல் நச்சினார்க்கினியர் வேதங்களை இவ்விதம் பிரித்துக்காட்டினார்?

அதர்வவேதத்தைச்சார்ந்தவர்கள் ஒருவருமில்லை. பலகாலம் இருக்குவேதமும் தென்னாட்டில் வழங்கிவரவில்லை. அக்காலத்து இத்தென்னாட்டுப்பிராமணர்கள் யஜுர்வேதத்தை அல்லது சாமவேதத்தைத்தழுவியவர்கள் என்று தெரிகிறது. இவ்விஷயத்தை நச்சினார்க்கினியர்காட்டியிருக்கும் வேதங்களின் புதியபிரிவு நமக்குக் காட்டுகின்றது என்று இவ்விடத்தில் ஒருவாறுநிரூபிக்கப்படும்.

1 இருக்குவேதம் இங்குவரத் தாமதப்பட்டதற்கும், யஜுர்வேதம் விரிவாயும் விரைவாயும் பரவியதற்கும் உள்வாகும் காரணங்கள் பின்கண்டபடி, "Imperial Gazetteer of India"* எனனும் மதிப்பேற்றமுள்ள நூலிற் கூறப்பட்டுள்ளன.

யஜுர்வேதத்தின் நடப்பும் நாகரிகமும் இருக்குவேதத்தின்நாட்டிற்கு மிகவும் கிழக்கிலுள்ளதேசங்களைச்சேர்ந்தவை. யஜுர்வேதத்தில் (இருக்குவேதத்திற்கூறியிருப்பதுபோல இந்துதேசத்தின் வடமேற்கெல்லையென்றுசொல்லக்கூடும்) சிந்துநதியைப்பற்றியும் அதன்கிளை

* See Volume II page 227. இரண்டாவதுசம்புடம் 227-ம்பக்கத்தைப் பார்க்க.

நதிகளைப்பற்றியும் பேசப்படவில்லை. வடஇந்தியாவின் மத்தியபாக மாகிய குருக்ஷேத்ரமும் பாஞ்சாலதேசமுமே யஜுர்வேதத்தின்நாடுக ளாம். குருக்ஷேத்திரதேசத்திலதான் பிராமணர்கள் தங்கள் மதக்கோட் பாடுகளையும ஜனங்களின்வியவகாரவிதிகளையும ஏற்படுத்திக்கொண் டனர். பிராமணர்களுக்கு மற்றநாடுகளைவிட அக்காலத்தில் இந்நாடு மேலானநாடாகமதிக்கப்பட்டதென்றுகாட்ட இதற்குப் பிரமாவர்த்தம என்றபெயர் இடப்பட்டது. இவ்விடத்திலதான் யஜுர்வேதிகள் அநேக சாகைக்காரர்களாகப்பிரிந்து இத்தேசத்தின் மற்றப்பாகங்களுக்குச சென்றார்கள்.*

ஸிந்துநதிக்கரையினின்று ஜனங்கள் இங்குவந்துசேரத் தாமதமா கும என்பது சித்தம. ஆகையினாலேயே இருக்குவேதிகள் ஆதியில தென்னாட்டிற பலர் இருந்திருக்க இடமில்லை.

II. இவ்விஷயத்தை நசசினார்க்கினியரின்உரை எவ்விதமகாட்டு கின்றது என்று இப்பொழுது ஆராயலாம.

வேதங்கள்நான்கு:—அவை;—தைத்திரியம; பெளடியம; தலவ காரம்; சாமவேதம என்பனவாம. இவற்றுள் முன்னிரண்டும யஜுர் வேதத்தையும பின்னிரண்டும சாமவேதத்தையும குறிக்கின்றன.

(i) "தைத்திரியம" என்பது "கிருஷ்ணயஜுர்வேதசாகை". வைசம பாயனர் தமதுசிஷ்யனாயஜ்ஞயவல்கியரிடமசினந்து அவரைப்பார்த் தது தாமகற்றுக்கொடுத்தயஜுர்வேதத்தைக் கக்கிவிடு என்றுகூறச சிஷ்யர் அவ்விதமேசெய்தார். அருகிலிருந்த சிலசிஷ்யர்கள் தேஜோ ரூபமாய்க்கக்கிக் கீழ்விழுந்திருப்பதை, "தித்திரி" அல்லது "கவுதாரி"ப் பக்ஷிவேஷங்கொண்டுகுடிக்க அவர்கள் தைத்திரியவேதிகள் ஆனார்க ளாம. வாயினின்றுகக்கியது கருநிறமாயிருக்குமாதலின் இவ்வேதத் திற்குக் கிருஷ்ணயஜுர்வேதமெனறுபெயராம.

---

* பின் இரணடுமொழிகள் இங்குக் கவனிக்கத்தக்கவை.

(1) வாத்திமஜாதி = மாத்யமாள் = இந்தேசத்தின்மத்யம(நடு)பாகத்தி லிருந்துவந்தவர்கள்.

(2) வடமஜாதி = வடதேசத்திலிருந்துவந்தவர்கள

இவர்களுக்குள் முற்பட்டுவந்து குடியேறினவர்கள் சோழதேசத்தவடமர்க ளென்றும், பிற்பட்டுவந்தவர்கள் வடதேசத்து வடமர்களென்றும் கூறப்படுகிறார் கள்.

(ii) "பௌடியம்" அல்லது "பௌழியம்" அல்லது "பௌஷ்யம்" என்பது "சுக்லயஜுர்வேதம்" ஆகும். பௌஷ்யம் என்பது பௌஷ்ணம் என்பதன்சிதைவென்றுதோன்றுகிறது. பௌஷ்ணம் என்பது பூஷன்சம்பந்தப்பட்டவேதம். அதாவது: சூரியதேவதையாற்கற்பிக்கப்பட்டவேதம். யாஜ்ஞ்யவல்கியர் வைசம்பாயனரதுவேதத்தைக்கக்கினதும் சூரியதேவதையை உபாசித்து அந்ததேவதையாகிய பூஷனிடம் புதுவேதம் ஒன்றைக் கற்றுக்கொண்டார். இதுதான் சுக்லயஜுர் வேதம் அல்லது "பௌஷ்ணம்" (பூஷணதுவேதம்) அல்லது "பௌஷ்யம்". ஆகவே தைத்திரியமும் பௌஷ்யமும் யஜுர்வேதத்தைக்குறிக்கும்.

(iii) "தலவகாரம்" என்பதற்குப் பொதுவாகச் சாமவேதமென்று பொருள்கூறலாம். "தலவம்" என்பது சங்கீதம், பாட்டு, இசை என்று பொருள்படும். "தலவகாரம்" என்பதற்குப் பாடுவதற்கு ஏற்பட்டது என்று பொருள்கூறுவர்.

[தலவகாரம் என்பது, சாமவேதத்தைச்சார்ந்த, இந்நாளில் "கேந" என்றபெயராற்கூறப்படும் ஒரு உபநிஷத்திற்கு ஆகுபெயர். இவ்விதமே சாந்தோகயமும், தலவகாரத்தின்பொருளைக்கொண்டு சாமவேதத்தின் வேறொரு உபநிஷத்திற்குப்பெயராம்.]

'சந்தோகன்' என்றபதத்தின்பொருள் "சாமவேத அத்யயனஞ் செய்தவன்" என்று மனுஸ்மிருதியிற் கூறியிருக்கிறது.* இவ்விடத்திற் கவனிக்கவேண்டியது தலவகாரத்திற்கும் சந்தோகத்திற்கும் பொருள் ஒற்றுமையும் விஷயஒற்றுமையும் ஆம்.

III. இப்பிரிவினையைத் தமிழ்நூலாசிரியர்களில் யாராயினும் ஒப்புக்கொண்டிருக்கிறார்களாவெனின், எனக்குத்தெரிந்தமட்டில், திருமங்கையாழ்வார் ஒருவரே இப்பிரிவினையைக் காட்டியிருக்கிறார். ஆழ்வார்களுள், பெரியாழ்வார் ஒருவரே இருக்குவேதத்தையும், யஜுர் வேதத்தையும் குறித்திருக்கிறார். அவர்திருமொழி ஐந்தாம்பத்து முதல்திருமொழி ஆறாம்பாட்டில்,

"இருக்கெசுச்சாமவேதநாண்மலர்கொண்டுன்பாதம்
கண்ணுநான்" (பெரியாழ்வார்திருமொழி 5, 1, 6.)

* மநுஸ்மிருதி மூன்றாவது அத்யாயம் 145-வது சுலோகத்தைப்பார்க்க.

இருக்குவேதத்தின்பெயரும் யஜுர்வேதத்தின்பெயரும் வந்திருக்கின்றன. நாலாயிரதிவ்யப்ரபந்தத்தில் வேறு ஒருஇடத்திலும் "யஜுர்" என்றபதம் வரவில்லை. இருக்கு என்றபதம் பலவிடங்களில் வந்திருக்கின்றது.

1. "இருக்கிலங்குதிருமொழிவாய்" பெ. தி. 6, 6, 8.
2 "இருக்கார்மொழியால்" திருவிருத்தம், 64.
3. "மேவிததொழுதுய்யமினீர்களவேதப்புனிதவிருக்கை
நாவிற்கொண்டு" திருவாய்மொழி 5, 2, 7.

இவைபோன்ற இடங்களில் "இருக்கு" என்றபதத்திற்குப் பொதுவாக "வேதவாக்யம"* என்று பொருள்கொள்வது தகுதி.

திருமங்கையாழ்வார் பல இடங்களில் வேதங்கள் நான்கு என்று கூறியிருக்கிறார். உதாரணமாகப் பின்காட்டியவற்றைப்பார்க்க.

"பன்னுகலைநால்வேதப்பொருளையெல்லாம்" (பெ. தி. 7, 8, 2.)
"மன்னுநான்மறைமாமுனிபெற்றமைந்தனை" (பெ. தி. 5, 8, 6.)
"...... .. நால்வேதம்
கண்டானேகண்ணபுரத்துறையம்மானே" (பெ. தி 8, 10, 1.)
"மேவுநான்மறைவாணர்ஐவகைவேள்விஆறங்கம்வல்லவர்" (பெ.தி 9,10,9.)
"அங்கமாறைந்துவேள்விநால்வேதம் .. எரிமூன்றும்" (பெ. தி. 9, 1, 1.)
"வேதநான்கைந்துவேள்வியங்கமாறிசையேழ்" (பெ. தி. 6, 7, 7.)

இவ்வாறு வேதம்நான்கு என்று எழுதிய இவர் வேதவியாசர் வரையறைப்படுத்தியவேதங்களை ஒப்புக்கொண்டு எழுதியதாக விளங்கவில்லை.

"சந்தோகன்பௌழியனைந்தழலோம்புதைத்திரியன்சாமவேதி"(பெ தி.5,5,9.)
"சந்தோகா!பௌழியா! தைத்திரியா!சாமவேதியனே!† நெடுமாலே!"
(பெ. தி. 7, 7, 2.)

என இவ்வாறுகூறி இத் தென்னாட்டிலவழங்கிவந்த யஜுர்வேதத்தின் சாகைகளையும், சாமவேதத்தின்சாகைகளையுமே குறித்திருக்கின்றனர். இவ்வாழ்வாருக்குப்பிற்காலத்தவரான நச்சினார்க்கினியர்காலத்திலும்

---

* திருச்சந்தவிருத்தம 103-ஆம்பாட்டிலுள்ள "இருக்கலந்தவேதநீதி" என்பதிலும் 109-ஆம்பாட்டிலுள்ள "இருக்குவாய்முனிக்கணங்கள்" என்பதிலும் உள்ள இருக்கு என்னும் பதத்திற்குச் சம்பிரதாயவியாக்கியானத்தின்படி இருக்குவேதம் என்று பொருள்கூறியிருப்பதாகத் தெரியவருகிறது.

† "சாமவேதியன்" என்றபதத்திற்கு வாமன் சிவராம ஆப்தே எழுதியிருக்கும் வடமொழி ஆங்கிலஅகராதியில "சந்தோகபுரோகிதன்" என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது.

இருக்குவேதம் இங்கு அதிகமாகநடையாடாமல் வடதேசத்திலேயே வழங்கிவந்தது என இவ்வுரையாசிரியர்கலித்தொகையுரையாலவிளங்குகிறது. "தலவகாரம" என்பதறகும "சந்தோகம" என்பதற்கும அதிகபேதமில்லையென்று முன் காட்டியிருக்கிறேன. "சந்தோகம்" என்றபதம திருமஙகையாழ்வாரககு மகிழ்சசியைககொடுததமொழிக ளில ஒன்றென்றுநினைககலாம. எனெனில,

"சந்தோகா தலைவா தாமரைககண்ணனே
அந்தோ அடியேற்கருளாய்உன்னருளே"

என்று பெரியதிருமொழியை முடிததிருக்கிறா.

சிறந்த வியாக்கியானகாரரான பெரியவாசசான்பிள்ளை மேற்கண்ட வேதபபிரிவுகளைபபற்றி ஒன்றுமெழுதாமல விடடுவிடடாா.

ஸ்ரீவைஷ்ணவகிரந்தமுததிராபகஸபையாரால அசசிடப்பட்டிருக்கும பெரியதிருமொழிப்பிரதிபதஉரையில "பௌழியம" என்ற மொழிக்கு "பிரஹதாரண்யகஉபநிஷத"* என்பது பொருளாககாட்டபபட்டிருககிறது. இவ்வுரை யாரால எழுதபபட்டதோ? என்ன ஆதாரததைககொண்டு மேறகண்டவிதம பொருள்கூறபபட்டதோ? யானறியேன். ஆயினும பொருள பிழையானதெனறுகூற இடமிலலை. "பிரகதாரண்யக உபநிஷத" சுகலயஜுாவேதஉபநிஷத ஆகையால, நான மேலேகூறியிருபபதை இது வற்புறுததுகிறது.

IV. சாமவேதம இதைப்பற்றி ஒனறும எழுதவேண்டியதிலலை. ஆகவே தலவகாரமும் சாமவேதமும சாமவேததகின் இருசாகைகளைக் குறிக்கலாம.

எஸ். இராதாகிருஷ்ணையர்,
B. A., F. M. U.

---

* மேற்கணடபடி எழுதிமுடிதது மதுரைச செநதமிழுககு இதனையனுப்ப உததேசிததிருக்குஞ் சமயததில நான் யாழ்ப்பாண அகராதியைப் பாாக்கநேரிட்டது. அவ்வகராதியில யாவருககுநதெரிநதபடி ஆதாரத்தைக் கூறுமல 'பௌடியம்' எனபதறகு "முதல்வேதம்" எனறு பொருள எழுதப் படடிருககிறது. அபபடியாயின, பௌடியம், தைததிரியம, சாமவேதம் என்பவை முறையே இருக்குவேததநதையும யஜுாவேததநதையும சாமவேததநதையும குறிதது, வியவகாரததை முழுதும நீககும இப்பொருளை பெரியவாசசான்பிள்ளையும பிரதிபத உரையாசிரியரும அறியாதிருந்தமைக்குக காரணமென்ன? "மன்னப்படும் மறைவாணனை" மூன்றுவேதஙகளின பெயர்களாற்கூப்பிட்டுப் பிறகு குறிப்பாகச் "சநதோகா"வென்றும கூவுவது நியாயமே; நாராயணனது ஆயிரநாமஙகளுள், 'சாமகாயனன்' 'சாமகன்' "சாமன்" முதலிய சாமவேதசம்பந்தமுள்ளபெயர்கள் விசேஷமாக எடுத்தோதப்பெற்றிருப்பதால்.

ஸ்ரீ:

# மூன்று கக்ஷபுடங்கள்.

1-வது நவக்கிரககக்ஷபுடம்.
2-வது வைத்தியகக்ஷபுடம்.
3-வது புவனகக்ஷபுடம்.

இப்பரதகண்டத்தில் அரசர்கள் முன்னாளில் நாட்டின்சுகத்திற்கும் தமதுசுகவாழ்விற்கும் இம்மூன்று நூல்களையும் முக்கியஸாதனங்களாகவைத்துக்கொண்டு மணி மந்திர ஔஷதங்களைக் காப்பாற்றிவந்தனர். காலமழையும் ஆயுளும் சுகவாழ்வும் நன்குநிலைபெற்றோங்கின.

2. பிறகு காலநிலைமாறவே கலிநாளில் மூன்றுகுணங்களுள், பிற்றையவிரண்டும் பிரபலமாகி முதற்குணமாகு சத்துவம் தாழவே மணி மந்திர ஔஷதங்கள் போலியாய்விட்டன. விடவே காலமழையுஞ் சுகவாழ்வுங் கலவியு மிறங்குபடியாய்நடைபெறுகின்றன.

3. இம்மூன்று நூல்களும் வடமொழிரூபமாயுள்ளன. பிற்காலத்தார் தமிழிற்பெயராததுள்ளார் இவைகள் எங்குங்கிடைப்பதில்லை. வடமொழிப் புவனகக்ஷபுடம் மைசூரிலாகாவிலுள்ள சிவகங்கையில் ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள்மடத்திலுள்ளது. மற்றைய இரண்டுநூல்களும் சிதம்பரத்தில், தீக்ஷதர்களிடம் இருக்கின்றன. என்னிடம் புவனகக்ஷபுடம் இருக்கின்றது. இது தமிழ்க்கவிரூபமாய் 50-கவிகளாயமைந்துள்ளது. மாதிரிக்காக மூன்றுகவிகள்வரைந்துள்ளேன்.

4. இந்நூல்கள் மகான்களால் பரமரகஸியமாகக்கையாளப்பட்டுவந்தமையால் ராஜகிருகங்களில்மட்டும் கோப்பியமாகவைக்கப்பட்டுவந்தன. காலம் மாறவே இந்நூல்கள் மலினகதியையடைந்து

5. 1. மணியென்பது மகான்களின்கண்மணியின்பார்வை. 2. மந்திரம் என்பது திருமால், சிவபிரான், நரசிங்கன், கணபதி, குமரன், அனுமான், கருடன்முதலியமூர்த்திகளின் உபாஸனைக் கின்றியமையாத அக்ஷரரூபமான சொற்றொடர், சுலோகம் முதலியனவாம்; இம்மந்திரங்கள் அங்கந்யாஸம், கரந்யாஸம், தியானசுலோகம், கவசம், இருதயம், மாலாமந்திரங்களோடு தக்க ஒருவரால், தொட்டுக்காட்டினாலன்றிப் பயன்படா. 3. ஔஷதம், மூலிகைகளுக்குக் காப்புக்கட்டிச

சாபவிமோசனஞ்செய்து மநதிரஙகூறிக காலமும நேரமும்பார்த்துக் கிரகித்துவநது ஙதலம, லேகியம, பஸ்மம முதலியவைகளாகசசெய்யப படுவது. (கருவூராரது அஷ்டகருமமூலிகை நூலைப பார்க்க.)

## புவனாககூபுடம் முதற்கவி.

"திரிதகொருவட்டததினுளளேயொருவட்டஞ்சோததியதில
தரிததிவொயுவினவீசமுஞ்சததியுநதானெழுதிக
கருததினுளன்னேபுவனேயையேதககணடிருககில
மிருத்துமுதலவையாவேசமாகிவிளமபிடுமே"

## 26-ஆம் கவி.

"இருக்குமுதலிவைகசெட்டாவுருவொனறிதுதனிலே
குருககுஙகுடிலையுநாதமுமவிநதுவுஙகூறுமவிநது
தரிககுஙகலைகளபுவனேகளததுவஞசாற்றுவதே
துரைககுமபொழுதுபுவனேவடிவதெனறோதுவதே"

## 50-வது கவி.

"தெரிககுமபுவனேகலைஞானதீபசசெழுமபொருளே
விரிககும்பனுவலிஞெரெழுததேனுமவிதிமுறையால்
தரிககுமபுலனுடையாரலலரோவிததரணியெலலாம்
பரிககுமபுரவலராயினபவிபெரிபபவரே"

குறிப்பு: மானிடவுருவெனபது பிண்டம. இபபுவிமுதலியவை சேர்நத கோளவடிவமே அண்டம. அண்டததின் நியாயமே பிண்டத திலுமுள்ளது. நவக்கிரகஙகளும வரைகளும, பதினான்குலகஙகளும புறததிலுள்ளனபோல மனிதசரீரததிலு மமைநதுள்ளன. வைததிய வகையாய எலலாமூலிகைகளும நவககிரக அமசமாக அமைநதுள் ளன. நவககிரகசாநதியும அவைகளினசாாபாய ஔஷதஙகளும அமைநதிருககினறன. இதனுல நவககிரககூபுடம வைததியககூ புடஙகளின்பயனே அறிநதுகொளளலாம.

இஙஙனம,

தி. வேங்கடராம ஐயங்கார்,

தமிழ்ப்பண்டிதர்.

# தமிழ்ச்சங்கத்தாற் செய்யத்தகுவது.



இவ்வருடத்துடன் எல்லாம்வல்ல இறைவனருளால் இச்சங்கத்தின் பதின்மூன்றாமாண்டு நிறைகின்றது. தற்போது இச்சங்கம் வாலப் பிராயம்நீங்கி யௌவனப்பிராயத்தையடையவில்லையெனினும் இச்சிறு வயதிற்றானே இச்சங்கத்தாலவிளைந்தநன்மை இனைத்தென்று வரை யறுத்துக்கூறுதல் சாத்தியப்படத்தக்கதன்று. சின்னாண்முன், தமிழ்ப் பாஷையின்நிலைமை எவ்விதமிருந்ததெனச் சற்று ஆராய்வோம். நமது ஸர்வகலாசாலைகளினின்று கற்று வெளிப்போந்தமாணவர்கள்பலர் தமிழ்கற்றவர்களாய்ச்கருதப்பட்டிருந்தார்கள். அப்பொழுது தமிழும் ஒரு உபபாஷையா யங்கீகரிக்கப்பட்டுவந்தது. அப்பாஷையை உப பாஷையாய எடுத்துக்கொண்டவர்கள அதிற்றேறிவிடிற் பூரண வித்தியாபட்டத்தையும் பெறமுடியாதவர்களா யிருந்தனர். அப்போ தைய ஸர்வகலாசாலைமாணவர்களைப்பற்றி ஒருவர் பின்வருமாறு அபிப்பிராயங்கொடுத்திருக்கிறார்:—

"நமது ஸர்வகலாசாலைகளிற்றேர்ச்சிபெற்ற (தமிழறிந்த) மாண வர்கள் இப்பாஷையிற் புதியநூல்களை யியற்றினாரில்லை. இது சர்வ சாதாரணமானவிஷயமாயினும் இந்நிந்தைக்குச் சிலமாத்திரம் இலக் காகவில்லை. அஃது அவர்களின் அபாரசக்தியின்பயனேயன்றிச் சர்வ கலாசாலைகளில் அவர்களகற்ற கல்வியின்பயனன்று. கலாசாலைகளில் மாணவர்களால் தமிழ் ஒழுங்காய்ப்படிக்கப்படவில்லை. இலக்கணமுற் றும் உபேக்ஷைசெய்யப்பட்டன. பரீக்ஷைகளிற்றேறுதற்குவேண்டிய சிலசெய்யுட்களையும் அவற்றின்பொருள்களையும் மனனஞ்செய்து அவற் றிற் றேறிவிடுகின்றார்கள். அவர்கள் படிக்குங்காலத்திற் பலபாகம் எடுத் துக்கொண்டசாஸ்திரங்களைப்படிப்பதிலும், சிலபாகம் ஆங்கிலங்கற்பதி லும் செலவிடப்படுகின்றன. இவ்விதப்பயிற்சியின்பயனால், சர்வகலா சாலைகளிற் பிரதமவித்தியாபட்டம்பெற்றமாணவர்கள் நூலாசிரியராய் முற்பட யோக்கியதையற்றவராயினர். இவர்கள்கதியே இவ்வாறாக இவர்கள்தேறியபரீக்ஷையினும் கீழ்ப்பட்டபரீக்ஷைகளிற்றேறியமாண வர்களைப்பற்றிச்சொல்லுதல் மிகையாகும்."

இதனல, சர்வகலாசாலேகளிற்கற்பிக்கப்பட்டுவந்த தமிழ்க்கல்வி ஒருகல்வியல்லவென்பதை யூகித்தறகிடனுகின்றது.

இதுநிறக, தற்போது சர்வகலாசாலேப்பரீக்ஷைகளினின்று தமிழ்முதலியதேசபாஷைகள் முழுதும நீககிவிடபபட்டன. இதோடு நமதுபாஷைகளுககு ஏகதேசமிருந்தசெலவாககும இற்றுப்போய்விட்டது. இஃ திவ்வாறுநேருமெனறறிந்தோ ? அலலது எக்காரணம பறறியோ ? எலலாமவலல இறைவனருள் தமிழபிமானிகள்சிலர்மனத் துட்புககு இததகையசங்கமொனறைததாபிக்கவேண்டுமெனததூண்டினதுபோலும. இபபெருமபுணணியமாகிய தமிழ்சசங்கதலைதநிறுவிய மகானுகிய ஸ்ரீமான் பாண்டித்துரைசசாமித்தேவரவர்களும, அப்புண்ணியமிகுதிபபாடடாற சினனுணமுனனர்ச சுவாககவினபததைததுய்ப்பான்சென்றனாபோலும. அஃ தவ்வாறுயினும ‘செயறகரியசெய்வார் பெரியர்’ என்னும திருககுறட்கு இவா இலககாயினரென்பது தேற்றமாம.

நிற்க, இசசங்கம இசசிலலாணடிறறுனே எததுணைப் பெருங்காரியங்களேமுடிததிருககின்றதென்பது ‘செநதமிழ்ப’ பததிரிகையை முறையாய்ப்படிபபோராலும, அசசங்கததான்முததிரிககப்பட்ட ‘திருநூற்றநதாதி’, ‘வளேயாபதிசசெய்புடகள’, ‘நேமிநாதம’, ‘அகப்பொருள் விளககம’, ‘ஐநதிணையைமபதுரை’, ‘திணைமாலைநூற்றைமபதுரை’, ‘பனனிருபாட்டியல’ முதலிய நூலகளாலும இனிதறியககிடக்கின்றது. ஆனுல இசசங்கததின அருமைபெருமைகளேயும இசசங்கததாலாய பயனகளேயுமபற்றி எடுததுசசொலல நாம இங்கு முற்படவிலலே.

பததிரிகைபிரசுரித்தலில இதுகாறும எமது அனுபோகததிலவநத இரண்டொருவிஷயங்களேமாததிரம எடுததுசசொலலிமுடிககின்றோம. பொதுவாய்ப பததிரிகாசிரியாகள உலகிலுள்ள சகலவிடயங்களேயும் தெரிந்துகொள்ளவேண்டியவாகளாயிருககிறாகள். இது தேசபாஷைகளிற் பததிரிகைபிரசுரஞசெய்வோாககும பொருநதும.

அவ்வாறு தேசபாஷைகளிற பததிரிகைபிரசுரிப்போருக்குச சாத்தியபபடாதவிஷய மொன்றுளது. அது இஙகு வேண்டற்பாலதாய தமிழ்ககுமாததிரம எடுததுககொள்ளபபடுகிறது. அஃதியாதெனின்,

தமிழ்ப்பாஷையிற் பத்திரிகைபிரசுரிப்போர்க்குத் தமிழிற் சிலபகுதிக ளில் அபரிமிதமானவார்த்தைகள் அமைந்தும், மேனாட்டுப்பாஷைகளி லுள்ள சொற்களைத் தமிழில்மொழிபெயர்க்கும்பகுதியில் தக்கவார்த் தைகள் அமையாதிருத்தலால் அளவில்லாத்துன்பம் உண்டாகின்ற தென்பதாம். அது ஆங்கிலப்பத்திரிகைகளுட்பிரசுரமாகும் ‘ராய்ட டர்’ தந்திகளைமொழிபெயர்ப்பார்க்கு இனிதுபுலப்படுமென்க. பிறக தமிழில், பிரகிருதிசாஸ்திரம் (Physics) ரஸாயனசாஸ்திரம் (Chemistry) கணிதசாஸ்திரம் (Mathematics) முதலியசாஸ்திரங்களைச் சில பாகம் மொழிபெயர்க்கமுற்படும் ஆசிரியர்க்கும் இஃதொக்கும். ஆக லான் இவைகட்குத் தமிழிற் பரிபாஷையை ஏற்படுத்தவேண்டுவது இன்றியமையாததாகும். இவ்விஷயமாய் நமபத்திரிகையிற் சிலமுறை குறிப்பிட்டிருக்கின்றோம்.

பரிபாஷையென்பது, அவ்வச்சாஸ்திரங்களிற்சொல்லப்பட்ட சில விசேஷக்கருத்துக்களைவெளியிடப்பிரயோகிக்கப்படும் சொற்கள். இத் தகையபரிபாஷை நமசாஸ்திரங்களிலும் மேனாட்டாரவிருத்திசெய் திருக்கும் மேற்கூறிய பிரகிருதிமுதலியசாஸ்திரங்களிலும் உண்டு. இந்தப் பரிபாஷைக்காக ஏற்பட்டஅகராதிகள் ஐரோப்பாகண்டத்துப் பாஷைகளிலெல்லாங் காணப்படுகின்றன. அவ்வகராதிகளிற்காணப் படும் அநேகம்பதங்களுக்குப் பிரதிபதங்கள் தமிழையுள்ளிட்ட நம இந்தியபாஷைகளி லில்லை. நமநாடு விசேடமாய் விருத்தியடையவேண்டு மாயின் மேனாட்டாரால் அளவற்றபணத்தையும் சிரமத்தையுஞ்செல விட்டு விருத்திசெய்யப்பட்ட இச்சாஸ்திரங்களைத் தமிழில் எழுதியே தீரவேண்டும். அப்படியெழுதும்விஷயத்தில் இப்பொழுது இது அவசர மில்லை. அவைகள் தேவையிருக்கும்பொழுது பார்த்துக்கொள்ளலாம் என்றிருத்தல்கூடாது. ஏனெனின் உலகத்தில் நாகரிகம்படைத்ததேசங் களிலெல்லாம் பிரதமக்கல்வி கட்டாயப்படுத்தப்பட்டிருப்பதுபோல நமதேசத்திலும் பிரதமக்கல்வியானது கட்டாயப்படிப்பாக ஏற்பட வேண்டுமென்று தற்காலம் ஸ்ரீமான் கோகலே அவர்கள் கொண்டுவந்த கல்விமசோதா (Education Bill) சட்டமாகாவிடினும் கூடியவிரைவில் நமது காருண்யகவர்ணமெண்டாரால் அவ்விதச்சட்டத்தையுண்டாக் கிப் பிரதமக்கல்வியானது கட்டாயப்படுத்தப்படுங்கால் அவசியம்வேண் டற்பாலதாம். மேனாடுகளில் இலக்கணஇலக்கியப்பயிற்சியபிவிருத்திக்

கென்றே சிலசங்கங்களும் (Academies of literature) சாஸ்திரப் பயிற்சிக்கென்றே சிலசங்கங்களும் (Academies of Science) ஏற்பட்டு அவ்வத்துறைகளில் மிக்கமுயற்சியெடுத்தல்போல இத்தமிழ்ப் பாஷைக்கு ஏற்பட்டிருக்கும் இச்சங்கத்தாரும் மனத்தைப்பூரணமாகச் செலுத்தி ஐரோப்பாகண்டத்து அகராதிகளிற்காணப்படும்பதங்களுக்குப் பிரதிபதங்களைத் தமிழகராதியில் அமைக்கவேண்டுமென்று தமிழகராதிசபையார்க்குச்சிபாரிசுசெய்யவேண்டுமென்பதெமதுகோரிக்கை.

நிற்க, நமதுசங்கம் கவனிக்கவேண்டியவிஷயம் மற்றொன்றுண்டு. நாம் சின்னாண்முன்னர்ச் சென்னைக்குச்சென்றிருந்தபோது ஆந்திர வகுப்பைச்சேர்ந்தவர்கள் ஒரு ஸகலவித்தியாகோசம் (Encyclopaedia) ஒன்றை யியற்றியிருப்பதாய்க் கேள்வியுற்றேன். அவ்வித்கோசம் ஒன்று தமிழிலும் இயற்றப்பட்டிருக்குமானால், தமிழ் படித்த ஒவ்வொருவருக்கும் சிறந்தகருவியாகும். அவ்வாறு இயற்றுதற்கு வேறு பாஷைகளில் இயற்றப்பட்டிருக்கும் கோசங்களை மொழிபெயர்க்கலாமெனின், பொருட்செலவு அதிகமாதலானும், அந்தக்கோசங்கள் எப்பொழுதெல்லாம் மாற்றப்படுகின்றனவோ அப்பொழுதெல்லாம் நாமும் மாற்றவேண்டுமாதலானும் அது இயலாதகாரியமாம். ஆதலால் அவ்வாறு இயற்றக்கருதாது பலசாஸ்திரங்களினும் விற்பன்னர்களாயிருக்கும் நம் அறிவாளிகளைக்கொண்டு தனித்தனி எழுதுவித்து ஒரு கோசமாக்குவதே மேன்மைபயக்கும். ஆகவே மேற்குறிப்பிட்ட இரண்டு விஷயங்களையும் இச்சங்கத்தார் விரைவிற்கவனித்துப் பயனுக்குக் கொண்டுவரவேண்டுமென்று திருவருளைப்பிரார்த்திக்கின்றேம்.

எஸ். இராமநாதன்,
வைசியமித்திரன்பத்திராதிபர்,
தேவகோட்டை.

# சிவரகசிய ஆராய்ச்சி.

"திருமருவுகும்பகோணத்தில்வாழுஞ்
செல்வமிகுபலர்சனங்கள்சிவன்பாலன்பர்
பொருவிலசிவரகசியபுராணமாகும
பொருந்தும்வடமொழிதமிழாற்புனைவாயெனத்
தருமமிகுதவவணையாஞ்சைவன்தியாகர்
சந்நிதியில்வரிசைபெறுந்தலைமைபூண்டோ
னிருமைநலகாநர்ப்பிறந்தோனாரூரன்சே
யிசைகொளொப்பிலாமணிதானிசைத்தவாறே"

"மன்னாபுகழ்சரபோசிமகாராசராசன்
மாநிலங்காத்திடுநாளிற்றஞ்சைமாநகரிற்
றன்னுமேவிளம்பியுற்றமகரமதியைந்திற்
சோதிசிவரகசியமொப்பிலாமணிசொற்றமிழை
யிந்நிலத்தினரங்கேறச்செய்தனர்பொனமாறை
யெழிலசேருநதிராதவினைதீர்த்தானபாகைப்
புன்னைவனநாதனிவர்சைவநெறிவளர்க்கும
பூபாலரகனியெஙகும்புகழ்னிதோங்கிடவே"

எனனுந திருவிருததஙகள, தமிழசசிவரகசியததின மூனறும அமசததுப் பாயிரச்செய்யுட்களாம. மதுரைததமிழ்சசங்கவித்வான் ஸ்ரீமத-சே. ரா. அருணசலககவிராயரவர்களால, சென்ற ஜெயவருடம் அசசிடப்பட்ட இச சிவரகசியததில், கவிராயரவர்கள், தமதுமுகவுரையில இவ்வாசிரியரதுவரலாற்றையாவது, நூலியற்றியகாலம்முதலியவற்றையாவதுகூறாது பொதுபபட " இதை ஆககியோர் சிவானுபூதிசசெல்வராய்த திருவாரூரிலெழுநதருளியிருநத ஸ்ரீ ஒப்பிலாமணிதேசிகரென்றறிக. இப்பெருநதிருவாளர் ௪௦௯௦-பாடலிலமைதத சிவரகசியப்பெருநூல் இரண்டுகாண்டஙகளாகவகுக்கப்பட்டுத திரியாங்கிசை என்று பிரசித்தியடைந்திருக்கின்றது. இந்தநூல், தஞ்சையில் ஸ்ரீ சரபோஜி மஹாராஜா அவர்களது "திவ்யசமுகததில் அரங்கேற்றப்பட்டது" என்று கூறிப்போந்தனரேயன்றி, மற்றொன்றுங்கூறாதுபோந்தனர்.

இந்நூலாசிரியர், மூலாதாரக்ஷேத்திரமும், ஜனனான்முக்திக்ஷேத்திரமுமானதும 'திருவாரூரிற்பிறந்தார்கள் எல்லாருக்குமடியேன்' என்று ஆலாலசுந்தரப்பெருமான் திருவாய்மலர்ந்தருளியதுமான சிறை செல்வத் திருவாரூரின்கண்ணே அவதரித்தவர். சமலாலயக்ஷேத்திரத்தேபிறந்தவராயினும, இவருக்கு இந்நகருக்கணித்தான புதுப்பத்தூரென்னுங்கிராமமே யுரியதென்பது, இவர், சுந்தராசலமென்னும் திருநல்லூர்த்தலபுராணத்துச் சாற்றுக்கவியின்கீழ் 'இதுசொன்னான் புதுப்பத்தூர்த் தவவண்ணோத்திரத்தான் ஒப்பிலாமணியென்றறிக' என்று எழுதுவதுகொண்டு அறியப்படும். அஃதன்றியும இவர்பரம்பரையினர் இன்றும அவ்வூரில் வசித்துவருதலும் போதியசான்றும.

இவர் இலக்கணவிளக்கமமுதலிய நூல்களியற்றிய வைத்தியநாததேசிகர்பக்கல கல்விபயின்றாரென்பது, இவர்பாடிய *கும்பகோணப புராணத்துள்ள பின்வரும ஆசிரியவணக்கச்செய்யுளான் இனிதுவிளங்கும். அது வருமாறு:—

> "அவமொழிதென்னுள்ளத்தமிழத்மூழுநீஞ்
> சுவையெனத்தமிழ்வளஞ்சுரந்துநல்குமே
> தவமெனக்கயிலையிலிருந்ததேசிகன
> றவவணேவயித்தியநாதன்றாளகளே" என்பதாம.

மற்றொருக்கால் தம ஆசிரியர்பெருமையைக்கூறநினைந்து,

> "பொன்னெனுஞ்சடிலத்தெம்பிரான்நல்லூர்ப
> புராணமாக்கதைசெழுந்தமிழாற
> கன்னலுந்தேனுமமுதமுமதாக
> கனியுமபோற்கட்டுரைசெய்தான்
> பன்னுமெய்ப்புகழான்றவவணேமுதல்வன
> பாரெலாமவணங்குதெனகமலை
> மன்னவன்கல்விக்கடலெனச்செழித்த
> வயித்தியநாததேசிகனே" எனறும,

> "தவிப்பாற்குறுதுணைவனமீதாதன்றனயனந்தாப்
> புலிப்பாற்புலவன்வயித்தியநாதனபுகன்றசெஞ்சொற்
> கவிப்பாகந்தேவாகக்கவிப்பாகமபோலின்பங்காட்டுங்கற்றோர்
> செவிப்பாலுள்ளேசென்றுசித்தத்தினின்றுதித்திக்குமே" என்றும்,

* கும்பகோணத்தலத்துக்குப் புராணமபாடினர், அகோரமாதவன, ஒப்பிலாமணிதேசிகர், மீனாக்ஷிசுந்தரமபிள்ளையெனனு மூவருள், ஒப்பிலாமணிதேசிகரியற்றியது சிவரகசியத்துள்ளதாகும.

பாடியவர் இவரேயாம். மேற்கூறியவற்றால் இவ்வொப்பிலாமணிதேசிகர் இன்னாரிடம் கல்விபயின்றார் என்பது இனிதுவிளக்கப்பட்டது.

இவர், 'தியாகர்சந்நிதியில் வரிசைபெறுந்தலைமைபூண்டோன்' என்பதற்கிணங்க, வீதிவிடங்கப்பெருமானது வாயிலவித்துவானென்றும், தமிழ்மொழிப்பண்டாரமென்றுஞ் சொல்லப்பெறுவர். பங்குனித் திருவிழாவுக்கு, முதற்றினத்துத் துவஜாரோகணமானவுடன் பெரிய கணக்கப்பிள்ளையைக்கூவிய ஓலையெழுதுவித்துப் பின்னர்த் தமிழ் மொழிப்பண்டாரத்தைக்கூவியத் திருமுகமெழுதுவித்துப் பலர்க்கும் அனுப்புவது இன்றும் நடைபெற்றுவருமவழக்கமாம். அன்று இவர் களைச் சிவிகையிலேற்றுவித்துத் தியாகேசர்சந்நிதியினின்றும் வீடு சேர்த்துவருகின்றனரென்ப.

இவர் திருவாரூரிற்றங்கியபிறகு வெகுகாலம் கும்பகோணக்ஷேத்திரத்திலேயே தங்கியிருந்தாரென்று தெரிகிறது. கும்பகோணபுராணம் பாடியரங்கேற்றிய கி. பி. 1704-முதல் சிவரகசியம்பாடியரங்கேற்றிய 1718-வரை அவ்வூரிலிருந்திருப்பாரென்பது சில காரணங்களாற்றெளியப்படும். ஆயினும் வைத்தியநாததேசிகர், மலையாளம் திருநெல்வேலி முதலான இடங்கள் சென்றுவந்து திருவாரூரிற்றங்கிய முதுமைப்பருவத்தில் அவரிடம் ஒப்பிலாமணிதேசிகர் கல்விபயின்றவரென ஊகிக்க வேண்டியிருக்கிறது. இவ்வைத்தியநாததேசிகர்பரம்பரையினர் 75, 80, 82 வயதுக்குப்பின்னரே காலகதியடைந்தவர்களென்பது கர்ணபரம்பரைச்செய்தியாவதோடு கண்கூடாகக்கண்டதுமாம்.

இந்நூலரங்கேறியகாலம், "மன்னர்புகழ்சரபோஜிமகாராசராசன் மாநிலங்காத்திடுநாளிற்றஞ்சைநகர்தனிற் றுன்னுமேவிளம்பியுறுமகர மதியைந்தில்", என்பதால், தஞ்சையையாண்ட மகாராஷ்டிர அரசர்களுள் முதற்சரபோஜிமகாராஜாவினது ஆட்சிக்காலமாகிய கி. பி. 1711 முதல் 1728-க்குள்வரும் ஏவிளம்பிவருஷமாம். இது சாலிவாகனசகம் 1640-ல் வருகின்றது. இதனோடு 78 கூட்ட ஆங்கிலஆண்டு 1718 ஆகும். சரபோஜிமன்னர் பலராகலின், ஏவிளம்பிவரப்பெற்றவரதுகாலமும் நமது ஆசிரியர் இருக்கக்கூடியகாலமும் இப்போதுகூறப்பட்ட காலமேயாக இவர் முதலாமசரபோஜியாவர். இவரதுபிதா சகசிமஹாராஜாகாலத்துத்தான் ஆசிரியர் கும்பகோணப்புராணத்தை அரங்

கேற்றியுள்ளார். ஆகவின் இவர் சாலிவாகனசகம் 1640-ல செல்லா நின்ற ஏவிளமபிவருடம தைமீ 5உ ஸ்திரவாரம திரிதியைதிதி சதய நக்ஷததிரம சிததிநாமயோகமும அமிர்தயோகமுமகூடிய சுபதினததில சரபோஜிமன்னரவைககளததே, பொனமாறைத தீராதவினைதீரததானும, பாகைப் புன்னைவனநாதனுஙகேடப இநநூலை அரஙகேற்றினாரென்பது பெறப்படுகிறது.

சோதிஷகணிதபபடி ஏவிளமபிவருஷபபிரவேசம, அதற்குமுற் பட்ட துர்முகிஹூ பஙகுனிமீ 30உ சனிககிழமை 44-நாழிகை 16 விநாடி 15-தாப்பரைககுபபிறகக, அடுததகினமான ஞாயிறறுக்கிழமை முதற்றேதியாயிற்று. வருஷபபிரவேசமானநாளுககு நாலாநாளே தைமாதபபிரவேசமாகுமாதலால, சனியினின்றும நான்காநாளாகிய செவ்வாயககிழமை பகல 23-நாழிகை 46-விநாடிக்குத் தைமாதபபிரவேசமாயிற்று. அதினின்றும ஐநதாநாள் ஸ்திரவாரமாயிறறு.

இலக்கணவிளககபரம்பரை,
**திருவாரூர்-சோமசுந்தரதேசிகன்.**

# தமிழபிவிருத்தி.*



உலகததுள்நிலாவிவருகின்ற பலவகைபபடடபாஷைகளில, நநதம செநதமிழ்ப்பாஷையானது ஒரு அழகியபாஷையாகும. திராவிட பாஷைகளிற புராதனமானதும திருததமானதும திருவுற்றுவிளங்கு வதுமாகிய நநதமசெநதமிழ் நாளடைவிற றேயவுறுது, மேலுமமேலும ஓஙகி, உன்னதமடையசசெய்யவேண்டியது உததமாகளுடையகடமை யாகும. பாஷையைவளாககுஙகடமை பாஷையைபபேசும ஒவ்வொரு வருக்கும பொறுபபாயிருககிறதெனபதை மறுககககூடியவா யாவா ? பாஷையைததுறநதாற பாவிகளாவோம, பரதேசிகளாவோம. நமது பாஷை யபிவிருததியடையாது நாளுககுநாள், குன்றி நலமறறுபபோகு மாறுல, நாமும குன்றி நலமறறு பலமறறுபபோவோம! அறிவை

* இது, மதுரைததமிழ்ச்சஙகததின பதினமூனறும்வருஷகொண்டாடடததிற் படிக்கப்பெறறது.

வளர்த்து, ஞானத்தைப்பெருக்கி, இகவிஷயத்திலானாலும், பரவிஷயத்திலானாலும், ஏற்றமடையும்நோக்கமுடைய அறிவாளிகள் எல்லோருக்கும் ஆத்துமாவைவிடப் பாஷையானது அரியதொரு பொருளாகும்! பாஷையைவளர்ப்பதானது கண்ணில்லார்க்குக் கண்ணளித்து, உணர்விலாருக்கு உணர்ச்சியைக்கொடுத்து, அறிவுடன் கலந்த ஆனந்தத்தை அபரிமிதமாய்த்தந்து, எங்குப்பார்த்தாலும் இங்கிதமே, எதைப்பார்த்தாலும் இன்பமயமே, எல்லாம் விளக்கமே, எல்லாம் ஒழுக்கமேயாக, எல்லாவற்றிலும் உயர்வையளிக்கும்.

பாஷையைவளர்த்தலானது மேலான நமது கடமையாயிருக்கின்றது. எல்லாவிதமான சீர்திருத்தங்களுக்கும், எல்லாவிதமானநன்மைகளுக்கும், எல்லாவிதமான ஏற்றங்களுக்கும் நமதுபாஷையைவளர்த்து இலக்கியத்தைப்பெருக்கலே நாகரிகமானமுறை, நன்மையானவழியென்று நாமெல்லோருமுணர்ந்து அதைக் கடைப்பிடித்தொழுகவேண்டும். இலக்கியத்தையொழித்து இகபரசாதகத்தைநாடுவது, அஸ்திவாரமில்லாது அரமனைகட்டமுயல்வதுபோலாம்!

ஜனசமூகச்சீர்திருத்தமென்கிற(Social Reform)விஷயத்திலானாலும், துரைத்தனத்தாரிடம் நம்குறைகளைக்கூறி அவைகளைப்போக்க முயலும்விஷயத்திலானாலும், வேறெந்தவிஷயத்திலானாலும், நாம் சரியாகநடந்து, நம்கோரிக்கைகளை ஈடேற்றிக்கொள்வதற்கு, பாஷை உதவியில்லாவிடின், பலனென்பது கிட்டவேகிட்டாது. இதையறியாது இங்கிலீஷிலேயே தலைமுழுகியசிலரோ, அபிமானமென்பதை யறவே யொழித்து, ஆகாயத்திலிருந்து அப்போதுதான்குதித்ததுபோலும், சீமையிலிருந்து அப்போதுதான் இறங்கினதுபோலும், தலைகால்தெரியாது, சொந்ததேசத்தையிகழ்ந்து, தந்தம்பாஷையைமறந்து, "பெற்றவயிற்றினைப்பெருநோய்செய்வான்பிறந்தார்களே" யென்று பெரியாரொருவர் திருவாய்மலர்ந்தபடி, வீணாரவாரஞ்செய்து போராட்டம் விளைப்பார்களேயன்றி, உத்தேசித்தகாரியத்தை வெகுலேசாய்ச்செய்ய அவர்களாலாகாது.

ஆங்கிலநூல்களைவாசித்த அற்புதர்கள் அநேகர், மேதக்க அபிப்பிராயங்களையும், மேன்மையான நோக்கங்களையும் சீர்திருத்தங்களையும் சிறப்புக்கொள்கைகளையும், மேடையிலேநின்று ஆங்கிலத்திற்பேசிவிட்டு,

மனத்தாலும் வாக்காலும் நடத்தையாலும், மாண்புடைய தமது சொந்தப்பாஷையையிகழ்ந்து, வீட்டிற்குவந்ததும் அவர்கள்பேசியதை யெல்லாம் ஏட்டுச்சுரைக்காயாக்கிவிடுகிறார்கள். ஏன்? தந்தைதாயர் பேசுவதும் தமிழ், தாரம்பேசுவதும் தமிழ், கொஞ்சிக்குலாவும் குழந்தைகள்பேசுவதும் தமிழ், மக்கள் மனிதர்கள், உற்றாருறவினர்கள் முதற் பலர்பேசுவதும் தமிழ்! இவ்வாறு சுற்றியுள்ளவைமுற்றிலும் தமிழ்மயமாக நடுவிலநின்ற நீர் நும்கொள்கையை நாடகம்புரிந்து நாட்ட வேண்டுமென்றால், உமக்குமாத்திரந்தெரிந்து, மற்றோருக்கெல்லாம் மறைந்துகிடக்கும் அன்னியபாஷையால் அது சாத்தியப்படுமோ? ஒரு போதும் சாத்தியமாகாது.

நமது இனிய தமிழ்மொழிவழியாக நம்மனோருக்கு உண்மைகளை யெல்லாமெடுத்து உளம்பதியக்கூறினோமான, உண்மைவிளங்கும், நன்மைவிளையும்!. சீர்திருத்தமென்ற செருப்படி, புதுவழக்கமென்றால் விளக்குமாற்றுப்பிரயோகம் என்று கண்மூடிவழக்கமெல்லாம் மண் மூடிப்போகவொட்டாதுகாத்து நாமெல்லாம் கரையேறவொட்டாது கடாக்ஷம்புரியும் பாட்டிக்கிழவிகளுக்கும் அவர்களைப்பின்பற்றும் வயதுக்குமரிகளுக்கும், சுலபத்திலறியலாகும் தமிழ்வழியாகப் போதனை செய்து புத்தியைத்திருப்பினால் ஆயிரம்வருஷத்திலாகாதகாரியம் அரை நிமிஷத்தில் எளிதில்முடிந்துவிடும்! இதனையறியாது, எவ்வளவெவ் வளவோ பிரயத்தனங்கள்செய்து வாய்ப்பறையாகவும் நாக்கடிப்பாகவும் இல்லாதசீர்திருத்தங்களைச் சொல்லாலேமுழக்கிவிட்டு, வீடுசென்றதும் கோடிநடப்பது, என்ன அவலக்ஷணமானசெயல்! என்ன விகாரமான நிலைமை! சொன்மாத்திரத்திலநிற்கும் சீர்திருத்தக்காரர் (Lip Reformers) என்று கேலிசெய்து நாலவர் நகைப்பதற்குக்காரணம், வெளியிற் புருஷர்கள்சொல்லுகிறபேச்சை வீட்டில் ஸ்தரீகள் நடத்தவொட்டாமையேயாகும்.

உபந்யாஸமேடையில் ஒருபுருஷன் உன்னதமாய்நின்றுகொண்டு, ஜாதிவித்தியாசம் காரணமாக ஒற்றுமைவிடுத்து வேற்றுமைகாட்டக் கூடாதென்கிறான்! வீடுவந்ததும், பாட்டிக்கிழவி, குலம் கோத்திரம் இம்மியளவும் தவறக்கூடாதென்கிறாள்! பெண்கல்விவேண்டுமென்கிறான் ஒருவன், பெண்கல்வி கூடாதென்கிறாள் ஒருத்தி! இப்படி, பசியெடுக்கிறதென்றால் பட்டினிபோட்டும், புளியேப்பம்வருகிறதென்றாற் பெரு

விருந்தளித்தும் தாறுமாறுகள்செய்த சிகண்டியைப்போல, எந்தக் காரியமும் முடியவொட்டாது, எந்தச்சீர்திருத்தமும் நிகழவொட்டாது அஞ்ஞானத்திலேயே மேலும்மேலும் அழுந்தி, நாமெல்லோரும் தவிக்கச்செய்யும் காரீரதனங்களுக்கு நம்பாஷையிலேயே கல்வியளித்தால் நல்லசீர்திருத்தங்களெல்லாம் நானகுநிமிஷத்தில்வந்துநேரும்.

குழந்தைகளுக்குச் சீராட்டித்தாலாட்டிப் பாலூட்டும்போதே பாஷையையுமூட்டிப் புத்திபுகட்டத்தகும் புண்யவதிகளுக்குக் கல்வியறிவுபுகட்டாது, கண்மூடித்தனத்தையே பெருக்கவிட்டுவந்தால், தேசம் எப்படி க்ஷேமமடையும்; நேசம் எப்படி நிர்மலமாயவிளங்கும்; உண்மை எப்படி உறுதியாய்நிலைக்கும்? பாதிப்பெயர் அஞ்ஞானாந்தகாரத்திற்பரிதவித்துநிற்க, மற்றப்பாதிப்பெயரால் மஹிமைகளெல்லாம் விளையும் என்று மணப்பாலகுடிப்பது எவ்வண்ணம் பொருந்தும்? பெண்களமாத்திரமல்ல, புருஷர்களிலும் எத்தனைபெயர் கலவியறிவில்லாது காலங்கழித்துவருகின்றார்கள்! கோடிக்கணக்கினராய்வாழிநிற்கும் கலவியறிவில்லார்களநடுவில், அத்திப்பூத்ததுபோல அங்கொருவர் இங்கொருவர், கல்வியறிவுப்பெருக்கத்தாற கவினமிகவடைந்து, இயற்கைப் பெருமவளத்தால மனத்தூய்மைமிகப்படைத்துவிளங்கும் சிலரால மாத்திரம் என்னகாரியம்செய்யமுடியும். அவர்கள் செய்யககூடியதெல்லாம் அறிவை அபிவிர்த்திசெய்வதேயாகும்! நம தமிழநாட்டாரனைவருக்கும் நல்லறிவுச்சுடர்கொளுத்தவேண்டுமாயின், நம தாய்ப் பாஷையாகிய செந்தமிழவழியாய்ச் செய்யவேண்டுமேயன்றி, அன்னிய பாஷையாற்செய்யமுயறல் அசம்பாவிதமாயேமுடியும். தாயினுதரத் திருந்து தரையில ஜனித்த அன்றுதொட்டு, நாம ஒவ்வொருவருடனும நன்குபழகி, அளவளாவி, கருத்துக்களையெல்லாம திருத்தமாயுரைக்க நேர்ந்த நம செந்தமிழ்வழியாகவே நாம அபிவிருத்தியடையமுயல வேண்டுமேயன்றி, வேறு பாஷையை வீட்டிற்புகுத்தக்கருதுவது வீணயோசனையேயாம!

உருடு (Urdu)பாஷையை நமபாஷையாய்ச்செய்துகொள்ளவேண்டுமென்றுகருதினார், லௌகிகமேதாவியார் ஒருவர்! நமக்கு ஒன்றுமே தெரியாத 'உருடு'பாஷையானது, செந்தமிழ்தன்னைச்சிதறவடித்தது, நம வீட்டிலும் வாசலிலும் தொட்டிலிலும கட்டிலிலும பெண்கள்

பேச்சிலும் குழந்தைகள் மழலையிலும் பிரவேசிக்கக்கூடியதாயின், ஏற் கனவே அதிகாரஞ்செலுத்தும் இங்கிலீஷ்பாஷையே நம் சுயபாஷை யாகுதல்கூடாதா? ஆங்கிலபாஷையே அரசபாஷையாயிருந்தும் நம் சொந்தபாஷையாகக்கூடாததாயிருக்க, வேறுபாஷையா நமது சொந்த பாஷையாகக்கூடியது?

ஆயிரக்கணக்கானவருஷங்களாய் ஆயிரக்கணக்கான அரியபெரிய நூல்களில் வேரூன்றிக்கிடக்கும் வியன்பெருந்தமிழ், சுமார் இருநூறு லக்ஷம் ஜனங்களாற்பேசப்பட்டுவரும் இனிய செந்தமிழ், ஒருவரிருவரா லொழிக்கப்படுமென்றுவது, சிலநாளகளுக்குள் சிதைக்கப்படுமென்று வதுநினைப்பதைப்போற பித்துப்பிடித்தகொள்கை எத்திக்கிலும் காணக்கிடைக்காது! நாம் விர்த்தியடைந்து முன்னுக்குவரவேண்டு மாயின், நமது சொந்தபாஷையாகிய சுந்தரத்தமிழை இந்தக்காலத் திற்கியைந்தவண்ணம் முந்துறச்செய்தலவேண்டும்; அல்லது தமிழென் கிறபெயரையே தள்ளியொழித்துத் தமிழையேபழித்து இராமாயண மாதிய பெறலருங்காப்பியங்களைக்கிழித்து நாமும் நமமைத் தமிழ ரெனக்கூறாது, வேற்றுருவினராய், வேறுகொள்கையினராய், வேறு ஜாதியினராகவே மாறிவிடுதலவேண்டும்! இருநூறுலக்ஷம் ஜனங்களும் இவ்வாறுகமாறி இவர்களுடைய ஆசசாயகரமான அரிய நூல்களும் மறைந்து, ஒழிந்துபோவதென்றால் அது சாத்தியமான காரியமா? அது நினைக்கத்தக்கவிஷயமா? அவ்வாறு மாறக்கூடுமென் றும், ஏதாயினும் வேறொருபாஷையை ஏற்றுக்கொள்ளக்கூடுமென்றும் நினைப்பதுபோன்ற ஆபாஸமானகொள்கை அகிலத்திற்கிடையாதென் பது என்னுடைய அபிப்பிராயம்.

தஞ்சைஜில்லாவிற சிலவருடங்களுக்குமுன், மஹாராஷ்டிர அதி காரம் மாட்சியுற்றிருந்தகாலத்தில் ராஜாங்கவிஷயங்களில் மஹாராஷ் டிரபாஷையே மாண்புற்றிருந்தும் கணக்குமுதலியவை மஹாராஷ் டிரபாஷையிலேயே வைக்கப்பட்டிருந்தும், அப்பாஷையானது தமிழை அழிக்கவும் நிலைபெற்றுநிற்கவுமில்லையென்று அநேகர்சொல்லக்கேட் டிருக்கிறேன். நமதுகொள்கைவலியுறுதற்கு நன்கமைந்த ஆதாரங் களில் இதுவுமொன்றாகும் என்று நினைக்கின்றேன்.

நிற்க, மேற்கூறியபடி எல்லாச்சீர்திருத்தங்களுமுண்டாவதற்கும் பற்பலஜாதியாரும் பற்பலவிதமாய், நாகரிகத்திலும், அறிவாற்றல்களிலும், பக்திவைராக்கியங்களிலும் உன்னதநிலையடைவதற்கும் செந்தமிழ்ப்பிவிர்த்தியே சிறந்தசாதனமாம். நம்பாஷையில் அபிமானமும், நம் தேசத்தில் விஸ்வாசமும் நமக்குக் கட்டாய முண்டாகவேண்டும்! இந்த அபிமானமும் இந்தவிஸ்வாஸமும் நமக்கு இல்லாதவரைக்கும் நாம் மனிதரல்லா என்றே மதிக்கப்படுவோம், இகழப்படுவோம்! நம்பாஷையில் நமக்கு அபிமானமுண்டாய், நம்பாஷையை நாளடைவிற் காலத்திற்கேற்றவாறு சுவினம்பெறச்செய்தால், பெண்களும் பேதையரும் உண்மையையுணரவும் தீமையை யகற்றவும் திறமுள்ளவர்களாவார்கள். அன்பார்ந்த நமது இராசாங்கத்தார் அரிய உரிமைகளை நமக்கு அருளோடுகொடுக்கவும், ஜனசமூகச்சீர்திருத்தங்கள் (Social Reforms) நன்கு நிறைவேறவும், புத்திபெருகவும் யுக்திவிளையவும், யந்திரங்களின் தந்திரங்களும், இந்தப்பிரபஞ்சத்தின் எண்ணில்லா விநோதங்களும், விஞ்ஞானசாஸ்திர (Science) வீறுபாடுகளும், வேறுபாடுகளும் மனதிற்பதிந்து மாட்சியுற்றுவிளங்கவும் வழியுண்டாம். ஆகவே, நமதுதமிழ்ப்பாஷையை நாளுவிதங்களினும் நளினமுறச்செய்வதே நமது கடமையாகின்றது.

நமது செந்தமிழ் ஏற்கனவே மேன்மையாய்விளங்கி மின்னித்துலங்குவது. திராவிடபாஷைகளில் திருத்தமுற்றதும் பெருமையடைந்ததும் நமதுதமிழேயாகும்! வடமொழியாகிய ஸம்ஸ்கருதத்துடன் தென்மொழியாகியதமிழை ஒருமைப்படுத்தினர்கள் முன்னோர், பெருமைப்படுத்தினர்கள் பெரியோர்! கீர்வாணவேதத்தைக் கேசவன்பின்னுக நிறுத்தி, திராவிடவேதமாகிய செந்தமிழ்வேதத்தை முன்னுக அமைத்தார்கள் மூதறிஞர்! தெலுங்கருக்கு வேதம்வேண்டுமானால், திருவாய்மொழிக்குவரவேண்டும், கன்னடருக்கு வேதம்வேண்டுமானால் தேவார திருவாசகங்களுக்குப்போகவேண்டும். ஆரியர்களும் தமிழின் பெருமையை அறிந்தேயிருந்தார்களென்று நினைக்க ஆதாரங்களிருக்கின்றன! அறிந்ததோடுமாத்திரமன்று, அரிய தமிழை உரிமையோடு ஆதரித்துப் பொன்னேபோற்போற்றியுமவந்தார்கள். வைணவசம்பிரதாயசரித்திரத்தில் இவையனைத்தினையும் காணலாம்.

இதனால், பன்னெடுநாளாய் நமதுபைந்தமிழானது மிகுந்தஸ்லாக்கியமாகக் கொண்டாடப்பட்டுவந்தது என்பதும், இந்தியாவின் இருபெரும்பாஷையி லொருபெரும்பாஷையாய்ப் பாவிக்கப்பட்டுவந்தது என்பதும் நன்குவிளங்குகின்றன. தமிழின் இனிமையைத் தமிழரே அறியவேண்டும், தமிழுணர்ந்தவரே ஊகிக்கக்கூடும்! தமிழின்கட்காணப்படும் கவிதாசாதுரியங்களும் கற்பனாவிசேஷங்களும், இதரபாஷைகளிற்காணப்படுவனவற்றிற்கு இளைத்தனவேயல்ல. புராதனமாய் நம தமிழிற்பொருந்தியுள்ள உத்தம நூல்களின் உயர்வைக்கூறுவான் தொடங்கி, சென்னை ராஜதானிக்கலாசாலை (Presidency College)யில் பிரசிடென்சி மாஜிஸ்டிரேட் (Presidency Magistrate) ஒருவர் அக்கிராசனத்தின்கீழ், உபந்யாஸஞ்செய்தவமயத்து, அவைகளை யொருவாறுதிரட்டி அழகிய நந்தவனமாய்வருணித்திருந்தேன. அதை இவ்விடத்து ஆண்டுசெலவது அவசியமெனத்தோன்றுகிறபடியால், அதைச் சிறிதுகூறி அப்பாற்செலலுகிறேன்!

நமது அமிழ்தினுமினிய தமிழ்மொழிக்கு, சிங்காரமமிகுந்த அலங்கார நந்தவனமொன்று நாம புதிதாயமைப்பதன்முன்னர்ப் பண்டைக்காலந்தொடங்கிப் பல்லாயிரம்வருடங்களாகக் காற்றிற்கும் மழைக்கும அனலுக்கும அபாயங்களுக்கும் தப்பியும், ஒருவகையாயிருந்தது பலவிதமாய் மாறுபட்டும இப்போது நாமகாண்கிற **தீந்தமிழ்ப்பூந்தோட்டம்** எவ்வண்ணம்விளங்குகின்றது என்பதைச் சிறிதாயினுங் கவனித்துச் செல்லவேண்டியிருக்கிறது.

“ஆஹா! அதனுடைய அழகும் அமைப்பும் நனிமிகப்பெரிதே! அதனுடைய அளவும எல்லையும அயனாலுங்கூறலாகாத அவ்வளவு பெரிதாய்விளங்குகின்றன. அப்பூங்காவின் உட்புறத்தி னொருபால் அரிசந்தனம, கற்பகம், சந்தானம, மந்தாரம, பாரிசாதம என்னும வந்திக்கத்தக்க ஐந்து பெரியவிருக்ஷங்களாய் ஐம்பெருங்காப்பியங்கள் விளங்குகின்றன. அவைகள் சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன. அவைகளின் நீழலிற் கொழுத்துத் தழைத்துப் பூத்துப் பழுத்த அநேகஞ்செடிகளும் கொடிகளும மரங்களும காணப்படுகின்றன. இவ்விடத்தை விட்டு இன்னொருபுறஞ் செல்லவும், ஆங்கே மனதையிழுத்து மாயஞ

செய்து சல்லாபஞ்செய்யும் பொல்லாத மல்லிகையாகவும், முல்லையாக வும், சோகந்தீர்க்கும் அசோகமாகவும், ஏதமின்றி ஓதினோர்தம்மையும் வாதனைசெய்யும் சூதமாகவும், காமனைவெருட்டும் தாமரையாகவும், கோவைத்துறைகளும் பற்பலகீர்த்தனைப்பதங்களும் குவிந்துகிடக்கின் றன. அவ்வாறிழுக்குமனத்தையும் அழைத்துக்கொண்டே பிறிதொருபக் கம்போக, அவ்விடத்திலே என்னையுமவிழுங்கி என்மனத்தையுமவிழுங்கு வேனென்று நன்றேயியற்றும் கொன்றைமாமலராகவும், களவுசெய்த கண்ணனைக்காண உளவுகாட்டி உற்றிடும் துளவச்செடியாகவும், ஆத்தியாகவும், அலரியாகவும், பத்திரமாகவும், புஷ்பமாகவும் பற்பலவித மாய் உற்பவித்துள்ள திவ்யப்பிரபந்தமும் திருவாசகமும் தேவாரமும் திருவருட்பாவுமாய அநேகமத்திரிசமைமானை, ஆ! அங்குநின்றும் சற்றுத் திரும்பினால், அப்பூந்தோட்டத்தின் நடுவில் ஆலமரம்போன்று மிகவும் பெரிய விருக்ஷமொன்றுதெரிகிறது! அதோ அண்ணாந்துபார்த்தால் ஆகாயத்தை அளாவுகிறது. குனிந்துபார்த்தால், பாதாளத்தளவும் போய் முன்னரும்பின்னருமாக வேரோடிச்சென்று பூமியைப்பிளந்த சாமியையொத்திருக்கிறது. அதனிடம் எல்லாப்பூக்களும் உல்லாச மாய்ப்படர்ந்து சொல்லவொண்ணு அழகைத்தருகின்றன. அதன் அடி வாரத்திலுள்ள பள்ளமானது ஜலாதாரங்கொண்டிலாவுவதால் ஆங்கே கமலமும் குமுதமும் விமலமாய விளங்கவும், அம்மரத்தின் உடலிலும் இலையிலும் கிளையிலும் வீழ்திலும் தொற்றித் தொடர்ந்து பற்றிப்படர் ந்து எல்லாப்பூக்களும் உல்லாசமாய்ப் பரிமளிக்கவும், போதும்போதா தற்கு ஆகாயத்திலவிளங்கும் நக்ஷத்திரங்கள்போல மரத்தினுடைய அதிகப் பிரகாசமானபூக்கள் சொலிக்கவும், எல்லாவனப்புமமைந்த அவ்வரியபெரியமரமே தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லையென்னும்படி ஓங்கிப்புலக்களந்த தீங்கவிக்கம்பனாற்செய்யப்பட்ட இராமாயணமாவது!

அருக்கமாகக் கூறுமிடத்து, நமசுந்தரத்தமிழின் நலமிக்கநூல்களில், ஆழ்வார்கள்பன்னிருவர் அருளிச்செய்த அற்புதநூல்களும் நால்வர்திருவாய்மலர்ந்த ஞானப்பாடல்களும், கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பன் நமக்குத்தந்த கவிதாரத்னங்களும் மேதினியெங்கும் மின்னித்துலங்குபவையாயிருக்கின்றன. பக்திரசத்தைப் பாகெனவூற றும் பக்தர்கள்தமிழ்முன்னும், கற்பனாலங்காரத்தைக் கற்கண்டெனச் சொரியும் கம்பன்கவிமுன்னும் எந்தப்பாஷைநூல்தான் எதிர்த்து

நின்று ஏகாதிபத்தியஞ்செலுத்தும்? இன்னிசையோடுதுலங்கும் நன்னயத்தமிழாகும் நாலவாதமிழ், அற்புதத்தமிழாகும் ஆழ்வார்தமிழ், அலங்காரத்தமிழாகும் கம்பன்தமிழ், நீதியைப்போதனைசெய்யும் வள்ளுவர்போன்ற வேதத்தமிழ்,—இவைகளையும், கனனெருசையும் கரைவித்து, வனனெருசையும் வளப்படுத்திப் பக்திக்கடலில் நம்மை மூழ்கச்செய்யும் பின்னோர்சிலரது பெருமையுள்ள நூல்களையும் நமதமிழ்ப் பாஷையானது பெற்றிருக்கிறவரை நாகரும் இலக்கியவனமையில நம்மைக் குறைவாய்நினைத்தல முடியாது.

கம்பனபாடல்களினகருத்தையறிந்தும், கம்பனபாடல்களின்சொற்சுவைதெரிந்தும், கம்பன்பாட்டைக் காதலிக்காதவர் யாவரிருக்கக்கூடும்! கம்பனைக்காட்டிலும் கவித்திறமவாய்ந்தவர்கள் யாரிருக்கிறார்கள். ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியரும் (Shakespeare) மில்டனும் (Milton) கிரிக்குபாஷையில ஹோமரும் (Homer) லாடின் (Latin) பாஷையில விர்ஜிலும் (Virgil) ஸமஸ்கிருதத்தில் காளிதாசனும்போலவே, தமிழில அற்புதக்கவிதாசாதுரியமவாய்ந்தவன், கம்பனையாவன்? ஷேக்ஸ்பியர்நாடகத்தில அங்குமிங்கும் அற்புதம காணலாம்! கம்பன் பாடல்களிற சொல்லெல்லாம நவரத்தினம்! இயலெல்லாம இசைவளமுடையது! போக்கெல்லாம நாடகப்போக்கு! நாடகமெழுதாமலே நாடகச்சுவைகாட்டினன் நந்தம கவிச்சக்ரவாத்தியாம கம்பன! பக்திப்பாடல்களும் பரவசமவிளைக்கும்பாடல்களும் செந்தமிழிற போலவே, ஸமஸ்கிருதத்திலிருக்கின்றனவென்று நினைக்க இடமில்லையென்றார் ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர். (Justice Sadasiva Aiyer) தறகாலம அது ஜீவபாஷையாயில்லாதிருப்பதாலே அப்படியிருக்கக்கூடுமென்றுநினைப்பதற்கு நியாயமிருக்கிறது.

மேற்சொன்னவைகளாலே, கவித்திறத்தில் நந்தம செந்தமிழ எந்தப்பாஷைக்குமகுறைந்ததாயிருக்கவில்லையென்று ஏற்படுகின்றது. ஜகத்லமபுகழும ஷேக்ஸ்பியரைவிடக் கவித்தலமபுகழும கம்பன் எவ்வளவோ மேன்மையானவனெனபது எனனுடைய அபிப்பிராயம். நந்தமபெருமை யிவ்வாறுசு, நாம இன்னும முன்னுக்குவரவேண்டுவதற்கும் நம்தமிழ் இன்னுமசெமமையடைவதற்கும், தறகாலவேறுபாடுகள்சமபந்தமாகத் தறகாலம நம்மிடமகாணப்படுமகுறைகளின்னவெனக்குறித்தறிதல்வேண்டும். நாமவிர்த்தியடைவதற்கு நம்பாஷை

விர்த்தியடையவேணடும். பாஷைவிர்த்தியடைவதற்கு இலக்கியம் மேன்மையுறவேண்டுமே! இலக்கியம் இனறேல் இலக்கணமில்லை! இலக்ஷணமில்லாவிட்டால் அவலக்ஷணமே எல்லாமென்பது சொல்லாமேயமையும.

நமபாஷை விாததியடை வதறகு நான்குததடைகளுண்டென எனக்குத்தோனறுகிறது.

முதலாவது — அருமையற்றசுவடிகளுக்குப் பெருமை யேற்படுவேது. சிலவருடங்களுககுமுன்வநத என்ஸைகளோபீடியா (Encyclopœdia) என்னும விததியாமணடல வியனபெருநூலார், தமிழைபபறறிப்பேசிககொண்டுவருமபொழுது, தறகாலம, தமிழ்ப்புஸதகங்கள் அநேகம வெளிவருகின்றனவெனறும் ஆனால, அவைகளிற பெரும்பாலன சத்தையறற சொததைசசுவடி (trash) களாயிருக்கின்றனவென்றும் கூறுகிறார். அன்னியர்கள் கூறுகிறார்களெனறு அவர்கள் மீது ஆயாசப்படுவது அதாமமானகாரியம. என்ஸைக்ளோபீடியா (Encyclopœdia) வில் மேறசொனனவாறுகூறபபட்டிருக்கிறது, எவ்வளவோ சரியெனறு எனக்குததோன்றுகிறது. நல்லபுஸதகங்களுக்கு நலலபிமானமேறபடாதிருக்க, நலமறறசுவடிகளுக்குப் பலமேற்படுவது தேசததின் அபிவிருத்தியை நாசஞ்செய்யும்வழியாகும. ஜனங்களுக்கு இலககியததிற சரியானருசியேறபடாதிருப்பதே மேறசொன்ன சிறுநூல்களுககுமேன்மையுண்டாகச்செய்கின்றது. அபிப்பிராயங்களுட ஆபாஸம, சொறகளுபயோகித்தலிலும் (stupidity) மூடத்தனம இவைநிறைந்துள்ள சுவையறறபுஸதகஙகள புறறிவிருந்து ஈசல்புறபபடுமாறுபோல் மேலும்மேலும்வெளிவந்து, ஜனங்களுக்கு இயறகையிலுள்ள சொறப அறிவையுமபறக்கடிததுவிடுகின்றன! ஒருநாம மோருருவமில்லார்க்கு ஆயிரம்திருநாமம்பாடி நாமதெள்ளேணமகொட்டாமோ என்று உன்னதவிஷயத்தில் ஒருவர் கூறியுள்ளபடி, அறபவிஷயமாகிய ஆபாஸபுததகங்களியறறுவதில, ஒருநாமததிறகு முரிததாகாத உபயோகமில்லாத புததகங்களுக்குத திருநாமமிடும திவயததைபபாருங்கள். தண்டசோற்றுத்தடிராமன் கதை, ரேணபுடுங்கிரிஷிபாடல்கள் என்று இவவாறு கணடபடி எழுதிக் கணடபடி அவைகடகுப பெயரிட்டு ஜனங்களை ஏமாறவைத்து மோசஞ்செய்து காசுபறிபபதே எங்குபபார்ததாலுமவழக்கமாய்விட்டது. நல்லபுததகங்களென்றால் ஜனங்களுக்கு விருபபமென்பது

கிடையாது. மனதைக்கெடுத்து அறிவைமயக்கி ஆபாஸத்திலிழுத்துக்கொண்டுபோகும புஸதகங்களென்றால், ஆயிரக்கணக்காய்ப் பேயெனபபறந்து வாங்குகிறார்கள்! அத்தகைய ஆபாஸக்கதைகளில், அநுசிதமாயெழுதும் அறபவிஷயங்களைச்சொல்லவென்றால் நாவும் எழவில்லை; எழுதவென்றாற் கையும்வரவில்லை; நலல உணவென்றால் நாக்கசநது, ஆகாத உணவிறகே ஆவல்கொள்ளும், ஜ்வரம் முதலிய சிறசில கொடியரோகங்களில், எபபடி மருந்தைக்கொடுத்து, ஏறுமாறானசுவைகளைத தாறுமாறில்லாதிருக்கச் செய்கிறோமோ, அப்படியே உததமமான நூல்களாலும உயர்வானபிரசங்கங்களாலும், ஜனங்களுக்குச சரியான நூல்களில் விருபபமுண்டாகவும், நல்லநூல்களுக்கெல்லாம் பெருமையுண்டாகவும, அதனால அறிவென்பது கொழுந்துவிட்டு ஆனநதமவிளையவும் ஆபாஸங்கள் ஒழியவும செய்யவேண்டியது நமதுகடமையாயிருக்கின்றது.

இரண்டாவததடை யாதெனின், ஆங்கிலமபயின்றநம்மவருக்கு அபிமானமின்மையேயாம. கலவியறிவில்லாத காட்டுமிருகங்கள் போன்ற நாட்டுபபுறததாரிடம் சிற்சிலவேளைகளிற் பறபல நற்குணங்களும் மிகுந்த அபிமானமும் காணலாம். மேதாவிகளான மேனாட்டுபபுலவர்களின் அறபுதநூல்களை அருமையாய்பபயின்ற ஆங்கிலப் படடதாரிகள் பலரோரிடம் அபிமானமென்பது அறவே காணாதொழிகின்றது. ஆயிரமாயிரமாய ரூபாவந்தாலும் அன்னோர்கள் அரைக்காசுக்கு ஐமபதுமுடிபோட்டு, தமிழ்விஷயததிலென்றால் ஐயாயிரம்முடியும்போடடு, சாக்குபபோக்குகளசொல்லி ஒததாசைசெய்யாமலே கையை உதறிவிடுகிறார்கள். தமிழ்ப்புஸதகங்களைவாங்க விருப்பமுள்ளவர்கள்போலவும், தமிழ்ப்பாஷையை ஆதரிக்க அவாக்கொணடவர்கள்போலவும் தயாளக்கொக்குகளாய்விளங்கும தனவநதர்களாகும் அன்னோரிடம்சென்று பாரதமவாங்குகிறீர்களாவென்றால், இராமாயணம இல்லையாவென்பாாகள். இராமாயணமிருககிறது வாங்குகிறீர்களாவெனறால், பாரதமதான்ஸார் வேண்டியது அதில்லையோவென்பார்கள் ! பாரதமும இராமாயணமும இருக்கின்றனவென்றுற பகவததீதையில்லையோ, பாகவதம் இல்லையோவென்பார்கள. எல்லாமிருக்கின்றனவென்றால் ஒன்றும்வேண்டாமென்பார்கள்! கால

மில்லையென்பார்கள் ! வேலையில்லையென்பார்கள ! ஆங்கிலக்கருத்துக்க ளைப் பாங்குபெறவமைத்துள்ள நூதனவழியிலாம் நூட்பநூலகளிருக் கின்றனவென்றால், ஆஙகிலத்திற படிததுவிட்டோம, அனுவசியம் தமிழில் என்பார்கள்! பண்டிதமுறையிற பதிற்றுபபததநதாதிசெய்து ளோம், பெற்றுக்கொள்கிறீர்களாவென்றால், பாட்டிகதையாலும் பாட்டுபபாடுவதாலும் எமககுப பயனேகிடையாது எனபார்கள் இப படியாக ஏட்டிக்குபபோட்டிசெய்து ஏறுமாறாகத தாறுமாறுகள் பேசி இலக்கியவழியில் உழைபபவாகளை இளைப்பாக்கிவிடுகிறார்கள். கனவான்களே! தனவான்களே! உங்களையும உங்களைபபோலவாரை யும் யான குறைகூறவநதேனல்லேன். நமதுசஙகததின் கன அக் ராசனாதிபதியாம அரசிளஞசிங்கததின் ஆதரிபபினாலும், உப அககிரா சனாதிபதியின உதவிப்பெருககாலும, ஓய்விலலாதுழைத்து, நமது சங்கததின்பாங்கையேகவனித்துத் தமிழின் அபிவிர்ததியையேதியா னித்து, வக்கீல்களாயிருநதபோதிலும, வைகறைமுதல நள்ளிரவு வரையில அவையிரண்டின்விஷயமாகவும பலவிதமான எணணங் களை எண்ணிக்கொண்டிருக்கும இளைபபுச்சலிபபிலலாத காரியதரிசி கள்கவனவிசேஷத்தாலும், உஙகளுடையவும உங்களைபபோன்ற வாகளுடையவுமான அபிமானவிசேஷததாலும, கொஞசமாவது இந தத்தமிழ், குலாவிநிறகினறது. இலக்ஷக்கணககாயுளள ஏனையோ ருக்கு அபிமானமெனபது பேருக்குமகூடக கிடைககவேகிடையாது. இநதவிதமான இழிகுணமாநதம மனிதரிடம நிலைபெற்றிருபபதனாற றான் நமநாடு இநதநிலைமைககுவநதுவிட்டது. இனி எநதநிலைமைக குச் செல்கிறதோ !

அனபாய நம்மை அரசாளும ஆங்கிலர்முதலானோர் தேசங்க ளில், லக்ஷக்கணககானபுததகங்கள் பதிபபானதக்ஷணமே விலையா கின்றன! ஆங்கிலேயர்களுக்குள் அமபட்டன் முதல் அரசாவரைககு முள்ளவர்களுக்கு அபிமானமென்பது அதிகமாயுணடு. காலமசென்ற இராமஸவாமிமுதலியாரவர்கள, எம். ஏ., பி. எல். இங்கிலாந்துசென றிருந்த இரண்டொருசமயத்தில, அமபடடனொருவன் (France) பிரான்சுதேசத்தில் இரவு பன்னிரண்டுமணிக்குநடநத இராஜாங்கவிஷ யததைக் காலை 6-மணிக்கெல்லாம, முதலியாரவர்களிடம்கூறி முக்கால மணிநேரம் (Political Philosophy) இராஜகாரியவிஷயத்தைப்பற்றி

நேர்த்தியாய்ப்பேசினகீர்த்தியை அவர் அடிக்கடிசொல்லிக்கொண்டிருப்பாரெனக் கேள்வியுண்டு. எத்தனையோபுஸ்தகங்கள் ஒருமாதத்தில் எப்படியெப்படியோ விலையாய்விடுகின்றன! ஒருமாதத்துக்குள் ஒருபதிப்புதீர்ந்துவிடுகின்றது. நம்நாட்டில் புஸ்தகம்பதிப்பவர் முதலில் ஆயிரம்ரூபாய்செலவழித்துவிட்டுப் பின் அரைக்கால் அரைக்கால் ரூபாயாய் ஐம்பதுவருஷம் சேர்க்கவேண்டியிருக்கிறது.

நம்மவர்களுக்குள் அபிமானமாத்திரம் கிடையாது. ஆசைமாத்திரம் அதிகமாயுண்டு. லக்ஷக்கணக்கான ஜனங்களில் உங்களைப்போற் பக்ஷமுள்ளவர்கள் சிலரே. பாஷைவிஷயத்தில் அபிமானமுள்ளவர்கள் சிலரே! ஏராளமாய்க் கையிற் பணம்வைத்துக்கொண்டுள்ளவர்கள் படாடோபத்திற்கென்றும், பாதகவிஷயங்களுக்கென்றும் தனத்தைச் செலவிட்டுத் தரித்திரமடைந்தாலும் அடைவார்களேயன்றி நம் பாஷையபிவிர்த்தியடைவதற்கும், நம் இலக்கியவன்மைபெருகுவதற்கும் அதனால் நாடும் விர்த்தியாய் மனிதரும் விர்த்தியடைவதற்கும் நாட்டங்கொள்வாரல்லர்! இத்தகைய அபிமானமின்மையை அறவே ஒழிக்கத்தக்கவழிகளை அதிசீக்கிரத்திற் கண்டுபிடிக்கவேண்டும்.

மூன்றாவதுதடை:— அசூயை, பக்ஷபாதம் முதலிய கெட்ட குணங்கள் அதிகமாய் நம்மவரிடம் காணப்படுகின்றன. கொள்ளிக்கண்ணனைச் செந்தாமரைக் கண்ணனென்பதும், உன்னதநிலைவாய்ந்தவனை உருட்டித்தள்ளுவதும் நம்மவரநேகருள் வழக்கமாயிருக்கின்றது. இந்தக் கெட்டகுணம் இந்துதேசத்தில் எந்தக்காலத்திலும் காணலாம். இதை நாம் அகற்றும்வரைக்கும், இந்தியாதேசம் முன்னுற நடப்பதுகூடாததாகும். ஆதலாற் கற்றவரும் மற்றவரும் அசூயை, ஒரவஞ்சனை முதலிய குணங்களை ஒழித்தேதீரவேண்டும். மனிதஇயற்கையில் அவை வெகுசாதாரணமாய்க்காணப்பட்டபோதினும், நம்மவரிடம் அதிகமாய் அது விளங்குவதால், அதை ஒவ்வொருவரும் ஒழிக்க உடனேமுயலவேண்டும்.

நான்காவதுதடையை நாம் முக்கியமாய்க் கவனிக்கவேண்டும். நாளடைவிற் பாஷைவளருகிறதென்பதையும், பழையனகழிதலும் புதியனபுகுதலும் என்கிற நியதி நம்மிடத்தும் உள்ளது, நாமும்

கவனிக்கவேண்டுமென்பதையும் நாம் மறத்தல்கூடாது. இலக்கணத்திலும் மாறுதல்கள் இலக்ஷக்கணக்காய் ஏற்படுகின்றன. காலபேதங்களால் இலக்கியமாறுபாடுகளும் கணக்கிலாதுண்டாகின்றன. இதை நாம் ஒவ்வொருவரும் கவனித்து, காலத்திற்கேற்றவாறு கருத்துக்களைத் திருத்திக்கொள்ளவேண்டும்.

இவ்வாறு செய்வதிற் புதியசொற்கள் தமிழிலவந்து நுழைவதும், இலக்கணமுடிபுகள்பிறழ்ந்துசெல்வதும், பழையசொலலுருவங்கள் மாறிப் புதியசொற்களாக உண்டாய்விடுவதும் கூடுமெனபதை உணரவேண்டும். சோப, பொத்தான் (Soap, Button) முதலிய பற்பல பதங்கள் தமிழில் சர்வசாதாரணமாய்ப பரவிவருகின்றன. அர்த்த பேதங்களும அநேகமுண்டாகக்கூடும.

தற்காலத்திற்கியைந்தநூல்களியற்றுவதில் (Critical works) கிரிடிகல் வொர்க்ஸ என்கிற ஆராய்சசிவியாசங்களும், (Historical Researches) சரித்திர ஆராய்சசிக்கிரந்தங்களும், புதுமாதிரியான பாடற்றொகுதிகளும, ஆவலவிளைக்கும் நாவல்களும், விஞ்ஞானகிரந்தங்களும் பொதுநன்மைக்கியைந்தவையும, ஆலோசனைததிறததை அபிவிருத்திசெய்பவையுமான வேறுவேறுவகைபபட்டவியாசங்களும்,இவைபோன்றவை வேறுபலவும மிகவும் அவசியமானவை.

இவ்வாறாக நாம் இயற்றமிழையும, இசைத்தமிழையும், நாடகத்தமிழையும் நன்றாகவிர்த்திசெய்வோமாளுல, நம்மை அவமதிதது நம்பாஷையை அவமதித்து, நம்மைக்குறைகூறுவதே நானிலத்தில் தோன்றாது. பொதிகைமலேயிலூற்றெடுதத புண்ணியத்தமிழ், வைகையிற்பாநது காவிரியிற்சுரந்தகறபகத்தமிழ, கவிராயர்மனத்திலும் புவிராயர்மதிப்பிலும் பொங்குகின்ற புததமுதாமதமிழ் மேன்மேலும்விர்த்தியடைந்து, மேன்மேலும பெருமையடைந்து, மேன்மேலும் ஒளிபரப்பி, மேன்மேலும சுவைபெருக்கி மின்னித்துலங்கும்.

பக்தவத்ஸலம்.

# சோழர்குடி.

நமது தமிழகத்தின்கட் செங்கோலோச்சிய முடியுடைத்தமிழ் வேந்தர் மூவரில் இக்குடியினர் சோணாட்டையாளும் உரிமைபூண்டவ ராவர். இவர்கள் இடைக்கட் புகுந்து இந்நாட்டைத் தம்மடிப்படுத்தி யாண்டவரல்லரென்பதும், படைப்புக்காலந்தொட்டே இந்நாட் டின் அரசுரிமைபூண்டவர்களென்பதுஞ் செந்தமிழ்ப்பெரியோர்கொள் கைகளாம். இதனை, "வழங்குவதுள்வீழ்ந்தக்கண்ணும்பழங்குடி-பண் பிற்றலைப்பிரிதலின்று" (திருக்குறள்-குடிமை 5) என்பதன்உரையில், 'பழங்குடி - தொன்றுதொட்டுவந்தகுடி; தொன்றுதொட்டுவருதல் சேர சோழ பாண்டியரென்றாற்போலப் படைப்புக்காலந்தொடங்கி மேம்பட்டுவருதல்' என்று ஆசிரியர்பரிமேலழகர்கூறியவற்றால் நன் கறியலாம்: இக்குடியினரது நாடுதான் புனனாடெனப்படுவது; இவர் கள்தான் வளவரென்று சிறப்பித்துப் போற்றப்படுவோர், இவர்கள் நாடே சோறுடைத்து; இவர்கள்நாடுதான் எண்ணிறந்தசிவாலயங்க ளைத் தன்னகத்துக்கொண்டுவிளங்குவது; இவர்கள்தான் சைவசம யத்தைப்போற்றிவளர்த்துவந்த உத்தமச்சைவசீலரெனப்படுவோர். 'வளவனாயினுமளவறிந்தழித்துண்' என்னும் முதுமொழியில் இக் குடியினரே பொருட்செல்வத்தின்மேம்பாட்டிற் கோரெல்லையாக வைத்துக்கூறப்பட்டிருத்தல்காண்க. பலசொல்லியென்? மூவேந்தருள் ளும் சோழர்தாம் உணவுப்பொருள்களுஞ் சிவாலயங்களும் மிகுந் துள்ள நீர்வளம்பொருந்தியநாடுடையார் என்று சிறப்பிக்கப்படுவா ரென்க.

கறவைமுறைசெய்தகாவலனும் புள்ளுறுபுன்கண்டீர்த்தபுரவல னும் இக்குடியிற்றோன்றியோர்களேயெனின், இக்குடிக்கு, யான் வேறு ஏற்றமுங்கூறவேண்டுமோ? பாண்டியர்களைப்போன்று இவர் கள் தமிழ்ச்சங்கம்நிறுவாவிடினும் செந்தமிழ்வளர்த்தபெருமையில் அவர்கட்கு இவர்கள் சிறிதுங்குறைவுபட்டிலரென்பது பழையசங்க நூல்களையும் பிறநூல்களையும் ஆராய்வார்க்கு நன்குபுலப்படாமலி ராது. என்னை? பதினாறுநூறாயிரம்பொன்னீந்து பட்டினப்பாலை

கொண்டோன் கரிகால்வளவனன்றே? பதினொருசைவத்திருமுறை கள், திருத்தொண்டர்புராணம், கம்பனது இராமாவதாரம், வீரசோழியம் முதலிய அருமைவாய்ந்த நூல்களெல்லாம் இவர்களதுவள்ளன்மையாலும் பெருமுயற்சியாலுமன்றே நம்மனோர்கண்டுகளிக்கும் வண்ணம் வெளிவந்துள்ளன.

இவர்கள் சூரியவம்சத்தைச்சேர்ந்தவர்கள்.* இவர்கட்குரிய போர்ப்பூவுந் தார்ப்பூவும் முறையே ஆத்தியும் முல்லையுமாம்; கொடி புலிக்கொடியாம். பண்டைக்காலத்து இவர்களது தலைமைநகரங்கள் உறையூரும் காவிரிப்பூம்பட்டினமுமாயிருந்தன; பின்னர்த் தஞ்சையுட் கங்கைகொண்டசோழபுரமும்; காஞ்சியுந் தலைமைநகரங்களாயின.

இக்குடியிற்றோன்றிச் சோணாட்டையாட்சிபுரிந்தமன்னர் பலராவர். இவர்களதுசரிதங்கள் முழுதுந் தொடர்ச்சியாய்த்தற்காலத்து அறிந்துமகிழ்தற் கிடமில்லாமற்போயின. ஆயினும், திருவுடையரேயன்றித் தெள்ளிபருமாய்த்தோன்றி வீரமும், புகழும் என்றும் நின்றுநிலவப் பல அருமபெருஞ்செயல்களைச் செய்துமுடித்து இந்நிலவுலகத்தைவிட்டகன்றபெருந்தகையாளர்பலர் சரிதங்கள், பழைய தமிழ்ப்புலவர்களியற்றியுள்ள செய்யுட்களினாலும் சிலாதாம்பிரசாசனங்களினாலும் அறியப்படுகின்றன. கடைச்சங்ககாலத்திற்குப்பின்னர்விளங்கிய சோழமன்னர்களின்சரிதங்களை, நன்காராய்ந்து, தொடர்ச்சியாக, ஸ்ரீமான்-T. A. கோபிநாதராயர், M. A., அவர்களும், ப்ரொபஸர் S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M A, அவர்களும் முறையே தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதிவெளியிட்டிருக்கிறார்கள். அரும்பெருமுயற்சிகொண்டு சோழசரித்திரஅமுதை நம் தமிழகத்திற்கும் புறநாடுகட்குமூட்டிக் களிப்பித்த இவ்விருபுலவர்கட்கும் நம்மவர் பெரிதும் நன்றியறிதற்கடப்பாடுடையராவர். கடைச்சங்க காலத்திற்குமுன்னர்விளங்கியசோழமன்னர்களுள், 'வாயிற்கடைமணிநடுநாநடுங்க — வாவின் கடைமணியுகுநீர்நெஞ்சுசுடத்தான்றன்—

* இவர்களைச் சூரியவம்சத்தினரென்றுகூறுந் தமிழ்நூல்வழக்கிற்குமாறாய், அக்கினிவம்சத்தினரென்றும் வன்னியரென்றும் தக்கபிரமாணங்களின்றி ஒருசாரார், சொல்லியும் எழுதியும்வருகின்றனர்; அன்னோர்கூற்றுப் பொருந்தாதென்க.

அரும்பெறற்புதல்வனையாழியின்மடித்த' மனுநீதிகண்டசோழனும், 'புறவுநிறைபுக்குப்பொன்னுலகமேத்தக் — குறைவிலுடம்பரிந்த' கொற்றவனுஞ் சிபியும், 'ஓங்குயாமலயத்தருந்தவனுரைப்பத்—தூங்கெயிலெறிந்ததொடித்தோட்செம்பிய'னும், 'அமரமுனிவனகத்தியனருளாற—காவிரிகொணர்ந்தகாந்தமன்'னவனும், 'வாதராசனைவலிந்துபணிகொண்'டோனும்,'தாங்கள்பாரதமுடிப்பளவுநின்றுதருமன்-றன்கடற்படைதனக்குதவிசெய்'தோனுமாய சிலரதுபெயர்கள்மாத்திரங் கேட்கப்படுகின்றன.

இனி, கடைச்சங்ககாலத்தில்விளங்கிய சோழமன்னர்பலராவர். அவர்களுள், புறநானூறுமுதலிய தொகைநூல்களால் அறியப்படும் சிலரை இங்குக் குறிக்கின்றேன்.

1 முடித்தலைக்கோப்பெருநற்கிள்ளி, 2 வேற்பஃறடக்கைப்பெருவிறற்கிள்ளி, 3 உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி, 4 கரிகாலன், 5 நலங்கிள்ளி, 6 நெடுங்கிள்ளி, 7 மாவளத்தான், 8 குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன், 9 குராப்பள்ளித்துஞ்சியபெருந்திருவளவன், 10 இராஜசூயம்வேட்டபெருநற்கிள்ளி, 11 கோப்பெருஞ்சோழன், 12 சோழன்செங்கணான்.

மேற்குறித்துள்ள அரசர்பெருந்தகைகளுள் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி, கரிகாலனது தந்தையாவன்; கரிகாலன் 12000 சிங்களவர்களைச்சிறைபிடித்துக்கொணர்ந்து காவிரியினிருமருங்குங் கரையெடுப்பித்துத் தங்கள்நாட்டைப் புனனாடெனவும், தங்களை வளவரெனவும் யாவருஞ் சிறப்பித்தோதும்வண்ணம் சோணாட்டை வளமுறச்சீர்படுத்திய செம்பியரேறென்ப. நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, மாவளத்தான் என்போர் ஒரேகாலத்துச் சோணாட்டில்விளங்கியோரென்பது இவர்கள் தாயபாகத்தின்பொருட்டு ஆமூர், உறையூர் முதலிய இடங்களில் முற்றுகையிட்டுப் போர்புரிந்தசெய்தியைக்குறிக்கும் புறப்பாடல்களால் நன்குவிளங்கும். கிள்ளிவளவன் உறையூரிலிருந்து சோணாட்டையாட்சிபுரிந்தவன்; இவனுக்குவிரோதிகளாய்ச் சோழர்குடியிற்றோன்றியோரொன்பதின்மர் உண்ணாடுகளிற் கலகஞ் செய்துவந்தனர்; உறையூர்க்குத்தென்புறத்துள்ள நேரிவாயிலில், சேரன்செங்குட்டுவன் இவர்களைப் போரில்வென்று மைத்துனனாகிய

கிள்ளிவளவனது ஆட்சியைச் சோணாட்டில் நன்குகிலைநாட்டினு னென்பது பதிற்றுப்பத்து 5-ம்பத்தின்பதிகத்தானும் சிலப்பதிகாரத் தானும் அறியப்படுகிறது. இதனால், இக்குடியினர்பலர் இந்நாடுக ளில் யாண்டும்வசித்துவந்தனரெனத் தெரிகிறது. இவர்கள் உண் ணாடுகளிலும், சோழமன்னர்களால்ஜெயிக்கப்பெற்ற புறநாடுகளிலும் சிற்றரசர்களாகவும் தண்டத்தலைவராகவும மண்டிலமாக்களாகவும் கோட்டம, கூறு, நாடுமுதலியவற்றின் அதிகாரிகளாகவும இருந்து வந்தனராதல்வேண்டும். கோப்பெருஞ்சோழனென்போன், தனமேற் பகைகொண்ட தன்மக்களிருவருடன் போர்க்கெழுநதஞான்று புல் லாறறூர் எயிற்றியனரென்னுமபுலவர்பெருமானுற சமாதானஞ்செய் யப்பட்டுத் தன்னரசை யவர்கடகளிததுத தான் வடக்கிருந்து உயிர் துறந்தனனென்பது புறப்பாடல்களால் அறியப்படுகின்றது. சோழன் செங்கணான், அறுபானமும்மைநாயன்மார்களில் ஒருவராகவிளங்கிய வளவர்பெருமான்.

தொடரும.

T. V. சதாசிவப்பண்டாரத்தார்,

திருப்புறம்பயம்.

# பிழை திருத்தம்.



செந்தமிழ் 12-ஆம்தொகுதி 2-ஆமபகுதி ௪௯-ஆம்பக்கத்தி லுள்ளவம்சாவளியில் 'உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி = அழுந் தூர்வேண்மகள்' என்பவற்றின்கீழ்க் 'கரிகாலன் = நாங்கூர்வேள்குமா ரத்தி' என்பவற்றையும, 11-ஆம்பகுதி ௪௪௧-ஆமபக்கத்திலுள்ள 'தொண்டைமான்சாசனம முதல்வரியில் 'ஸாலிவாஹநஸகாப்தம்' என்பதன்பின்னர் 'துகூாஙயச' என்பதையும் சேர்த்துப்படிக்க.

T. V. S.

கடவுள் துணை. 10-6-15.

# செந்தமிழ்

தொகுதி-கங.] ராக்ஷஸ ஹு சித்திரைமீ [பகுதி-சு

Vol. XIII. April—May, 1915. No. 6.

## அப்பர்தேவாரத்தாற்கொள்ளக்கிடக்கும்கீரனார் யார் ?

"நன்பாட்டுப்புலவனாய்ச்சங்கமேறி
நற்கனகக்கிழி தருமிக்கருளினோன் காண"

இது திருநாவுக்கரசர்வாக்கு. திருநாவுக்கரசரும் சம்பந்தரும் ஒரேகாலத்தவரென்பதும், இருவரும் பெருநட்பினரென்பதும் யாவரு மறிந்தவுண்மை. திருநாவுக்கரசர் இத்திருவாக்கிற்சுட்டியது தருமிக்குப் பொற்கிழியளித்தசரித்திரம். தருமிக்குச் சிவபெருமான்கொடுத்தரு ளியபாடல் வருமாறு:—

"கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇயநட்பினமயிலியற்
செறியெயிற்றரிவைகூந்தலி
னறியவுமுளவோநீயறியும்பூவே"

இச்செய்யுளைத் தருமிகொண்டுசென்று சம்பகபாண்டியனுக்குக் காட்டியபோது கீரனார் அதிற் குற்றம்பாரித்து அதற்குரியபொற்கிழி யைக் கொடுக்கவிடாது தடுத்தார். அதுகேட்டுச் சிவபெருமான் ஒரு புலவராய்வெளிப்பட்டு அப்பாடலினது தகுதியெடுத்துக்காட்டித் தரு மிக்கு அப்பொற்கிழியைவழங்குமாறருளினார்.

தருமிக்குச் சிவபெருமான் பாடல்கொடுத்தருளியதும், அதிலே கீரனார் குற்றம்பாரித்துப் பொற்கிழிவழங்காதுதடுத்ததும், அப்போது சிவபெருமான் ஒருபுலவராய்ச்சென்று சங்கமேறியதும், அப்பாடலின் தகுதியைநாட்டியதும், பொற்கிழியுதவுமாறருளியதுமாகிய பெருங் கருணைச்செய்திகளைத் திருநாவுக்கரசர்வியந்து தம்துதேவாரத்தில் "நன் பாட்டுப்புலவனாய்" என்று எடுத்துப்பாடுவாராயினர்.

அற்றேல், கீரனார் மூன்றாஞ்சங்கமுடிவில்விளங்கியவரன்றோ. அவர்செய்தியை எடுத்துக்கூறியதிருநாவுக்கரசர் மூன்றாஞ்சங்கத்துக் குப் பிற்பட்டவராகற்பாலர். சம்பந்தர் திருநாவுக்கரசர்காலத்தவராத லின் அவரும் மூன்றாஞ்சங்கத்துக்குப்பின்னுள்ளவரேயாவர் என்பது ....

இத்துணிபு நன்குசெய்யப்பட்டதாகத்தோன்றவில்லை. தருமி கொண்டுசென்றபாட்டிற் குற்றம்பாரித்தார் மூன்றாஞ்சங்கத்திறுதியி லிருந்தகீரனார்தாமா? அன்றி, அப்பெயருடைய மற்றொருவராவென்ப தும், கீரப்பெயருடையார் ஒருவரா பலராவென்பதும் அவர்தாம் எவ் வெக்காலத்திருந்தவரென்பதும் ஆராய்ப்படுதல்வேண்டும்.

திருவிளையாடற்புராணத்தின்படி, தருமிகொண்டுசென்ற'கொங்கு தேர்வாழ்க்கை' என்னுந் தெய்வப்பாட்டிற் குற்றம்பாரித்தவர் கீரனா ரென்னு மொருபுலவர் அவரே அகஸ்தியபால இலக்கணங்கேட்டு விபரீதங்கப்பெற்றவர். அவர் சமபகபாண்டியன்காலத்திலவிளங்கிய வர். அவர்க்குக் கீரனார் என்னும்பெயரே பெருவழக்கு. நக்கீரனாரென் னும்பெயரும் சிறுவரவினதாய்ப் பிற்காலத்துவழங்கிற்று.

அவர் காலத்துக்குப்பின்னர்க் கீரனார் என்னும் பெயர்கொண்டார் அநேகர். அவருட் குடவாணகீரனார், தும்பிசேர்கீரனார், பொருந்தி லிளங்கீரனார், மதுரைக்கணக்காயனார்மகனார்நக்கீரனார், மதுரைநக்கீர னார், மோசிகீரனார் எனப்போர் சிறந்தோர்

இவருள்ளே மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார் இறையனா ரகப்பொருளுக்கு உரைசெய்தவிரகர். இவரே திருமுருகாற்றுப்படை யும், நெடுநல்வாடையும் பாடியவர். இவர் உக்கிரப்பெருவழுதிகாலத் தவர். மூன்றாஞ்சங்கத் திறுதிக்காலத்திருந்தவர்.

நெற்றிக்கண்ணைக்காட்டினுங் குற்றங்குற்றமே எனக்கூறி அஞ் சாதுவாதாடியகீரனாரும் வேறு, மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீர னாரும்வேறு. முன்னையவர் இரண்டாஞ்சங்கத்துக்கடைக்கூற்றில் விளங்கியவர். பின்னையவர் மூன்றாஞ்சங்கத்திறுதிக்காலத்திலேவிளங் கியவர். இவரை அவராகவும், அவரை இவராகவுங்கொண்டுமயங்கு வார் அநேகர். யானுஞ்சிறிதுகாலத்துக்குமுன் அவ்வாறுகொண்டு மயங்கினேன். ஆராய்ச்சியாற் பின்னர்த்தெளிந்தேன். அதுநிற்க.

1. சம்பகபாண்டியன்முதல்,

2 பிரதாபசூரியன்
3. வங்கிசத்துவசன்
4 இரிபுமர்த்தனன்
5. சோழவமிசாந்தகன்
6. சேரவமிசாந்தகன்
7. பாண்டிவமிசேசன்
8. வமிசசிரோமணி
9. பாண்டீசசுரன்
10. குலத்துவசன்
11. வமிசபூடணன்
12. சோமசூடாமணி
13 ராஜசூடாமணி
14. பூபசூடாமணி
15. குலேசபாண்டியன்
16. அரிமர்த்தனன்
17. சகநாதபாண்டியன்
18. வீரவாகு
19. விக்கிரமவாகு
20. பராக்கிரமவாகு
21. சுரபிமாறன்
22. குங்குமபாண்டியன்
23. கர்ப்பூரபாண்டியன்
24. காருணியபாண்டியன்
25. புருடோத்தமன்
26. சத்துருசாதனன்
27. கூன்பாண்டியன்

ஈறாக இருபத்தேழுபாண்டியர் வழிவழியரசுபுரிந்தனர் என்பது திருவிளையாடற்புராணம்.

இறையனாரகப்பொருளுரைப்படி கூன்பாண்டியன்முதல் உக்கிரப்பெருவழுதியீறாக நாற்பத்தொன்பதுபாண்டியருளர்.

உக்கிரப்பெருவழுதிகாலத்தில்விளங்கியவராகிய மதுரைக்கணக்காயனார்மகனார்நக்கீரனார்க்கும் முன்னைய கீரனார்க்குமிடையே எழுபத்தைந்துபாண்டியர் அரசுசெய்துபோயினர் என்பது வெளிப்படையாகின்றது. இறையனாரகப்பொருளுரைப்படி கூன்பாண்டியன்முதல் உக்கிரப்பெருவழுதியீறாகச்சென்றகாலம் ஆயிரத்தெண்ணூற்றைம்பதுவருடம். இக்கணிதப்படி சம்பகபாண்டியன்முதற் கூன்பாண்டியனீறாகச்சென்றகாலம் (900) தொளாயிரம்வருடமாகும். ஆகவே முன்னையகீரனார் பின்னையகீரனார்க்கு 2750 வருடங்களுக்குமுன்னர் விளங்கினராகற்பாலர்.

ஆதலால் முன்னையகீரனாரே அப்பர்தேவாரத்தாற்கொள்ளக்கிடப்பவரென்பது நன்குதுணியப்படும்.

ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.

# இளங்கோவடிகள்குறித்துள்ள பழையசரித்திரங்கள்.



இளங்கோவடிகளென்பார் இற்றைக்கு 1800 ஆண்டுகட்குமுன்னர்ச் சேரநாட்டில் வஞ்சிநகரத்திலிருந்து ஆட்சிபுரிந்த சேரன்செங்குட்டுவனது தம்பியாவர். இந்த இளம்பருவத்திலேயே துறவுபூண்டு, அவ்வாச்சிரமத்திற்கேற்பவொழுகிவந்த இவ்வடிகள், உலகத்திற்குப் பயன்படுமவண்ணம், தாமியற்றியருளிய சிலப்பதிகாரமென்னும் நூலின்கண் நமது புராணேதிகாசங்களிற்சொல்லப்படுவனவும் பிறவுமாய சில அருமைவாய்ந்த பழையசரித்திரங்களைச் சமயம்வாய்த்தபோதெல்லாம் ஆங்காங்குக் குறித்திருக்கின்றனர். பண்டைக்காலங்களி லியற்றப்பெற்ற ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றாயதும், யாவரானும்புகழ்ந்து போற்றப்பெற்றதுமாய சிலப்பதிகாரத்திற் கூறப்படுஞ்சரித்திரங்கள், நமது புராதனசரித்திர ஆராய்ச்சியிற்புகுந்துள்ள அறிஞர்பலர்க்கும் பெரிதும் பயன்படுமென்றுகருதி, அவற்றை முறையே ஈண்டுத் தொகுத்தெழுதுகின்றேன்.

1. மனுநீதிகண்டசோழன், தனது அரும்பெறற்புதல்வனைத் தேர்க்காலிலிட்டது.

> வாயிற்கடைமணிநடுநாநடுங்க
> வாவின்கடைமணியுகுநீர்நெஞ்சுசுடத்தான்ற
> னரும்பெறற்புதல்வனையாழியின்மடித்தோன் ;—
>
> (சிலப்—வழக்குரைகாதை 53—55)

> ... ... ... ... முன்வந்த
> கறவைமுறைசெய்தகாவலன்காணம்மானை
> காவலன்பூம்புகார்பாடேலோரம்மானை ,—
>
> (வாழ்த்துக்காதை—அம்மானைவரி 2.)

2 சிபிச்சக்கரவர்த்தி, தன்பாலடைக்கலம்புக்கதொரு புறாவின் நிமித்தம் தன்னுடம்பையரிந்துகொடுத்தது.

> எள்ளறுசிறப்பினிமையவர்வியப்பப்
> புள்ளுறுபுன்கண்டீர்த்தோன்,—
>
> (வழக்குரைகாதை 51—52)

புறவுநிறைபுகக்குப்பொன்னுலகமேத்தக
குறைவிலுடம்பரிந்தகொற்றவன்யாரம்மானை
குறைவிலுடம்பரிந்தகொற்றவன்முன்வந்த
கறவைமுறைசெய்தகாவலன்காண்,—
(வாழ்த்துக்காதை—அம்மானைவரி 2)

குறுநடைப்புறவினெடுந்துயர்தீர
வெறிதருபருந்தினிடும்பைநீங்க
வரிந்துடம்பிட்டோனறந்தருகோலும்;—
(நீர்ப்படைக்காதை 166—168)

3. உக்கிரகுமாரபாண்டியன், தேவேந்திரன்பூட்டிய ஆரத்தைப் பூண்டது.

திங்கட்செல்வன்றிருக்குலம்விளங்கச்
செங்கணாயிரத்தோன்றிறல்விளங்காரம்
பொங்கொளிமார்பிற்பூண்டோன்வாழி,—
(கால்கோட்காதை—23—25)

கோவாமலையாரங்கோத்தகடலாரந்
தேவர்கோன்பூணாரந்தென்னர்கோன்மார்பினவே;—
(ஆய்ச்சியர்குரவை, உள்வரிவாழ்த்து 1)

வானவர்கோனாரம்வயங்கியதோட்பஞ்சவன்றன்
மீன்கொடிபாடும்பாடலேபாடல்;—
(வாழ்த்து—வள்ளைப்பாட்டு 2)

4. உக்கிரகுமாரபாண்டியன், தன்கைவளையால் இந்திரன்முடியை யுடைத்ததும், மேகத்தைச்சிறைப்படுத்தியதும்.

முடிவளையுடைத்தோன்முதல்வன்சென்னியென
றிடியுடைப்பெருமழையெய்யாதேகப்
பிழையாவிளையுட்பெருவளஞ்சுரப்ப
மழைபிணித்தாண்டமன்னவன்வாழ்கென;—
(கால்கோட்காதை 26—29)

வச்சிரத்தடக்கையமரர்கோமான்
உச்சிப்பொன்முடியொளிவளையுடைத்தகை;—
(கட்டுரைகாதை 50—51)

. . ........ கொற்றத்
திடிப்படைவானவன்முடித்தலையுடைத்த
தொடித்தோட்டென்னவன்கடிப்பிழிமுரசே;—
(ஆய்ச்சியர்குரவை—படர்க்கைப்பரவல் 3)

5. குலசேகரபாண்டியன், தன்கைகுறைத்தது.

உதவாவாழ்க்கைக்கீரந்தைமனைவி
புதவக்கதவம்புடைத்தனனொருநா
ளரசவேலியல்லதியாவதும்
புரைதீர்வேலியில்லெனமொழிந்து
மன்றத்திருத்திச்சென்றீரவ்வழி
யின்றவ்வேலிகாவாதோவெனச்
செவிச்சுட்டாணியிற்புகையழல்பொத்தி
நெஞ்சஞ்சுடுதலினஞ்சிநடுக்குற்று
வச்சிரத்தடக்கையமரர்கோமான்
உச்சிப்பொன்முடியொளிவளையுடைத்தகை
குறைத்தசெங்கோற்குறையாக்கொற்றத்
திறைக்குடிப்பிறந்தோர்,—
(கட்டுரைகாதை 42—53)

6. வானத்தின்கண்ணசைந்துகொண்டிருந்த மூன்றுமதில்களைச் சோழனொருவன் அழித்தது.

... .. . உயர்விசும்பிற்
றூங்கெயின்மூன்றெறிந்தசோழன்காணம்மானை
சோழன்புகார்நகரம்பாடேலோரம்மானை,—
(வாழ்த்துக்காதை—அம்மானைவரி 1)

வெயில்விளங்குமணிப்பூண்விண்ணவர்வியப்ப
வெயின்மூன்றெறிந்தவிகல்வேற்கொற்றமும்;—
(நீர்ப்படைக்காதை 164—165)

7. பாண்டவர்க்கும் கௌரவர்க்குமநடந்த பெரும்போரில் இரு பக்கத்தார்க்கும் பெருஞ்சோற்றுதியன்சேரலாதன் உண வளித்தது:

ஓரைவரீரைம்பதின்மருடன்றெழுந்த
போரிற்பெருஞ்சோறுபோற்றாதுதானளித்த
சேரன்பொறையன்மலையன்றிறம்பாடிக்
கார்செய்குழலாடவாடாமோவூசல்;—

(வாழ்த்துக்காதை—ஊசல்வரி 2)

8. சேரனொருவன் கடற்கடம்பெறிந்தது.

கடம்புமுதறடிந்தகாவலனைப்பாடிக்
குடங்கைநெடுங்கண்பிறழவாடாமோவூசல்
கொடுவிற்பொறிபாடியாடாமோவூசல்;—

(வாழ்த்துக்காதை ஊசல்வரி 1)

... வானக்கோட்டாற்
கடந்தடுதார்ச்சேரன்கடம்பெறிந்தவார்த்தை
படர்ந்தநிலம்போர்த்தபாடலேபாடல்,—

(வாழ்த்துக்காதை - வள்ளைப்பாட்டு 2)

முந்நீரினுள்புக்குமூவாக்கடம்பெறிந்தான்
மன்னர்கோச்சேரன்வளவஞ்சிவாழ்வேந்தன்;—

(ஆய்ச்சியர்குரவை - உள்வரிவாழ்த்து 3.)

........ ஊங்கணோர்மருங்கு
கடற்கடம்பெறிந்தகாவலனாயினும்;—

(நடுகற்காதை 134—135)

மாநீர்வேலிக்கடம்பெறிந்திமயத்து
வானவர்மருளமலைவிற்பூட்டிய
வானவர்தோன்றல்;—

(காட்சிக்காதை 1—3)

(தொடரும்.)

T. V. சதாசிவப்பண்டாரத்தார்,
திருப்புறம்பயம்.

ஸ்ரீ

# பாரதயுத்தகாலம்.

பூர்விகஸம்ஸ்கிருதபுஸ்தகங்களிற்சொல்லப்பட்டிருக்கிற சில முக்கியமானவிஷயங்களின்காலவரையறைகளை உத்தேசமாகக்கூடச் சொல்லக்கூடாதபடி அவ்வளவு அந்தகாரத்திற் பூர்விகஇந்தியசரித்திரமானது மறைவுபட்டிருக்கிறது. வித்வான்கள் சிறிதுநிச்சயத்துடன் முடிவுகட்டிக்கொண்டுவந்திருக்கிறகாலவரையறைகளுக்குள் மிகவும்முந்தியது புத்தநிர்யாணகாலமாகிய கி. மு. 480.* இதற்கு முந்தினசங்கதிகளின்காலவரையறைகள் பலவிதமான பின்ன அபிப்பிராயங்களுக்கு உட்பட்டிருக்கின்றன. அப்படிப்பட்டவைகளுள், பாரதயுத்தகாலமுமொன்று. வைதிகர்களின்கொள்கை இந்தயுத்தம 5017 வருஷங்களின்முன் நடந்ததென்பது. இந்தயுத்தகாலத்திலிருந்துதான் கலியுகம் ஆரம்பித்ததாகச்சொல்லப்படுகிறது. மஹாபாரதயுத்தகத்திற்சொல்லப்பட்டிருப்பவை கர்ணபரம்பரை ஐதிகங்களைப் பொறுத்தவைகளாயிருப்பதால் அவற்றைநம்பிக் காலவரையறை செய்யப்புகுவது மண்குதிரையைநம்பி ஆற்றிலிறங்குவதுபோலாகுமென்று சிலர் நினைக்கிறார்கள்.

இந்தியசரித்திரவிஷயங்களுக்குள், இந்தயுத்தமானது, வாஸ்தவமாய்நடந்த முதற்சரித்திரக்குறிப்பெனறு பூர்விக இந்திய (காவிய) நூல்களைச் சரித்திரநோக்கமாயறியும மேற்றிசைப்பண்டிதர்கள்கூட நம்புவதால் நாம் சந்தேகங்களுக்கு இடங்கொடுக்கவேண்டியது அநாவசியம். இந்தயுத்தகாலத்தைப்பற்றிமுடிவுகட்டுவந்தவர் அநேகர்களுள், சிலரது அபிப்பிராயங்களைமாத்திரம் பூர்வபக்ஷமாகக்கூறிச் சித்தாந்தமாக ஸ்ரீமாந்-ஸி. வி. வைத்யர் அவர்களின் சிறந்த அபிப்பிராயத்தை† யெடுத்துக்காட்டு

* கணனமுறையில் மிகத்தேர்ச்சியடைந்தவர்களாகிய ம-௱-௱-ஸ்ரீ L. D. சுவாமிக்கண்ணுப்பிள்ளையவர்கள் கி. மு. 478 எனபர். சமீபத்தில் நடந்த சிலோன் ஏஷியாடிக்ஸொஸைட்டிப்பிரசங்கத்தில் வேறொருவர் இக்காலத்தைக் கொஞ்சம்வேறுபடக்கூறினர்.

† இவ்வபிப்பிராயமும், ஸ்ரீமாந-கோபாலையரவர்களின் அபிப்பிராயமும் ஒருவிதமாய் மகா-௱-௱-ஸ்ரீ L. D. சுவாமிக்கண்ணுப்பிள்ளையவர்களாற் சீர்திருத்தப்பெற்றிருக்கின்றனவென்றுதெரிகிறது.

## இந்தியவித்வான்கள்.

1. ப்ரோபஸர் M. ரங்காசாரியஸ்வாமிகளின அபிப்பிராயம்:— கலியுகஆரம்பம் 5000வரு த்துக்குமுன் என்பது கொஞ்சம் மிகை படக்கூறலாகும். கணிதசாஸ்திரியாகிய ஆர்யபட்டர், சுத்தஊக அநுமானத்தின்பேரில் முந்தியகாலவரையறையை ஏற்படுத்திவிட் டார் என்பது. (Ch-col-Magaziene yugas)

2. ரமேசசந்த்ரதத்தா அபிப்ராயம்'—இந்தககாலாவதியிலாண்ட அரசர்களின்வம்சபரம்பரை புராணஙகளுட குறிக்கபபட்டிருக்கின் றன. ஜநமேஜயபரீக்ஷித்தின்ஜநநகாலத்துக்கும நந்தன அரசாட்சிக் காலததுககும மத்தியில 1015 வருஷமென்றனவென்று பாகவதபுரா ணம் கூறுகிறது குருக்ஷேத்ரயுத்தமநடந்து 3 மாதத்துக்குபபின் பரீக்ஷித்து பிறந்தானென்று மஹாபாரதமும புராணங்களும கூறு கின்றன நந்தன சந்த்ரகுபதனுக்கு நூறு வருஷங்களுக்குமுந்தினவ னென்றும், சந்த்ரகுபதன கி. மு. 312-லிருந்தானெனறும நமககுத தெளிவாய்த்தெரிந்தவிஷயம். ஆகையினால 312+100+1015= 1427 கி. மு. வில் பாரதயுத்தமநடந்திருக்கவேணடும் (Civilisation in Ancient India ii) என்பது.

3. சித்தூர் V. கோபாலையரவாகள் அபிபபிராயம:—கி. மு. 1194வரு அக்டோபார் 14உ மகாபாரதயுத்தம ஆரமபித்தது 31உ இராவுடனமுடிந்ததென்பது. இந்த அபிபபிராயத்துக்கு இவா எடுத் துக்காட்டியிருக்குங்காரணங்களின்சுருக்கங்களாவன:—

(1) வேதாங்கஜ்யோதிஷக்ரந்தத்தை உறறு ஆராய்நதாறு கலி ஆரம்பம 1173 கி. மு. என்று ஏறபடுதல்.

(2) காககருடையவும அவாபிரஸதாபிக்கிற யவனப்படை யெடுப்பினுடையவும காலததை ஆராய்ந்ததும, இந்துஸதானததி லிருந்து கிரேக்கர்கள திருமபுவது யுகததின்முடிவில என்று அவர் குறித்துளதை எடுத்துக்காட்டினதும, (இந்த அவா வாக்குமூலத்தி லிருந்து) 165 கி மு. வுக்குக் கொஞசமமுன்புமுடிந்ததெனறயுகமா னது 1165 கி. மு வுக்குச் சிலவருஷங்களுக்குமுன ஆரமபித்திருக்க வேணடுமென்று ஊகித்ததும,

(3) பழைய சரித்திரக்காரர்களாற் குறிக்கப்பட்ட காலங்களை விளக்குவதிலிருந்து ஏற்பட்ட, 'கலியுகம் 1177–6 கி. மு. வில் ஆரம்பித்திருக்கவேண்டும்' என்ற முடிபு.

(4) 1176 கி. மு. வில் கலி ஆரம்பித்ததென்று நிறுத்துவதற்கு வேறொரு ஆதாரமாயிருந்தது கொல்லமாண்டு என்பது.

(5) 1176 கி. மு. வுக்கு முன்வந்த ஒருகுறிப்பிட்டகாலத்திற் கலி ஆரம்பித்திருந்தால் மகாபாரதத்திலுள்ள சிலகுறிப்புக்களால் 1194 கி. மு. வில் யுத்தம் நடந்ததாக ஏற்படுமென்பது.

(6) 'ராஜதரங்கிணி'யிற் குறித்திருக்கும் ஐதீககாண பரம்பரைச் செய்தி யுத்தகாலத்தை 1190 கி. மு. வில் நிறுத்துமென்பது.

(7) 1192 கி. மு வில் சப்தரிஷிமண்டலம் மகநக்ஷத்திரத்திலிருந்ததென்று ஆர்யபட்டர் குறித்திருப்பது யுத்தம் 1193 கி.மு. வில் நடந்திருக்குமென்ற அநுமானத்துக்கு இடங்கொடுத்ததென்பது.

(8) இவ்வுலகிற் பிரசித்திபெற்ற ஐந்து ராஜாங்கங்களிலாண்ட அரசர்களின் சராசரி ஆளுகைக்காலம் 1193 கி. மு. வாக்கில் யுத்தம் நடந்ததென்று நிறுத்த உபயோகமாயிருந்ததென்பது.

(9) ப்ருஹத்ஸம்ஹிதையில் எடுத்துக்காட்டப்பெற்றிருக்கும் விருத்தகர்க்கரின் ஒருஸ்லோகம் 1194—3 கி. மு. வில் யுத்தம் நடந்ததென்று அநுமானிக்க இடங்கொடுத்ததென்பது.

(10) கர்க்கராற் கொடுக்கப்பட்ட யுத்தகாலமும் (அதாவது கி. மு. 1194—93) ப்ரஹஸ்பதி 60வருஷத்தின் முதல்வருஷமும் ஒத்துவருவது.

(11) யுத்தகாலத்துக்குப்பின்வந்த ஒருகுறிப்பிட்ட தினத்தைக் குறிக்கும் ஒரு மகாபாரதசுலோகத்துக்கு வேதாங்கஜ்யோதிஷத்திற் கூறப்படும் சிலவிஷயங்களை ஏற்றிட்டுப்பார்த்து 1194 கி. மு. வின் பின்பாகத்தில் யுத்தம்நடந்திருக்கவேண்டுமென்று முடிவுக்குவந்தது (The chronology of Ancient India) என்பனவாம்.

மேற்றிசைவித்வான்கள்

ப்ரோபஸர்மக்டானல். (Sanskrit literature) இவர் நம்வேத நூலாராய்ச்சியுள்ளவர். ஸம்ஸ்க்ருதகாவ்யசம்பந்தமான ஒரு சிறந்த

கிரந்தம் எழுதியிருக்கிறார். இவர் அபிப்பிராயம்:—ஒருவர்க்கொருவர் பக்கத்தில்வாழ்ந்துவந்தகுருஜாதியாருக்கும்பாஞ்சாலஜாதியாருக்கும் ஏற்கனவேநடந்திருந்த பூர்விகச்சண்டையாகிய உண்மைச்சரிதம் இவ் விதிகாசத்துடபொதிந்துள்ளது. யஜுர்வேதத்தில இவர்கள் ஒரே ஜாதியாராகக்கூறப்படுவதால் இவவேதகாலத்துககுமுனபே இவர்கள் ஒன்றுபட்டிருக்கவேண்டும. யஜுர்வேதகாடசுதகில் தருதராஷ்ட்ரன் பிரசித்தபுருஷனுககூறப்பட்டிருககிறுன. சதாபதப்ராம்ஹணத்தில் (ஜநமேஜய)பரீக்ஷித்தின்பெயா அடிககடிவருகிறது. இதனுல் யஜுர் வேதகாலததுக்கு நூறுவருஷததிறகுமுன்பாவது பாரதயுததம்நடந் திருக்கவேண்டும. 1000 கி. மு-வில யஜுர்வேத மெழுதபபட்டிருக்க வேண்டும. பாரதயுத்தம ஆயிரததுநூறு கி மு. வில நடந்திருக்க வேணடும எனபதாம்.

4. கல்கட்டா ஹைக்கோட் மிஸ்டா பாரஜீட்டரின் அபிபபிராயம்: (London Asiatic Society's Journal of April 1914) இருக்கு வேதமநதரபாகததுக்கும பாரதயுததத்துககும காலததாற சமபந்த மிருககிறது. தேவாபி எனற ஒருவன இருக்குவேதமநதரதாஷ்டா* வாகக்கூறப்படுகிறுன். இவன் சந்தனுவுக்குத் தமையனுகவும், அவன் இராஜயாதிகாரததையடையும்பொருட்டுத தான் ஸிமமாசநத்தி லிருநதுவிலகினவனுகவும, மகாபாரததததிறகூறப்படுகிறுன். இருக்கு வேதபாகத்தேவதையிலும இபபடியே இவனைப்பற்றிக்கூறியிருக் கிறது. இதனுல, பாரதயுத்தத்திறகுககொஞ்சமமுனபு இருக்குவேத மெழுதப்பட்டதென்றுதெரிகிறது. இதறகுப் பின்வரும வேறொரு திருஷ்டாநதமும காணலாம். பாஞ்சாலர்கள் சோமகாகளென்று அடிக்கடிகூறபபடுவதையும, துருபதன் சிலஇடங்களிற சோமகி†என்று கூறபபடுதலையும மகாபாரததகிறகாணலாம. சோமகன் என்றொரு வன இநதவமசததிலிருநதனன. இவன் தருபதனுககுபாட்டனுமகன். (பாட்டனினதகப்பன) இருக்குவேததகில இவன்தகபபன்பெயர் சக தேவனென்றுசொல்லபபட்டிருககிறது. ஐதரேயபராம்ஹணத்தில்

* கண்டவன =செயதவன

† திரௌபதியையும் வில்லிபுததூராழ்வாா இப்படிச சிறப்பிப்பதைத் தமிழ்ப்பாரதத்துட்காணலாம.

இவன் இராஜசூயம்வேட்டுச் சோமபானம்பண்ணிக் கீர்த்திபெற்றானென்றிருக்கிறது. பாஞ்சாலர்கள் சோமகர்களென்றுகூறப்படுவதற்கு இவனதுயாகமே காரணம்போலும். மேறசொன்ன தேவாபியும் சோமகனும்* பாரதயுத்தத்துக்குமுன்னிருந்தவர்கள். இவர்கள் இருக்குவேதத்திற பிரஸதாபிக்கப்படுவதுகொண்டு இருக்குவேதம் பாரதபுஸ்தகத்துக்குக்கொஞ்சமமுன்புதான எழுதப்பெறறதென்று தெரிகிறது.

கலியுகததுக்கு முந்தியகாலததததாககூறபபடுகிறவம்சாவளிகளைப புராணங்களிறபார்ததால, இருககுவேதததின ஒருமநதாரதாஷ்டாவும், பீஷ்மபிதா சநதனுவினசகோதரனுமான தேவாபி எனபவனுக்கும் விஸவாமித்ரன எனபவனுக்குமமததியில் 30-தலைமுறையிருநததாககாணலாம். தலைமுறையொனறுக்கு 20 வருட-வீதம்வைததுக்கொணடால 600 வருட ஆகினறன. பாரதயுத்தம் 1000 கி. மு-வில் நடந்ததென்றுவைததுக்கொணடால வேதமெழுதியகாலம கி. மு. 1600 ஆகும. வேதகாலம கி மு 1700-முதல் 1000-வரையென்றெழுதினவாகளினகொள்கையையும இது அநுசரிககிறதெனபதாம.

மிஸ்டா C. V. வைத்தியரின்சித்தாநதம். இவர் இதிஹாஸங்களின ஆராய்சசியில மிகவலலவர். இவா அபிபபிராயம்வருமாறு:—

(மேற்சொன்னபடி) பாரத யஜுர்வேத இருக்குவேதகாலங்கள் ஒன்றையொன்று ஒட்டியிருக்கின்றனவென்பதறகுப போதுமான அத்தாடசிஏற்பட்டிருக்கிறது. பாரதயுததம யஜுாவேதகாலததுக்கு முன்னும் இருக்குவேதகாலத்துக்குப்பின்னும் நடந்ததென்பது வாஸ்தவநதான். ஆகையால், இருக்குவேதமாவது, உளளாதாரததால் அதற்குப்பிந்தியதென்றுதெரிகிற சதாபதப்ராம்ஹணமாவது, இன்னகாலத்திறசெய்யபபெறறதெனறு ஒருவாறுநிசசயிக்கபபடுமானல், பாரதகாலமும் இன்னதென்றுநிச்சயிக்கபபெறறதாய்விடுகிறது. வேதவித்வான்களால இருக்குவேதமானது கி. மு. 1500-க்கும் 1000-ததுக்குமமததியிற செய்யபபட்டிருககவேண்டுமென்றும, சதாபதப்ராபஹ்மணம கி. மு. 800-க்கும 500-ககுமமததியிற செய்யபபெறறிருக்கவேணடுமெனறும எழுதபபட்டிருப்பது சரியல்ல.

* 'சோமபன்' எனறிருபபின நலம. சோமபன் = சோமபானம பண்ணினவன

இவை இன்னும் அநேககாலத்துக்குமுந்தியேசெய்யப்பெற்றிருக்கவேண்டும். அதற்குரிய ஆதாரங்கள்வருமாறு :—

I. வானசாஸ்திர ஆதாரங்கள்.

1. பரொபஸர் ஜாக்கோபி என்பவர் சமீபமாய்ச்செய்திருக்கும் ஜ்யோதிஷ ஆதாரபரிசோதனைகளிலிருந்து வேதகாலம் கி. மு. 4000த்துக்கும் மேற்போகிறதென்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

2. ஸ்ரீமாந்-சங்கரபாலகிருஷ்ணதீக்ஷிதர் தாம் எழுதிய பாரதீய ஜ்யோதிஷசரித்திரம் என்னும் சிறந்தவியாசத்தில் ஜ்யோதிஷ ஆதாரத்தின் மேல் ஒருகாலவரையறைகுறித்திருக்கிறார். அது சதாபதப்ராம்ஹணகாலவரையறையைக்குறிப்பிப்பதால், பிரஸ்தாப விஷயத்தை விளக்க முக்கியபிரயோஜனமுள்ளதாயிருக்கிறது. அக்கிரந்தத்தின் ஓரிடத்தில் கிருத்திகாநக்ஷத்ரக்கூட்டமானது (Pleiades) அக்காலத்தில் நேர்கிழக்கில் உதயமானதாகச்சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது அவைகள் நிரக்ஷரேகையின்மேற்சாயாம லிருந்தனவென்பதே. இப்போது அவை நிரக்ஷரேகைக்குவடக்கே யிருக்கின்றன. அவை வருஷத்துக்கு 50 விகலீவீதம் முன் போக்கடைகின்றன. அந்தநக்ஷத்ரக்கூட்டத்துள் அதிகப் பிரகாச முள்ளநக்ஷத்ரமானது கி. மு. 2990-ல் அல்லது கி. மு 3000வாக் கில் நிரக்ஷரேகையின்மேலிருந்ததென்று தீக்ஷிதர் கண்டுபிடித்திருக்கிறார். அது எழுதப்பட்டசமகாலத்தில்நடந்ததாக, அந்தப்ராம்ஹண பாகம் இவ்விஷயத்தைக்குறிப்பதால் அந்நூல் கி. மு. 3000-த்திற் செய்யப்பட்டதாகக்கொள்வதுதவறாகாது. (Indian Antiquary Vol. 24 pp. 245)

சூரியமார்க்கத்துக்கும் அதன்வடக்கேயிருக்கிற கிருத்திகைகளுக்குமமத்தியில் 68-டிக்ரி இருக்கின்றனவென்றும், ஒவ்வொருபாகையினமுன்போக்கும் 72-வருஷங்களுக்குச்சரியானபடியால் 68 × 72 = 4896-வருஷங்களாகின்றனவென்றும் கணக்கிடப்படுகிறது. இதிலிருந்து 1900௵-த்தைக்கழிக்க 2996அல்லது ஏறக்குறைய 3000 கி. மு-வில சதாபதப்ராமஹணம எழுதப்பெற்றிருக்கவேண்டுமென்று ஏற்படுகின்றது. இதிற் பாரதபுருஷர்கள் பிரஸ்தாபிக்கப் பட்டிருக்கிறபடியால், பாரதயுத்தம சுமார் கி. மு. 3100ல்* அதாவது

5000வருஷங்களுக்குமுன் நடந்ததென்றுநிச்சயிக்கலாம். பாரதபுருஷர்களுக்குமுந்தின தலைமுறையினர் இருக்குவேதத்திற் பிரஸ்தாபிக்கப்படுவதால், இன்னுஞ்சிலநூற்றாண்டுகளைசசேர்த்தால் இருக்குவேதமெழுதியகால மேற்படுகிறது. இதனால், வேதகாலம கி. மு. 4000—3300 என்ற ஜாகோபியாரின்கொள்கை வலியுறுத்தப்பெறுதல்காணக.

மேற்கூறியதீக்ஷிதருடையகணனம ஆக்ஷேபிக்கததகாதபடி வலுவுறறதாயினும, அககொள்கை தாக்கபபடாமலிருககவில்லை. 'பூர்வ சங்கதிகளை ஞாபகத்திற்கொண்டிருக்கும் கோட்பாடு' (Theory of Reminiscence) என்றுசொலலபபடுவதனடியான சிலஆக்ஷேபங்கள் சிலராற்செய்யபபடடன. அதாவது "கார்த்திகைகள உதயமாகின்றனவென்று நிகழ்காலததாற சதாபதஙகூறுவதொன்றைக்கொண்டு, அந்தக்கிரந்தம எழுதப்பெறறகாலததில நக்ஷத்திரநிலை அபபடியிருந்ததென்றுகொள்ளவேணடுமென்பது அவசியமிலலை. ஏனென்றால் சில காலததுக்குமுனனிருந்த நக்ஷததிர ததின்நிலை கிரநதமெழுதபபட்ட காலம்வரை ஜநங்களினஞாபகத்திறறங்கியிருநது, எழுதும்போது அவவிஷயம் அபபோதுநடபபதுபோலக் குறிக்கப்பட்டதொனறாயிருந்தாலுமிருககலாம" என்பதாம. இன்னும, இவர்கள் தங்களுக்காதாரமாகவெடுததுக்காட்டும திருஷ்டாநதமயாதெனில், இப்போது வாஸதவமாய்வசந்தருதுவல்லாத சித்திரை வைகாசிமாதங்களை வசந்தகாலமெனறே பழங்கொளளகை'ப்பற்றிவழங்கிவருவதுபோல அ து வு ம் எழுதபபட்டிருக்கவேணடும் என்பதாம.

ஒருசஙகதி உலகததில வாஸதவமாய்நடநதாலொழிய நடக்காததை நடநததுபோல எழுதிவைக்கமாட்டார்கள். மேலும், இக் கோட்பாடுடையார கி மு. 3000-ததிற கிருததிகைகள் நேர்கிழக்கிலுதிக்கவாரமபிததனவென்பதை மறுக்கவில்லை ஆயினும, எழுதினவர்கள முனநடநத ஐதிகநிலையை ஞாபகததிற்கொணடு தங்கள காலத்திலநடநததுபோலச சதாபதப்ராமஹ்மணததில் எழுதிவைத்த காலம கி. மு. 800 ஆயிருக்கவேணடுமென்று ஹடவாதம்பண்ணுகிறார்கள். கிருததிகைகளநேர்கிழக்கிலுதிபபதிலிருநதுவிலகியகாலம் கி. மு. 2600 ஆயிருக்கவேண்டும. (இவர்கள அது எழுதப்பெற்ற காலம் கி. மு. 800 ஆயிருக்கவேணடுமென்பதால்) 1800-வருஷத்துக்கு

முன்நடந்த ஒரு சமாசாரம் கொஞ்சகாலத்துக்குமுன் நடந்ததைப் போல் ஞாபகத்திலிருந்துவந்து எழுதுபவர்களுக்குத் தங்கள்காலத்து நடந்ததுபோல எழுத இடங்கொடுத்திருக்குமென்பது மிகவும் அசம்பாவிதமானதாம்.

3 தீக்ஷிதர்கணித்திருக்கிற இன்னொருகாலவரையறை வேதாங்க ஜ்யோதிஷகிரந்தம கி. மு. 1400-ல் செய்யப்பட்டிருக்கவேண்டுமென் பது. மாக்ஸ்முல்லர் இதன்காலம கி. மு. 1180 என்று வேறு ஆதாரங் கொண்டு கண்டுபிடித்திருக்கிறார். இருவருக்குமுள்ள 220-வருஷத்து வித்தியாசம் ஒரு பெரியவித்தியாசமல்ல. பின்னவர்சொல்லுகிறபடி வேதாங்கஜ்யோதிஷகாலம் கி மு 1200 என்றுவைத்துக்கொண்டால் அதற்குமூலமாகிய சதாபதபராம்ஹணத்தின்காலம் இன்னும பழமை யுற்றதாயிருக்கவேண்டும

4. மகாபாரதத்திலிருந்து ஆதாரமான சிலவிஷயங்களைக்கவ னிப்போம். பாண்டவர்கள்செய்வதாயொப்புக்கொண்ட 12-வருஷவன வாசகாலமும ஒருவருஷ அஞ்ஞாதவாசகாலமும சாந்த்ராயணரீதி யாய்க் கணிக்கப்பெற்றதென்றுதெரிகிறது. ஆனால் வேதாங்கஜ்யோ திஷகாலத்திலோ சாந்த்ராயணவருடகணனரீதி பழங்காலத்துசசமா சாரமாய்விட்டது. இச்சோதிடகிரந்தம் எழுதப்பெற்றகாலம் கி. மு. 1400என்றுவைத்துக்கொண்டால், பாரதயுத்தகாலம இதற்கு மிகவும முந்தினகாலத்ததாயிருக்கவேண்டும.

5. பிராம்ஹணத்திலும பாரதத்திலும் நரபலியைப்பற்றிய விஷயங்கள், தெளிவாய் அப்போது நடந்துவந்தவிஷயங்களைக் கூலங் கஷமாய்க்குறிப்பதுபோலக் குறிக்கப்பெற்றிருப்பதால் அதுவழங்கி வந்ததொன்மையுற்றகாலத்தி லவை எழுதப்பெற்றிருக்கவேண்டும்.

பாரதயுத்தம் கி. மு 1400 முதல் 1000 வரை என்றகொள்கை யுடையார்க்கு கி. மு. 3000-த்தில் யுத்தமநடந்ததென்றவிவரமானது புத்தருக்கும் யுத்தத்துக்கும்மத்தியில் 2500-வருஷம்கடந்தது என்றதை ஞாபகப்படுத்தி அது அசம்பாவிதம் என்பதைத்தோற்றுவிக்குமாயி னும், அவ்வளவுகால மிடையீடுற்றதென்பதுஉண்மைக்குமாறாகாது. மேற்கூறியபடி பாரதயுத்தம் 5000-வருஷத்துக்குமுன்பேநடந்ததுதா னென்பதைப் பின்வரும் ஆதாரத்தாலுங்காணலாம்.

## II. தேசாந்தரிகளின் சரித்ரஆதாரம்.

1. சந்திரகுப்தன்சபையிலிருந்த ஒரு கிரேக்கஸ்தானாதிபதியாகிய மெகஸ்தனீஸ் என்பவன் இந்தியாவிஷயமாய் எழுதிவைத்தகிரந்தத்தைப்பார்ப்போம். அவன் எழுதியகிரந்தத்திற் பெரும்பான்மை நஷ்டமாய்ப்போனபோதிலும் இப்போது நமக்குக்கிடைத்திருக்கிற சிலபாகங்களிலிருந்து சிலவிஷயங்கள் இதுவிஷயமாய்த்தெரிந்துகொள்ளக்கூடியவாயிருக்கின்றன. சௌரசேனி ஜநங்களால்வணங்கப்படுமேவனென்று அதிற்கூறப்பட்டிருக்கிற 'இந்தியன் ஹெராக்குலஸ்' என்பவனைஸ்ரீகிருஷ்ணனென்று நாம் ஒற்றுமைப்படுத்திக்கொண்டால் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் சந்த்ரகுப்தனுக்கும்மத்தியில் 138 தலைமுறை கடந்ததாகக்காண்போம். ஒருதலைமுறைக்கு 20-௵ வீதம்வைத்துப் பார்த்தால் மொத்தம் 2760-௵ஆம். சந்திரகுப்தன் இற்றைக்கு 2212-௵த்துக்குமுன் இருந்தவனென்று நமக்குநன்றாய்த்தெரியும். இவற்றால்,பாரதயுத்தம் 5000௵த்துக்குமுன் நடந்ததென்ற வைதிக சம்ப்ரதாயப்பழங்கொள்கை வலியுறுகிறது என்பதாம். (Bombay Chronicle)

ஐரோப்பியபண்டிதர்கள் இந்தியபூர்விகநாகரிககாலங்களைக் கூடியவரை குறுக்கிக்கூறுவதிற் பேரவாவுடையவர்கள். பழைய இந்திய நாகரிகத்துக்கு மேற்குத்திக்கேகாரணமென்றகொள்கையுடையராதலாற் கிரேக்கதேசத்தின் அத்யுந்நதநாகரிககாலமாகிய கி. மு. 1000-500-க்குப்பின்பே இந்தியபூர்விகத்தைநிறுத்தப்பிரியப்படுவர். அவர்களுக்குப் பாரதயுத்தகாலத்தை கி. மு. 3000-த்துக்குக்கொண்டுபோக மனமிராது. ஆனால் இந்த அபிப்பிராயம் இப்போது மாறிக்கொண்டு வருகிறது. கி. மு. 4000-த்திற்றான் மனிதன் பூவுலகில் முதன்முதற் சிருட்டிக்கப்பட்டானென்ற கிறிஸ்தவர்கள் யூதர்களின்கொள்கையானது, சாசனங்களாலும் பூமியில்வெட்டியெடுக்கப்படும்பொருள்களாலும், எகிப்தும் பாபிலோனியாவும் கி. மு. 4000-த்துக்குமுன்பே நாகரிகம்பெற்றதென்றும், கடவுளால்வெளியிடப்பெற்றதென்றுபைபிளிற்கூறப்படும் "பத்துக்கற்பனை" ஏற்கனவே மிகவுமுந்தியகாலத்தில் ஓர் அரசனாற் சட்டமாகப்பெற்றிருந்தனவென்றும் வெளியிட்டிருக்கிற புராதனபரிசோதகர்களின் ஆராய்ச்சியாலும் தளர்ந்துகொண்டு வருகிறது. ஆகையால், புதுக்கொள்கைகளைத் திடீரென நாம் நம்பிவிடக்கூடாது.

A. M. சடகோபராமாநுஜாசார்யர்,
திருச்சிராப்பள்ளி.

---

# யசோதரகாவிய ஆராய்ச்சி.

"செந்தமிழ்" (தொகுதி-௯௨ பகுதி ௩-ல்) ௧௦௪-ம் பக்கத்தொடர்ச்சி.

IV. இக்கதை, புதிய அச்சுப்பிரதியில் யசோதரன்சரித்திரம் என்ற தலைப்பிட்டுப் பெரிதும் நூலைத்தழுவியே இனியநடையில் விரிவாக எழுதப்பட்டுளது. ஆயினும், நாடு நகரம் உய்யானம் திருமணம் மணமகள் பள்ளியறை மைந்தன்பிறந்தகொண்டாட்டம் மூப்புவந்துற்ற அரசனதுமனத்தோற்றங்கள் அரசன் மகனைவிட்டுப் பிரியுங்கால் மகனுக்குக்கூறியபுத்திமதிகள், மற்றும் இவைபோன்ற விஷயங்களுள், காப்பியத்திறங்காணப்படாத பலகற்பனைகள் கதையிற் சேர்க்கப்பட்டுள்ளன. இவைகளைப் புதியஅச்சுப்பிரதியில் XIII—XX, XXIII, XXXVIII—XXXIX, XLVI இப்பக்கங்களில் மிகுதியாகக்காணலாகும். அன்றியும், சிற்சிலவிடத்துப் பாடல்களின்வரிசைப்படியே விஷயங்களைக் கதையிலெழுதிவருங்கால், இடையில் மதசம்பந்தமானவிஷயங்களுள்ளிட்டுள்ள சிலபாடல்களின்கருத்துக்கள் சேர்க்கப்படாது முழுதும்விடப்பட்டுப்போயின. அப்பாடல்களிலடங்கியவிஷயங்களைத்தழுவியசங்கதிகள், ஜைனபரிபாஷைத் தொகைவிளக்க அகராதி என்ற தலைப்பிலும் காணப்படாமையின், அவைகள் நூலைவாசிக்கப்புகும் சாமானியர்களின்மனத்திற்கேட்ட வழியில்லை. உதாரணம்'—அமிருதமதிபடும் நரகத்துன்பங்களை நூலிலுள்ளவாறே எழுதிவருமிடத்து இடையிலுள்ள,

> "ஒருபதிறொடொருபதினையுநதியதனும்ப
> ரிருபதிறுடைநதுவிலுயாந்தபுகையென்னும்
> பொருவரியதுயரினவைபொங்கியுடன்வீழு
> மொருபதிறொடேழுகடலகளளவுமொளிதாரோய்"

என்றசெய்யுளின்கருத்துமட்டும் கதையிற்காணப்படவில்லை. நிற்க, கதையில்வந்துள்ளவிஷயங்களுள்ளும சிற்சில, மூலபாடங்களோடொவ்வாது பொருண்மாறுபட்டிருக்கின்றன. இவைகளைக் கீழே காட்டுவோம்.

(1) "யானிவ்வாளினின்மக்களிரட்டையை
யீனமில்பலியாகவியற்றிருல
ஏனைமானுடர்தாமிவ்விலங்கினி
லானபூசனையாற்றுதலாறறென" I. 21.

இச்செய்யுளிலும் வடமொழிக்காவியத்திலும் மாரிதத்த அரசன் தான், இருவரைச் சண்டமாரிதேவிக்கு நரபலிகொடுத்துப் பூஜை செய்தபின்னாக் காலதாமதமின்றி உடனே குடிகள் தாங்கொணர்ந் துள்ள விலங்குகளைத் தேவிக்குப்பலிகொடுத்துப் பூஜைசெய்யக்கடவ ரென்று கூறினதாகவுளது. புதிய அச்சுப்பிரதியிலோ கீழ்வருமா றுளது.

"ஜனங்களே! நான் பின்பு எனதுவெற்றிவாளினால் அழகியவடி வமைந்த இரண்டுமானிடரைப் பலிகொடுத்துப் பூஜைசெய்வேன். நீங் கள் விலங்குஜாதிகளின்பூஜையை முதலில்நிறைவேற்றக்கடவீரென்று அரசன் அங்குவந்துள்ள தன்பிரஜைகளுக்குக் கட்டளையிட்டனன்"

(2) "ஆடவரின்றுமேலாலருவருத்தணங்களுரைக
கூடலாதுறந்துநோன்மைக்குணமபுரிந்துயாதறகாகப்
பீடுடையனுற்றந்தபெருமகளிவளென்றுள்ளே
தோடலாகுழலிதோழிதுணிந்தனள்பெயாந்துசென்றாள்" II 37

இச்செய்யுளில், குணவதியென்னுந்தோழி, அரசியாம் அமிருத மதியின்மதிகளவொழுக்கத்திறசென்றதைநினைந்து "இன்றுதொட்டு ஆடவர்கள் பெண்பாலாரைவெறுத்துத் துறந்து நற்கதிபெறுமாறு பிரஹ்மதேவனாற்படைக்கப்பெற்றபெருமகளேயாவளிவளென மனத் திற்கொண்டு அவவிடம்விட்டகன்றனள்" எனக்கூறப்பட்டுளது. அச்சுப்பிரதியில் இச்செய்யுளின்பொருள் அடியில்வருமாறுளது.

"பிரமன் இவளுக்கு இணையில்லாத போகபாக்கியங்களையும் செல்வ மிகுதியையும் பதவியையுமளித்தும், இவளதுபுத்தியைமட்டும் ஈன மாக்கிய தந்தோ கொடிதுகொடிதென்று பலவாறுநினைந்து ஒருவாறு தனக்குள்ளேநொந்துகொண்டு (தோழி) செல்லுகையில......" என் றுளது.

ஆடவரன்றி மேலார் எனப் பாடங்கொள்ளினும், "சாமானியர்களல் லாத அறிவுடையோராகிய ஆண்மக்கள்" என்று பொருள்கூறுதல்

பொருத்தமுடைத்தாம். பெயர்த்துச்சென்றாள் என்பது அச்சுப்பிரதிகளிற்கண்டபாடம்.

(3) "ஆயிடையரசனுள்ளத்தரசினைவிடுப்பவெண்ணித்
தாயமாகோயிலெய்திச்சந்திரமதிதன்முன்னாச்
சேயிடையிறைஞ்சமற்றிததிரைசெய்நீருலகமெல்லா
நீயுயாகுடையினவைகிநெடிதுடனவாழ்கவென்றாள்" II 54.

இச்செய்யுளில், யசோதரராஜன அரசியலைநீத்துத துறவுகொள்ள எண்ணங்கொண்டவனாய்த் தன்தாயாம சந்திரமதியின் அரமனைக்குச் சென்று அவளது அடிபணிந்துநின்றனன். பிறகவே, தாய் அவனை நோக்கிக் கடல்சூழ்ந்தஇப்பூவுலகனைத்தினையும் நீ ஒருகுடைக்கீழாக்கி உன்குடைஓங்க நீடூழியாண்டுவாழ்வையாகவென்றனள்" என்றுகூறப்பட்டுளது. வடமொழிககாவியததும இக்கருததுததானுளது.

அச்சுப்பிரதியில், "இறைஞ்சி ....வாழ்கவேன்றான்" எனப்பாடங்கொண்டு, "அரசன .. .தன்தாய சந்திரமதிக்கு அறிவிக்கலாமென்று அவளிருந்த அரமனைககுச்சென்று அவளைக்கண்டு விலகிநின்று இக்கடல்சூழ்ந்தபுவியை நீயேயாளுவாயாகவென்றனன்" என்றுளது.

(4) "விண்ணிடைவிளங்குங்காந்திமிகுகிரமதியந்தீங்தே
மண்ணிடைமழுங்கச்சென்றோர்மறையிருட்பகுதிசேரத்

தெண்ணிடையுள்ளந்தன்னுள்நீந்திடுகின்றதென்றான்" II. 56

இச்செய்யுளில், யசோதரராஜன ஒருபொழுதும சந்திரனைவிட்டு நீங்காதநிலவேபோல எப்பொழுதும தன்னைவிட்டகலாது தன்னுடன் ஆகாயமளாவியமாளிகையிலவீற்றிருந்த தனமனைவியாம் அமிருதமதி, ஒருநாளிரவினில், தன்னைவிட்டுநீங்கி ஒளிமழுங்கித் தரையிற்சென்று, கண்கொண்டுகாணவொண்ணாதகாரிருளைபோன்று கறுத்தமேனியனும் யானைப்பாகனுடன்கூடிக்கலந்திருக்கக்கண்டு மனம்புழுங்கி, அதனை உள்ளவாறு வெளிப்படையாகத் தனதாயினிடத்துச்சொல்லாது மறைபொருளாகக்கூறுகின்றான் என்று கூறப்பட்டுளது.

இ-ள "அன்னாய! ஆகாயமார்க்கததிலவிளங்குஞ் சந்திரகாந்திகிரணங்களால்நிறைவுற்றசந்திரனைவிட்டுநீங்கி, ஒளிமழுங்கித் தரையிற்சென்று, ஆங்குத் தன்னைமறைக்கவல்லதோர் இருட்பகுதியுடன்

இரவிற்சோர்ந்திருக்கக் கனவினிற கணணுரைக்கண்டேன். அங்ஙனங் கணடது என்னுள்ளத்தினை வாளகொணடறுககின்றது என்றான்" என்பதாம. இங்கு இறைவி எனறது தாயை. புதிய அசசுப்பிரதியில மேலேயுள்ளசெய்யுளினபொரு ளடியில்வருமாறுகாணப்படுகின்றது.

"வாராய்தாயே! ஒருநாளிரவில நான் நித்திரைபுரிந்தபோது இரண்டுதீயகனவுகளகண்டேன. சநதிரனுடையகாநதியாம ரோகிணி தேவி சநதிரனை விட்டு நீங்கி மணணிடைமமுழுங்கியதாகக்கண்ட தொன்று. இருளுக்கேதுவாகியமேகபடலம அப்பொழுது சூரியனை மறைத்ததாகககண்டது மற்றொன்று. இவ்வாறுகணடதுமுதற கொண்டு மனததுயரால என்சரீரம்முதலியன மாறிவிட்டன என்ற னன்" என்னுடைய எனபது அசசுப்பிரதியிறகணடபாடம.

வடமொழிககாவியதது மூன்றுவதுசருக்கததுப் பதினொன்று வது பனனிரண்டாவது சுலோகங்களிறகூறியபடியே மேலே எழுதி யுள்ளசெய்யுள அமைக்கப்பெற்றுளது அசசுலோகங்கள் கீழ் வருமாறு:—

"கிம் த்வம் காஞ்சிரவசேவ்யு ப்ரமாணம்
விஹ்ருதம் கவடையோஜிதகஞ்சீக்ஷ ।
வ்ருக்ஷேக்ஷ்ய த்வ யோ நிஶி த்ருஷ்டா
தேவி ஸம்மகேஸீ திஸிரோண ॥ 3. 11.

தாத்ருஸம் த்வ ஸகருதவருவஞம்
ஜந்தீஸ ந யோ ஸுவதாவி ।
தத்வநசீநவஸி கீஸீதசேவரெத்து -
த்தஸ்ஸஸம் விதந்வெத சச தஸ்வக்ஷ" ॥ 3. 12.

(5) "கொலைவினைதினைகைசுடாகுவலயத்திறைமைசெயயு
மலைதவிலவாயமையாககுமவாய்மொழிமதிப்பையாககும
விலையிலபொருளினமாடசிவிளைப்பதுகளவின்மீட்சி
யுலைதவிலபெருமைதிட்பமுறுவலியொழிநததீயும்" IV. 18.

"தெருளுடைமனததிறசெனறுதெளிந்துணாவாயசெலவம
பொருளவயினிறுககமினமைபுணாததிடும்புலசுதேன்க
ளொருவியபயனுமஃதேயொளியினேடைழுகுவெனறி
பொருணமிகுகுலனேடின்பமபுணாதலுமாகுமாதோ" IV. 19.

கொலையினது இன்மை - (ஹிம்ஸாயாம் அஸாவஃ, அஹிம்ஸா) கொல்லாமை. களவின்மீட்சி-கள்ளாமை. ஒழிந்தது-(கொல்லாமை பொய்யாமை கள்ளாமை இவையொழிந்தது) காமத்தை ஒல்லாமை. இறுகக்கம் - பசை; பற்று. பொருள்வயினிறுக்கமின்மை-(விஷயேஷு ஸங்கோசஃ, விஷயேஷு அஸங்கஃ, அபரிக்ரஹ இதி ஸாவஃ) பொருள்களிடத்துப் பற்றில்லாமை. கூடாருவலயத்து - ஒருவருக்கொருவர் பகையாயார்நிறைந்த இப்பூவுலகத்து.

இ - ள் கொல்லாமை, பகைநிறைந்த இவ்வுலகத்து எங்கும் பிணக்கின்றி இணக்கமுற்ற மேலானவாழ்வைத்தரும். விபரீத வேறுபாடுகளுக்கிடமின்றி உண்மைபேசுதல், வாய்மொழியில் மேலானமதிப்பையுண்டுபண்ணும். கள்ளாமை, நேர்மைகாரணமாக விலையேறப்பெற்ற செல்வப்பொழிவைத் தானேகொணர்ந்துசேர்க்கும். காமத்தையொல்லாமை, மேலுக்குமேல் தேகவலுவையும் மனவுறுதியையும் சொல்வன்மையையும் தரும். பொருள்களினிடத்து அவாவின்மை, கலக்கமற்றமனத்தின்கண், தெளிந்தநல்லறிவினைத் தந்து பழமபிறப்புணர்ச்சியையும் வரும்பிறப்புணர்ச்சியையும் தரும். மதுமத்திய மாம்ஸங்களையுணணுதுவிலக்கல், ஒளி அழகு வெற்றி நல்லகுடிவாழ்க்கை இன்பம் ஆதிய பலவகைநன்மைகளைப்பயக்கும் என்பதாம்.

இச்செய்யுட்களிற பாதஞ்சலயோகநூலினும் வடமொழியசோதர காவியத்தும் சொற்றவாறு, கொல்லாமை பொய்யாமை கள்ளாமை காமத்தையொல்லாமை பற்றறுத்தல் ஆகிய இவ்வைந்துவிரதங்களுள் ஒவ்வொன்றினுலுமமையுமபயன்களும, வடமொழியசோதர காவியத்துச் சொற்றவாறு ஊன் தேன் கள் ஆகிய இம் மூன்றினையு முணணாது விலக்குவதனுலமையும் பயன்களும் கூறப்பட்டுள்ளன. பாதஞ்சலயோகநூலிற்கண்ட சூத்திரங்களும் வடமொழிக்காவியச் சுலோகங்களும் அடியில்வருமாறு:—

"அஹிம்ஸாப்ரதிஷ்டாயாம் தத்ஸந்நிதௌ வைரத்யாகஃ। 2 அத. 35 சூத்திரம்.
ஸத்யப்ரதிஷ்டாயாம் க்ரியாபலாஶ்ரயத்வம்। ஷை 36 ஷை
அஸ்தேயப்ரதிஷ்டாயாம் ஸர்வரத்நோபஸ்தாநம்। ஷை 37 ஷை
ப்ரஹ்மசர்யப்ரதிஷ்டாயாம் வீர்யலாபஃ। ஷை 38 ஷை
அபரிக்ரஹஸ்தைர்யே ஜந்மகதந்தாஸம்போதஃ। ஷை 39 ஷை

இ - ள் ஒருவனிடத்துக் கொல்லாமையென்பது நிலைநிற்குமாயின், அவனைக்கண்ட அளவில எல்லாபபிராணிகளும பகை ஒழிந்துநிறகும. வாய்மைநிலைநிறகுமாயின், முயற்சியின்றி எல்லாக் காரியமும் அவன் ஆகவெனில் ஆகும, அவனதுவாய்சசொல ஒரு பொழுதும வீ ண போ கா து. கள்ளாமையெனபதுநிலைத்திருக்குமெனின், அவன்விருமபாமலே எததிசையிலுள்ள இரததினஙகளும தாமாகவே அவனிடமவந்துசேரும பழுதில்லாத நித்தியப்பிரஹ்மசரியம ஒருவனிடத்திருப்பின், அது ஒபபில்லாததேகவலுவையும் மனவுறுதியையும் சொல்வன்மையையுமநல்கும. அபரிக்கிரகம (சரீரமுதலாம் எல்லாவிதபோகஸாதனங்களுள்ளும பறறில்லாமை) முறபிறபபினையும இபபிறபபினையும இனிவருமபிறபபினையும அவைகளுக்கானகாரணங்களையும தெளிவுற உணரசசெய்யும என்பதாம.

𑌅𑌹𑌿𑌂𑌸𑌨𑌾 𑌵𑌈𑌰𑌹𑌰𑌂 𑌪𑌰𑌂 𑌹𑌿 𑌵𑌶𑌃
    𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌤𑌪𑌸𑍋𑌽𑌵𑌿𑌵𑌾𑌕𑍍𑌯𑌤𑌾𑌂 ।
𑌅𑌸𑍍𑌤𑍇𑌯𑌮𑍇𑌕𑌤𑍍𑌰 𑌨𑌿𑌧𑌾𑌨𑌮𑌾𑌨𑌯𑌂
    𑌸𑌮𑌾𑌵𑌹𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌤𑌾 ॥ 4. 26.

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌵 𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑍍𑌯𑌯𑍇𑌨
    𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌨𑌃 𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑌨𑌾 ।
𑌤𑍍𑌯𑌜𑌤𑌿 𑌸𑌙𑍍𑌗𑌾 𑌜𑌯𑌜𑌨𑍍𑌮 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌭𑌵𑌂
    𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑌨 𑌪𑌰𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌯𑌤𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌵𑌃 ॥ 4. 27.

இ - ள் எவருக்குந் தீங்குபுரியாமை, பகையைததவிர்ப்பதறகான சிறநதவழியாகும. மெய்பேசுதல், சொனனசொற்பழுதாகாது பயனுறசசெய்யும. கள்ளாமை, எலலாததிசைகளினினறும விலையுயர்நதபொருள்களைககொணாநதுசேர்க்கும. சிறநததாம பிரஹ்மசரியம், நல்லதேகவலுவையும மனவுறுதியையும சொல்வன்மையையுமபயக்கும். யானெனதெனனுமபற்றுததுறநதநோன்புடையாருககுக் கழிந்தனவும வருவனவுமாம்பிறப்புககளின் உணர்சசியுண்டாம் தாஙகொணட எல்லாவிரதங்களும் நன்குவளர்வதிற்கண்ணுயினராகிய பெரியோர் மதுமதியமாமஸங்களை யுண்ணுதுநீக்குவர் என்பதாம.

இவ்வாறிருக்க, புதிய அச்சுப்புத்தகத்தில் மேலேயுள்ள இரண்டு செய்யுள்களுக்கும் கீழ்வருமாறு மாறுபடப் பொருள்கூறப்பட்டுளது:—

"ஒருவனிடம் கொலையென்பதொன்றில்லையாயின், அவன் இவ்வுலகில் மேலானநிலையையடைவான். அதுவே பொய்யணுகாச் சத்தியநிலையை அளிக்கும். அந்தச சத்தியவான்வாய்மொழியோ எல்லோராலும்மதிக்கபபடும். ஜீவகாருணியத்தின்மாட்சியோ பிறர்பொருளைக்களவுசெய்தலைநீக்கும; இதன்றிப் பெருமையையும மனத்திடததையும சரீரதிடததையும் மற்றவைகளையும அளிக்கும. மனத்தின்தெளிவால் உணர்தலென்னும செல்வமவாய்ததாற் பொருளைத தாராளமாய்சசெலவிடச்செய்யும். இவற்றின்முதிர்ச்சி, புலால் தேன் கள் இவைகளைத்தவிர்க்கும். தேககாந்தி, அழகு, வெற்றி, செல்வமமிக்ககுலம இன்பநுகர்சசி இவைகளும் உண்டாம்"

. கூரார்குவலயதது, வாய்மையாக்கும, விலையில்பொருளின், மனத்திற்சென்ற, புணர்ந்திடும இவைகள் அச்சுப்புத்தகத்திலுள்ள பாடங்கள்.

(6) "நாவழுகிவீழ்முழுதுநஞ்சுணமடுத்தா
ளாவலறியதுவுருகியலமரினுமையோ
சாவவரிதிவணரசிதகலவினைதருநோ
யாவும்விளைநிலமதனிவினியவுளவாமோ" IV. 66.

இ-ள் நரகத்துவீழ்ந்த அமிருதமதி ஆங்கு நாமுழுது மழுகிவீழும் நஞ்சுணவை உணடனள். உண்ணவே நாவுருகி முழுது மழுகிவிழக் கோவென்றலறி அலமந்தனளாயினும், அவள் ஆங்குச் சாவதில்லை. ஐயோ, பாவம்! என்செய்வாள். வெய்யதீவினைகளின் பயன்களாம துன்பங்கள்யாவும்விளையுமிடமாம் நரகத்திடத்து இனிதெனத்தோன்றுவதெதுவும அணுகாதுவிலகிநிற்குமன்றோ? என்பதாம.

அச்சுபபுத்தகத்தில், "உணவில்நஞ்சுபெய்துகோல்வித்தவள் முழுதுமழுகிவிழும்நாவாலலறவே, அந்நாவுமுருகிவருந்தினும் அவளிஙகுச் செத்தொழிவதில்லை. துயருள் அழுந்துபவளேயாம்......" என்றுளது.

(7) "திலப்பொறியிலிட்டனர்திரிப்பவுநெருப்பி
னுலைப்பெருகழற்றலையுருக்கவுமுருத்துக்
கொலைக்கழுவினிட்டனர்குலைப்பவுமுருக்கு
முலைப்பருவருத்தமதுரைப்பரிதுகண்டாய்" IV. 66.

இச்செய்யுளில், "எள்ளாட்டுஞ்செக்கிலேயிட்டு அரைப்பர்; நெருப்பினுலையிலேயிட்டு எரிப்பர், உருக்குவர். ..... ......" என்றிருக்க, அச்சுப்புத்தகத்தில் "எள்ளாட்டுஞ்செக்கிலிட்டுத்திரிப்பார்கள். நெருப்புலையில், காலையும் தலையையும்வைத்தெரிப்பார்கள். உருக்குவார்கள்" என்றுளது. பெருகழற்றலையென்றதனைப் பெரிய கழல் தலையென்று பிரித்தனர்போலும்.

(8) "வெய்யதீவினைவெருவுறுமாதவம்விதியினினிறுதிகொண்டா
னையதாமதிசயமுறவடங்கினனுடம்பினையிவணிட்டே
மையல்வானிடையனசனற்குழாங்களில்வானவன்றானாகித்
தொய்யினமாமுலைச்சுரவராமகளிர்தந்தொகுதியின்மகிழ்வுற்றான்" 4—96.

இ - ள் மாரிதத்த அரசன், வெந்துயர்களுக்கிடனும் தீவினைக ளெல்லா மஞ்சித் தன்னைவிட்டொழியுமாறு மாதவத்தினை முறையினின்முடிவுறச் செய்துமுடித்தனன். பின்னர் யாவருமதிசயமுற உடம்பினை இப்பூவுலகில்விட்டொழித்து, வானுலகின்கட் போகந்தருமுலகங்களுக்கிடையனவாகவுள்ள சனற்குமாரகற்பங்களெனப் படும் மூன்றாவது துறக்கப்புரையிற்சென்று தேவனாகி, ஆங்குள்ள தேவமகளிருடன் இன்புற்றுவாழ்ந்தனன் என்பதாம். மையல்வான் என்றது மயக்கவிருள்கெடாதது, போகங்களைத்தரும் கற்பங்களெனப் படும் மேலுலகங்களை, அஃதென்னையெனில், கற்பாதிமுதற் கற்பாந்த முறச்சென்றவர்கள் பற்றுடையராதல்பற்றி. இடையன - இடையி லுள்ளனவாகிய. சனற்குழாங்களில் - மூன்றாவது சொற்கமாகிய சனற்குமாரகற்பத்துள்ள தேவர்குழாங்களுள். வானவன்றானாகி - தேவனாகி.

காயப்ரவீசாரா ஆ ஐசாநாத் ।

தத்துவார்த்தசாஸ்திரம். அத். 4. சூத். 7.

व्या:- कायेन प्रवीचारो मैथुनसेवनं येषां ते कायप्रवीचाराः। भवनवास्यादय ऐशानान्ताः संक्लिष्टकर्मत्वान्मनुष्यवत् स्त्रीविषयसुखमनुभवन्तीत्यर्थः।
शेषाः स्पर्शरूपशब्दमनःप्रवीचाराः।

தத்துவார்த்தசாஸ்திரம், அத. 4, சூத். 8.

व्या:- सानत्कुमारमाहेन्द्रयोर्देवा देव्यश्च स्पर्शप्रवीचाराः।
ब्रह्मब्रह्मोत्तरलान्तवकापिष्ठेषु रूपप्रवीचाराः।
शुक्रमहाशुक्रशतारसहस्रारेषु शब्दप्रवीचाराः।
आनतप्राणतारणाच्युतेषु मनःप्रवीचाराः।
परेऽप्रवीचाराः।

தததுவார்ததசாஸதிரம், அத. 4, சூத. 9.

व्या:- परे ग्रैवेयकादयो देवाः सर्वे अप्रवीचाराः। प्रवीचारो हि वेदनाप्रतीकारः। तदभावे, तेषां परमसुखमनवरतं भवति।

இ - ள் "கீழ் முத்தேவராகிய பவணர் வியந்தரர் ஜயோதிஷ்கர்களும், சௌதர்மேசானகற்பத்தார்களும், இப் பூவுலகத்தாரைப் போன்று சரீரஸம்யோகத்தாற் காமநுகர்ச்சியடைவர். சனற்குமார-மாஹேந்திரகற்பத்துத்தேவர்களும் தேவியர்களும சரீரஸமஸ்பரிசத்தாலும், பிரஹ்ம-பிரஹ்மோத்தர-லாந்தவ-காபிஷ்டகற்பத்து ஒருவரையொருவர் கண்கொண்டுகாண்டலினாலும, சுக்கிர-மஹாசுக்கிர-சதார-ஸஹஸ்ராரகற்பத்து ஒருவர் மற்றொருவரின்குரலோசையையும பாட்டோசையையும் செவிக்கொள்வதனாலும், ஆனத-பிராணத-ஆரண-அச்சுதகற்பத்து ஒருமனப்பட்டுச் சிந்தைமேவலினாலும் அவ்விதநுகர்ச்சியடைந்தாராவர். இவர்களுக்குமேலோராகிய கிரைவேயகாதியராம் தேவர்கள்யாவருமம் காமநோயற்றாதலின்,

அவர்களுக்கு அவ்வழியினாலாகிய இன்பமேவேண்டுவதில்லை. அவர்கள் இடையறாது பரமானந்தத்தையே நுகர்வாராவர்" என்பதாம்.

இதேகருதது அடியிலவருஞ்செய்யுட்களிலுங் காணலாகும.

"மிடையின்மேனியைத்தீண்டலிறகாணடலி
லடையுமினசொலிறசிநதையினமேவலின
மடநலாரினவருமபயனெயதுவா
அடைவிலோதியிறசொனனமுனைவரும" மேருமநதரபுராணம, 503.

"மோகமினமுனிவனிதினபயபோலவே
தோகையையனையவாதொடாசசியினறியே
சோகமோடுறுதுயரின்றிததானியல
பாகுநலலகமிநதிரததவரினபமே" மேருமந்தரபுராணம், 505.

மேலேகுறிததயசோதரகாவியசசெய்யுள், அடியில்வருமவட மொழிக்காவியததுச்சுலோகததின்வழியே அமைககப்பெறறதாகும.

"[illegible]
[illegible]
[illegible]
[illegible]" 4 ஸ. 69 சு.

இ-ள் அவ்வரசன் குருவின்சந்நிதானதது நெடுநாளிருநது மோக்ஷவிததையைக்கறறுணாநது, அகததவம புறததவமெனபபடும இருவகைத்தவங்களையுஞ்செய்துமுடித்து, நிர்யாணகாலததிற சமாதி முறைபபடி சரீரததைக்களைநதொழிததுவிட்டு மூன்றாவதுசொர்க்கததுத் தேவனாயினன் எனபதாம.

புதிய அச்சுப்புததகததில், விதியினின்றுதிகோண்டான், வனசனற்குழாங்களில் எனப பாடங்கொணடு, "தவநெறியில் இவன் பன்னாள் வழுவாதுநின்று எண்குணனைத்துதிசெய்து பூதவுடலை இமமண்ணிடை நீத்து விண்ணுலகிற் றேவர்குழாங்களில் தலைமைபெற்றுத் தேவமடந்

வனசனற்குழாம், தாமரையிறபிறந்த பிரமனதுபதம்பெற்ற நல்ல

கூட்டம்; அனசனர்குழாம் எனப் பாடபேதங்கொள்ளின், மனிதர் போல அசனமுடகொள்ளாத தேவர்களதுகூட்டம்" என அரும்பத வுரையென்ற தலைப்பின்கீழ்க் காட்டபபட்டுளது.

(9) " காளைதருகலயாணமிததிரனெனுமபே
ராளியடுதிறல்வணிகனரசனுயிரனையன்
கேளொருவனவநதிடைபுகுநதரசகெட்டேன
வாளுருவுகின்றதுவெனமாதவனமுனெனமுன " 4—41.

இச்செய்யுளில், கல்யாணமிததிரனெனுமவணிகன் அரசன துயிர்ததோழனெனககண்டிருகக, அசசுபபுததகததில் "அம்முனிவர ரின்மித்திரனும் ஜினதருமபரிபாலகனுமாகிய கலியாணமிததிரனெனப் பெயாகொண்ட வணிகசசிரேட்டி" என்று கண்டுளது. உயிரனைய என்பது அச்சுப்பிரதியிறகணடபாடம.

(10) " மாசின்மாமணிமேனியினவாசமோரோசனைமணநாறத்
தேசொரோசனைதிளைததிடமுளைதசெழுதினகரனனையார்கள்
ஆசிலெண்குணனவதியொடமைந்தனரலைகடலளவெல்லாம்
ஏசில்வானுலகிணையிலின்பததினிலிசைநதுடனியல்கின்றா. IV. 100

இ-ள் அபயருசியும அபயமதியும ஓரோசனைதூரம் நறுமண மும இளஞ்சூரியனையொததுத திகழொளியுமவீசும் நிர்மல திவ்ய தேகத்தோடு ஈசாநகறபததிறசெனறு, முறபிறபபுக்களில்நிகழ்ந் தனவாம சங்கதிகளையெல்லாமநினைவுகொணடு எண்குணனதுதிரு வறததினில் மாறாதமனததினராய, அச்சொர்க்கதது நீண்ட ஆயுளள வாகிய (இரணடு) கடறகாலவளவும் இணையிலாதவின்பததினை இடை யறாதுறுகாநது மகிழ்வுறறுவாழ்கின்றனர் எனபதாம.

அவதி (ஸ்வயம்ʻ) அவதிஞானம, (அல்லது) அவதானம். "ஸ்வயம்ஸ்வயாதெநவஸ்த்ராஜ ஹீந்த்ரி காலெ ஷிலெ வாஹாநு।" மேதினீ கோசம. மேலேயுள்ளசெய்யுள அடியில்வரும வடமொழியசோதர காவியச் சுலோகததைததழுவியே எழுதபபடடதாகும.

"[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥"

IV. 71.

([illegible] । "[illegible] ॥")

இ-ள் தேவமகளிர்காதலித்தது இளமுறுவலகொண்டுநோக்க, இளஞ்சூரியனதுதிகழொளியைககொணட திவயதேகததையுடைய ராய்த தாங்கறகரிய கடியபெருநதுனபங்கள்நிறைநத பிறவிககடலி னின்றுவெளியேறறும அருககடவுளதுதிருவடிகளில மாறுதநினைப புடையராய், (அபயருசியும அபயமதியுமாகிய) அவரிருவரும் இமயவ ருலகததிலிருநது இணையில்லாத பரமசுகததை அனுபவித்து மகிழ வுற்றுவாழ்கின்றனர் எனபதாம

இவவாறிருக்க, அ ச சு ப பி ர தி யி ல மேலேயுள்ள தமிழ்ச செய்யுளின்பொருள் கீழவருமாறுளது.

"இவாகளது தி வ ய தே க த தி ன மணம் ஒருயோசனைதூரம வீசியது. சரீரகாநதியும ஒருயோசனைதூரம எட்டியது. உதித்தெழும் கதிரவன்போன்றுவிளங்கும் பதம்பெறறமுனிவாகள்பலரோடு இணை யிலலாதபேரினபநிலயத திவர்கள் விளஙகிக்கொணடிருக்கினறார்கள்"

(தொடரும)

T. S. குப்புஸ்வாமிசாஸ்திரி.

# ஆங்கிலத்தமிழ்ப்பரீக்ஷைத் தேர்ச்சிக்குறிப்பு

மதுரைத்தமிழ்ச் சங்கத்தார் 1915-ம் ௵ மார்ச்சு ௴ 6-ம் தேதியில் நடாத்திய ஆங்கிலகலாசாலைத் தமிழ்ப்பரீக்ஷைகளிற் றேறிப் பரிசும் யோக்கியதாபத்திரமும்பெறும் மாணாக்கர்களின் விவரம்.



## யப். ஏ. பரீக்ஷை.

### I-வது வகுப்பு.

| தொடர் எண். | ரிஜிஸ்டர் எண். | |
|---|---|---|
| 1. | 30. | V· S. அருணாசலம், ஸ்காட்கிறிஸ்தவ காலேஜ், நாகர்[கோயில். |
| | | (முதற்பரிசு ரூ 40 பெறத்தக்க தங்கப்பதக்கம்.) |
| 2 | 8. | A. விஸ்வநாதன், S P.G. காலேஜ், திருச்சிராப்பள்ளி. |
| | | (இரண்டாவது பரிசு ரூ 35.) |
| 3. | 22. | P. தியாகராஜன், ஸெண்ட் ஜோசப் காலேஜ் திருச்சி[ராப்பள்ளி. |
| | | (மூன்றாவது பரிசு ரூ 30.) |

### II-வது வகுப்பு.

| | | |
|---|---|---|
| 1. | 7. | E. S. வரதராஜன், S. P. G. காலேஜ், |
| 2. | 16. | K. M. தங்கபெருமாள் பிள்ளை. ௸ ௸ |
| 3. | 11. | V. ஆசிர்வாதம், ௸ ௸ |
| 4. | 37. | M. V. வேதாந்ததேசிகன், பிண்டிலேகாலேஜ், மன்னார்[குடி. |

5. 6. B. A. சுப்பிரமணியன, S.P.G. காலேஜ், திருச்சிறுப [பள்ளி.
6. 12. A. S. இராமசசந்திரன், ௸ ௸
7. ௦6. V. இராமசாமி, வெஸ்லிகாலேஜ், ராயபபேட்டை, [சென்னை.
8. 14. N. சுப்பராயன, S.P.G. காலேஜ், திருசசிறுப்பள்ளி.
9. 26. S. ஜம்புநாதன, ஸெனட்ஜோசப காலேஜ் திருசசிறுப [பள்ளி.
10. 5. N. சுவாமிநாதன, S. P. G. காலேஜ், திருசசிறுப [பளளி.
11. 17. P. S. அலாவுதீன, ௸ ௸
12. 15. K. P. நாராயணசாமி, ௸ ௸

## மெற்றிக்குலேஷன்.

### I-வது வகுப்பு.

1. 98B. T. P. பழனியபபன, நாஷனலஹைஸ்கூல், திருச்சி [றுபபள்ளி.

(முதறபரிசு ரூ 30. வெள்ளிபபதககமும, மீதம ரூபாவும)

2. 329. S வையாபுரி, பிண்டிலேகாலேஜ, மனனார்குடி.

(இரணடாவது பரிசு ரூ 25.)

3. 203. S. P இபராஹிம், ஸெனடமிகேல்ஸ் ஹைஸ்கூல, [கோயமபுததூா

(மூனறாவது பரிசு ரூ. 20)

4. 245. T. B. நடராஜபிள்ளை. வூரிஸ்காலேஜ், வேலூா.

(நான்காவது பரிசு ரூ. 15.)

### II-வது வகுப்பு.

1. 226. M. N. சாமபமூாத்தி, கலியாணசுந்தரம ஹைஸ்கூல, [தஞ்சாவூர்.

2. 161. A. தோர அனனம்மாள். (பெண்) மஹாராஜாஸ் பெண் [பாடசாலே, திருவனநதபுரம்.

3. 96. M. கோவிந்தராஜன, S. P. G. ஹைஸ்கூல், திருச்சி [ஞபபள்ளி.

4. 297. V. A. தியாகராஜன, S. P. G. ஹைஸ்கூல் Vepery [சென்னே.

5. 202. K. M. சுந்தரமூர்த்தி, ஸெண்ட்மிக்கேல்ஸ் ஹைஸ்கூல், [கோயமபுததூர்.

6. 160. J. பதமினி (பெண) மஹாராஜாஸ் பெண்பாடசாலே, [திருவனநதபுரம.

7. 154 K. S வெஙகடசுபபிரமணியன், ஹைஸ்கூல், பதத- [மடை

8. 208. S. அண்ணுமலே. ஸெனட்ஜோசப் ஸெககண்டரி ஸகூல [கூடலூர்.

9. 326. G. இராஜகோபாலபிளளே, போர்டு ஹைஸ்கூல், திரு [வாரூர்.

10. 174. C. அருணுசலமுதலி, முனிசிபல் காலேஜ், சேலம.

11. 170. R. V. நரசிமமன, முனிசிபல் காலேஜ், சேலம.

12. 159. S. சுபபையன், ஸ்காட்ஸ்கிறிஸ்தவகாலேஜ், நாகர்கோ [யில,

13. 303. G. C. தேவதாசன் S. P. G. ஹைஸகூல, Vepery. [சென்னே.

14. 330. K. இராஜகோபாலன, பிண்டிலேகாலேஜ், மனனூர்குடி.

15. 175. S. M. ஆமதஷரீபசாஹிப, முனிசிபலகாலேஜ, சேலம்.

16. 282. A. நாராயணசாமி, முததியால்பேடடை ஹைஸ்கூல், [சென்னே.

17. 138. V. ஸ்ரீநிவாஸன், St.Francis Xavier's High School [Palamcottah.

18 227, V. மஹாலிஙகம், கலியாணசுந்தரம ஹைஸ்கூல், தஞ்சா [வூர்.

19. 124. M. V. சுப்பிரமணியன, C M.S. காலேஜ், திருநெல் [வேலி.

20. 247. A. R. மாணிக்கமுதலியார் வூரிஸ்காலேஜ், வேலூர்.

21. 158 S. ஞானசிகாமணி, ஸ்காட்கிறிஸ்தவ காலேஜ, நாகர் [கோயில.

22. 277. R. கோபாலன், முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூல, [சென்னை.

23. 332. S. P சாமபசிவன, பிண்டிலேகாலேஜ், மன்னார்குடி.

24. 356. V. P. கோபாலகிருஷ்ணையர், பச்சையப்பாஸ் ஹை [ஸ்கூல, காஞ்சீபுரம.

25. 179. G. K. கிருஷ்ணமூர்த்தி, டையமண்ட ஜுபிலி ஹை [ஸ்கூல,கோபிசெட்டிபபாளையம்.

26. 181. P. இராமசாமி, ஷெ ஷெ

27. 275. V. நாகேஸ்வரன், முத்தியாலுபேட்டை ஹைஸ்கூல், [சென்னை.

28. 339. V. நடேசன், பிண்டிலேகாலேஜ், மனனார்குடி.

29. 114. A. இராமசசந்திரன, ஹிந்துகாலேஜ, திருநெலவேலி.

30. 167. S அய்யாசாமி நாயுடு, முனிசிபலகாலேஜ்,சேலம.

31. 325. C. இராஜபாத உடையார், போர்டுஹைஸ்கூல, திருவா [ரூர்.

32. 100 K. கலியாணசுநதரம, விகடோரியா ஹைஸ்கூல் பாப- [நாசம.

33. 110. A. நாறமபூநாதன் C. M. S. காலேஜ், திருநெல்வேலி.

34. 136. R. செலலையா, St. Francis Xavier's High School, [Palamcottah.

35. 205. T. M. இரத்தினவேல் L. M. H.School. நரோடு.

36. 207. S. மீனுகஷிசுநதரம, ஷெ ஷெ

37. 213. K. S. இராமச்சந்திரன் மஹாராஜாஸ் காலேஜ் புதுக் [கோட்டை.

38. 218. R. அம்பாசங்கரராவ், ௸ ௸

39. 223. R. நாராயணசாமிராவ, ௸ ௸

40. 255. P. C. கிருஷ்ணசாமி. வூரீஸ் காலேஜ், வேலூர்.

41. 142. S. மரியஆரோக்கியம, St, Francis Xavier's High [School, Palamcottah

42. 237. K. நடேசன், முனிசிபல்ஹைஸ்கூல, வாலாஜாநகர், (Walajapet.)

43. 253. S. K. நாகேஸ்வரையா, வூரீஸ்காலேஜ், வேலூர்.

44. 276. M. N. கலியாணசுந்தரம, முத்தியாலுபேட்டை [ஹைஸ்கூல், சென்னை.

45. 279. N. R. கேசவன், ௸ ௸

46. 165. ஹெலெனதேவரம் (பெண) மஹாராஜாஸ் பெண [பாடசாலை, திருவனந்தபுரம்.

47. 172. N.வெங்கிடகிருஷ்ணன், முனிசிபல்காலேஜ், சேலம்.

48. 211. T. V. விஸ்வேஸ்வரன், மஹாராஜாஸ் காலேஜ், புதுக [கோட்டை.

49. 246. D. S. நேசமணி, வூரீஸ் காலேஜ், வேலூர்.

50. 169. C. பாலகிருஷ்ணநாயுடு, முனிசிபல் காலேஜ்,சேலம்.

51. 274. தும்பவனம துரைசசாமி, முத்தியாலுப்பேட்டை [ஹைஸ்கூல, சென்னை.

52. 321. V. இராதாகிருஷ்ணன், முனிசிபல் ஹைஸ்கூல், மாய [வரம்.

53. 65. S. பழனிச்சாமி, A. M. H. School, பசுமலை.

54. 103. S. வைத்தியநாதன, விக்டோரியா ஹைஸ்கூல், பாப [நாசம்.

55. 273. K S. வெங்கடேசையர், ஸ்ரீமகன்தஸ் ஹைஸ்கூல், [வேலூர்.

56. 48. S. சோமசுந்தரம், ராஜாஸ் ஹைஸ்கூல், சிவகெங்கை.

57. 90. C சணைபிரான. S. P. G. ஹைஸ்கூல், திருச்சிறுப [பள்ளி.

58. 91. S. இராஜகோபாலன், ௸ ௸

59. 148. S. அண்ணுஜிராவ, ஹைஸ்கூல, பதகமடை.

60 150 S. வெஙகடாஜலம, ௸ ௸

61. 144. M. இராமசாமி, St.Francis Xavier' sHigh School, [Palamcottah.

62. 217. S. சிவசுபபிரமணியன, மஹாராஜாஸ் காலேஜ், புதுக் [கோட்டை.

63. 235. S. சுபபிரமணியன, ஹிநது ஹைஸ்கூல, ஸ்ரீவில்லி [புதூர்.

64. 248. N சீதாராமையா, ஊரீஸ் காலேஜ் வேலூர்.

65. 308. C. D. துரைசசாமி, முனிசிபல் ஹைஸ்கூல, மாய [வரம.

66 59. K. வரதன, Rajah's Edward VII. Memorial [High School, எட்டையாபுரம.

67. 164. ஜெஸ்விடேவிட் (பெண்) மஹாராஜாஸ் பெண்பாட சாலை, திருவனந்தபுரம்.

68. 166. R. மனோன்மணி (பெண்) ௸ ௸

69. 219. K. சபாபதி, மஹாராஜாஸ் காலேஜ், புதுக்கோட்டை.

70. 355. T. M. கோபாலகிருஷ்ணன், நாஷனல் ஹைஸ்கூல், [மன்னார்குடி.

71. 126. M. தாவீத், C. M. S. H. S. Palamcottah.

72. 139. G. முதனைபா, St. Francis Xavier's High School, [Palamcottah.

73. 267. P. V ஸ்ரீநிவாஸராகவன, ஸ்ரீமகன்தஸ் ஹைஸ்கூல் [வேலூர்.
74. 338. N. ஸ்ரீநிவாசன், பிண்டிலே காலேஜ், மனனார்குடி.
75. 79. N. பைரவன, மதுரைககாலேஜ, மதுரை.
76. 155. S. யேசுபக்தன, ஸ்காட் கிறிஸ்தவகாலேஜ், நாகர் [கோவில
77. 215. C. H. சுபபிரமணியன் மஹாராஜாஸ் காலேஜ், புதுக் [கோட்டை.
78. 125. L. தேவதாசன், C.M.S. ஹைஸ்கூல், Palamcottah.
79. 201. K. இராஜாராம,ஸெனட்மிககேலஸ் ஹைஸகூல, கோய [மபுத்தூர்.
80. 127. J. சாமுவேல் ஸிரில், C. M. S. ஹைஸகூல Palam- [cottah.
81. 140. C. N. சுப்பராயன, St. Francis Xavier's High [School, Palamcottah.
82. 206. S. மொசுவண்ணன, L.M. H. School, ஈரோடு.
83. 305. K. இராமநாதன், முனிசிபல ஹைஸ்கூல, மாயவரம்.
84. 86. S. சிங்காரம, போாடு ஹைஸ்கூல, குளித்தலை.
85. 141. S. பிசசையா, St. Francis Xavier's High School [Palamcottah.
86. 163. S. ரோஸ் அமமாள (பெண்)மஹாராஜாஸ் பெண்பாட [சாலை, திருவனந்தபுரம்.
87. 200. N. பாலசுப்பிரமணியன், ஸெனட்மிக்கேலஸ் ஹைஸ் [கூல், கோயம்புத்தூர்.
88. 278. S. வரதாசசாரி, முததியாலுப்பேட்டை ஹைஸகூல், [சென்னை.
89. 62. M. திவாகரன, Rajah's Edward VII Memorial [High School, எட்டையாபுரம்.
90. 63. T. ஆலபர்ட், A. M. H. School, பசுமலை.
91. 171. K. வெங்கடரமணன் முனிசிபல் காலேஜ், சேலம்.
92. 244. S. சிங்காரம, வூரீஸ் காலேஜ், வேலூர்.
93. 327. K. சுநதரம்பிள்ளை, போர்டு ஹைஸ்கூல், திருவாரூர்.

94. 64. S. ஜான்தேவசகாயம், A. M. H School, பசுமலை.

95. 98A. A. V. இராஜகோபாலன், நாஷனல் ஹைஸ்கூல், திருச்
[சிறுபள்ளி.

96. 229. S. சோமசுந்தரம, கலியாணசுந்தரம ஹைஸ்கூல், தஞ்

97. 289. J. M. பொன்னம்பலமபிள்ளை, ஹிந்து தியாலாஜிகல்
[ஹைஸ்கூல், சென்னை.

98. 95. M. இராமச்சந்திரன், S. P. G. ஹைஸ்கூல, திருச்சி
[றுபள்ளி.

99. 152. N. சாமுவேல, ஹைஸ்கூல், பதமடை

100. 156. D. ஜாஷுவா, ஸ்காடகிறிஸதவகாலேஜ், நாகர்கோயில.

101. 194 U. S. நாராயணன், போர்டு ஹைஸ்கூல, உடுமலைப
[பேட்டை.

102. 250. C. V. ஸ்ரீநிவாஸன, வூரீஸ்காலேஜ், வேலூர்

103. 319. S. ராஜம, முனிசிபல ஹைஸ்கூல், மாயவரம்.

104. 42. S. செல்லம, A. M. H. School, பசுமலை.

105. 80. N. S. மீனாக்ஷிசுந்தரம், மதுரைககாலேஜ், மதுரை.

106. 93. K. சுந்தரம, S. P. G. ஹைஸகூல், திருசசிறுபளளி.

107. 115. V. தேசிகன, ஹிநதுகாலேஜ, திருநெலவேலி.

108. 133. V. விஸ்வநாதன, C. M. S. காலேஜ், திருநெலவேலி.

109. 242. V. அப்புராவ், போர்டு ஹைஸ்கூல, சிதம்பரம்.

110. 348. T. S. விஜேநதிரராவ, நாஷனல்ஹைஸ்கூல, மனனார்குடி.

111. 230. A. குபபுசாமி, கலியாணசுநதரம் ஹைஸ்கூல்,
[தஞ்சாவூர்.

112. 287. S. ஸ்ரீநிவாஸையஙகார், ஹிநதுதியாலாஜிகல் ஹைஸ்கூல
[சென்னை.

113. 291. S. ராஜரத்னம், St. Gabriel'sHigh School, சென்னை.

B. இராஜராஜேஸ்வர சேதுபதி,

அக்கிராசனாதிபதி,

மதுரைத்தமிழ்ச்சங்கம்.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-௧௩.] ராக்ஷஸ௵ வைகாசி௴ [பகுதி-௭
Vol. XIII. May–June, 1915. No. 7.

## ஜீவ்யசரிதைகள்.

நூல்களின் பலபாகுபாடுகளுள், 'ஜீவ்யசரிதை' ஒன்று. ஒரு பெரியோரது பிறப்பு, வளர்ப்பு, படிப்பு, செயல்கள், குணநிச்சயம் இவைகளை விரிவாய் எடுத்துரைக்கும் நூல் ஜீவ்யசரிதையாகும். ஆங்கிலத்தில் இம்மாதிரி நூல்கள் பல உள. அவைகள் விரிவாக இருப்பதுடன் வசனநடையிலேயே அமைக்கப்பட்டுமிருக்கின்றன.

தமிழிலும் பெரியோர்களசரிதை எழுதப்படாமலில்லை. பெரிய புராணத்தில் நாயன்மார்களது அடிமைத்திறம் விளக்கப்பட்டிருக்கிறது. முற்காலத்துவேந்தர்கள், குறுநிலமன்னர்கள் முதலியோரது ஈகை, வீரம் இவைகளைப்புகழ்ந்து பல தனிப்பாடல்களும் பிரபந்தங்களும் எழுதப்பட்டிருக்கின்றன. முருகதாசசுவாமிகள்இயற்றிய புலவர்புராணம் என்னும் நூலும் ஜீவ்யசரிதை என்னும் பாகுபாட்டில் அடங்கியதாகவேகொள்ளவேண்டும். ஆனால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ள ஜீவ்யசரிதைகளுக்கும் இதுவரை தமிழில்வெளிவந்திருக்கும் ஜீவ்யசரிதைகளுக்கும் பலவித்தியாசங்கள் இருக்கின்றன.

ஒவ்வொருதேசத்திலும் பலதுறைகளிலும்புகழ்பெற்ற பெரியோர்கள்பலர் இருந்திருக்கிறார்கள். அவர்களதுஜீவ்யசரிதைகளைப்படிப்பதே அத்தேசத்தார்க்குத் தேசாபிமானம்பெருகுவதற்கு ஒரு சிறந்த துணைக்கருவியாக இருக்கிறது. அன்றியும் ஒவ்வொருவரும் தத்தம் வாழ்நாளைத் தமக்கும் தம்தேசத்திற்கும் மேன்மையுண்டாகும்படி நன்குகழிக்கவேண்டும் என்னும் உணர்வைப் பெரியோரதுசரிதைகள் பலப்படுத்துகின்றன. அவ்வுணர்வால், தம்வாழ்நாளை நன்குசெலுத்துவதற்கும் இவைகளே இன்றியமையாத உதவிபுரிகின்றன. அன்றியும்,

பிற்காலத்தில் ஒருநாட்டின்சரித்திரம் ஆராய்ந்து எழுதப்படும்போது அந்நாட்டில்வாழ்ந்தபெரியோரதுசரிதைகள் சரித்திர ஆராய்ச்சிக்குப் பெரியதுணையாகின்றன.

தமிழில்நூல்களியற்றவேண்டுமென்ற சிறந்தஆசையுள்ள தமிழபிமானிகள்பலர் இக்காலத்திற் கட்டுக்கதைகளையே எழுதிவருகிறார்கள். அவைகளிற் கதாநாயகர்கள் நற்குணசீலர்கள் என்றும், அதனால் அக்கதைகளைப்படிப்பதிற் பலநீதிகளைத்தெரிந்துகொள்ளக்கூடும் என்றும் முகவுரைகள்தீட்டிக் கற்பனையிலன்றி உண்மையிலநிகழக்கூடாதசம்பவங்களைக்கற்பித்து நூற்றுக்கணக்காக "நாவல்"களை வெளியிட்டுவருகிறார்கள். நமதுநாட்டிலவசித்தவ நம் வசிப்பவருமான பெரியோர்களது சரிதைகளை எழுதிவெளியிட்டால், கற்பனைக்கதைகளைக்காட்டிலும், அவைகள் தமிழருக்குமதமிழ்மொழிக்கும் பலமடங்கு மேலானபயனை உதவுமென்பது, இதைப்பற்றிச் சற்று ஆராய்பவர் எவர்க்கும் இனிது விளங்கும்.

இக்காலத்திற் பலரும்படித்தறியக்கூடியது வசனநடையே. ஆதலால் ஜீவ்யசரிதைகள் வசனநடையிலேயே எழுதப்படவேண்டும். மேலும் ஒருவரதுவாழ்நாளிலநிகழ்ந்தவற்றை விரித்தெழுதுவதற்கு வசனநடையே ஏற்றதாகவும் இருக்கிறது. பெரியபுராணம்போன்ற நூல்களில அற்புதங்கள்பல விரிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால அவைகளுக்குச் செய்யுள்நடை ஏற்றதாகும். ஒருவனதுசெயல ஒன்றையே கூறும் தனிப்பாடல்களும் செய்யுள்நடையிலமைந்தது பொருத்தமுடைத்தே. இக்காலத்தில விரிவாக எழுதவேண்டியசரிதைகளில அற்புதங்களைவரைவது நினைக்கவுங்கூடாதது. ஆகவே, இக்காலத்திற் கற்றுரிலும் சிலரேசெய்யுள்நடை நூல்களைப்படித்தறியக்கூடியவர்களாக இருப்பதுபற்றியும், இக்காலத்துச்சரித்திரங்கள் விரிவாக இருக்கவேண்டியதுபற்றியும், இந்நூல்களில அற்புதங்களைவிடவேண்டியதுபற்றியும் ஜீவ்யசரிதைகள் வசனநடையிலேயே இயற்றப்படவேண்டியனவாயிருக்கின்றன.

மனிதர்கள் பலதுறைகளில் முயன்றுவருவதால ஒருவருக்கு ஏதாவது ஒருவிஷயத்தில்மட்டுமே மேம்பாடு ஏற்படக்கூடும். சிலர் பல விஷயங்களில மேம்பாடுபெறவுங்கூடும். முற்காலத்திற் பெரும்பான்மை

தெய்வபக்தியிற்சிறந்தவர்களைப்பற்றிமட்டுமே நூலகள் இயற்றப்பட்டிருககின்றன. இது ஒருகுறையே. தமிழ்நாட்டிற சிறநதபோாவீரர்களும, இராஜயதநதிரிகளும, கொடையாளிகளும அநேகர் இருநதிருந்தும அவர்களைபபறறி நமககு ஒன்றுநதெரியாமலிருககிறது. சிலகாலத்திற்குமுன் நமதுநாட்டிலிருநத உயாந்தகொடையாளியான பசசையப்ப முதலியாரைபபற்றிககூட நாம விவரமாயததெரிநதுகொள்ளமாககவில்லை. இககுறையை இனியாவதுநீககிப பலதுறைகளிலும மேன்மையெய்தும பெரியோரதுசரிததிரஙகளை எழுதி, இக்காலததவரும பிற்காலததவரும பெரியோாகளதுநடததைதயைககைகபபறறததுணைபுரிவது தமிழாகளதுகடன.

சிலா இதறகு ஆக்ஷேபிககககூடும "நர கவனம" "நரக வனம" எனனும முதுமொழியைககவனியாமல மனிதர்களைபபற்றி எபபடி எழுதுவது என்று சஙகிககககூடும. கடவுளடியாாகளைபபற்றியெழுதுவது கடவுளைபபறறியெழுதுவதுபோலாதலால அடியார்களைபபற்றி மட்டும எழுதலாமேயன்றி மறறமானிடரைபபறறியெழுதுவது செய்யககூடாதகாரியமென்று சிலா சொலலக்கூடும. இதைச சிறிது ஆராய்வோம. "எநத இடததில மேமபாடுகாணபபட்டாலும அது என் தேஜஸ்ஸிலிருநது உண்டாகிறது" என்று பகவானேதிருவாய்மலர்நதருளவிலலையா? போாசசேவகனதுவீரததிலும, புலவனதுசொல்நயததிலும, கொடையாளியினது தன்னயமமறநத மனபபான்மையிலும, இராஜயதநதிரியினது கூர்நதஅறிவிலும இறைவனதுஆறறல் விளஙகவில்லையா? அவைகளைப்புகழ்வது அவனதுதிருவிளையாடலைபபோற்றுவதலலவா? ஒனறுமட்டுங கவனிககவேண்டியதுண்டு. ஒருவனிடம கைமமாறுகருதி அவனைபபுகழ்வதை முழுதும ஒழிககவேண்டும. அப்படிக் கைமமாறுகருதி ஒருவனைப்பறறியெழுதுவது உண்மையான ஜீவ்ய சரிதையாகாது. முறகாலததில வறுமையுறறபுலவர்சிலா தமது குறையைநீககககருதிச சீமான்களைபபாடியிருககிறாாகள். இது வறுமையின்கொடுமையாலநோந்ததேயன்றி வேறலல. அவ்விதமபோற்றுவதைநோககியே "நர கவனம" "நரக வனம" என்றவசனமும உபயோகிககபபட்டது. அபபடியன்றிக குணததைத எடுததுககாட்டுவதையே கருததிறகொணடு அககுணமபூண்டவரதுசரிதையையெழுதுவது தேசததிற்கும பாஷைககும பயனுள்ளதே.

ஜீவ்யசரிதைகளை விரிவாகவே எழுதவேண்டும். பெரியாரொருவர் இவ்வித விசேஷச்செய்கை செய்திருக்கிறாரென்பது மட்டும் தெரிந்தால் அச்செய்கையின் மேன்மை நன்றாய் மனதிற்பதிவதில்லை. அவரது பிறப்பு, வளர்ப்பு முதலியவைகளெல்லாம் விரிவாயெழுதப்பட்டிருந்தால் அவரது சரித்திரத்தைப் படிப்பவர்களுக்குப் பற்றுதலுண்டாகி அவரது செய்கைகளின் சிறப்பும் படிப்பவர் மனதில் நன்கு பதிகிறது. அவரைப் போல நாமும் நடக்க முயற்சி செய்யவேண்டுமென்ற அவாவும் உண்டாகிறது. பிற்காலத்தவர்களுக்கு அப்பெரியாரது மேன்மை விளங்குவது மட்டுமன்றிச் சரித்திர ஆராய்ச்சிக்கும் உற்ற துணையாகிறது.

ஞாலமுழுமையாய்ப் பாராட்டத்தக்க பெரியார் இக்காலத்தில் யாராவது இருக்கிறார்களா என்று ஐயங்கொள்ளவேண்டியதில்லை. குறையொன்றுமில்லாதவர் மாத்திரமே பெரியோரென்று கொள்வது தவறு. ஒரு குறையுமின்றியிருப்பது மானிடர்க்கு அரிது. ஒருவர் ஏதாவது ஒரு துறையில் சிறப்புவாய்ந்தவரானால் அவரைப் பாராட்டி அவர் சரித்திரத்தை யெழுதுவது தகுந்ததே. இந்நாட்டில் இக்காலத்திலும் உயர்ந்த சாக்கர் உத்தியோகஸ்தர்களும், தேசாபிமானிகளும், பண்டிதர்களும், கொடையாளிகளும் இருக்கிறார்கள். அவர் சரித்திரங்களை யெழுதுவது நல்ல முயற்சியாகும்.

ஆகவே, ஜீவ்யசரிதங்கள் எந்நாட்டிலும் எம்மொழியிலும் ஒரு முக்கிய இலக்கியப் பாகுபாடாதலாலும், தமிழில் இவை அதிகமாய் இதுவரை எழுதப்படாமலிருப்பதாலும், தமிழர் தமிழ்நாட்டுப் பெரியோர்களது ஜீவ்யசரிதங்களையெழுதுவது தம் கடமையெனக்கொள்ள வேண்டும். அச்சரிதங்கள் செந்நடையில் விரிவாக எழுதப்படவேண்டும்.

ஸ்ரீ ப. சுந்தரையர், பிஏ., பிஎல்.

# நூலாசிரியர்சிஷ்டாசாரம்.

ஒருவர் நூலின்கண்ணேயுள்ள கொள்கைகளையும், அக்கொள்கைகளைக் கூறும் வசனங்களையும், மற்றொருவர் தமது நூலின்கண்ணே வேண்டுமிடந்தோறும் அநுவதித்து மொழிதல் மரபாம். அங்ஙனங் கூறும்போது நூலாசிரியர் பெயரையாயினும் நூற்பெயரையாயினும் கூறுதொழியார்.

ஓராசிரியர் கொள்கைகளை ஒருவர் அநுவதிக்கும்போது அவர் உரைத்தபடியே யுரைப்பர். மொழிகளை மாற்றியுங் கூட்டியுங் குறைத்து முரையார்.

"முன்னோர்மொழிபொருளேயன்றியவர்மொழியும்
பொன்னேபோற்போற்றுவம் . . ."

என்றார் நன்னூற்பாயிரமுடையாரும். இங்ஙனஞ்செய்தலே நூலாசிரியர் சிஷ்டாசாரமாம். ஓராசிரியர் கொள்கையையும் வாக்கையும் மற்றொருவர் கவர்ந்து தமது நூலகத்தே புகுத்தித் தமதாகப் பாவித்தல் சோரப்புலமையாம். அங்ஙனமாகாது காக்குநோக்கமே நூலாசிரியர்க்கு இச்சிஷ்டாசாரம் வகுக்கப்பட்டதாம்.

இச்சிஷ்டாசாரம் தமிழ்நூலாசிரியரிடத்துமாத்திரமன்று. உலகத்தில் எப்பாஷைப்புலவரிடத்து முளதேயாம். ஆங்கிலேய நூலாசிரியர் பிறர்கொள்கைகளை எடுத்துக்கூறும்போது அவர்பெயர் நூற்பெயர்களையு முடன்கூறுவதோடமையாது முகமனுரையுங் கூறுவர். இங்ஙனங் கூறும்வழக்கம் செந்தமிழ்த்தொல்லாசிரியரிடத்தும் பெரிதாக வுண்டு.

கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார் தாஞ்செய்தருளிய நெஞ்சுவிடுதூதிலே,

"உன்னையொழியவுறவில்லையென்னுமத்
தன்னையறிவைத்தனியறிவை—முன்னந்
தலைப்பட்டார்தீரத்துறந்தார்மயங்கி
வலைப்பட்டார்மற்றையவரென்னு—நிலைத்தமிழின்
றெய்வப்புலமைத்திருவள்ளுவருரைத்த
மெய்வைத்தசொல்லைவிரும்பாம—லைவர்க்கு
மாவதுவேசெய்தங்கவர்வழியைத்தப்பாமல்

எனத் "தலைப்பட்டார்" எனனுந்திருக்குறளை எடுத்தாண்டருளிய இடத்து வள்ளுவருக்கும் அவர்வாக்கினுக்கும் சாத்திய சிறப்புமொழிகள் இங்கே நோக்கத்தக்கன.

மகா-ா-ா-ஸ்ரீ கே. ஜி சேஷையரவாகள் ஆநந்த வருடம் புரட்டாசி மாசத்துச் செந்தமிழ்ப்பத்திரிகையிலெழுதிய "மாணிக்கவாசககால ஆராய்ச்சி" என்னும் அற்புதோத்தமவிஷயத்தைத்வாசித்துச்சென்றேன். அப்போது அவ்விஷயத்தில் எனதுகொள்கையும் எனதுவசனமுமாகிய சிலபகுதிகள் விரவியிருக்கக்கண்டேன். ஐயரவாகள் அப்பகுதிகளைச் சென்னை ஸ்ரீமான் பி.இராமநாதனவாகள்செய்த இருபதாநூற்றாண்டுத் தமிழ்ப்பெயரகராதியினின்று தெடுத்ததாகக்கூறி,அவற்றை அந்த இராமநாதனவாகளகருத்தென்றும் வாக்கென்றுங் கொண்டார்கள். அப்பகுதிகள்வருமாறு:—

"இவாகாலம் நாலாயிரமவருஷங்களுக்குமுன்னுள்ளதெனபது நன்குதுணியப்படும் என்று சென்னை ஸ்ரீமான் பி. இராமநாதனவாகள் தாமியற்றிய The 20th Century Tamil Dictionary என்ற அருமையான தமிழ்ப்பெயரகராதியிலவரைந்துள்ளார்"

"திருத்தொண்டத்தொகையினுள்ளே எடுத்தோதப்படாமையின் மாணிக்கவாசகர் சுந்தரமூர்த்திநாயனுருக்குப்பிறபட்டவரெனச்சாதிப்பாருஞ் சில ருளர் அஃது அறியாமையினபாலதாம். அகஸ்தியர், பதஞ்சலி, வியாக்கிரபாதர் முதலியோரெல்லாம் சிவபத்தியிலும் சிவயோகத்திலுஞ்சிறந்த மெய்யடியார்களாகவும், அவரையெல்லாம் திருத்தொண்டத்தொகையினுட்கூறாமை யாதுகாரணமோ, அதுவே மாணிக்கவாசகரைச்சோத்தோதாமைக்குங் காரணமாம்"

"கண்ணப்பர் சண்டேசுரர்களைத்துதிப்பவர் திருஞானசம்பந்தர் முதலியோரைத்துதிக்காமையாலும், 'சிரிப்பார்களிப்பார்தேனிப்பார்' என்னுந் திருவாசகத்திலே தேனித்தலென்னுஞ்சொலவழக்கும், உவலை முதலிய அரியசொற்களும் பிறகாலத்துவழக்கன்மையாலும், திருவாசகம் தேவாரத்திற்குமுந்தியதெனபது நன்றாகத்துணியப்படும் என்று ஸ்ரீமான் இராமநாதன்கூறியதுங் கவனிக்கத்தக்கது"

மேலே இராமநாதனவாகள்கூறியனவாகக்கொண்ட அநுவாதவசனங்களெல்லாம் யான 1902-ல், அஃதாவது 13 வருஷங்களுக்கு

முன்னே, இயற்றிவெளியிட்ட அபிதானகோசத்தில் மாணிக்கவாசகர் என்னுமவிஷயத்தில என்னுல்வரையபபட்டனவாம. பொருளும என்னுடையவை. வசனங்களு மென்னுடையனவே. அவை யான் பலநாள்வருநதி ஆராய்ந்துகண்டபொருள். ஸ்வயாபிபபிராயம. இவ் விஷயததில முனனா எவரும எழுதாத அபிபபிராயம.

அங்ஙனமாகவும, சென்னை ஸ்ரீமான் பி. இராமநாதனவாகள் தாமெழுதிய அகராதியில் இவற்றை இன்னாவசனமென்றுகூறுது தமதுகூற்றுகபபாவிததது சிஷ்டாசாரமாகாதனறே. ஸ்ரீமான் சேஷையரவாகள் தாமநுவதிததமதஙகளையும வசனஙகளையும இனனார் மதம இனனாகூற்றென வியகதமாககக்கூறிபபோயினரனறே. அது வன்றே சிஷ்டாசாரம.

சிஷ்டாசார மிதுவெனறுகாட்டிச சாமானியரையீடேற்றுதற் குரியராகிய ஸ்ரீமான பி. இராமநாதனவர்கள் இவ்விஷயததிற் சாமானி யரைப்போ விழுககியது அற்புதம.

ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை,
நாவலர்கோட்டம், யாழ்ப்பாணம்.

---

ஸ்ரீ:

# சுந்தரகாண்டம். (கம்பர்)

''செந்தமிழ்'' (தொகுதி-௧௩-பகுதி ௪-ல்) ௧௪௮-ஆம்பக்கத்தொடர்ச்சி

இனிவரும் இரணடுசெய்யுள்களால உததமமானததத்துவததையும, வேதாநதககுறிப்பையும, மங்களாசாசனமகிமையையும, விசேஷமாக எடுததுசசொலலுகிறா.

''மும்மையாமுலகந்தந்தமுதலவற்குமுதலவன றூதாய்ச
செம்மையாலுயிாதந்தாயககுச்செயலெனனுலெளியதுணடே
அம்மையாயததனுயவப்பனேயருளின்வாழ்வே
இம்மையேமறுமைதானுநல்கினையிசையொடென்றுள்''

மும்மையாமுலகந்தந்த—பதினன்குலகததையும, கிருதகம், அகிரு தகம, கிருதாகிருதகம் என்று மூன்றுவகையாகப்பிரிததபடி எல்லா உலகங்களையும சிருஷ்டிதத; முதல்வற்கு—சிருஷ்டியால் முதல்வனுகிய

பிரமனுக்கு; முதல்வன்—“முதலாவார் மூவரம்மூவருள்ளும், முதலாவான்மூரிநீர்வண்ணன்” என்னும்படி பரமகாரணபூதனான ஸாக்ஷாத்பரமாத்மாவினுடைய, தாதாய—அஜ்ஞானமடைந்தசேதனர்களை உஜ்ஜீவிக்கச்செய்யவேண்டியதற்காகப் பரிபூர்ணக்ருபைபெற்ற ஒரு ஆசாரியனாய்; செம்மையால்—நேரானவழியான சரணாகதிதருமத்தின்முறைப்படி, உயிர்தந்தாய்க்கு—என்னை ஈடேற்றி உய்யச்செய்த பரமஉபகாரியும் பரமக்ருபாளுவுமாகியவுனக்கு; செயல் என்னாலெளியதுண்டே—நீசெய்தபேருதவிக்கு நான் செய்யக்கடவகைம்மாறு யாதொன்றுமில்லையே, அதாவது ஞானவுதயமானபின்பு ‘நான்’‘எனது’ என்பது இல்லையாதலின் தன்னுடையபாரதந்திரியந்துலங்க இவ்வாறு சேதனன்சொல்லலுற்றான் எனபதாம். அம்மையாய—பிரியபரையாகிய மாதாவைப்போலும்; அத்தனாய—ஹிதபரனாகியபிதாவைப்போலும்; அப்பனே-அநுக்கிரகஞ்செய்தஆசாரியஸ்வரூபனே! அருளினவாழ்வே-கிருபைக்கிருப்பிடமாயுள்ளவனே! இம்மையேமறுமைதானும் இசையொடுநல்கினை—தவயானுபவத்தைக்கொடுத்தருளினாய், அதன்மூலம் புகழையும் புண்ணியத்தையும் கட்டிக்கொண்டாய்; என்றான்—என்று சேதனன் ஸ்தோத்திரஞ்செய்தான். (தவிரவும்,)

“பாழியம்பணைத்தோள்வீர துணையிலேன்பரிவுதீர்த்த
வாழியாவள்ளலேயான்மறுவிலாமனத்தேனென்னின்
ஊழியோர்பகலாயோதுமயாண்டெலாமுலகமேழும்
ஏழுமவீவுற்றஞான்றுமின்றெனவிருத்தியென்றாள்”

பாழியம்பணைத்தோள்வீர—“மாணியாமவேடந்தாங்கிமலரயற்கறிவுமாண்டோர், ஆணியாயுலகுக்கெல்லாமறம்பொருணிறுப்புமண்ணல்” என்றபடி பகவத்பாகவதகைங்கர்யசாதனமானபாகுபலமுடையவனே! துணையிலேன்பரிவுதீர்த்த—யாதொரு ஆதாரமுமின்றிக் கடைத்தேறும் வழியற்றுக் கலங்கிக்கிடந்த அடியேனுடையதுக்கத்தையும் அஜ்ஞானத்தையும்நிவர்த்தித்த; வாழியாவள்ளலே—நித்தியமங்களமானவாழ்வை அன்புடனும் ஆதரவுடனும் அளித்த கருணைக்கடலே! யான்மறுவிலாமனத்தேனென்னின்—நான்பெற்ற உபதேசானந்தரம் நிச்சயஞானம் பூண்டு அனுக்கிரகம்பெற்று நல்வழிப்பட்டேனாதலால்; ஊழியோர்பகலாயோதுமயாண்டெலாமுலகமேழும் ஏழுமவீவுற்றஞான்று மின்றெனவிருத்தியென்றாள்—நீ பல்லாண்டுபல்லாண்டாய்நீடூழிகாலம் நிலை

பெற்று என்போன்ற இன்னும அநேகசேதனர்களேயும உயிர்ப்பிக்க வேண்டும் என்றுசொல்லிச சேதனன் அதிகவினயததுடன் மங்களா சாசனமசெய்கிறுன் என்றபடி,

ஆகவே இநத இரண்டுசெய்யுள்களுக்கும, பிராட்டி பகவானே ஸ்தோததிரஞ்செய்து பின்னா நீ சிரஞ்சீவியாய்வாழககடவாய் என்று அநுமானே ஆசீர்வதிததாள் என்றது சாமாணியககருததாயினும, வேதாநதபரமாக, இநத சேதனன் தனனுடைய கிருதகஞதையை வெளிபபடுததிததான்ஆசாரியனுககுசசெயயும கைமமாறுயாதொன்று மிலலேயேயென்று மனமநொநது தன்னுறசெய்யககூடிய "பலலாண்டு பலலாண்டு" "இன்னமொருநூறறுண்டிருமம" என்று பலவிதமாய்ச சொல்லி மங்களாசாசனமசெய்கிறுன எனபதும பொருநதும.

ஆதியிலெடுத்துக்கொண்டபடி சேதனனுடையநிலே ஆசாரியதா மம இவ்விரண்டுவிஷயங்களுககிணங்க உருககாட்டுபபடலம அறுபதது மூன்றுவது'மீட்டுமுரை' என்ற செய்யுளமுதல எழுபததிரண்டாவது 'பாழியபணேததோள்' எனற செயயுளாறுக பததுபபாசுரஙகளாலுந தோனறும கருததுககளேஆராய்நது என் சிற்றறிவுககுபபுலபபடுமமட டில இதுகாறும எடுததெழுதினேன. இவ்வளவில இபபோதைக்கு இது முடிவுபெறும. இதுவரை இதைப்பறறியெழுதியதன முககியநோககம இநதவிஷயததைககுறிததுப பணடிதர்களிறபலா ஆராய்ச்சிசெய்து விவரிதது நன்குவிளககலவேண்டுமென்பதும, இதுபோல இன்னும் மற்றுமசெய்யுள்களுமம வேதாந்தஸாரததைஉள்ளடககிககொண்டு ஆங காங்கேதோன்றுமாயின் அவைகளேயும பண்டிதாகள ஆராய்ச்சிசெய்து வெளிபபடுத்தவேண்டுமென்பதுமேயாம. இதுபற்றியே இபபெரிய விஷயததைககுறித்து எனககுததோன்றியமட்டில எழுததது ணிந்ததே யன்றி வேறிலலே,

ஏம். எஸ் சேஷையங்கார்.

ஸ்ரீ:

# மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் பதின்மூன்றும் வருஷோத்ஸவ மங்களவாழ்த்து.

இது கா. ஸ்ரீ. கோபாலாசாரியரியற்றியது.

---

## கலிவெண்பா.

பூமேவுகூடலின்முன்பூத்ததமிழ்ச்சங்கமெனு
மாமேவுபொய்கையினவாய்வண்புலவ—ராமேவு
வண்டுகண்மொய்த்ததுண்டுமகிழ்ந்ததமிழ்மணந்தான்
எண்டிசையுஞ்சென்றுயிர்கட்கின்புசெய—எண்டகுதென்
பாற்கரைசெய்யாத்தமிழ்ப்பாற்கரசாமிக்கப்புகழ்ப்
பாற்கரசாமிப்பொப்பக்கவிஞனை—நூற்கலையாம்
வண்போதொர்ப்போதுமலர்ந்தந்தமார்த்தாண்டன்
விண்போய்மறைந்தெனப்பின்விற்பனர்சொல்—பண்பாரும்
பாண்டித்துரையாமப்பிரதிபிஞானினிற்கிற
நீண்டவனும்போகவிண்ணினனே—வேண்டுகுணம்
பூண்டகலைச்சுப்பிரமணியமுனிஞனசோர்ந்
தீண்டொருநாணின்றேகவிப்போது—மாண்டிடுமோ
என்றெவருமுள்கலங்கியேங்கியபோதிப்பாரமீ
தினறெழுந்ததேயோரிளங்கதிர்தான்—நன்றுலகில்
நாளுஞ்சீராவிநளினத்தடமிலக
நீளுந்தன்வண்கரங்கணோசெலுத்தி—யாளு
மெனவேபுதித்தவினனேபுலவா
தனமேதனத்தினருஞ்சாரவே—புனன்மேவு
தேசனேதென்செந்தினகரனேசெய்யவடகு
நேசனேகலவிநிலயமே—தேசமிகுந்
தாடுஞ்சபையோர்கமலாமேனின்றுவிளை
யாடுஞ்சரசகுணவன்னமே—நீடொளிசெய்
கற்பகமேலோராங்களிவண்டுசேருமலைக
கற்பகமேலோங்குமின்பக்கனியே—பற்பலர்க்கு
வேண்டுபயனெல்லாமவிரும்பிமுகமலர்ந்து
தேண்டிவழங்குங்காமதேனுவே—நீண்டபுகழ்ப்

பாடகர்க்கும்பாவலர்க்கும்பண்ணுபரிசிலம்
பாடகற்றுஞ்சீர்க்கற்பகதருவே—நீடுலகிற்
கல்லாருங்கல்விமிகவல்லாருஞ்செல்வருமஃ
தில்லாரும்போற்றுமெழின்மணியே—சொல்லாருங்
கண்டமிழ்த்தம்பாற்குகனிமுதலாக்கைப்பிக்குந்
தண்டமிழ்க்குவந்திடுசிந்தாமணியே—தெண்டிரைசூழ்
பாரிலேகொண்டமாமணியேபார்க்கரன்றன்கண்மணியே
சீர்மகுடவேந்தர்சிகாமணியே—ஓர்மலைமேற்
சங்கரனார்தங்கிநிலந்தாங்குதல்போலோர்முனிவன்
தங்கியிருந்தப்பூவைச்சமன்செய்யப்—பொங்கியெழு
சந்தனமுந்தென்றலுநற்றண்டமிழுந்தான்பிறந்து
வந்துகமழுமாமலயமாமலையும்—தந்தமுரை
வேறாகச்சேதுமன்னர்மெய்யொழுக்கநீர்மையுடன்
மாறாவொழுக்கினவையமாந்தியும்—காறுவுங்
கற்பகமுஞ்சொற்கவியுங்காணடற்கொன்றேயுடைத்தாய
முற்பகைசெய்தேவாமுதமொன்றே—இற்றைத்திட
லேவார்நுங்கொள்வாருமில்லாதநாடென்றும்
ஓவாவசையினும்பருள்ளொளித்த—ஆவாவப்
பொன்னாடுபோலாதுபொன்னாடுதண்டலைசூழ்ந்
தெந்நாடுங்காணவியையுடைத்தாய்—முன்னாடு
நற்பகங்கண்டகவிகள்காணக்கண்டகின்றி
நற்புலவரேனையவர்நட்பமரச—சொற்சுவைசேர்
முத்தமிழாமின்னமுதமூன்றுங்கொண்டேபலாக்கும்
எத்தகையவாம்பொருளுமீவதாய—இத்தரைமேல்
எல்லாருஞ்சேருமிசையுடனேயெல்லாரு
நல்லாத்தமிழ்ச்சேதுநன்னாடும்—பல்லார்சொல்
கல்வியறஞ்செல்வமுயர்கைத்தொழில்பல்வாத்தகமும்
புலனுமெழின்முகவைப்பொன்னகரும்—எல்லையிலசூழ்
அட்டதிக்கில்வட்டமிட்டோட்டர்மற்றலைக்குரத்தை
எட்டிவைக்கும்வெற்றிவிழுளியும்—எட்டாகும

வாரணமுமொப்பின்றிவையமிசைநடக்குங்
காரெனவோதற்காங்கட்களிறும்—பேரணங்கார்

கண்ணளியுந்தாதார்கடிமலரையூதுமிசைப்
பண்ணளியுமொப்பக்குழலிலைப்பைந்தாரும்—எண்ணுமுயர்

வென்றிகொடைநீதிமெய்விளக்கமுன்றாக
முன்றின்முழங்குமுரசமும்—நன்றாகக்

கல்லார்க்குங்கல்விமிகவல்லார்க்குமற்றுமுள
எல்லார்க்குமபுக்கிலிவனென்றே—சொல்லேறி

நாடியுயர்தேவர்க்குநல்வரவுகாட்டியழைத்
தாடிச்சுவணவணிக்கொடியும்—ஓடுநீர்

வெள்ளமுமபுள்ளுமவிலங்குமவிலைமகளி
ருள்ளமுமோராபாலொழுகிவரத்—தெள்ளுதிரை

மிக்குலாந்தண்கடல்சூழ்மேதினியெல்லாமளந்து
திக்கெலாஞ்சென்றளக்குஞ்செங்கோலும்—தொக்கொளிசே

வேற்படையும்வாட்படையும்விற்படையுநாற்பகுதி
மாற்படையுமுண்டெனினுமன்னுலகை—மேற்படாசீர்த

தன்பெயராற்றண்ணளியாற்றாழாநிலையினால
வன்பகையைமாற்றியிந்தவையகத்தில—இன்புறவே

வானமமழைவழங்கமண்ணுமவளஞ்சுரக்கத்
தானந்தழைக்கத்தவமவளர—வானுறுசீர்க்

கற்பமருமாதுகலக்கஞ்சிறிதுமின்றிப்
பற்பலர்கூட்டத்துப்பட்டரவும—மெய்ப்படைக்கக்

கொள்ளுமொருபையலுமவன்கோளரக்கனைச்சீறி
எள்ளிவெற்றியோடேயெதிர்க்கவும—வெள்ளவுடைப்

பூமகளைநாமகளைப்பூமகளைப்பூதரத்து
மாமகளைக்கையிட்டுவாயிட்டு—மாமுகத்

துள்ளங்கொடுபூவுணர்வார்க்கந்தண்ணருளைக்
கொள்ளப்பலர்க்குங்கொடுத்துவக்கும—வள்ளால

**இரண்யகோப்யாஜியிரவிகுலமுத்து**
வர**விஜய**மன்னவர்தம்மன்ன—இருசெவியுங்

கேட்டதுண்டுநின்குணங்கள்கேளிர்சொலககண்ணிரண்டும
வேட்டதுண்டுகாணநினைமேதககோய்—நாட்டினிற்
கலவியறிவொழுககங்கற்றுரையாதரிததல
சொலவளன்மெய்யாதிசுபகுணங்கள்—மலகியசீ
நல்லார்தநட்பைநயபபரறிவுடையார்
கலலாரவாதங்கனமறிய—வலலாரோ
பொன்னின்பெருமைதனைபபொன்வினைஞரேயறிவர்
இனனிசையைவலலோாகளேயறிவர்—இனனுங்கேள்
"நற்றுமரைக்கயததினல்லன்னஞசோநதாறபோற
கற்றுரைககற்றுரேகாமுறுவா"—மறறும
"அறனறிந்துமூததவறிவுடையாாகேணமை
திறனறிநதுதோநதுகொளல"மேல—அறவேவந
"துறறநோய்நீககியுறுஅமைமுற்காககும்
பெறறியாாப்பேணிககொளல"பின்னும—பறறுதற்குச
"செய்ததானுஞசென்றுகொளலவேணடுஞசெய்வினைக்கும
வாய்க்காலனையார்தொடர்"பென்று—வாய்ப்பாகக்
கூறியவான்றோர்வாயமைககோதறறநற்பொருளைத்
தேறிநின்சோககைததிறனவேண்டி—வீறுபுகழ்ப்
பாணுவரபபாாததுநிறகுமபஙகயமூநதணணிலவின
பானமதிநோககுநகுமுதபபைமபோதும—வானின்வரு
பைமபுயலைநாடுமபயிருமபடர்வதறகோர்
கொமபுதனைவேணடுங்கொடியுமிகும—அன்புகொளுமு
அன்றிலவரபபார்க்குமணிபெடையுமெல்லியதண்
தென்றல்வரநிற்குநல்லதேமாவும்—நன்றளிககுந
தாதாவைநோககுநதரிததிரருநதாங்குநலல
மாதாவைநோக்குமகவுமபோல—நீதிசெய்நின்
ஆதரவைநாடியருநதமிழின்சங்கமிது
'நீதயையாயுன்கைநிழலிலெனைப்—பாதுகா'
என்றேநினறன்கணெதிாநின்றுவேண்டலுநன்
றென்றேதலைமையைநீயேற்றிதனை—நன்றாகப்

பாவலரைநாவலரைப்பைந்தமிழின்வாழ்வினின்மிக்
காவலரையாய்ந்தேயழைப்பித்துப—பூவலயத
தோங்குமுகவைபிறகோலோசசுபுகழமனனரெலாந
தாங்கிவந்தசெயதிதளராமே—வீஙகுகலை
வலலாரைககொண்டுவெளநூறபணிபூட்டி
எலலாருஞசிநதைதமகிழநதேததெடுபபச—சொலலுதமி
ழாகுமணங்கினருமைபெருமையெலாம
நீகையுறுகனிபோனோகாட்டி—ஓகையுடன
சீராட்டியெலலாசசிறபபுமிகவேநன்று
பாராட்டுவாய்தமிழினபாலகா—போராட்டி.
வலலரககர்சசெறறுலகைவாழ்விததவிலலியந்த
நலலகொறறசசீராமநாதனைமுன்—சொலலெடுத்துத
"தெனசொறகடநதான்" எனவுரைதததெயவகவி
தன்சொறகிணஙகததகுபுலமை—பினசொல
இராமநாதபபெயரினேநதலைக்கொண்டிநநாள்
இராமநாதபபுரியிலயாங்கள்—பராவவரு
போதமுத்துராமலிங்கபூபாலாபோறறுநாதந
தீதவிததசேதுபதிசசெமமலே—ஓதுமெயசசீரத
தெனமதுரையேபிநதசசெநதமிழினசஙகததைத்த
தனமதுரையேநீதனிநடததது—நனமுறையை
என்னென்றுரைபபோமிராஜராஜேசுரனே
மன்னுமபுவிமேனமனவலியும—பின்னுநல
சொலவலியுமெய்வலியுநதூயவறிவின்வலியும
பலவகையதாகும்படைவலியுஞ—செலவச
சனவலியுங்கலவிததுணைவலியுஞசான்றோ
ரினவலியுஞசெல்வத்தினின்பக—கனவலியும
நன்மனைவிமக்கண்முதனனமைககடுததவற்றோ
டிமமைககணுயுள்வலியெலலாமேயந—தெமமையுமொந
தாய்மொழியாஞசெமமைததமிழ்மொழியையுங்காதது
நீயுலகின்மேன்மேனனோமையொடும்—நேயமொடும
தண்மதியுமொண்கதிருந்தாமுளநாள்வண்மையொடு
மண்மிசையேவாழ்கமகிழ்ந்து.

கா. ஸ்ரீ-கோபாலாசாரியர்.

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்

## பதின்மூன்றாம் வருஷோத்சவமங்கலவாழ்த்து.

இது

சேதுசமஸ்தானம் மஹாராஜாஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

**வி. திருஞானசம்பந்தம்பிள்ளையியற்றியது.**

---

### கலிவெண்பா.

பூவாருந்தேவைப்புராதனமாம்பேர்படைத்த
மாவாருந்தென்முகவைமாநகரிற்—றேவாதி
தேவனெனுஞ்சீராமநாதன்றிருவருள்சேர்
காவலனென்றோங்கிவருங்கற்பகமே—பூவலயந்
தாங்கியறங்காத்தருளத்தாசரதியேமீண்டும்
ஈங்குவந்தானென்னஇயல்கெழுமிப்—பாங்குபெற்
ஈத்துவந்துமாசனஇறைவன்மலர்ச்சரணம்
தோத்திரித்தும்பாதந்தொடுத்துந்தொண்டுபுரிந்—தேத்துபல
ஆத்திகளில்முழுமணிப்பூண்பூட்டிவைத்தும்
கீத்திக்கன்றனபிறகிராமமிட்டும்—பூத்திபெற
மெய்வைத்தபூதிமணிமேன்மறையாமைந்தெழுத்தும்
உய்வைத்தருமீண்டுயிர்க்கெனவே—குய்வைத்த
சீருருந்தெய்வசிவத்தலங்களாயொளிரும்
ஆரூராமுத்தறலங்களார்வமுடன்—நேரூரச்
சென்றுபுவிமுழுதுஞ்சேமமுறநாமகிமை
நன்றுசுவைசெவிக்குநல்கவே—கன்றுகளுக்
காவளிக்குந்தீம்பாலெனவேயமுதுண்டு
தூவளிக்குந்தோணிபுரந்தோன்றவருங்—கோவளிக்கும்
தேவாரமாதியபன்னூலுடனெளிபொருளை
நாவாரஇன்பாலநயந்தோதி—ஓவாப்

பிரசங்கமாரிமிகப்பெய்துவந்தகொண்டல்
பரசங்கைகாதற்கும்பானேர்—கரசங்க

மாதவற்குமாதருடன்மாமயிலின்மனனிவரு
நாதனுக்குங்கோயிலநலமுறவே—நாதமிக்க

கும்பாபிஷேகமொருகோடிககுமேறபுரிநத
நமபானுகோததிரததின்நாயகனுமம—முனபாாந்த

பாறகரவேள்பெறறெடுததபண்பதனுற்கன்னனிலும
மேற்கருதுந்தூயவிதரணனே—நாறகவியுந

தெளளிமணமீதென்றுதேவரெலாஙகொண்டாடும
வள்ளிமணமாலைசெய்தவள்ளலெனுமம—அள்ளிலைவேற்

றீரன்முததராமலிங்கசேதுபதிதன்புனிதப்
பேரனெனவநதபுகழ்ப்பெமமானே—காரணனும

பாண்டிததுரைககிளையான்பாலுதிததுததமபியெனப
பாண்டிததுரையாகுமபணபினனே—யீண்டித

தலததிலுடன்கொண்டுமகிழ்தாங்கியுலகாளுமம
நலத்துரையேசேதுநாதா—சொலததகுசீா

வள்ளுவாறாலுநதருககசங்கிரகமாறாலும
தெள்ளுபலநாலுமசசிறசேர்ததிசையைக—கொள்ளைகொண்ட

மாலபொன்னுசசாமிவரோதயறகும்பேரனென
நூலபன்னவநதிததநூண்ணறிவோய்—சேலபன்னு

கண்ணுடையமாதாமனக்காதற்கிலககியமே
பண்ணுடையகீதபபனுவலுககாம—எண்ணுடைய

போததிலக்கணமேபுண்ணியத்திறகண்ணிடமே
கோதறறபத்திக்குணக்கடலே—வேததில

விற்பனர்கள்தங்கள்விழைவொடுங்கததந்தவர்பால்
அற்பகலாவண்மைபுரியாண்டகாய்—பொற்ப

இமத்தானவிண்டுவரையேய்ந்தவியற்கல்விச
சமர்த்தானராகவனைததன்சீர்ச்—சமஸ்த்தான

புண்டிதனுக்கொண்டியல்சேர்பாவலனுமன்னியென்றும்
தண்டமிழ்ப்பாவாணர்தலைப்புரந்து—கொண்டுவரும்

முத்தாய்ச்சியார்தம்முறுவலெனுஞ்சிதரனோர்
பெத்தாசசியென்றபுகழ்பெற்றனை—அத்தாவண்
சேதுபதிநின்சங்கத்திற்கோருபாக்ராச
ஞதிபதியாக்கொண்டனையிறையே—போதமதின்
வாரிதிகர்சீனிவாசர்இருவோரைக்
காரியதர்சியராக்கைக்கொண்டாய்—வாரிதிசூழ்
பூமண்டலமுழுதுமபோற்றுபுகழ்சசேதுவையாள்
மாமண்டலேசுவரமன்னவனீ—ஆமதனல்
மாதேவதேவன்றன்வாமதநினிதிருககும
மாதேவிவாமிபரைவாணியொடு—பூதேவி
சீதேவிபோற்றுஞ்சிவையருளால்வாழ்வுறவிப்
போதேபோலென்றுமபுகழபெருகத—தாதேவும
முல்லையெனுந்தண்டார்முருகுபிர்க்குநதிண்புயததாய்
கலலையொருபெண்ணுகருங்காலுடையோய்—நல்லபல
செல்வம்படைத்தெங்கள்ஸ்ரீராஜராஜனெனும
செல்வனேநீடூழிசெந்தமிழைப்—பலவகையுஞ
சுந்தரமேமன்னிச்சுபமபடைக்கக்காததருளி
இந்திரன்போல்வாழ்கஇனிது.

சுபம்.

பண்டிட். வி. திருஞானசம்பந்தம்.

---

கடவுள் துணை.

# செந்தமிழ்


தொகுதி-கங.] ராக்ஷஸஹு ஆனிமீ .[பகுதி-அ.
Vol. XIII. June—July, 1915. No. 8


## சாஸனமும் தமிழ்ச்சரிதங்களும்.* 13



தமிழ்நாட்டின் பழையவழக்குகளை அறிவதற்குத் தமிழிலக்கிய இலக்கணங்கள் எவ்வாறு உதவிபுரியக்கூடியனவோ, அவ்வாறே சாஸனங்களும் உதவிபுரியக்கூடியவை. இராசாங்கத்தாராலும் பிற அறிஞராலும் அவ்வக்காலங்களில் வெளிவரும் சிலாதாமிரசாஸனங்களை ஆராய்ந்துவருவோமானால், சங்கச்செய்யுள்களிலும் பிற்காலநூல்களிலுங்கண்ட சரித்திரங்களும் சொற்பொருண்மரபுகளும் சாஸனஆதரவு பெற்று வலியுறுதலைக்காணலாம். ஆனால், இத்தகைய சாஸனங்கள் பிற்காலத்தவைகளாகவே பெரும்பாலும் கிடைக்கின்றன. 1000, 1200 வருஷங்கட்கு முற்பட்ட செப்புப்பட்டயமோ அல்லது சிலையெழுத்துக்களோ கிடைப்பது தமிழ்நாட்டில் அருமையாகவே இருக்கிறது. இதற்குக்காரணம், பிற்காலத்திற்போல முற்காலத்தே சாஸனம்வரைதல் பிரபலமில்லாதிருந்திருக்கலாம். அன்றிக் கோயில்முதலிய கற்கட்டிடங்களிற்பொறிக்கப்பட்ட பழைய எழுத்துக்கள் பின்னர்ப் புதுப்பிக்கப்பட்டபோது பிறழ்ந்தனு சிதைந்தும்போயிருத்தலுங்கூடும். எங்ஙனமாயினும், சங்ககாலத்திலும் அதன்முன்பும் சாஸனமெழுதும் வழக்கம் தமிழ்நாட்டில் முழுதுங்கிடையாதென்றுசொல் பொருந்தாது. போரில் இறந்தவீரர்க்கு நடுகல் எனப்படும் வீரக்கல்நட்டுக் கௌரவித்துவந்தவழக்கம் பண்டைக்காலத்திற் பிரபலமாயிருந்ததென்பது, தொல்காப்பியமுதலியவற்றில் அதன்செய்திகள் விவரிக்கப்படுதலால் தெளிவாகின்றது. இத்தகைய கற்களில் இறந்தவீரரது

*இது லெக்ஸிகன் ஆபீஸின் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்-மு. ராகவையங்கார் அவர்களால் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் 14-ம்வருஷக்கூட்டத்திற்படிக்கும்படி எழுதியனுப்பப்பட்டது.

பெயரும் பெருமையும எழுதி அவர்களைத் தமிழர் சிறப்பித்துவந்த விஷயம், "ஆடவர், பெயரும பீடு மெழுதி யதர்தொறும், பீலி நாட்டிய பெருமபெயா நடுகல்" என்னும அகநானூற்றுப் பகுதியால விளங்கும். இவ்வாறு பெயரும பீடும எழுதலையே தொலகாப்பியனுர் "சீர்ததகு மரபிற பெருமபடை" என்று கூறுவாராயினர்.* இஙஙனம சாஸனம வரையப்பெற்ற நடுகற்களை இக்காலததும தமிழ்நாட்டில நாம காணக கூடும. இவற்றுல், தொலகாபபியர்காலததும கடைசசங்ககாளிலும சிலாசாஸனம வரைதல ஒருபடியாக வழங்கிவநததென்பதே தெளிவா கின்றது.

இசசாஸனவாராய்ச்சியானது, செநதமிழறிஞர்களுககு இலககிய சமபநதமாகப பேருதவிசெய்யககூடுமெனபதறகுப பற்பலசான்றுகள் காட்டலாம. முனனூலவழககுகளில தம முழுநமபிககையும்வைககாது சாஸனபபிரமாணமொனறையேமதிககும சரிததிரவறிஞரும சிலருளா. இன்னோர், தம கொளகையில எவ்வளவு ஊறறமுடையவராயினும, பழைய இலககியஙகளிறகண்டசரிததிரஙகளையும பிறவழககுகளையும ஆதரிததும விளக்கியும வற்புறுததுவனவாகவே சாஸனஙகள பெரும பாலும வெளிவருவனவாயிருககின்றன. இதனுல, பண்டை இலககியங களில நமககு மதிப்பு அதிகமாவதோடு,அவைகூறும செய்தி எதனிலும நமபிககைகொள்ளாது புறக்கணிததல பெருநதவறு என்பதும் நன்கு ஙகுகின்றது. ஆதலால, தமிழாராய்சசிககு வேண்டறபாலதாகிய சாஸனவாராய்ச்சியைத தமிழமககள் தழுவிககொள்ளுதலும இன்றி யமையாததென்னலாம. இனி, சங்கநூலகளிலும பிறவற்றிலுங் காணப்படும அரசர் புலவர்செய்திகளும பிறவழக்குகளும சாஸன ஆதரவுபெறுமாற்றைச சிறிது இங்கு விளககுவேன்.

புறநானூற்றுள், பாண்டியன் பல்யாகசாலைமுதுகுடுமிப்பெரு வழுதி என்ற வேநதனை நெட்டிமையார், காரிகிழார், நெடுமபலலி யததனுர் என்ற புலவர்கள்பாடியிருததல காணபபடுகின்றது. இப பாண்டியன், மதுரைக்காஞ்சியிற்புகழபபட்ட நெடுஞ்செழியனுக்கும முற்பட்டவன் என்பது,

"பல்சாலைமுதுகுடுமியின்
நல்வேள்வித்துறைபோகிய
தொல்லாணைநல்லாசிரியர்
புணர்கூட்டுண்டபுகழ்சால்சிறப்பின்
நிலந்தருதிருவினெடியோன்போல. .. மகிழ்ந்தினிதுறைமதி"

என மாங்குடிமருதனாரால் அந்நூலுட்பாடப்படுதலால் தெரியலாம். இவ்வாறு பழையபாண்டியருள் முற்பட்டவனாக முதுகுடுமியென்பவன் விளங்கியிருந்தவிஷயம், சமீபத்திற் சாஸன ஆதரவும்பெற்று வலியுறுதல் கவனிக்கத்தக்கது. சிலவருஷங்கட்குமுன், சிலாசாதனபரிசோதகரால் வெளிப்படுத்தப்பட்ட அறிக்கையில், இறைக்கு 1150 வருஷங்கட்குமுன் பராந்தகன் என்ற பாண்டியனாற் கோயிலிற்பாடும் பாணனொருவனுக்கு வேள்விகுடி என்ற கிராமம் அளிக்கப்பெற்ற விவரங்கூறும் சாஸனமொன்று பாண்டியவம்சாவளியோடும் வெளியிடப்பட்டிருக்கிறது. 1907-8 Annual report of Assistant Archæological Supdt for Epigraphy. இதனுட்கண்ட பாண்டியர்களுள், பல்யாகசாலைமுதுகுடுமி என்பவன் முதல்வனாகக் குறிக்கப்பட்டுள்ளான். இவன், கொற்கைகிழான் நற்கொற்றன் என்ற பாணனொருவனுக்கு வேள்விகுடியை அளித்திருந்தனனென்றும், பிற்காலத்தில் அக்கிராமம் வேற்றரசனாக்கிரமத்தால் இராஜாங்கத்திற் சேர்த்துக்கொள்ளப்பட்டதென்றும், அப்பாணனவம்சத்தவனொருவன் இதுவிஷயமாகப் பாண்டியன் பராந்தகனிடம் முறையிட்டுக்கொண்டு அவ்வூரைத் திரும்பப்பெற்றானென்றும் அச்சாஸனங்கூறுகின்றது. இதனாற் புறநானூற்றுட்கண்ட முதுகுடுமிப்பெருவழுதிவரலாறு, பண்டைச்சாஸனத்துப் பயின்று விளங்குதல் தெரியலாம். இவ்வேள்விகுடிச்சாஸனத்துக்கண்ட குறிப்புகளுள்ளே பாண்டியவம்சத்துக்கு ஆதியில் ஆசாரியஸ்தானம் வகித்தவர் அகஸ்தியர் என்றும், தேவர்கட்காக ஒருபாண்டியன் தூதுசென்றான் எனறும் காணப்படுகின்றன. இறையனார்களவியலுரையில், "அரைதருமேகலையன்னமனையன்றகத்தியன்வாய்—உரைதருதீந்தமிழ்கேட்டோனுசிதன்" (89) எனப் பாண்டியனொருவனைப்பற்றிய உதாரணச்செய்யுளும், "அல்லதூஉம், தேவரும் அசுரரும் அமர்செய்தகாலத்துத் தேவர்களையும் அசுரர்களையும் ஒருவீர் ஒருவீர் மிக்காரை ஒறுப்பல் யான் எனப் பாண்டியன் மாகீர்த்தி சந்துசெய்வித்ததுபோல......சந்துசெய்வித்தலுமொன்று," எனனும் வாக்கியமும் (36-ம் சூத்திரவுரை)

முன்னவற்றோடு முறையே ஒப்பிடத்தக்கவை. பிற்கூறிய, பாண்டியன் தௌத்தியவரலாற்றையே, புகழேந்தியாரும் "நற்றேவர் தூதுநடந்தானும்" என்று கூறுவாராயினர். இதனை "ஆழிவடிமபலமப" என்னும் நளவெண்பாவுரையில் நன்குவிளக்கியிருக்கிறேன (செந்தமிழ்த்தொகுதி 6; பக்கம 254) இனி, முதுகுடுமிப்பெருவழுதிபவும் பெருவீரனுகவும், மாங்குடிமருதனார்முதலியபுலவர்களாற் பாடப்பெற்றவனுகவும் விளங்கிய நெடுஞ்செழியன், தலையாலங்கானத்திற சேரசோழர்முதலிய அரசர்களை வெற்றிகொண்டசெய்தி அகநானூறு புறநானூறுமுதலிய சங்கச்செய்யுள்களில அதிகமாகப்பாராட்டப்பெறறுள்ளது. சமீபத்தில வெளிவந்த சின்னமனூர்த்தாமிரசாஸனத்திற* கண்ட பழைய பாண்டியா செய்கைகளுள தலையாலங்கானத்தே சேரசோழர்கள், பாண்டியா முன்னோன் ஒருவனுல்வெல்லப்பட்ட விஷயங்காணப்படுதல அறியத்தக்கது. இது சங்கநூல்களிறகண்ட வரலாற்றின் உண்மையை வற்புறுத்துவதன்றோ?

இங்ஙனம பாண்டியா பழையவரலாறுகள்போலவே, கரிகாலனும கோச்செங்கணனும சோழரது முன்னோர்களாகச் சாஸனத்துக்கூறப்பட்டுள்ளார். (Archæological Survey of S. India Vol. IV) இவ்விருவாவரலாறுகளும புறநானூறுமுதலிய சங்கநூல்களால நன்கறிந்தவை. இவவாறே சேரர்விஷயம சாஸனவழியால விசேடமாக அறியஇடமில்லையேனும, வடவாரியவேந்தனுன சமுத்திரகுப்தன் (கி. பி. 375) சாஸனத்தால, அவனகாலத்திற் கேரளதேசத்தை ஆட்சிபுரிந்தவன் மாந்தரன் எனறு கூறப்படுகின்றான். Dr. Fleet's Gupta Inscriptions p. 12, 13. இவன பரணராறபாடப்பட்ட மாந்தரம பொறையன் அலலது யானைககட்சேய்மாந்தரன் என்ற இருவருள ஒருவனுகவேண்டும. இதற்குரியகாரணங்களை, "சேரன்செங்குட்டுவன்" என்னுமபெயரால யான்வெளியிட்ட நூலுட்காணலாம. (பக்கம 171)

இவாகளைவிடுத்து, சங்ககாலிலவிளங்கிய சிற்றரசர்வரலாறுகள் சாஸனங்களிறபயில்வனவா? என்பதை நோக்குவோம. பண்டைக்காலத்தே, வள்ளன்மையே ஒருருவெடுத்ததுபோனறுவிளங்கிய வேள

* Vide Madras G. O. No 503 Public Dated 26—6—07.

பாரியைப்பற்றிக் கேள்விப்படாத தமிழ்மக்கள் எவருமிரார். இவ்வள்ளலுக்கு உயிர்த்துணைவராயிருந்தவர் கபிலர் என்ற புலவர்பெருமான் என்பதும், இப்பாரியைத் தமிழ்வேந்தர்மூவரும் ஒன்றுகூடி வஞ்சித்துக் கொன்றபோது, இப்புலவர் அவ்வள்ளலின் பெண்மக்களிருவரையும் தம்முடனழைத்துக்கொண்டுசென்று, அவர்கட்குத்தக்க மணவாளரைத் தேடி மணம்புரிவிக்கமுயன்றனர் என்பதும், புறநானூற்றுட்கண்ட பாடல்கள்பலவற்றால் தெரியவருகின்றன. இனித் திருக்கோவலூர் வீரட்டானேசுவரர்கோயிற் குமுதப்படைகளிற் பொறிக்கப்பட்டதும், 900 ஆண்டுகட்குமுன்னுண்ட முதலாம் இராஜராஜசோழன்காலத்ததுமான நீண்ட அகவற்சாஸனமொன்றில்,* பாரிமகளிர்மணவிஷயமாகப் புறநானூற்றுட்கண்ட கபிலர்வரலாற்றோடு, பெரும்பாலும் ஒத்தசெய்தி காணப்படுகின்றது. அச்சாஸனப்பகுதி வருமாறு:—

"வன்கரைபொருதுவருபுனற்பெண்ணைத்
தென்கரையுள்ளதீர்த்தத்துறையது
மொய்வைத்தியலுமுத்தமிழ்க்கபிலன்
மூரிவண்டடக்கைப்பாரிதன்னடைக்கலப்
பெண்ணைமலையற்குதவிப்பெண்ணை
அலைபுனலழுவத்தந்தரிக்ஷஞ்செல
மினல்புகுமவீடுபேறெண்ணிக்
கனல்புகுங்கபிலக்கல்லதுபுனல்வளர்
பேரெட்டானவீரட்டானம்
அனைத்தினுமநாதியானது" எனக் காண்க.

இவ்வடிகளிலே, தமமுயிர்த்தோழன் வேள்-பாரியால் அடைக்கலமாக ஒப்பிக்கப்பட்ட அவன்மகளொருத்தியைக் கபிலர் மலையமானுக்கு மணம்புரிவித்துவிட்டுத் தாம் அவ்வள்ளலதுபிரிவுக்காற்றாது "பசைந்தாரிற் றீர்தலிற்றீப்புகுதனன்று" என்றபடி, பெண்ணையாற்றிடையில் அக்கினியிற் பிராயோபவேசஞ் செய்து உயிர்நீத்த அரியவிஷயம் விவரிக்கப்படுதல் காணலாம். புறநானூற்றுள், 113, 200-2, 236-ம் பாடல்களால், பாரிமகளிரைக் கபிலர் உடனழைத்துச்சென்று, விச்சிக்கோ இருங்கோவேள் என்பவரை மணஞ்செய்துகொள்ளும்படிவேண்டவும் அவர்கள் மறுத்தனராக மனநொந்துசென்ற புலவர்பெருமான்

* ஸ்ரீமான். கோபிநாதராயரவர்களால் வெளியிடப்பட்டது (செந்தமிழ் Vol. 4 P. 232.)

அம்மகளிரைப் பார்ப்பார்சிலரது பாதுகாவலில்வைத்துப் பிராயோபவேசவிரதம்பூண்டார் என்பது அறியப்படும். சாஸனப்பகுதியில் மலையமானுக்குக் கபிலரால் பாரிமகளிர் மணம்புரிவிக்கப்பட்டனரென்ற செய்தி புறநானூற்றுட் காணப்பட்டிலது. ஆயினும் பாரிமகளிரிருவருள் மூத்தவளை மலையற்கு அளித்தது, இளையவளைப் பார்ப்பாரப்படுத்தனர் என்று கருதல் பொருத்தமாகும். இவ்விளையமகளின்மணம் பின்பு ஒளவையாரால் முடித்துவைக்கப்பட்டதென்பது தமிழ்நாவலர் சரிதம் முதலிய பின்னூல்களால் ஊகிக்கப்படுகின்றது. "பாரிமகளங்கை வையைக் கொள்ள அரசன்மணமியைந்தான்" எனினும் ஒளவைவாக்கில், கபிலர்முடித்த பாரிமகள் மணமேயன்றி வேறுமொருபாரிமகள்மணமும் கூறப்படுதல் அறியத்தக்கது. இதன்விஷயங்களை வேளிர்வரலாற்றுள் "வேள்-பாரி" என்ற பகுதியில் விளக்கிக்காட்டியிருக்கின்றேன்.

இனி, இப்பாரியின்மலையாகப் பண்டைநூல்கள்கூறும் பறம்பு அல்லது பறமலையென்பது பாண்டிநாட்டிலுள்ளதென்பது, "வரிசைத் தமிழ்புனைபாரியும்பாண்டியன்மண்டலமே" என்று பாண்டிமண்டல சதகத்துவருதலால் தெரிகின்றது. இம்மலை, பிரான்மலை என இக்காலத்தார் வழங்கும் கொடுங்குன்றமே என்பது, பழைய சாஸனமொன்றில், அம்மலையிற் கோயில்கொண்ட சிவபிரான் பாரீச்வரர் என வழங்கப்பெறுதலால்* விளங்குகிறது. பாரீச்வரர் என்பதற்குப் பாரிபூசித்த அல்லது பாரிக்கு அருள்புரிந்த ஈச்வரர் என்பது பொருள்; நாகேச்வரர் பட்டீச்வரர் என்பனவைபோல. இவற்றால் வள்ளலான பாரியைப்பற்றிய விசேடவரலாறுகள் சாஸனங்கள் மூலமும் தெரியக்கூடியவாயிருத்தல் கண்டுகொள்க.

இனி, பாரியைப்போலவே கடையெழுவள்ளல்களைச் சேர்ந்தவர்களான ஆய், அதிகமான் என்பவர்களது வம்சங்களைப்பற்றிய சில விசேஷங்களையும் சாஸனங்கள் தெரிவிக்கின்றன. இவருள் ஆய் என்பவன் வேளிர்குலத்தவனென்பதும், பொதியமலைப்பிரதேசத்துக்குரியவனென்பதும், பெரியகொடையாளி என்பதும், புறநானூற்றுள், உறையூர் ஏணிச்சேரிமுடமோசியார் முதலிய புலவர்பாடல்களால் அறியப்படும். தாலமி (Ptolomy) என்னும் பூர்வ யவனஆசிரியரும் தாம்

* ஸ்ரீமான்-கோபிநாதராயர் அவர்களால் இவ்விஷயம் அன்போடு எனக்கறிவிக்கப்பட்டது.

பரதகண்டததைசசுற்றிப்பார்தது எழுதியகுறிப்பில், இவ்வாயின் நாடடையும அதனுள ஐநது துறைமுகஙகாங்களையுமபறறிககூறுவதா சுத தெரிதலால, இவன்வமிசம 1750 வருஷஙகட்குமுன்பே பிரபலம பெறறிருநததெனபது பெறபபடுகின்றது. இவவாயின் வமிசததவரைப் பறறிய பிறகாலததுச சாஸனஙகளசில, திருவாஙகூா ஸமஸ்தானசாஸன அதயக்ஷராகிய ஸ்ரீமாந-தி. அ. கோபிநாதராயரவாகளால வெளிபபடுத தப்பெறும திருவாஙகூா ஆாககியலாஜிகல ஸீரீஸ் 11,12-மபகுதிகளிற் காணபபடுகின்றன.

இசசாஸனங்களால, கி. பி. 9-ம நூறறாண்டில, அஃதாவது 1100 வருஷஙகடகுமுன், ஆடசிபுரிநத கோககருநநதடககன், விகரமாதிதய வரகுணன் எனற இரண்டு அரசாகளும யதுவமிசதது விருஷ்ணிகுலத தவா எனபதும, ஆயின்மரபினரொனபதும, தென்திருவாஙகூராகிய வேணாடடை ஆண்டவரெனபதும தெரியவருகின்றன. இவறறால, பிறகாலததும, வேள-ஆயினமரபினா பிரபல அரசாாகவிளங்கியசெய்தி அறியபபடுவதுடன், 'வேளிா எனபோா கணணபிரான் அவதரிதத யதுவமிசததவர்களே' என வேறுபலகாரணஙகளைககொணடு யான் முன் எழுதிப்போநதகொள்கையை இசசாஸனம வெள்ளிடை மலை போல விளககிநிற்றலும காணலாம இவவாறே, புறநானூறு முதலிய வற்றில, ஔவையாரால மிகுதியும பாடபபடட அதிகமான்வமிசத தவரைபபறறியசெய்தியும சாஸனததாற றெரிகின்றது. போரூருக் கடுதத திருமலையிலுள்ளகுகையிலவரையபபட்ட அடியிலவரும சாஸனவிஷயம கவனிக்கததககது.

ஸ்வஸ்தி ஸ்ரீ சேரவமசததது அதிகைமான் எழினிசெய்ததாமம. யக்ஷரையும யக்ஷியாரையும எழுநதருளுவிததது எறிமணியுமிட்டுக கடப் பேரிக்காலுஙகண்டுகொடுததான் "ஸ்ரீமத கேரளபூபருதாயவஙிகா நாம் நாஸாதர்மமாதமநாதுண்டீராஹ்வய மணடலாஹஸாகிரௌ யக்ஷச விரௌ கலபிதௌ". ."வஞசியர் குலபதி எழினிவகுததவியககரியககி யரோ-டெஞசிய வழிவு திருததியிவெண்குணவிறைதிருமலைவைததான் அஞசிதன் வழிவருமவன்வழி முதலிகளி அதிகனவகன.........நூல-விஞசையர்...ல புனைதகமையர் காவலன் விடுகாதழகியபெருமாளே"

இதனால் விடுகாதழகியபெருமாள் என்பவன் அதிகமானெழினி என்னும் குலப்பெயர்தரித்தவனென்பதும், சேரவமிசத்தைச் சேர்ந்தவனென்பதும், வடமொழியில் யவனிகா எனப்பட்டானென்பதும் அறியத்தக்கன. இவனை "அஞ்சிதன்வழிவருமவன்" என இச்சாஸனப் பாடல்குறித்தலால், சங்ககாலத்திலவிளங்கிய அதிகமான் அஞ்சியின் பின்னோன் இவனெனபது தெரியலாம். புறநானூற்றுள், அதிகமானைச் சேரவமிசத்தவனாகவும், பனம்பூமாலையுடையவனாகவும் கூறியிருப்பதற்கு ஏற்ப, 'சேரவமசத்து அதிகமான் எழினி' எனவும் 'வஞ்சியர் குலபதி' எனவும் சாஸனங்கூறுதல் குறிப்பிடற்பாலது. இவ்வாறு தமிழ்ச்சிற்றரசராகப் பண்டைக்காலத்துவிளங்கியவாவரலாறுகள் சிலவும் சாஸனவழக்குப்பெறறுவிளங்குதல் கண்டுகொள்க.

இனித் தமிழ்நூல்களிற் சுருக்கமாக அறியப்படும் மாவலிகள் அலலது வாணர்கள் சளுக்கர், பல்லவர், முத்தரையர், கங்கர் முதலியோர்வரலாறுகளைச் சாஸனவாராய்ச்சியால் நாம் விவரமாக அறிய இடமுண்டு. மணிமேகலையிலே, சோழன்கிள்ளிவளவன்மனைவியாகிய இராசமாதேவி "மாவலிமருமானசீர்கெழுதிருமகள்" என்று கூறப்பட்டுள்ளாள். (மணிமேகலை காதை 19 அடி 54) இம்மாவலிமரபினர் இன்னாரென்பதை, மஹாமஹோபாத்யாய ஐயரவர்கள் அவ்விடத்துக் கீழ்க்குறிப்பிற் சாஸனஆதாரங்காட்டி விளக்கியிருக்கின்றார்கள். இம்மாவலிவமிசத்தோர் பெரும்பாலும் நடுநாடு அல்லது மகதைநாட்டிலிருந்து முற்காலத்து ஆட்சிபுரிந்தவர்கள் என்பதும், பிற்காலத்திற் சோழரது ஆதிக்கத்தால் இவர்கள் வலிசுருங்கினர் என்பதும் சாஸனங்களால் விளங்குகின்றன. இனிச் சளுக்கர் என்பவர் வேளிர் எனத் தமிழ்நூல்கள்கூறும் பிரபலவமிசத்தவர்களே. "தாரகாரியுஞ் சளுக்கியர்வேந்தனும், வேளிலாளனும் வேளெனலாகும்" "வேள்புலவரசர் சளுக்குவேந்தர்" "கேழலவேள்புலவரசர்கொடியே" எனத் திவாகர முதலிய நிகண்டுகளிலும்,"வேள்குலச்சளுக்கி" எனச் சாஸனங்களிலும் இவர்களைப்பற்றிக்கூறப்படுதல் காணலாம். இன்னோர்வரலாறுகளை நாம் செவ்வனம்தெரியவேண்டுமாயின், அது சாஸனவுதவியாலேயே கிடைக்கத்தக்கது. இவ்வாறே பல்லவர்வரலாறுகளும். தேவாரத்தும் திவ்யப்பிரபந்தத்திலும் இவ்வரசர்விஷயங்கள் அடிக்கடி பேசப்படுகின்றன. பாரதம்பாடிய பெருந்தேவனாரால் தம் நூன்முகப்பில் "தேர்வேந்தர்போர்மாளத்தெள்ளாற்றில்வென்றானை, டியார்வேந்தரேற்பாரெதிர்" என்று பாராட்டப்பட்டவனும் இம்மரபினனாகவே தெரிகிறது.

இவன் கி. பி. 815 முதல் 870 வரை ஆட்சிபுரிந்தவனும், நந்திக்கலம்ப கங்கொண்டவனும், 'தெள்ளாற்றெறிந்த நந்திபோத்தரசர்' எனச் சாஸனத்துக்குறிக்கப்படுபவனுமான பல்லவனேயாவன் என்பது ஸ்ரீமாந்-கோபிநாதராயரவர்கள்கருத்து. (செந்தமிழ் தொ-5 பக் 61–4.) இனி, நாலடியாரில் முத்தரையரைப்பற்றி இரண்டிடங்களிற் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளது.* இன்னோர், தென்னாட்டில் 7, 8-ம் நூற்றாண்டுகளிற் பிரபலம்பெற்ற கள்வர்மரபினராவர். இவ்வமிசத்தவர் சங்ககாலத்திலேயே சிற்றரசராகவிளங்கியவரென்பது, கள்வர்கோமான்புல்லி, கள்வர்கோமான்தென்னவன் என்னும்பெயர்கள் அகநானூற்றுட் பயில்வதனால் அறியப்படும். இனி, கங்கர் என்றமரபினரும் சங்கநாள் முதலே தமிழ்நாட்டையடுத்துப் பிரபலம்பெற்ற அரசர்களேயாவர். "பங்களர்கங்கர்பல்வேற்கட்டியர்" என இளங்கோவடிகளும் இக் கூட்டத்தாரைக் குறிப்பிடுதல்காண்க. (சிலப். 25 156-59) கொங்கு நாட்டையும் மைசூர்ப்பிரதேசத்தையும் முற்காலத்தாட்சிபுரிந்த அரசரிற் பெரும்பாலார் இக்கங்கவமிசத்தவர்களே. பவணந்தியாரைக்கொண்டு நன்னூல் இயற்றுவித்த அமராபரணன் சீயகங்கன் இக்கங்கவமிசத்தவனே என்பது அறியத்தக்கது. காஞ்சி ஏகாம்பரநாதஸ்வாமிகோயிலில் இவன் ஒரு 'நுந்தாவிளக்கு' வைத்ததைக்கூறும் சாஸனத்துள் "ஸ்ரீமத் குவளாலபரமேசுவரன், கங்ககுலோத்பவன், சிய்யகங்கன், அமராபரணன்" என்று கூறப்படுகின்றான். இச்சீயகங்கனுக்குத் திருவேகம்பமுடையான் என்பது மறுபெயரென்பதும், இவன் மனைவி அரியபிள்ளையெனப்பெயர்பெற்றவளென்பதும், மூன்றாங்குலோத்துங்கனது 27-வது ஆட்சிவருஷத்தில் அதாவது கி. பி. 1205-ல் இவன் சாஸனம் வரையப்பட்டதென்பதும் விளங்குகின்றன.

இனி, திருமுறைகண்டசோழனை முதல் இராஜராஜன்காலமுதலாக வெளிவந்துள்ளசாஸனங்களை நோக்குமிடத்து அப்பர், சம்பந்தர், சுந்தரர், சேரமான்தேவர்முதலிய சிவனடியார்கட்குக் கோயில்களில் திருவுருவங்கள் அமைக்கப்பட்டும் அணிகலன்முதலியவை அளிக்கப்பெற்றும் போந்தவிவரங்களை விசேடமாகக்காணக்கூடும். இவ்விராஜராஜனுக்கும் முற்பட்ட சோழர்சாஸனங்களில் இம்மூவரைப்பற்றியகுறிப்புகள் காணப்பட்டில. ஆயினும், தேவாரப்பதிகங்கள் இராஜராஜன்

* 'பெருமுத்தரையர்' (நாலடி 200)

காலமுதல்மட்டுமன்றி அவனுக்கும்முன்பே வழங்கப்பெற்றும் கோயில் களிற்பாடப்பட்டுமவந்தன என்பது, 9-ம் நூற்றாண்டினனான விஜயநந்தி விக்ரமவர்மன்என்ற பாணவரசன்காலத்தது திருவல்லத்துப் பில்வநாதே சுவரர்கோயிலிற் பொறிக்கப்பட்ட தமிழ்ச்சாஸனமொன்றில் "திருப் பள்ளித்தாமமபறிப்பாரக்கும், திருப்பதியம்பாடுவாருள்ளிட்ட பலபணி செய்வாரக்கும நெலலு நானூற்றுக்காடியும" எனக் (S. I. I. ) காணப்பட்டிருத்தலால் விசதமாகின்றது. இங்குத் 'திருப்பதியம்' என் பது தேவாரப்பதிகங்களையே எனபது "ஸ்ரீராஜராஜீசுவரமுடையார்க்கு திருப்பதியம விண்ணப்பஞ்செய்ய" (S. I. I. II. p. 254) எனப் பல விடத்தும தேவாரத்தைக்குறித்து இதேசொற பயிலுதலால தெளிவா கின்றது. இனி, இவவிராஜராஜனமகன முதலாமராஜேநதிரதேவனும இம்மூவரடியாரவணக்கத்தைச சிறப்பித்தவனே. மெய்ப்பொருளை ஞாக்கு இவன ஒரு திருமேனிவகுப்பித்துப பிரதிஷ்டித்ததை, இவன சாஸனமொனறு "பாதாதிகேசாந்தம இருபதிறறுவிரல உசரதது இரண்டுகைபுடையராகக கனமாகச்செயத 'தத்தா நமரேகாண்' எனற மி(ம)லாடுடையார் ஒருவர்'' (S. I. I. II. No. 28, 29, 40) என்று கூறுதல, அச்சோழன்காலத்தே நாயனமாரகளைபபறறியவழக்கு எவ வளவு பிரசித்தமாயிருநததென்பதற்குத் தக்கசான்றும. இங்ஙனமே ஆழ்வார் அருளிச்செயலகளும, இராஜராஜன்காலத்தும அவற்குப் பிற்பட்ட சோழர்காலத்தும பிரபலமாகவழங்கியவைகளேயாம. சை வாபிமானியாகிய இராஜராஜன் ஆழ்வாரகளிடத்தும ப க தி பூ ண் டு திருப்பணிசெய்தவிவரம அறியப்படவிலலேனும, இவன்காலத்துச சாஸனங்களில அத்திருமாலடியார்விஷயங்கள் நன்குபயிலகின்றன. உதாரணமாக—இவன்சாஸனமொன்றில 'சீகுருகூர்'எனறு (S. I. I. II. 269) காணப்படுதல, சடகோபர அவதரித்த ஆழ்வார்திருநகரி அக்காலத்துப் பிரசித்தமாயிருந்ததைக்குறிப்பிக்கின்றது. அவ்வாறே "ஸ்வஸ்திஸ்ரீ சாலைக்கலமறுத்த கோ இராஜராஜகேசரிவர்மற்கு யாண்டு 13வது.........எம்மூர்த் திருவாய்மொழித்தேவறகு" என உக்கலில வரையப்பட்ட இவன்காலத்துச்சாஸனம அச்சடகோபர் அருளிய திருவாய்மொழியின் பிராபல்யத்தைக்காட்டவல்லது. (S. I. I. III. p. 4) இவன்காலத்துச்சாஸனங்களில், இங்ஙனம் சில குறிப்புக்களே காணப்படினும், இவனுக்குப்பிற்பட்ட சோழர்காலத்துச்சாஸனங்கள்

ஆழ்வார்களையும் அவர்கள் அருளிச்செயல்களையும்பற்றித் தெளிவாகக் கூறுகின்றன. முதற்குலோத்துங்கன்காலத்துச்சாஸனமொன்று "அப்பிகைத்தேர்த்திருநாளிலும் பங்குனித்திருநாளிலும் தீர்த்தம் பிரசாதித்தருளின அன்றிராத் திருப்புன்னைக்கீழ் எழுந்தருளியிருந்து 'தேட்டருந்திறல்' கேட்டருளும்போது" (S. I. I. III. 150) என்று கூறுகின்றது. 'தேட்டருந்திறல்' என்பது குலசேகராழ்வார் அருளிய திருமொழியில் இரண்டாம்பதிகத்தின் முதற்குறிப்பாகும். இவ்வாழ்வாரது பாசுரங்கள் தமிழ்நாட்டில்மட்டுமன்றிப் பண்டைநாளில் அந்நியதேசத்தும் பரவியிருந்தன. பாமாதேசத்துப் பாகான (Pagan) நகரத்து ஆலயக்கல்லொன்றில், 1903-ம்வருஷம் கண்டெடுக்கப்பட்ட தமிழ்ச்சாஸனமொன்று, டாக்டர் துரையவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. (Epigraphica Indica Vol. VII. p. 197) இச்சாஸனம் மலைநாட்டிலிருந்துசென்ற வியாபாரியொருவரால்-700, 800 வருஷங்கட்கு முன் அங்குள்ள நானாதேசி விண்ணகராழ்வார்கோயிற்குச் சில தாமங்கள்செய்தசெய்தியைக்குறிக்கின்றது. இச்சாஸனத்தின்தலைப்பில் 'நாஸ்தாதாமமே' என்ற சுலோகமொன்று வரையப்பட்டுள்ளது. இது, குலசேகராழ்வார் அருளிய முகுந்தமாலையில் 5-ம் சுலோகமென்பது பிரசித்தம். இச்சாஸனத்தின்விவரத்தைச் செந்தமிழில் விவரமாக நானே வெளியிட்டிருக்கிறேன். (தொகுதி 7 பகுதி 1.) இதுநிற்க, குலோத்துங்கன்மகனான விக்கிரமசோழனசாஸனமொன்றில் "கோப்பரகேசரிவன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரமசோழதேவர்க்கு யாண்டு 9-வது ஜயங்கொண்டசோழமண்டலத்து எயிற்கோட்டத்து எயில்நாட்டுத் திருவத்தியூராழ்வாரைப் பாடியருளின ஸ்ரீபூதத்தாழ்வாரும் பொய்கையாழ்வாரும் பிறந்த திருக்கேட்டைநாள்* அருளாளப்பெருமாள் புறப்பட்டருளி" (S. I. I. III. 187)என்று காணப்படுகின்றது. இதனுள் முதலாழ்வார்கள்வரலாறு குறிக்கப்பட்டிருத்தல்காண்க. இவ்வாறே 11-ம் நூற்றாண்டிலிருந்த சோழகேரளதேவன்சாஸன

---

* குருபரம்பரைகளிலும் வழக்கிலும் பொய்கையாழ்வார்க்குத் திருவோணமும், பூதத்தார்க்கு அவிட்டமும் திருநக்ஷத்திரங்களாக வழங்குகின்றன. இச்சாஸனத்தில் அவ்விருவாக்கும் கேட்டைநாளைக்கூறுவதுபொருந்தவில்லை; ஆதலால் அது திருவாட்டைநாளென்றெழுதப்பட்டிருக்கவேண்டுமென்றுதோன்றுகிறது. மூலசாஸனத்தை உற்றுப்பார்த்துத்தெளியவேண்டும்.

மொன்றில், திருமங்கையாழ்வார் அருளிய திருநெடுந்தாண்டகம் ஆளப்பட்டுள்ளது. ஆகவே, ஆழ்வார்கள்விஷயங்கள் இராஜராஜன்முதலிய சோழர்காலங்களிற்பிரபலமாயிருந்தசெய்தி தெளிவாதல்காண்க. (Epi. Annual Report 1899—900 p. 10).

இங்ஙனமாகவும், டாக்டர் கால்டுவெல்பாதிரியாரும், Prof. சேஷகிரிசாஸ்திரிகள் போன்றாரும், ஆழ்வார்களை மிகப் பிற்காலத்தவராக எழுதிப்போந்தது, அவர்கட்கு இத்தகையசாஸனங்கள் அகப்படாக் குறையாற்போலும். இராஜராஜன்காலத்தே திருமால் சிவனடியார்கள் வரலாறுகள்வழங்கின என்பதனால், அவ்வடியார்கள்காலமும் அச்சோழன்காலமும் ஒன்றுபோலும் என்று கருதற்க. அவர்கள், சங்க நாளிலும் அதற்குப்பின்பும் இச்சோழனுக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்பும் இருந்தவர்கள் என்பதற்கு வேண்டியபிரமாணங்கள் அவர்கள் வாக்கினின்றே நாம் காட்டலாம். பெரியாழ்வார் நெடுமாறன் என்ற பாண்டியனையும், திருமங்கைமன்னன் பரமேசுவரபல்லவன், வயிரமேகன்முதலியவர்களையும் தம்காலத்தவராகவைத்துப் பாடுதலால் அவர்கள்காலம் இராஜராஜனுக்குமிகவுமுற்பட்டதாதல்தெளிவாகும். பிற்கூறப்பட்ட வயிரமேகன் என்பவன் இராஷ்டிரகூடவம்சத்தவனும், பல்லவனைவென்று கச்சியைப்பிடித்தவனும், கி. பி. 754ல் இருந்தவனுமாகிய தந்திதுர்க்கனே என்பதைச் செந்தமிழில் "திருமங்கையாழ்வார்காலவாராய்ச்சி" என்றவிஷயத்தில் முன்னரேவிளக்கியுள்ளேன். ஸ்ரீமாந்-வெங்கையர் அவர்களாலும் இத்தந்திதுர்க்கனே வயிரமேகன் என்பது பின்பு வற்புறுத்தப்பட்டுள்ளது.* இனிப் பிற்காலத்து அரசர் புலவர்விஷயங்களாகத் தமிழ்நூல்களிற்காணப்படுவனபலவற்றுக்கும் சாஸனவாராய்ச்சி பேருதவியாகும். வீரசோழியம்,கலிங்கத்துப்பரணி, மூவருலா, தக்கயாகப்பரணிமுதலிய தமிழ்நூல்களிற்காணப்படும்

* Of the same King's reign (Govinda) are the Kadali plates of 1812. In these the genealogy begins with Kakka, whose son was Vairamegha. This unusual name for Vairamegha seems to be supported by a inscription of N. Arcot A. S. I. Report 1903—4 See Article by V. Venkaya on irrigation in S. India.

சோழர்வரலாறுகளெல்லாம சாஸனங்களாற்றான் தெளியவேண்டியன வாகும். ஸ்ரீமாந்-து. அ. கோபிநாதராயரவாகள் தமிழாக்கு உபயோக மாக எழுதிய சோழவமிசசரித்திரததால இதனுண்மைபுலப்படக்கூடி யது. இனி, புலவர்சமபநதமாகவும சாஸனம உதவுகின்றது. கமபரை ஆதரிதத வெணணைசசடையனுககுமகன சேதிராயன் எனபது 'புதுவை வாழசடையனுதவுசேய - பூதலமபரவுசேதிபன்' என்னும தனிபபாடற் பகுதியால அறியலாம. இசசேதிபனையே, கமபா ஏரெழுபது அரங் கேற்றுமபோது விஷநீணட அபபுலவாபெருமான் அவவிடநதீரப் பாடி உய்யககொணடது. (செநதமிழ் தொகுதி 5 பகுதி 2)

இசசேதிராயன சடையனுககு மகனாகததோன்றியசிறபபை மூவலூராககோயிலிறகணட சாஸனமொன்று

"காவிரியைசசோணாட்டைககாராளாதமமரபை
நாவலரைக்காவலரைநல்லோரைப் —பூவலய
முள்ளததருமபுதுவையூரைசசிறப்பிததான
பிள்ளைப்பெருமாளபிறநது"

"பேரோசைப்பிள்ளைப்பெருமானைசசேதிபனை
காரோசைககையானைககணடீரே—பாரோா
விடுங்கோளகொடுங்கோளவிளியருளபூண்டன்ன
மிடுங்கோளகொடுங்கோளென"

எனற வெண்பாககளாற புகழ்கின்றது. (செநதமிழ் தொகுதி 5 பக கம 57) இதேசாஸனததில, கமபா சடையபபவள்ளலின் விருநதோம பற்சிறபபைபபறறிபபாடிய,

"மெயகழுவிவநதுவிருநதுணடுமீளுமவா
கைகழுவநீரபோதுஙகாவிரியே—பொயகழுவும
போரவேறசடையன புதுவையாளிலலறததை
யாரபோறறவலலாரறிநது"

எனறபாடலும எழுதபபட்டிருததல அறியததககது. இனி, கமபா வலலியெனுநதாசியைத திருவொற்றியூரிறகணடுசொலலியதாகத தமிழ் நாவலர்சரிதையிற்கண்ட,

நடக்கிலன்னமாம்நிற்கினலவஞ்சியாம
கிடக்கிலோவியப்பாவைகிடநததாம
தடக்கையானசதுரானனபணடிதன .
மடததுளாள்எனமனததுறைவல்லியே.

என்றபாட்டில் திருவொற்றியூரில் தங்காலத்திருந்த சதுரானனபண்டிதருடைய மடத்தைப்பற்றிக்கூறுதல் காணலாம். மூன்றும் இராஜராஜ சோழன் திருவொற்றியூருற்சவத்திற்குச்சென்றிருந்தபோது, சைவாசாரியராகிய சதுரானனபண்டிதரும் வாகீசபண்டிதரும் அங்கிருந்தனர் என்று ஒருசாஸனம்கூறுகின்றது. (Ep. Report 1911—12) சைவாசாரியரான வாகீசபண்டிதர் என்பவர் ஞானாமிர்தநூலாசிரியர்போலும். இவர்தாசிரியர் தாராகக்கண்ட கோட்டம்பாக்கை, சென்னையடுத்த கோட்டம்பாக்கமாகத்தெரிதலால், இப்பண்டிதரும் அவ் உற்சவத்துக்கு வந்திருந்தல் பொருத்தமேயாகும். இக்கம்பர்காலத்தையும் சாஸனவுதவியால் அறியலாகும். காகதீயகணபதிவம்சத்தவனான ஓரங்கற்பிரதாபருத்திரனிடஞ்சென்று, கம்பர்,

அவனிமுழுதுண்டுமிழ்ந்த அயிராவதத்தின்
பவனிதொழுவார்படுத்தும்—புவனி
உருத்திரர்கின்னுடையவோரங்கனுட்டிற
குருத்திராவாழைக்குழாம்.

என்றுபாடிய பாட்டொலொன்று தமிழ்நாவலர்சரிதையிற்காணப்படுகின்றது. இப்பிரதாபருத்திரன்காலம் 1162—1197 என்பது சாஸனங்களால் நன்கறிந்தது. (Sewell's list of Antiquities Madras Vol. I p. 31, 71, 173) இவர்மீது அருணகிரிநாதர் பிரவுடதேவராயரைத் திருப்புகழிற்பாடினர். இதனை "உதயதாம மார்பான பிரவுடதேவமாராச னுளமுமாட வாழ்தேவர் பெருமாளே" (976) எனக்காண்க. இவ்வரசர்சாஸனமொன்று தமிழில்வெளிப்பட்டுள்ளது. (S. I. I. I p. 110) இவர் விஜயநகர அரசருளொருவர்; 15-ம் நூற்றாண்டில் விளங்கியவர். இத்தமிழ்ச்சாஸனம் கி. பி. 1449-ல் எழுதப்பட்டதாம்; ஆகவே, அருணகிரியாரும், அவர்காலத்தவராகவழங்கும் வில்லிபுத்தூராரும், அவ்வில்லிபுத்தூரார்பாடப்பட்ட வக்கபாகை ஆட்கொண்டானும், அவ்வாட்கொண்டானைப்பாடியவராகத் தமிழ்நாவலர்சரிதையால் அறியப்படும் இரட்டையரும், அப்புலவர்காலத்துவிளங்கிய காளமேகமும் 15-ம்நூற்றாண்டவராதல் புலப்படுகின்றது. இம்மட்டோ? ஸ்ரீமான்-கோபிநாதராயரவர்களால், தென்காசியிலாண்ட பாண்டியர்சாஸனங்கள் பாடல்களுடன் செந்தமிழிற் பதிக்கப்பட்டுள்ளன. அவற்றால், அதி

வீரராமபாண்டியன், பராக்கிரமபாண்டியன், குலசேகரபாண்டியன்முத லியவர்விஷயங்கள் மிகவுமவிளங்குகின்றன. அவறறை விரிக்கிற்பெரு கும். செநதமிழ்பபததிரிகையைககொண்டறிக. இவ்வாறே நீளச சாஸனவழியேபற்றிசசெலலுமிடததுப பண்டையரசர் புலவாவரலாறு களாக எண்ணிறநதவை அறியததடையிலலே.

இதுவரை அரசர்களேபபறறிச சாஸனவழியாகச சிறிதுகூறி னேன். இவைமட்டுமன்றி, சஙகசசெயயுள்களிற்கண்ட நாடுநகரஙகளின் விவரஙகளேயும சொற்பொருள்வழககுகளேயும அறியச சாஸனம உதவு முறையையும சிறிது விளககுவேன். சங்க இலககியஙகளிற பல்குன்றக் கோட்டம், ஓய்மாநாடு, பன்றுடு, வேணுடு, முதலியநாடுகளும, கசசிப் பேடு, வேமபற்றூர், நேரிவாயில, கொடுகூர், எயில முதலியநகரஙகளும வழஙகுதல அறியககூடும. இவை சாஸனஙகளில அடியிலவரும விவ ரபபடிபயிலுதல் அறியததக்கது

பல்குன்றக்கோட்டம். 'பலகுன்றககோட்டததுசசெங்கணமாததுவேள் நனனன்சேய் நனனன' என மலேபடுகடாததிற குறிபபுககாணப்படுகிறது. இககோட்டம சாஸ னங்களில மிகுதியும பயிலவதாம. (S. I. I. I 102-5)வேஙகடககூறறம,பஙகளநாடு, மண்டைக் குலநாடுகள் இககோட்டததைசசாாநதவை.

பன்றுடு. ' பன்றுடுதநதபாண்டியன்மாறன்வழுதி ' என ஒருபாணடியன் கூறப்படுதலகாணக. (புறம்) இந நாடு மைசூா இராஜயததுளஅடஙகிய கஙகவாடி 96000-ததைசசாாநதது. (In Anti. Vol. XVIII p. 410)

எயில்நாடு. (புறம) இதனுள் காஞசிபுரமமுதலியவை அடங் கும். "ஜயஙகொணடசோழமண்டலதது எயிற் கோட்டதது எயிலநாட்டுத திருவததியூா" என் பது சாஸனம. (S. I. I. II 187)

ஓய்மாநாடு. ஓய்மான்-ஓயா அல்லது ஓவியாதலேவன். சிறு பாணுற்றுப்படைகொண்டநல்லியககோடன்இவ்

வோய்மானேயாவன். இவனூராக அவ்வாற்றுப் படையிற்கணட கிடங்கிலஎனபது இவ்வோய்மா ஞடடைசசாரநதது. (S. I. I. III 146, 201). திண்டிவனம இநநாடடைசசேர்நததென்பது "ஓய்மாஞட்டுக்கிடஙகில திருதத ண் டீசுவர முடைய மஹாதேவர்ககு" என்னும சாஸனப் பகுதியால அறியலாம (திண்டீசுவரம - திண்டி வனம)

**வேஞடு.** இது தென்திருவாஙகூர இராஜயததுககு சாஸ னஙகளிலவழஙகியபெயர. (Travancore Manual Vol. I 188—9)

**கச்சிப்பேடு.** 'கசசிபபேடடு நன்ஞகையார' எனககாண்க. (புறம) பேடடை எனச சில ஊாகடகு இககா லததுவழங்குவது பேடு என்பதன்திரிபுபோலும. கசசிப்பேடு எனபது சாஸனஙகளில் மிகுதியாகப் பயிலவதாம. (S. I. I. I 113—4)

**வேம்பற்றூா** வேமபற்றூர்ககுமரனூர் எனககாண்க. "இரா ஜேநதிரசிஙகவளநாடடு மண்ணிநாட்டு அவனி நாராயணசசதுாவேதிமஙகலம" என்பது சாஸ னம. (S. I. I. II p. 317) பாண்டிநாட்டிலும வேமபறறூர் ஒன்றுண்டு.

**'ல.** 'கிடங்கிறகோமான' என நலலியக்கோடன் கூறபபடுதல்காண்க. (சிறுபாண். 160.) திண்டி வனம இககிடங்கிறபிரதேசததுள் அடங்கும் என்பது "கிடங்கில் திருததிண்டீசுவரமுடைய மஹாதேவற்கு" என்னும சாஸனப்பகுதியால் அறியப்படும். திண்டீசுவரம-திண்டிவனததிற்குச சாஸனங்களில்வழங்கும்பெயர்.

**நேரிவாயில்.** "நேரிவாயில்நிலைசசெருவென்று" என்பது பதிற் றுபபததின் 5-ம பததுப்பதிகம, இது க்ஷததிரிய

சிகாமணிவளநாட்டைச்சார்ந்ததென்பது, "க்ஷத்திரியசிகாமணிவளநாட்டுநோவாயிலுடையான்.... ....வானவன்பல்லவதரையன்" என்ற சாஸனப் பகுதியால் விளங்குகிறது. (S. I. I. Vol. III No. 21).

**கோடுகூர்.** "அக்கரைநண்ணிக்கொடுகூரெறிந்து" என்பது பதிற்றுப்பத்தின் ஐந்தாம்பத்துப்பதிகம். இவ்வூர் பன்றிவிஷயத்தின் ஒரு பகுதியாய்ச் சேரமானொருவனுக் குரியதாயிருந்ததென்று, குமார விங்கசாஸனம் கூறுகின்றது. (Indian Antiquary Vol. XVIII p 367).

இவ்வாறே இன்னும் பழைய இலக்கியங்களிற்கண்ட நாடுநகரங்களின்செய்திகளை நாம் சாஸனமூலம் தெளிய இடமுண்டு. இங்குச் சிலவே மாதிரிகையாகக்காட்டப்பட்டன. இவையன்றி,'சங்க நூல்களில் வழங்கும் சிலபெயர்வழக்குகளையும் சாஸனங்கள் விளக்குவனவாயிருத்தல் காணலாம். உதாரணமாக—,

**பாரதாயன்.** பதிற்றுப்பத்தின் மூன்றாம்பத்தால், பல்யானைச் செல்கெழுகுட்டுவனுக்குப் புரோகிதராகவிளங்கியவர் நெடும்பாரதாயனார் என்பது அறியப்படும். இப்பெயருடனிணைந்த பாரதாயன் என்பதற்குப் பொருள் எளிதில்விளங்கஇடமில்லை. ஆயினும் சோழர்சாஸனமொன்றில், "ஆரிதன-கேசவன் தனியிளஞ்சிங்கமும் பாரதாயன்கேசவன் அறிவரியானும், பாரதாயன் திருவரங்கநாராயணன் ஸ்ரீக்ருஷ்ணனும்" (S I I. III 150) என்று கூறப்படுவதிலிருந்து, பாரத்துவாஜன் என்பது உய்த்தறியப்படும். ஏனெனில், அச்சாஸனத்துள் இயற்பெயர்களுடன் கோத்திரப்பெயரும் இணைக்கப்படுதலால் என்க. டாக்டர் ஹூல்ஷ் துரையவர்களும் இதனைப் பாரத்துவாசன் என்பதன்திரிபாகவேகருதி எழுதியிருத்தலும் அறியத்தக்கது.

**பாலாசிரியன்.** அகநானூற்றுட்கண்ட சிலபுலவர் 'பாலாசிரியன் இன்னான்' என்று கூறப்படுகின்றனர். பாலாசிரியன் என்பது பாலர்களுக்குக்கற்பிக்கும் ஆசிரியனெனப் பொருள்படும். (இதனால், சிறுவர்க்குப் போதிக்கும் ஆசிரியரும் அக்காலத்துப் பெரும் புலவர்களாகவேஇருந்தமை பெறப்படும்.) இப் பாலாசிரியன் என்னும்வழக்கு, "இப்படிக்கு சாந்தமங்கலத்துப்பாலாசிரியன் இலக்குவணன், சாந்திபாலாசிரியன் வீரநாராயணன்" என ச சாஸனத்துப்பயிலுதல் அறியத்தக்கது. (S. I. I. III 150).

**பேரிளமை.** மகளிர்பருவங்களுள் பேரிளம்பெண் என்பது ஒன்றென்பது பலரும் அறிந்தது. இஃது உலக அநுபவம் முதிர்தற்குரிய பருவமாகும். இப் பொருளில் இச்சொல் ஆண்பாலார்க்கும்வழங்குதல், "இப்பரிசு நகரத்தாரும் பேரிளமையாருஞ் சொல்ல எழுதினேன்" என இருமுறை ஒரு சாஸனத்துப் பயில்கின்றமை காணத்தக்கது. (S. I. I. I. 65).

**பெருமானடிகள்.** இது கடவுளைக்குறிக்க வழங்குதல், "மதுரை ஆலவாயிற்பெருமானடிகளாற்செய்யப்பட்ட நூற்கு" எனவரும் இறையனார்களவியலுரை வாக்கியத்தால் அறியலாம். இப்பெருமானடிகள் என்னும்சொல்வழக்கு"திருத்தீக்காலிப்பெருமானடிகளுக்கு" என்றிவ்வாறு பழையசாஸனங்களில் மிகுதியும் பயில்வதாம். (S. I. I. Vol. III 100).

**தேவகுலம்.** இது கோயிலுக்குவழங்குதல், "தேவகுலம்வழிபடுவான்தேவகோட்டத்தை எங்குந்துடைத்து" என்னும் இறையனார்களவியலுரைப்பாயிரத்தாலறியலாம். இச்சொல்வழக்கு, "கந்தப்பிரிய

அரசருமகன் கந்தசனன்செய்வித்ததேவகுலம்" என ஒரு பலலவசாஸனத்துக்காணப்படுதல் அறிக. (S. I. I. II 341).

திருவடிபிடிப்பான். சிலப்பதிகாரததில "அரவணைககிடந்தோன் சேடக்குடிமபி" என்பதறகுஅரும்பதவுரைகாரர் 'சேடககுடிமபி-திருவடிபிடிபபான்' என்றெழுதி னா. திருவடிபிடிப்பான் என்பது, கோயில் அருசசகனைக்குறிபபதென்பது,"நடுவிற்கோயிற் றிருவடிபிடிககும ஸ்ரீதரபட்டனும" என்னும சாஸனப்பகுதியால் விளங்குகின்றது. திருவடி பிடிததல-திருமாலின் திருவடிநிலைகள் (ஸ்ரீ சட கோபம) தாஙகுதல; அன்றி, ஸ்ரீபாதநதாங்கி என்று கூறுதலும பொருந்தும.(S. I. I.III 84)

இங்ஙனமே ஆராயநதுசெலலின் விரியுமாதலின், இமமட்டோடு நிறுததுவேன. இதுவரை கூறிபபோநதவைகளாற் சாஸனவாராய்சசி, தமிழசசரிதங்களையும மற்றும பல தமிழ்வழககுகளையும அறிவதற்குப் பேருதவி செயயககூடுமென்பது நன்குவிளஙகும. ஆதலால், தமிழறிஞ ரெலலாம இததுறையிலும பிரவேசிததல், தமிழாராய்சசிபெருகுதற்கு ஏதுவாகுமென்பது திணணம. சாஸனபரிசீலனையிலவலலமேதாவிகள் எடுததுக்கூறததக்க பெரியவிஷயமொனறை அதனிற்போதிய அறி விலலாத யான் இமமஹாஸபையிற் கொணாநததை அறிஞா க்ஷமிததுக் கொள்க.

மு. ராகவையங்கார்.

# *தமிழ்மொழியும் உயர்தரக்கல்வியும்.

கூரறிவாலும் குன்றாஊக்கத்தாலும் பெரும்புகழும்பிறங்கும் ஸபா நாயகரவர்களே! மற்றும், இங்கு விஜயஞ்செய்துள்ள செந்தமிழ்ப்புல மைச்செல்வமும், செந்தமிழ்வண்மைச்செல்வமும், செந்தமிழ்ப்பற்றுச் செல்வமும்படைத்துள்ள பலதரப்பட்ட பண்புடையாளர்களே!

இப்பேரவையிற் சிறியேன் எடுத்துரைக்கப்புகும்விஷயம் தமிழ் மொழியும் உயர்தரக்கல்வியும் என்பது. இவ்வுபந்யாஸத்தில் உயர்தரக் கல்வி இத்தன்மைத்தெனபதும், நமநாட்டில் அத்தகைக்கல்வியில் தமிழ் மொழி எத்தகைய இடம்பெறல்வேண்டுமெனபதும், அங்ஙனம் இடம் பெறுதற்குரிய இயற்கையாற்றல் அதற்குளதாமெனபதும், உளதா யின் அத்தகைய இடம்பெறுதலால் விளையும்பயன் இன்னஆகலாம் என்பதும் பிறவும் எனனுடையபுலலறிவிற்கு எட்டியமட்டில் நலலறிவா ளர் சிலருடையக் கருத்தைத்தழுவி இங்கே சற்று விரித்துரைக்கமுயல கின்றேன். இச்சபையிலுள்ள பெரியோர்கள் இவ்வுபந்யாசத்திற்காணப் படும் "குணம்நாடிக்குற்றமும்நாடி அவற்றுள் மிகைநாடி மிக்கக்கொளல்" வேண்டுமென்று மிகுந்தபணிவுடன் அவர்களைவேண்டிக்கேட்டுக்கொள் கின்றேன்.

இப்பொழுது நம தென்னாட்டிலுள்ள உயர்தரக்கல்விச்சாலைகளி லெல்லாம் சென்னைமாகாணத்துரைத்தனத்தாராலும், சென்னை ஸர்வ கலாசங்கத்தாராலும் நடத்தப்பெற்றுவரும் பரீக்ஷைகளைக்கருதியே அங்குள்ளமாணுக்கர்கள் கல்விபயின்றுவருகிறார்களென்பதும், இக்கல் விச்சாலைகளில் இவர்களுக்குப் பொதுவாக இலக்கியம், கணிதம், பல வகைப்பட்ட பரகிருதிசாஸ்திரங்கள், சித்திரம், தேகாப்யாஸம் இவை பெரும்பாலும் கற்பிக்கப்பட்டுவருகின்றன என்பதும், இங்குள்ளார் அனைவரும் அறிந்துள்ளார்கள். இங்ஙனம் பலவகைப்பட்டகலைகளிலும்

* இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பதினன்காம்வருஷோத்ஸவக்கூட்டத் தில் மகா-௱-௱-ஸ்ரீ திவான்பகதூர் எல். டி. சுவாமிக்கண்ணுப்பிள்ளை, எம். ஏ. எல். எல் பி., பி. எஸ். ஸீ., அவர்களுடைய அக்கிராசனத்தின்கீழ் வாசிக்கப் பெற்றது.

மாணுக்காகளுக்குப பழக்கம்செய்விததலே இவவுபயாஸததில், உயா தரககல்வியெனச சுட்டபபட்டிருககிறது. யாதேனும ஒரே துறையில மிகசசிறநத புலமையெய்துமபடி மாணுககாகளைப பழககுவதும அம மட்டில உயாதரககலவியேயாமெனினும "ஈண்டு உயாதரககலவியென னும தொடாமொழி இபபொருளில எடுததாளபபடடிலது. இஙகே குறிததபொருளில உயர்தரசகலவி மேறகூறியாஙகுப பறபலபாடசாலே களினும ஊககததுடன பயிறறபபடடேவருகினறது. இவவுயாதரக கலவியில தமிழககலவிசமபநதபபடடமட்டிற கவனிககததககசிலவிவ ரஙகளே இஙகே எடுததியமபுகினறேன.

அவைவதாம —

1. இலககியததில தமிழபபாடமீஙகலாக எலலாககலைகளும இஙகிலீஷப பாஷைமூலமாகபபயிறறபபடுதல

11. இததமிழிலககியநதானும மாணுககாகட்கு இனறியமையாபபாடமா யிராமல இஷ்டமாஞல எடுததுககொளளுமபாடமாக ஏறபட்டிருததல.

111 பாடஜாப்தாவில தமிழில வ்யாஸமெழுதலமாத்திரமே கட்டாயப்பாட மாயிருததல். இதுவும காலேஜகளில ஸமஸகிருதமொழிபெயாப்பை இப்பாடத திறகுமாற்றுக மாணுககாகள அமைததுககொளளாதவரையில.

இவற்றை ஒவ்வொனருக மேனேககாகநோககுவோாககும நம தாயமொழி நமநாட்டிநடைபெறும உயாதரககலவியில எவவளவு தூரம புறககணிககபபடடிருககிறதெனபது தெளளிறிறபுலபபடும

இனித தமிழமொழிககும, உயாதரககலவிககும எததகைய இயைபு இருததலவேணடுமெனபதைததககூறுவேன.

ஆஙகில இலககியம நம கலவிசசாலைகளில முசயபாடஙகளுள ஒனருயிருததலும,சிலசாலமவரை சிலசாஸ்திர நூலகள ஆஙகிலபாஷை மூலமாகக கற்பிககபபடுதலுநதவிர, மறற எல்லாபபாடஙகளும உயா தாககலவிபயிலுவோர்ககுத தமிழபபாஷைமூலமாசககறபிககப்பட வேண்டும. இதுவே நமதமிழநாட்டில தேசபாஷை பலவழியிலும செழிததுவளர்தறகும கலவியும நாகரிகமும மேமபடுதறகும நேரியவழி யாகும. இவ்விஷயம பற்பல ஆக்ஷேபணைகளுக கிடநதருமென்பதும, இது எளிதில ஸிததிபெறததககதன்று என்பதும உண்மையே. அவ் வாக்ஷேபங்களின் முககியாமசஙகளை இஙகு எடுததோதி அவறறிற்கு

ஸமாதானங்கூறுவது ஈண்டைக்குப்பொருத்தமுடையதாகும். ஆக்ஷேபங்களில் அதிமுக்யமானவை இரண்டு. அவையாவன (1) தாய்மொழி வாயிலாகக் கல்வி கற்பித்தால், நம்நாட்டார்க்கு ஆங்கிலமொழியிற் பாண்டித்யமும், மேனாட்டு நவீனசரித்திரசாஸ்த்ர ஆராய்ச்சிகளால் நம்மவர்க்குண்டாகும் நற்பயனும் குறைவுபடுமென்பது. (2) தமிழ்ப்பாஷை பற்பல கலைகளையும் நன்குவிளக்கிப்போதிப்பதற்குத் தகுந்த ஆற்றலில்லது என்பது. இவையிரண்டும் பேய்த்தேர்போன்ற போலிக்கூற்றுக்களாமாறு இங்கு விளக்குவேன்.

தமிழ்மொழிவாயிலாக உயர்தரக்கல்வி கற்பிக்கவேண்டுமென்று கூறியதுடன், புறனடையாக, ஆங்கிலஇலக்கியமும் சிலகாலம்வரை சில சாஸ்திரநூல்களுந்தவிர, என்று கூறியுள்ளது கவனிக்கற்பாலது. ஆங்கில பாஷையை நம்கல்விச்சாலைகளிற் கட்டாயபாடங்களில் முக்கியமாவதொன்றாய்ச்செய்து, அந்தப்பாடத்தைத் தகுந்த வித்வான்களைக் கொண்டுபோதித்துவந்தால், இயல்பாகவே எவர்க்கும் ராஜபாஷையின் மீதுள்ளமோஹமும், நற்கல்வியின்பயனாக அதன்கண் அமைந்துள்ள நன்னூல்களைக் கற்றுக்கொள்வதிற் படிப்பவர்க்கு இயல்பாய்எழும் தாபமும் நிலைத்திருக்குமவரை, நம்மாணாக்கர்க்கு ஆங்கிலத்தில் தேர்ச்சி குறைவுபடும் என்பது கொள்ளத்தக்கதன்று.

இனித் தமிழ்மொழிவாயிலாக உயர்தரக்கல்வி பயிற்றமுடியாதென்பது எவ்வளவு பொருத்தமுடையது என்பதைப் பார்ப்போம். இதுவே, ஆங்கிலமுணர்ந்த அறிவாளர்களிற் பெரும்பாலார் ஆழ்ந்தியோசியாமற் கூறும், ஒரு பலத்த ஆக்ஷேபம். இது தமிழ்மொழியினியல்பையும் தமிழ்நூல்களின் பெருமையையும் தக்கபடி உணராத தவற்றினாலேயே எழுவது. இயற்கைநலம் இலங்கச் செஞ்சொற்களில் அமைந்துள்ள சங்கநூல்களும் ஒழுக்கமே உயிரினும் ஓம்பத்தகுவது என்று இடித்துரைக்கும் எண்ணில்லாத பலநீதிநூல்களும்” பத்திச்சுவைநனிசொட்டச்சொட்டப்பாடப்பெற்ற பாக்களநிறைந்துள்ள மதசம்பந்தமான கிரந்தங்களும் கற்பனைநயமும் சொற்பொருணயமுங்கலந்து கற்றோர் மனத்தைக்காமுறுக்கும் காவியநூல்களும், நந்தமிழில் எத்துணைச்சிறப்பாக அமைந்துள்ளன? பண்டைத்தமிழ்நூல்களிற் பலவற்றைப் பரோபகாரமாகவெளிப்படுத்தியுள்ள பிரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய உ. வே. சாமிநாதஐயரவர்களும், காலஞ்சென்ற ராவ்பஹதூர் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்களும், புதுவழியில் தமிழ்நூல்கள்புனைந்து

வெளியிட்ட பிரஹ்மஸ்ரீ வி. கோ. சூரியநாராயணசாஸ்திரியாரவர்களும் தங்கள்பதிப்புநூல்களுக் கெழுதியுள்ள ஆராய்ச்சிமுகவுரைகளை நோக்கு வோர்க்குத் தமிழ்மொழியினது பொருள்விளக்குமாற்றல் நன்குபுலப் படும். மற்றும் ஆங்கிலமும் தமிழும்வல்லவர்களாய் அருந்தமிழ் நூல்க ளியற்றிப் பெரும்புகழ்படைத்த மகாராஜராஜஸ்ரீ வேதநாயகம் பிள்ளையவர்களுடைய "ஸர்வஸமயசமரஸகீர்த்தனை, நீதிநூல், பெண் மதிமாலை, பிரதாபமுதலியார்சரித்ரம்" முதலிய நூல்களையும், ஸ்ரீமான் அ. மாதவையர் B. A. அவர்களும், பண்டிதர் S. C. நடேசசாஸ்திரிய ரவர்களும் இயற்றியுள்ள பற்பல தமிழ்நாவல்களையும் படித்துப்பார்த் தால் தமிழ்மொழியில் நவீனக்கருத்துக்களை நயம்பட இயங்குதல் அங் கையங்கனியென அறியக்கிடக்கின்றது. தமிழ்ப்பாஷையின் இயல்லமைப் பும் இலக்கணஅமைப்பும் வேண்டுழி வேண்டியாங்கு வேண்டியபுதுச் சொற்கள் சொற்றொடர்கள் முதலியவற்றைத்தமிழ்மொழியிற் பொருள் விளக்குமுறை அமைத்துக்கொள்வதற்கு ஏற்றனவாக இருக்கின்றன. இத னோடு ஸமயம்நேரும்போது ஸம்ஸ்கிருதத்தின் நல்லுதவியும் தமிழுக்கு வாய்க்கிறபடியால், தமிழ்மொழியால் நம்மவர்க்கு உயர்தரக்கல்வி பயிற்றமுடியாதென்பது ஒப்புக்கொள்ளத்தக்கதன்று.

புதுமாறுதல்கள் ஏற்படும்போதெல்லாம் அதிலும் தமிழ்ஸம்பந் தப்பட்டதென்றால், இவ்வித ஆக்ஷேபங்களைப்புகல்வது புவிநிலைமாந் தர்க்கு வழக்கமாய்விட்டது. முதன்முதல் தமிழில் ஸ்வதேசமித்திரன் பத்திரிகையை நடாத்தத்தொடங்கியபோது, அம்முயற்சி வீணாகு மென்றுகருதி, நமது தென்னாட்டுத்தேசபக்தசிரோமணியாகும் பிரஹ் மஸ்ரீ ஜி. ஸுப்பிரமணியஐயரவர்களுடைய புத்தியீனத்துக்கு இரங்கிய புத்திமான்கள்பலர். இப்போது அம்மித்திரன் சற்றுமுன்பின் முப்ப தாண்டுகளாகத் தமிழ்நாட்டில் நல்லொளிபரப்பிவிளங்குகிறதுபற்றி, அதன்முற்போக்கைப் பின்பற்றி இன்னும்சில தமிழ்ப்பத்திரிகைகளும் இன்றவரை ஒழுங்காகநடைபெறுகின்றன. இப்பத்திரிகைகளால் ராஜாங்கவிஷயமாகவும் சரித்ரசாஸ்திரவிஷயமாகவும் வழக்காறுபெற்ற வார்த்தைகள் பலவன்றோ? அவற்றாற் பல்லாயிரக்கணக்கானதமிழ் மக்கள் பயனடைந்திருக்கின்றனரன்றோ? ஏரோப்ளேனுக்கும் (Aero-plane) ஸப்மெரினுக்கும் (Submarine) ஸமீபகாலத்தில் ஒவ்வொன் றாகும் இவ்விரண்டுதமிழ்மொழிகள் ஆகாயவிமானம் ஆகாய்க்கப்பல்

என்றும், நீர்முழுகி துளைபடகு என்றும் ஏற்பட்டுள்ளதை உற்றுநோக்கின் "சேணிற்பறக்கின்றசெந்தமிழ்க்குதிரைமுன் திட்டேதுதட்டேது காண்" என்று ஒருபுலவர்கூறியபடி, தமிழ்மொழியின் இயக்கவன்மை எளிதில் அறியலாகும். உண்மை இஃதாயினும், தமிழ்மொழியினை உயர்தரக்கல்விக்கு உபகாரமாக்குதலைப்பற்றி எதிர்வாதம் பலத்ததாகவேயிருக்கிறது. எனினும் நுண்ணுணர்வோடு தமிழ்மொழியின் இயற்கை வலியையும், தற்காலத்தில் அதற்குஅநுகூலமாக ஏற்பட்டுள்ள புறச்சாதனங்களையும் ஆழ்ந்துசிந்திப்போர்க்கு, தமிழ்மொழிவாயிலாக உயர்தரக்கல்விபயிற்றுவதில் அந்தப்பாஷையின் இயற்கையமைப்பினால் ஏற்படக்கூடிய விசேஷப்ரதிகூல மொன்றுமில்லை என்பது இதுகாறும் விரித்துக்கூறியவாற்றால் விளக்கப்பட்டது.

ஒருசாரார் நன்றுகூறினீர், ஏதேதோ ஆகாயக்கோட்டைகட்டுகின்றீரே. உயர்தரக்கல்வியைத் தமிழ்மொழியிற்பயிற்றுதற்கு அம்மொழியிற் கணிதம் சரித்ரம் சாஸ்திரம் இவற்றில் தக்க நூல்கள் இல்லையே. இதற்கென்செய்வீர்? என்றுகூறுவர் இன்னோர்க்கு யாமுரைக்கற்பாலது யாதெனில், நாம் இவ்விஷயத்தில் எவ்வளவுக்கெவ்வளவு ஊக்கஞ்செலுத்துகின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு விரைவில் நாம்விரும்பும் புஸ்தகங்கள் வெளிவரும் என்பதே. நமது ஆந்த்ரஸஹோதரர்கள் இவ்விஷயத்திற் பேரூக்கங்கொண்டிருக்கின்றார்கள் என்பதை நம்மிற்பலர் அறிவோம். அவர்கள் ஆந்த்ரபாஷையின் அபிவிருத்திக்காக ஒன்றுசேர்ந்து முயல்வதன் பயனாக விஞ்ஞானசந்திரிகாமாலிகை என்னும் பெயரால் வெளிப்படுத்தியுள்ள சரித்ரசாஸ்திரசம்பந்தப்பட்ட பலநூல்கள் மிகச்சிறந்தனவாக வெளிவந்திருப்பதுடன், இவற்றைத் தெலுங்குநாட்டிலுள்ள கலாசாலைகளிலும் புஸ்தகசாலைகளிலும் வாங்கிவைப்பதையும் ஆசிரியர்களும் மாணாக்கர்களும் அவாவுடன் இந்நூல்களைப்படித்துப் பயனுறுதலையும் யான் கண்கூடாகக்கண்டுள்ளேன். நீரிலிறங்கித் திளைத்தாடினன்றே நீந்துதலிற் பழக்கம் கைவரும். அன்றி நீந்தத் தெரிந்தபின்னரே நீரில் இறங்கவேண்டும் என்று காத்திருப்பதும் இவ்விஷயத்திற் புஸ்தகங்கள் ஏற்படவேண்டுமென்று போக்குச்சொல்லுவதும் ஒரேதன்மையினவாகும்.

ஆதலின் இன்னோரன்ன ஆக்ஷேபங்கள் உண்மையில் ஆதாரமற்றவைகளாய் ஒழிகின்றன.

இனித் தமிழ்மொழிமூலமாகக் கல்விகற்பித்தலால் விளையக்கூடிய நன்மைகளைப்பற்றிச் சற்று ஆராய்வோம்.

அவற்றுள் முதல்தரமான நற்பயன் யாதெனில் மாணுக்கர்கள் புதுவிஷயங்களைத் தாய்ப்பாஷையிற் கற்றுக்கொண்டால் வேற்றுப் பாஷையிற் கற்றுக்கொள்வதைப்பார்க்கிலும் **விரைவாகவும் விளக்கமாகவும் அறிவுமுதிர்வார்கள்** என்பதே. இப்போது ஸாதாரணமாக ஒருமாணுக்கன் ஆங்கிலபாஷையிலுள்ள ஒரு நூலினைத் தானாகவே மெய்ப்பொருளுணர்ந்துபடிப்பதற்குக் குறைந்தது ஏழு எட்டுவருஷம் அவனுக்கு அப்பாஷையிற் பழக்கம் வேண்டியிருக்கிறது. இப்படித் தேர்ச்சியுறும்வரை மாணவர்களுக்கு இங்கிலீஷ்புஸ்தகவாயிலாகக் கிடைக்கும் அறிவு தெள்ளறிவென்பதற்குஇடமில்லை. இவ்வளவுகாலத்திலும் தேசபாஷைமூலமாக இவர்கள் பலவகைப்பட்ட பாடங்களைப் படித்துவந்தால் இவர்களுக்கு இவ்விப்பாடங்களில் மிகுந்ததேர்ச்சி யுண்டாகுமன்றோ? அங்ஙனமாயின் நம்நாட்டிற் சிலவாண்டுகளேகல்வி பயின்று அரைப்படிப்புடன் படிப்பைநிறுத்திவிடுவோர்கள் தம்மறிவைத் தமிழ்நூல்களால் விருத்திசெய்துகொண்டு தமக்கும் பிறர்க்கும் பயன்படத்தக்கநற்றுறைகளில் தம்வாழ்நாட்களை இனிதுகழித்தல் இயலுமன்றோ?

அன்றியும் தேசபாஷையிற் கல்விகற்பிக்கப்படின் நாளடைவில் அதன் நற்பயனாக அரசியலிலும், ஆங்கில அதிகாரிகள் நடாத்தும் தலைமைசான்றவிஷயங்களிலன்றி மற்ற எல்லாவற்றிலும் தேசபாஷை வழங்கப்படுதலும் ஸாத்யமாகும். அப்படியாகுங்கால் இப்போது எடுத்ததெல்லாம்இங்கிலீஷில்நடக்கும் ராஜாங்கநடவடிக்கைகள் தமக்கு ஒன்றுந்தெரியாததனால் நம் ஜனங்கள் அடையும் அயர்வும் மயர்வும், அவைகாரணமாக அவர்கள் நமது காருண்ய கவர்ன்மெண்டாருடைய நன்னோக்கங்களை முழுதும் உணரப்பெறாது பல்லாற்றாலும் தம்மைப் பட்டப்பகலில் ஏமாற்றிப் பணம்பறிக்கும் பற்பல போலியுத்யோகஸ்தர்களுக்குத் தம்பொருளைத் தாமே வீணில் வலியக்கொட்டியளப்பது மன்றி, அவரைக்காணும்போதெல்லாம் கைகட்டி வாய்புதைத்து மெய்ந்நடுங்கி உற்றதுயரும் படிப்படியாகக் குறைவுபடுமென்பதும் திண்ணம். ஜனங்களும் தங்கள்நிலைமை உரிமை இவற்றை உள்ளபடி.

உணர்ந்துகொள்ளுவார்கள். இவ்வாறு தாய்மொழியில் உயர்தரக்கல்வி பயிற்றுதலாற் பொதுஜனங்களுக்குப் பற்பலவழியிலும் நன்மையே விளையும் என்பதில் ஐயமில்லை. பற்பல பகரவதென்? சரித்ர ஆராய்ச்சி மட்டில் தொன்மைக்காலந்தொட்டு எந்தநாட்டிலும் எக்காலத்திலும், தாய்ப்பாஷைமூலமாகவன்றிக் கல்விச்செல்வம் நிரந்தரப்பெருவாழ்வுற்றதில்லை என்பது அறிஞர்கட்கெல்லாம் ஒப்பமுடிந்ததே.

இதுபற்றியே நம்நாட்டுப்பிரமுகர்களிற் சிலர் இவ்விஷயத்தில் இப்போது ஊக்கங்காட்டிவருகிறார்கள். 3 மாதத்திற்குமுன் இதைப் பற்றித் துரைத்தனத்தார் ஆலோசனைபுரியவேண்டுமென்று, ராஜப்ரதிநிதியவர்களுடைய சட்டநிரூபணசபையில் நமது சென்னைமாகாண பரதிநிதியாகிய கனம் ராமராயணிங்கார் அவர்களால் வேண்டப்பட்டது. அச்சபையிலுள்ள சில கனவான்கள் அப்போது அதற்கு எதிருரைகூறி அதனைமறுத்தபோதிலும், மற்றுஞ்சிலர் நேருரைகூறி அதன்பயனை விளக்கிக்காட்டினார்கள். இறுதியில் அப்பேரவையிற் கல்வியதிகாரியாகிய கனம் ஸர் ஹார்கோர்ட்பட்லர் அவர்கள் இவ்விஷயம் நிகழும் ஐரோப்பியப்பெரும்போர் முடிவுறும்வரை நிறுத்திவைக்கப்பெறும் என்றும், அதன்பின்னர் இந்தியாவிலுள்ள உள்நாட்டு மாகாண அதிகாரிகளுடையயோசனை இந்தவிஷயத்தில் விசாரித்தறியப்படுமென்றும் விடையளித்திருக்கின்றார்கள். ஆங்கிலேயராஜ்யம் அதிவிரைவில் இக்கொடும்போரில் வெற்றிபூண்டுவிளங்குமென்றும், இப்போது ராஜபரதிநிதியாரின் சீரவையிற் கல்வியிலாகாத்தலைமையாகிய அரும்பெறற்பதவிக்கு உயர்த்தப்பட்டிருக்கும் கனம் ஸர் ஸி. சங்கரநாயர் அவர்கள் இவ்விஷயத்திற் கவனஞ்செலுத்துவார்கள் என்றும் நாம் ஆவலுற்று எதிர்பார்ப்போமாக.

மற்றும் நமது சென்னை உயர்தரநீதிஸ்தலத்தில் நீதிபதியாய்விளங்குபவரும் கல்விவிஷயத்தில் மிக்க கவனஞ்செலுத்துபவரும் ஆகிய கனம் ஜஸ்டிஸ் டி. வி. சேஷகிரிஐயா அவர்கள் சின்னாட்குமுன் சென்னை ஹிந்துஹைஸ்கூலிற்கூடிய ஒருகூட்டத்தில் தலைமைவகித்தபோது தமதுபிரசங்கத்தில் இக்கருத்தைவெளியிட்டிருக்கிறார்கள். இவர்கள் இக்கருத்தைவெளியிட்டிருப்பதை 20—4—15-ல் சென்னைச் சுதேசமித்திரன்பத்திரிகை கீழ்க்குறித்துள்ளபடி பாராட்டித் தலைப்புவியாசம் எழுதியிருக்கிறது.

"தமிழ்ப்பாஷையை அபிவ்ருத்திசெய்ய பி.ஏ. பரீக்ஷைக்குத் தமிழ்ப்பாடங்கள் ஏற்படுத்துவதைக்கூட அவர் (கனம் ஜட்ஜி அவர்கள்) அவ்வளவுபெரிதாய் நினைக்கவில்லை. இம்மாகாண சக்கண்டரிஸ்கூல்களிற் பாஷைப்பாடங்கள் எல்லாதபாடங்களை தமிழிலேயே சொல்லிவைக்கப்படுவதற்கு வழியைத்தேட வேண்டுமென்றார்....... கவர்ன்மெண்டாரின் அநுமதியை (இவ்விஷயத்தில்) பெற, அவர்களுக்கு . பொதுஜனங்களும் பெற்றோர்களும் விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டுமென்றார். ......படித்த இந்தியர்கள் தேசபாஷைகளை விருத்திசெய்யவேண்டுமென்றுசொல்லுவார்களேதவிர அவைகளை இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோகும்படி விட்டுவிடவேண்டுமென்றுசொல்லமாட்டார்கள். ஆனால் அவர்கள் தேசபாஷைகளை விருத்திசெய்யவேண்டுமென்று சொல்லுகிறபடியே விருத்திசெய்துகாட்டுவார்களோ என்றால், தாங்களே முன்னுக்குவந்து விருத்திசெய்துகாட்டப் பலருக்குச் சௌகரியங்கள் இருப்பதில்லை, சமயங்களவாய்ப்பதுமில்லை. தன்னலமறுப்புக்காட்டி வேலைசெய்யக்கூடியசிலருக்கே சௌகரியங்களிருக்கும், சமயமும்வாய்க்கும். அப்படிப்பட்டவர்கள் முன்னுக்குவந்து வேலைசெய்யத்தலைப்படுவார்களானால் அக்கரைமட்டுமிருக்கச் சௌகரியங்களில்லாதவர்களும்,சமயங்கள்வாயாதவர்களும்அவர்களுக்கு உற்ற பின்பலமாக நிற்பார்கள்"

மற்றும் நமநாட்டிற் பலலாற்றாலும் முன்னுட்டத்தக்கவர்களாகிய கனம் ஸர் குருதாஸ்பானர்ஜி, ஜஸ்டிஸ் அஷுடோஷ்முக்கர்ஜி, ஸர் எஸ். ஸுப்ரமணிய ஐயர், ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர், ஸ்ரீமதி அனி பெஸண்ட் அம்மையார் முதலிய பெரியோர்களும் இந்த நோக்கத்தில் ஒருவாறு ஒற்றுமைப்பட்ட உள்ளக்கருத்துடையவர்களாகக்கொள்ளத் தடையில்லை. மேலும், சிறிதுகாலமாக நமநாட்டிற் பல உயர்தரப் பத்திரிகைகளும் இவ்விஷயத்தைப் பரிசீலனைசெய்துவருகின்றன. நானறிந்தவரையில், கல்கத்தா மாடர்ன் ரிவ்யூ, சென்னை எட்யுகேஷனல் ரிவ்யூ, மதுரைச் செந்தமிழ், சென்னைச் சுதேசமித்திரன் இப்பத்திரிகைகளில் இவ்விஷயத்திற்கு அநுகூலமாக நிருபநேயர்கள் விஷயம் எழுதி விரித்துள்ளவியாசங்கள் வெளிப்போந்துள்ளன.

இவையெல்லாம் நாம் இப்போது எடுத்துக்கொண்டிருக்கும் நற்கருமத்தின் முற்குறியாகக்கொள்ளற்பாலன எனினும் காரியசித்தி பெறுவது நம்முடைய விடாமுயற்சியையும் ஊக்கத்தையும் பொறுத்திருக்கிறது. இம்முறையை அநுஷ்டானத்திற்குக் கொண்டுவருவதில் தொடக்கத்தில் எத்துணையோ இடையூறுகளும் இன்னல்களும் ஏற்படத்தான்செய்யும். இம்முறையை எவ்வாறு படிப்படியாக

அநுஷ்டானத்துக்குக் கொண்டுவருவது என்னும் விஷயந்தானே ஒரு உபந்யாசத்துக்கிடந்தரத்தக்கதாகலின் அதனை விரிவஞ்சி இங்கேவிளக்காதுவிடுக்கின்றேன். ப்ரஸ்தாபவிஷயத்தை அநுஷ்டானமுறையாகச் செய்வது அஸாத்யமில்லையென்பது பிறிதோரிடத்து இவ்வியாஸத்தில் வற்புறுத்திக் கூறப்பெற்றுள்ளது. இவ்வேற்பாட்டை அநுபவமுறையாக்கும் நன்முயற்சிக்கு ஏற்படக்கூடிய தடைகளையும், அவைபிறவாறத் தடுக்கும்வழிகளையும்பற்றி நம்நாட்டுப்பேரறிவாளர்கள் இடைவிடாது துரைத்தனத்தார்க்கு யோசனைகூறவேண்டும். இப்படி நாம் பற்பலவழிகளிலும் பாடுபடவேண்டும். தொடக்கத்தில் இம்முயற்சியாற் பலமுறை பயனுறாதுபோயினும் மீண்டும்மீண்டும் உழைப்பதே நம்கடன், உறுபயன்விளைதலைப்பற்றிக் கவலையடையவேண்டாமென்னும் பகவத்கீதையின் உபதேசத்திற்கிணங்க நம்மவர்களில் அறியாதார்க்கும் நம்மை அன்புடன் ஆட்சிபுரியும் ஆங்கில அரசாட்சியாளர்க்கும் இவ்விஷயத்தைப்பற்றி எப்போதும் எடுத்துரைப்பதே நம்கடமையாகக்கொள்ளவேண்டும். அப்படி நாம் உழைத்துவந்தால், தம்மோடு சிறிதும் ஸம்பந்தம்பெறாத காட்டுமுரட்டுஜாதியடிமைகளாகிய நீக்ரோவர்களை, அவர்களுடைய யஜமானர்களுக்குக் கோடிக்கணக்காகச் செம்பொன் விலைப்பணம்செலுத்திப்பெற்று, தொழும்பர்களுக்கு முழுச்சுதந்தரத்தையும் அன்புடன் அளித்தருளின நமது ஆங்கில ராஜாங்கத்தார் தம்ராஜ்யத்திற் சிறப்புற்றபாகமாகத்திகழும் நமதிந்தியாவின் கல்வியபிவிருத்தியின்பொருட்டு நமக்கு நாளநாளும் நன்மை தரத்தக்க இவ்வேற்பாட்டினைச்செய்துதவப் பின்வாங்குவார்களா?—ஒருபோதும் மாட்டார்கள். பிரஜைகளிடத்துப் பேரன்பும் கூரறிவுமுடைய மாட்சிமையோங்குநம் மன்னர்சிகாமணியாகிய ஐந்தாம்ஜார்ஜ் அரசபிரான் நமது வித்யாபிவிருத்தியில் மிக்க அநுதாபங்கொண்டிருக்கிறார் என்பதும் யாமனைவரும் நன்கறிந்ததன்றே. நமது முயற்சிமாத்ரம் சோர்வுபடாதிருக்குமேல், இத்துணைப்புறச்சாதனங்களுஞ் சேர்ந்து திருவினையாக்குமென்பது திண்ணம் திண்ணம், மும்முறையுந்திண்ணம். இந்நன்னோக்கம் ஈடேறுமாறு திருவருள்புரிக.

சங்கத்திறையவராய்ச்சங்கத்தமிழ்காத்து
துங்கஅகப்பொருளுந்தோற்றுவித்துப்—பொங்குபுகழ்ப்
பாண்டியனாடாள்பரமன்சொக்கேசனைநாம்
வேண்டித்துதிப்போம்விழைந்து

வே. முத்துஸாமி ஐயர் எம். ஏ. எல். டி.

# " சொற்பொருட்காரணம் "

———(o)———

**நேரிசையாசிரியப்பா.**

*தமிழ்க்கோனாளும்தவஞ்செய்துசெய்தூங்*
*கமிழ்தெனவுண்ணுமஅருமபுலவீர்காள்*
*ஒவ்வோாசொலலினஒளிர்முதனிலையைச*
*செவ்வனமோரிலதிகழுமகாரணம*
*வரையினைக்கலலிமணிபெறலெளிதாம*
*உரையினைககலலியுணர்வதோஅரிதே*
*மறறதுகல்லின்வறப்பினும்வறககும*
*சொற்றொறுங்காரணம்தோன்றுதிருநதில*
*கலலினைவலலேகல்லுதலாகும*
*சொல்லினைககல்லப்பலலவாமநாளகள*
*பலலவாயினுமபபெயன*
*எல்லையிலலவா மஇன்பமுமபெரிதே.*

(க) ஆமபல = யானை.

ஆமபலென்னுமசொலலுககு யானையெனனுமபொருள் எவ்வாறு வநததெனின ஆமபலெனபது இசையாதலாலும யானை இசைககு மகிழநது அடஙகும இயல்பினதாதலாலும அசசமபநதமபறறி ஆமபலென்னுமசொலலுககு யானையென்னுமபொருளவநதது. யானையை புணர்ததும வழுவையெனனுமசொலலுககும இபபொருளேயாம.

வளுவை வழுவையாயிறறு. வள் = இசை; வை பெயர்விகுதி.

வெண்கரிவணககியரிகரில்யாழ்தழுவி
மலருமின்னிசையெழுப்புவாமேனிலமகளிர்"
(**தணிகைப்புராணம். நகரப்படலம்.**)

என்பதால் தெளிக.

வழுதி = பாண்டியன்; வளுதி—வழுதி.
வள் = இசை; தி பெயர்விகுதி.
தமிழிசைகேட்டுமகிழ்வோனென்பது பொருள்.
வண்டு = இன்னிசைசெய்வது. வள் + து.
வண்டு சங்குமாம்.

(உ) கடிவை=யானை.

யானைக்கு மதநாற்றமிருத்தலால் அதற்குக் கடிவை என்னும் பெயர்வந்தது.

கடி=மதநாற்றம். வை—விகுதி.

"விலக்கருங்கரிமதம்வேங்கைநாறுவ" (க—ராமாயணம்.)

கவுளென்பது யானைக்கதுப்பையும் யானைமதம்பாயுமிடத்தையும் தீநாற்றத்தையும் உணர்த்திநிற்கும். யானைமதம் தீநாற்றமுடையது. கவுல் கவுளாயிற்று.

(ங). யானை.

யானைக்கு ஞாபகசக்தியிருத்தலால் அதற்கு அப்பெயர்வந்தது. ஞாபகசக்தியாவது மறவாமை. தலைமாணாக்கருக்கு இக்குணம் ஆவசியகமாதலால் யானையை அவர்க்கு உவமைகூறுவர். ஆனை யானையாயிற்று. ஆனம் ஆனையாயிற்று. *ஆனம்=அறிவு, நினைவு.

(ச) ஐயவி=கடுகு.

ஆயாவி ஐயவியாயிற்று.

ஆயாவி—அய்யவி—ஐயவி.

ஆயாவி—ஆவாலு=கடுகு. (தெலுங்கு.)

பதார்த்தங்களுக்கு மணந்தருவதென்பது பொருள்.

ஆ+யாவி. ஆ—உபசர்க்கம் ஆமுட்டி என்பதுபோல. ஆவி—யாவி.

ஆவி=மணம். நாவி—ஆவி. ஒற்றின்றீக்கமென்னும் இலக்கணம். நாவி=கத்தூரி.

(ரு) வெல்லம்.

வேலம் வெல்லமாயிற்று. வேலம்=கரும்பு. கருப்பஞ்சாற்று லாவதென்பது பொருள்.

வேலம்—வேலை=கரும்பு. வேல—வேலம். மூங்கிலினமென்பது. வேல=மூங்கில்.

வேலம்—வேளம்—வேழம்=மூங்கில், கரும்பு, கொறுக்கை, நாணல்.

---

* மொழிநூல் இலக்கணவியல் கஉச-ம் பக்கம்பார்க்க.

(௬) விருந்து.

வில்லினாற்பொருது வெற்றிகொண்டவீரனுக்கு அரசன்செய்விக்கும் நலவுண்டி.

வில—விருந்து. து— பெயர்விகுதி. இம்மரியாதை முதன்முதல் வீரர்தம்குழாத்தினின்றுதான் உண்டாயது.

(௭) கச்சேரி.

மணிப்பிசையால் அறிந்து நீதிநடாத்துமிடமென்பது பொருள். கச்சம்=மணி.

"ஆடுநெடைமணிநாவசையாமல் அகிலமெங்கும்
நீடுங்குடையைத்தரித்தபிரான"

என்பதால் தெளிக. கச்சி என்பதற்கும் அப்பொருளே. கச்சி=காஞ்சிபுரம்.

(௮) கந்தை=கிழிந்ததுணி.

வீரர்கள் சண்டைசெய்யுங்கால் அவர்தம்மார்ச்சட்டையை அம்பு துளைத்துக்கொண்டு உருவிப்போதலின் அத்தகையசட்டைக்கே கந்தையென்றுபெயர்.

காண்டம்—கண்டை—கந்தை.

காண்டம்=அம்பு. மூங்கிலாலாயது.

காண்டம்—கந்தல்.

பக்கம் பக்கல் என்பதுபோல ஈற்றில் லகரமெய்பெற்றது.

(௯) பிழை=குற்றம்.

கள்ளுண்பதாலாவதென்பது பொருள்.

பிழி பிழையாயிற்று.

பில—பிளி—பிழி=கள். உள்ளிருந்துகசிவது. பில்=உட்டுளை.

பிழி—பிழிதல=உள்ளிருந்து சாரமிறக்கல்.

பிழை—பிழைத்தல=பிழைசெய்தல்.

பில்—பிளிறு=சேறு. உள்ளிழுப்பது.

(கo) தொடீவு=உணவு.

கையினுல உழநதுண்பதென்பது பொருள்.

தோள்—தொடீவு. தோள்=கை.

"இரவார்இரப்பார்க்கொன்றீவாரகரவாது
கைசெய்தூண்மாலேயவா"

(கக) நெருப்பு.

நெல—நெருப்பு மூங்கிலிலுண்டாவதென்பது.

நெல=மூங்கில்.

நெல்வேலி=வேணுவனம.

நெல—

க—மூங்கில்

உ—தானியம. மூங்கிலினமென்பது.

(கஉ) இயம்=இசை.

"நரமபியலசுருதிபாடலஇயதமொடுபடிந்துநண்ணித்
திரமபயினடனமூன்றும்செவ்விதிற்புரியலுற்ருர்"

(காந்தம் அசுரகாண்டம்)

பலலியம். உ-பதம். பல+இயம.

இயம—இயவு=புகழ். இசையாலாவது.

இயம—இயமபு—இயமபல=இசைததல.

இசம இயமாயிறறு. சகரம் யகரமாகும்

இசை இசமென்பதன் திரிபு.

இசம—ஏசம=வெண்கலம. இனிதிசைப்பது.

இயம—ஐயம=பிசசை. இசைபாடி இரப்பது.

ஐகார ஈற்றுசசொற்கள், ஓர்காலதது மகர ஈற்றுச்சொற்களாக இருநதனவெனக் கொள்ளவேண்டும.

(கங) பில்=மூளை, கருப்பம்.

பில்—பீர்=முலேப்பால. கருத்தரிப்பதாலாவது.

பீரம= ,,

"பீரம்பேணிற்பாரந்தாங்கும்"

பீர்—பீரித்தல்—பீச்சல்.

பீர்—பிரை = ஓர் பிரளவாக்கியமோரத்துளி.

"பிரையிடமோரொடு"

பில—பீனம்:—

க—பருமை. கருவளர்ச்சியாலாவது

உ—பாசி நீரிலுண்டாவது.

பீனம் ஆண்குறியுமாம். கருவுண்டாக்குவதென்பது

பில—பீன் = கருப்பம்

பீனா = சனனுக்கூசம். (பாளி)

பீடா—பீடை.

பீள்—பீட்டை = பயிரிளங்கதிர்

பில்—பில்ல = குழந்தை. (தெலு)

பில்லக = குழந்தை, விலங்கின்பிள்ளை.

பில—பிள்ளை. (பாளி)

(கச) புளம் = கடல், நதி, நீர்.

மரம் நீரிற் கிடந்தமையாற் புளபுளெனப்போயிற்று.

புளம்—புழ = நதி. (மலையாளம்)

புளம்—புடம் = பூமி. கடல்சூழ்ந்தது

புடை = இடம். பூமிசம்பந்தமானது.

புடங்கு = பக்கம்

புடம்—புடவி = பூமி. வி விகுதி.

புடம்—புணம் = நீர்.

டகரம் ணகரமாகும்.

புணம்—புணல்—புனல் = நீர்.

ரி = கடல்.

புணம்—புணை = தெப்பம். கடல்

புணல்—புணர்தம்—புனர்தம் = புனர்ப்பூசம். சலராசிக்குரியது.

புணர்தம்—புணர்தை = பூசம். கடகம் சலராசி. ,,

புளமென்பதற்கும் ஓர் முதற்சொல உள்ளது.

பில் " " "

(கரு) குளம=முளை, இளமை, தளிர் முதலியன.

குளமான்=ஆட்டிளங்குட்டி.

"குட்டியும் குளமானும"

குளம்—குழ=இளமை. குழவு=இளமை குளி=குழந்தை.

குளிகுளித்தல்=மகப்பேறு

குழவி=குழந்தை.

குழந்தை=இளமபிள்ளை

குழகு=இளமை

குழகு—கொடுகு=பிள்ளை. (தெலுங்கு)

குளிநதியமமை

குளிகன=சனியின்பிள்ளை.

(கசா) குளம=தளிர்.

குளம—குளகு=இலை.

"மறிகுளகுண்டனன மன்றுமகிழ்ச்சி"

குளம—குழை=தளிர்.

(கஎ) குளம=திரட்சி, வட்டம்.

குளம—குழவி=அம்மிக்குழவி. திரண்டிருப்பது.

குளம—குழை=குண்டலம.

" கூழை=திரட்சி. கூழைப்பலா.

" குழங்கல=திரண்டமாலை.

"குழங்கலவேட்டுவககோதையராடலும்"

(கஅ) கருவை=முளை.

கரு+வை. கரு=முளை. வை விகுதி.

கருப்பொருள்; கருக்காய்.

கால்—கரு. கால=முளை.

"கருவையார்வயற்சங்குசேர்கலிக்காழியே" (ச—தே)

(௧௯) ஏ=அம்பு.

ஏவு:—

க—அமபு.
உ—வருததம—அமபினலாவது.

ஏவம=வருத்தம.
ஏவு—எவ்வி=அரசன். அமபிலவலலவன். வேளெவ்வி.
ஏமாறல=ஒருவர்க்கொருவா அமபினைமாறிவிடுதல.
ஏமாற்றல=அமபெயயும் திறத்தினல மயககுதல.
எதது=அம்பெய்யும உபாயம.
ஏ—எய்=முடபன்றி.
எய்—எயில=மதில. அமபு எய்தற்கிடமாவது.
எயின்=வேடசசாதி.
ஏயா=படைததலைவர்.
ஏயாகோன்கலிககாமநாயனர்

(௨௦) எருவை.

எரு+வை எரு=சிவபபு வை—விகுதி.
எருபு=சிவபபு. (தெலுஙகு) பு. விகுதி.

எருவை.—

க—சிவப்பு.
உ—உதிரம—சிவந்தது.
௩—போாககளம்—செங்களம.
௪—யானை—செங்களததிற போர்புரிவது.
௫—கழுகு—செஙகளததிற்சூழவது.
௬—கழுதை—பொருதபின் உழுதற்குரியது.

(௨௧)

ஏனதி·—

க—படைததலைவன.
உ—மநதிரி—படையிற சூழ்சசிகூறுவோன்
௩—மறவன்.
௪—நாவிதன்-சைனியததிலமாததிரம தொழிலசெய்வோன்.

மற்றும மொழி நூலால அறிநதுகொள்க

இஙஙனம,
மாகறல். கார்த்திகேயமுதலியார்,
கெண்டி, சென்னை

# ராமசரிதப்பாட்டு. (மலையாளகாவியம்)

ராமசரிதப்பாட்டு என்னும் ஒரு சிறந்த மலையாளகாவியம் மலையாளதலைதயாண்ட ஓரரசனாலியற்றப்பட்டதென்று சொல்லுகிறார்கள். அதற்கிணங்க, அவர்குலதெய்வமாகிய பதமநாபனவிஷயமாகக் கடவுள் வாழ்ததுப பாடப்படடிருக்கிறது. இக்காவியம், இதுகாறுங்கண்டவற்றுள மலையாளபாஷையிற் பழமையானதாயிருக்கிறது. இதனுடைய காலம் இதுவரை வரையறுக்கப்படவில்லை. பாஷையையுற்றுநோக்கும்பொழுது மிகப்பழமையுடையதெனறேவிளங்கும்; அதாவது, 400 500 வருடங்கட்கு முற்பட்டதெனலாமென்று தோன்றுகின்றது. இக்காவியம் படலம்படலமாகவகுக்கப்பெற்று, ஒவ்வொருபடலமும் 10, 11, 12 பாட்டுக்களுடையனவாய, பலவிருத்தங்களினுமயாக்கப்பெற்று, அந்தாதித்தொடையாயியற்றப்பட்டுள்ளது. இஃதைத தமிழ்க்காவியமோ மலையாளகாவியமோவென்று நிரணயிக்கவியலாது. சிற்சில பிரயோகங்கள் மலையாளத்தையொத்திருப்பினும், இயற்றப்பெற்றநாட்டைக்கொண்டுமே இது மலையாளகாவியமெனனவேண்டுமேயன்றி உற்றுநோக்கின முற்றும் தமிழாதல் தெற்றெனவிளங்கும். இதனையே மலையாளத்தார் மலையாளபாஷையெனகிறார்கள். மலையாளமென்னொரு தனிப்பாஷையில்லையென்றும், அது பழந்தமிழேயென்றும் முன்னரே விளக்கியுள்ளேன். ஆதலாற் பின்னும எழுதுவ தனாவசியமென்று விடுத்து, அப்பாவில எடுத்துக்கொண்ட ராமசரிதத்திலிருந்து இரண்டு படலம்* தமிழேயர்கள படித்தறியுமவண்ணம் கொடுத்துள்ளேன். அதனை யவற்றானுணர்வாராக.

## I. கணபதிபடலம்.

கானனாங்களிலரன்களிறுமாயககரிணியாய
காலகிகையும(மை)தமபிலவிளையாடிநடநந(த)ன
ஞ(றா)னனமவடிவுள்ளான(னை)யுநவாயவதரித
தாதிமெய'ந லவிநாயகனென்னே(றோ)ரமலனே'

* இவை, பிரமமஸ்ரீ S பரமேசுவரையா எம. ஏ, பி எல, அவர்களால் பூதனமுதல பாஷாபோஷிணியெனனும் மலையாள மாசிகபத்திரிகையில் வெளியிடப்பட்டன அதினின்று இவ்விடத்திலெடுத்தெழுதப்பட்டன

† புள்ளியிட்ட எழுத்துக்களை அரைமாத்திரை குறைத்தொலிக்க.

ஞா(யா)னிதொன்னு(று)துனி(ணி?)யின்னதினென்மானதமென்னும்
நாளதாதன்னிலகிரந்தரமிருநதருள்தேரிந
தூனமற்றறிவெனககுவந்நு(து)திக்குமவண்ணமே
ஊழியேழினும்நிற(றை)ந்தமற(றை)ஞ்ஞானப்பொருளே' (1)

ஞானமென்கலவிளயி(ளவி)சகுதெளியி(வி)சசினியசொல்
நாயிகே'பரவ(வை)யிலதிர(ரைகளநேருடனுடன்
தேனுலாவினபதங்களவநு(து)திங்ஙிநியதம
சேதயிலதுடாந்நு(து)தோன்னு(று)மவண்ணமின்னு(று)முதலாய்
ஊனமறறெழுமிராமசரிததிலொருதெல
ஊழியிலசெ(சி)றியவாககறியுமாறுர(ரை)செய்வான்
ஞா(யா)னுட ககினதினேணநயனே!நடமிடென்
னுவிலிசச(சை)யொடுவசச(வைதத)டியிண(ணே)ககமலதார். (2)

தாரிணஙகினதழைகுழலமலாததயய(தைய)லமுலேத
தாவளததிலிள(ளே)கொளளுமரவிந்தநயநா'
ஆரணங்களிலெங்ஙு(கு)மபரமயோகிகளுழந்
நா(தா)லுமெனனு(று)மறிவானரியஞானபொருளே'
மாரிவநததினு(தினுககு)மாமல(லே)யெடுததுதடயும(தடையும)
மாயனே'அரசாணுயகிசிராதிபதியெ(யை)
போரிலநீமுடனமமுடிததம(மை)யெடுததுர(ரை)செய்வான்
போகிபோகசயனு'கவியெனககருளசெயயே' (3)

அருவ'பாதியுருவாயபரனே'சரணதா
ரககு நநதுகொடுத(ச)நததமகின(னே)நதுகொள்ளுவோாக
கரியவெனபிறவியாமதுயரறுததுகள(ளே)வோ
ரசுரநாசகரனே'விசயனவிலதுடியிஞல
திருவுடமபுட(டை)யுமாறற(றை)ஞ்ஞு(ச)வனனபிமதம
தெளுதெளுபபிலவிள(ளே)யி(வி)சசுதெளியி(வி)சசிவனே'
அரசனுகிமதுசூதனனிராவணனெ(னே)வென
ன(ற)வ(வை)யெனககுபுகழ்வானவழிவரமதநந(த)ருளே' (4)

வழியெனககுபிழ(ழை)யாதெ(த)வண்ணமுற்றருள்செய்யேன்
மனககுநநதிலிள(ளே)நொண்டுபுனலகொணடுவடிவாண
டழுநந(த)கொணடலபதறமெநறிதழ(ழை)ததக்குழலி'
யிளமதிககுதுயாபொஙகி(கி)விள(ளே)யி(வி)ககுமநுதலி'
சுழலகினன(ற)கிலமோாமவணஙகி(=ங=கு)னன(=கினற)கழலி'
துகிலபுலிததோலி(ல)கொளளுநந(=கினற)ரனு(=ககு)தெல(?)
டழிவுவநந(த)மலாவிலவெழுமஙகனனெ(னே)யவ [கண்ணிடபெ(ப)ட்
வளவுதோறறினபெரி(பெரு?)பபமுளளவைபபின்(வெர்பபின்?)ம
[கனே' • (5)

மகரகேதனனுடை(டைய)சனகனுயர்மகனுய்
வாருமெங்கள்மறிமாயன்மணிமார்வ்வீளி(ளை)கொண்
டகிலலோகங்ங(க)ளிலுமநிற(றை)ஞநு(நது)நின்னருளுவோ
ரமலகோமளபயோதிதநயே' அரசனுய்
செ(ச)கங்ங(க)ளேழுமுலயிக்குமங்நிசாசரவரன
சிரங்ங(க)ள்பததுமங்ங(க) றுததமனுவீரசரிதம
புகலுமென்னெ(னை)யுனனிநோககியருளவாககுட(டை)யவேல
(பெருவு?)சேவிடஞஞி(டைஞு?)புனறினகட(டை)ககணமுன
(னை)யால. (6)

இடஞ்ஞு(டைஞு)தானவரெ(ரை)வேரறமுடிககுமடலவன
பியலுமிநதிரனுமஙகியமனுமநிருதியும
குடிலவாரிபதிவாயுவளகேசனரனும
குளு(ளி)ரகிலாமதிவெய்யோனுமுராகாதிபதியும
வடிவுசேரவனிமாதுமயனுமவிண்ணவரும
மகிழுநாசினியுமமுககண்ணாகனலககண்ணிலெழும
கொடியவைரவியுமானனங்களாறுளளவனும
குது(சு)மவா(பா)ணனுமெனககுதுண(ணை)யாகபிதினே. (7)

துண(ணை)யெனகநிதினுமிககவருமுளககனமறச
சுறுங்ஙி(கி)ஞோரகுதியெனன(று)றிஞ்ஞு(நது)நலலவரெல்லாம
பணியிதகுகிவனெனககுருதிஞெய்யவாகளோ
பக(கை)யராவதினபபபரென்ஞெடொபபமுட(டை)யோா. (8)

மேத(தை)நலகுககவீநதிரரிலமுனபுட(டை)யவான்
மீநியுமபினனே(னை)வியாதனுமெனி(ன)ககதிகமாய்
வேதவிததுநலைததியஞெரோபதங்ங(க)ளெ(ளை)
வேரிதழுகனெதமிழுககவிபட(டை)ததமுனியும
ஓத(தை)யிலததுபிலுமணணலவிண்ணுளாாபுகழுவே
ஊழியிலதெ(த)பரதனதநயனுயவதரித
தாதிகாலமுள்ளரி(நு)நதொழில்களாிககவெ(வை)கழுஞு
ஞாழி(சாழி)மானிவியெ(யை)மீண்டபடிகூறுவதினுப. (9)

ஆழிமாதினெ(னை)நிசாசரவரனகவாநந(து)சொண்
டாடிமாதங்ங(க)ளவருமுன்னமமறநதவழியே
ஊழிமீதுநடந்ந(த)நநு(று)கபிமனனனுறவா
யோடிநாடுகெனவேயரிகளநாலுதிச(சை)யும
சீழுமமேலுமவினவின்னளவிலவாயுதநயன
கேடில்லாதமதியோடுதிர(ரை)யாழிகடந்ந(த)ம
மாழு(ழை)நீணவிழியெ(யை)மதிவியே(யை)நேடியோரிரா
வானபுன(னை)நதவ(வை)யுர(ரை)பபதினரிபபமெங்களால. (10)

மான்புன(னை)ந்தவனண(ணை)ந்தறிஞுளங்குலியவும(யும்)
மால(லை)வார்குழலிலேறும்மணிகைககொள்ளும்முன்னே
வேலபொருநந(கின்ற)மி(வி)ழியாள்கருநலகியப்போபொழுதிலே
மேதில(யில)வீழ்நதடிபணிநதுவிட(டை)யுமதொழுதுபோய்
சேல்பொருநதுமரிவீரனல(லை)யாழிகடநந(த)த
தீரமெய்தியிருநநொ(தொ)ணகபிகள்சூழ்நதினியபைம
பாலபொருந்துமமொழியாலமொழிந்தனன்தொழுதெல்லாம
பார்மன்னன்தன்னுடைமதிவிபுடெ(டை)சரிதமே' (11)

---

## 2. ராவணபிரலாபபடலம்.

உரைதததுகேடடநேரமஉயிர்பிரிந்தவரைப்போலே
கருததுகேடட(டை)யனுகிககணபுனல்கனமசொரிநது
குருததத(ச)நதாபததோடேகொடுபபமபொழுதுகைவிட
டரக்கர்கோனுடலமொகசெயல(லை)சகுமாறுலகிலவீழநதான்.(1)

வீழ்நதவனமோகமமெலரிமெலலெழுநதுணாநதிருநது
தாழ்நதவொண்கரங்களகொண்டுதாநதரமசிரஙகள்தாங்கி
சூழ்நதுநின்றரககருள்ளமதுல(லை)யுமாறிருவருமகீழ
வாழ்நதமைபுலம்பிமேன்மேலழகு(கி)தாயுர(ரை)ககபபுக்கான்.(2)

உரைப்புகள்ததொழில்களெலலாமொன்றுநானறிகவல்லேன்
தரிப்பெழுமியககாசிததாதானவர்வானோர்வேநதர்
ஒருததராரிவரிலநின்னோடோடுவதொழிநதுபோரில
கருததராய்நினறுபிாததோாகழிநதநாளாககாவீரா' (3)

வீரர்போரிடவணங்குமவீரனே'குலிசமேறருன்
தீரத(தை)பெருகுமமாறறாதிறமறயடககுமநின்னெ(னை)
போரிடயிராமணமபாலபலசகலஙகளாகென்
னுரிதுசாபமிட்டோரரககர்தன்குலககொழுநதே! (4)

அரக்கர்தன்குலததினுள்க்கேடுதிககவுமவருத்திவானோர்
புரததினும்முனிவாகருமபோாபுணாததமன்னவர்ககுமெல்லாம்
ஓரிக்கவுமவருததிநீபோயொளிசசு(ச)தெததிச(சை)யிலமற்று
ரொருத்தரித்தரமிரி(ரு)ப்போருடப்பிறப்புலவியுள்ளோர்? (5)

உலவியென்னு(று)டலிலிலலாஉர(ரை)பெறுமநகரிலில்லா
இவிடெமைதிலியிருநதுமினியொருகருமமிலலா
சிவ!சிவ!வெறுபபவநதும்செமமேநினமுடிவிஞமே
அவனியேழிரணடினுமஞா(யா)னதிபதியாயிதெனறும (6)

என்றுமேயறியவலலேனிம(மை)யவாநிமிாததுமா்ததும
வெனறிசோபற(றை)யைாநதுமமேதில(யில)நீவீழுவதினமுன்
இன்றெனககிடாமுழுததுமிலஙக(கை)யிலமுறைறநிலைறநதும
வன்றிதுமாறறாகூபபுமவனபெழுமாமருதோளா! (7)

மேருமாமல(லை)துளஙகவிளங்கினகரங்களதங்கும
சூராகோனிராமஞேடுதுடஙகினபக(கை)விடென று
வீரனுமளயிரநதாலவிபிழ(ஷ)ணனவனகலைகவிட
டாருமுறறவருமீனறியாயினேன்னுலகிலினறே. (8)

இன்றுஞா(யா)னிராமனதனனெ(னை)யிள(ளை)யவன்ஞேடுமேகூட
கொன்றுதினறரிகுலததே(தை)குதாநதுபோாககளததிலவீழ்தநி
சென்றுபோாகிடைததுவாமோாதிறவுமொடடினியடககி
யென்றியேனிலலாகண்ணீராாக்குமிநகரியெனறுன. (9)

நகரிதனகணணினீரைரநலமெழததுட(டை)யக்கின்றேனஞா(யா)
னிகலிலநினறினியெனறெலலாமிராவணனியசச(சயைதத)கசே
முகிலொலிபதறுமசொலலாலமுனிநதவன்தனயன்மாரிலத [ட்டு
திகபதமுட(டை)யனுயதிரிசிராவிதுமொழிநதான. (10)

மன்னனே!விரிஞசன்தநதான்வரஙகள்நீயிரநதவெலலாம
முன்னமேதேருமவிலலுமமுரஙகிளாகவசததோடே [னெனறு
பின்னேநின்னுட(டை)வாள்தநதான்பிற(றை)யணிசட(டை)யோ
லெனனதுகுற(றை)வுசெலவானிராமனெ(னை)யிகலிலய்யா? (11)

து. அ. கோபிநாதராவ், எம். ஏ.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்

## பதினன்காம்வருஷோத்ஸவ மங்கலவாழ்த்து.

---

பூமகளும்பாமகளும்பொற்பினொடுவந்துறையும
தேமலிசெஞ்சோதிதினமொளிரும்—காமலியும

நான்மாடக்கூடலெனநண்ணுபெயர்பூண்டமஞ்ஞை
யான்மாடக்கோடியணிநகரிற—சேன்மலிதன்

சக்குவினாலநோக்கித்தன்குஞ்சுகளின்தாபத்தை
யக்கணமேதீர்க்குமதுங்காத்தித—தொக்கதளப

பங்கயத்தோன் அண்டத்துப்பலவுயிருமபார்த்தளிக்கும
அங்கயற்கண் அம்மையபிராமி—செங்கையிடம

ானேந்துமாசன்மனத்தேயெழுதிவைத்தத
தானேர்ந்துபார்க்குமுயிர்தங்குசித்ரம—தேனேந்தும

செந்தமிழினாராய்ந்துதேர்ந்தசுவைநற்றொழுமபர்
புந்தியெனுங்கோயிலுககோர்பொற்றீபம—சிந்திக்கும

காலத்தொடுகற்பனையுங்கடந்தகரு
பூலத்திறைவனவைத்தவொண்ணிதியம—சீலத்துப

பாண்டியர்கள்முன்சேரசோழர்களிறபனனலமும்
ஈண்டியேயேற்றமுறவெண்ணித்தாம்—நீண்டபல

ாளுமபுரிந்தத்தவநற்பயனாவிவ்வுலகை
ாளுமலையத்துவசற்கற்புதன்சேர்—வேள்வியினிற்

பெண்மகவாய்வந்துதித்துபபெட்பினுடனேயிந்த
மண்மகிழத்தூயோாமனநதெளியத—திண்மையுறுஞ

சைவந்தழைக்கத்தமிழ்தழைக்கவிவ்வுலகிற
றெய்வமிலதென்பார்திடுக்கடையத்—துய்ய

மறைவிளங்கவானமமழைவழங்கப்பாவின்
றுறைவிளங்கநன்னீதிதோன்ற—அறநெறியாற்

பூமண்டலமுழுதும்போற்றிப்புரிபோரிற்
கோமன்றவேவிஜயங்கொண்டுபுகுந—தேமசபைப்

பெம்மான்கருணைப்பெருமான்ஒருமான்கை
அம்மான்கயிலையடைந்தவறகண்—டம்மா

)வன்கணவனென்னவெள்கியேதத்தியினிதே
சிவன்கருதியேற்கமணஞ்செய்து—கவின்கொள்

முடிகவித்துத்தன்னரசுமுற்றுங்கொடுத்துக்
கடிமிகுந்தெண்மாதிரமுங்காத்துப்—படிபுகழ

உக்கிரபாண்டியனையீன்றிவ்வுலகாளத்
தக்கவவற்கரசுதந்திடலும—அக்குரிசில

தானுமவனகுலமுநதக்கபரிசேயினிய
தேனுமுயாபாகுமின்பதெள்ளமுதும—மானுகின்ற

முததமிழசசங்கததைமுறையேமதுரையெனும
இததலததேதாமவளர்ததவேற்றமபோல—அததகவே

யுககிரபாண்டியனென்றோதுமபெயாபடைததோன்
மிககபுகழ்மாமுகவைவேநதெனுஞசீர்—தொககதிறன்

மாமுததுராமலிங்கசேதுபதிமன்னனொடு
சேமததுமுன்னுதிததசீதரனும—போமிகக

மாலபொன்னுசசாமிவேரோதயனறனசெமமலாய்
நூலமன்னுபலவிஷயநுண்மையுஞசேர்—பாலமனனும

பன்னூறறிரடடளிததபாணடிததுரைககுரிசில
பன்னூற்றின்மேலாமபரன்கோயில—தனனூடு

தோன்றிமிகுமஅன்பினற்றோததிரிததுககண்டுபணிந
தேன்றவகைகோடிசெமபொனாநதுவநதே—யானற

பலகலையுநதோநதுபரிநிகுலமோஙக
நிலமதனிலவநதநிருபன—நிலவுபுனை

காளையார்கோவிற்கடவுடகுவெள்ளியிற்செய்
காளையாமலர்திதநதகாவலவேள—நீளுமிநதச

சங்கங்குழுமிடநதநதுவளர்இவவைஸ்கூல
துங்கமுடன்றோறறுவிததகோனறலாம—எங்கள்பிரான

பாறகரஸேதுபதியுதவிபெறறுவளத
தாறகவின்சோநானகாநதமிழசசஙகம—நூறகியையத

தாபிததுததானேதலைமைவகிததிருநது
தீபததைபபோலததினமவிளககிப்—பேர்பெற்ற

செந்தமிழ்பபாஷைசெழிககவளாததென்றனைநேர்
பநதியுறுமபலலோாபடிததறிவுற்—றிநதநிலை

யெய்துமபடியருளியின்பமுறககாததன்பின
செய்திங்கள்முமமழையாறசேமமுறுந—துய்ய

வளமபெருககிவேள்விவகைபெருககிபபததி
யுளமபெருககுஞ்சலவியறிவூக்கம—தளமபெருககும்

செமபிநாடென்னுநதிருததேவிவாண்முகமென்
றிமபர்அறிஞாசொலறகேற்பவே—பமபியசீர்

மன்னுமமுகவையெனுமமாராமநாதபுர
மன்னனருட்பாற்கரவேள்மைநதனென—நண்ணி

அருள்வலிமையாண்மையழகறிவுகல்வி
திருமலியுமாகைநண்புதிணசீர்—பெரிதுபடைத்த

தாஸேதிமாவரையுமஆடிப்புனிதமுற்றும்
மாஸேதுகாக்குமமசிபதிவண—தேசேயந்த

புலவரணைநாதறகுபபொற்புமிகுநதேரியற்றி
நலகியுவநதிலகாள்நாயகவேள்—பலசுகுண

வேநதனமதிவாணன்விறபனனமெய்ககீரபதி
சேநதனெனுநதீரனஜெகமபணிசீர்—வாய்நதுபல

பண்டிதாகள்பலகோடிபாடிபாரவுறுமபாக
கொணடுசுமநதோங்குபுயநகொறறவனகற—கண்டுநிகர்

மென்சொறகுளிரவிழைநதுரைககுமபாண்டியனென்
றன்சொறகுதவிசெயுஞசநதனுயா—இன்சொற

கவிமாலையநதாதிவாமிகழறகட
புவிராஜாபோறறபபுனைநதோன—கவிராஜர்

கண்டுவககுமபுநதிககடவுளமுததுராமலிங்கம
எணடிசைககுமதீபமெனவுதிததோன—தண்டமிழும

ஆரியமுமஆஙகிலமுமதோநதறிநதஆண்டகைநற்
சீரியநாவலரைததோனறன—சூரியனும

ஸ்ரீராஜராஜேஸ்வரனெனனுஞசேதுபதி
நேராயிசசங்கமநிலைபெறவே—பேராரும

அகராசனுதிபதியாகியினிதாதரிககும
இககாலததேழிரணடாணடினபினிறை—வுற்ற

வருஷோற்ஸவததிறசபைததலைமைவககும
புருஷோததமனொருவனபோதத—தெருளார்நத

யாவனெனஆராயநதவனிமுழுதாளும
காவலன்மெசசுங்கலைபல்தோ—நாவலனோ

இஙகிலாநதெனனுமஇறைநதனநகரததும
இஙகுலாஞசென்னைபினுமமற்றமுறறும—பங்கில்

உயாதரககலவியிறதோறநதோஙகுபலபட்டப
பொாபடைததுமேன்மைபெருககும—நயமார

திவானபகதூரெனனுஞசிறபபுமஉடன்பெற
றுவாமதிபோறறோன்றியுலகோா—தவாததவப

பேறுகிககலவிநலமபேணுஙகுணசகுன்றம
மாறுகககணிதபதிமாணபுபெறக—கூறுகின்ற

நாறகவிதோபண்டிதனையேராஜநமபியென்றா
பாறகவின்சோநாறபாஷைபண்டிதனும—மாறகுநிகர்

மேலோனையென்னபெயரால்விளம்புவது
நூலோரறிந்துநுவலுவார்—சீலமுடன்
பூமிக்கண்வந்தொளிரும்புங்கவனும்பொற்புமிகும்
சாமிக்கண்என்றபெயர்ச்சற்குணனை—நேமத்
துடனேதெரிந்தெழுத்திங்கோகைமிகமேலாந்
திடனுறிவ்வாசனத்துச்சேர்த்திக—கடல்போல
அளவிலாப்பலகலைதேர்ஆன்றவரைக்கூட்டி
உளமுலாந்தேனோஉரையின்—வளமலிந்த
செய்யபிரசங்கஞ்செய்வித்துக்காதலுடன்
துய்யவரிசையன்னார்சொற்களித்து—வையகத்தார்
கொண்டாடக்கொண்டாடிவாழ்வுசெய்தான்கொங்குமிக
வண்டாடுமுல்லைமலர்மாலிகையான—திண்டிறலும்
சந்ததியுஞ்சீருந்தயையும்புனிதமிகும்
செந்திருவும்இன்புஞ்செழித்துவளர்—புந்தியுடன்
நீடூழிவாழ்கநிரந்தரவக்ராசனத்தே
பீநீருஞ்சங்கம்பெரிதுபுரந்—தேடேறுஞ்
செந்தமிழும்இங்கிதனைத்தோபுலவோருங்குலமும்
சந்ததிகுமஜாராஜராசந்தாமோங்கச—சந்ததமும்
வாழியமேன்மேலுமமதுரைத்தமிழ்ச்சங்கம்
வாழிதோறூழியுயர்ந்து.

சுபம்.

இங்ஙனம்,

வி. திருஞானசம்பந்தம்பிள்ளை,

சேதுஸமஸ்தானம் மஹாராஜாஸ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிட்,

இராமநாதபுரம்.

# புத்தகமதிப்புரை.

1. **பகவத்கீதா:—(தமிழ்மொழிபெயர்ப்பும் விருத்தியுரையும்)** ஸர்வஸம்பிரதிபந்நமாயும், திரிமதபாஷ்யகாரர்களாலும் தத்தம தர்சனத்துக்கிணங்க வியாக்கியானங்கள்செய்யப்பெற்றதாயும், ஞானசாஸ்திரங்களிற்சிறந்ததாயும், பகவத்வாக்கியரூபமாயுமுள்ள கீதாசாஸ்திரத்தின்பெருமை இவ்வளவென்றுகணக்கிடமுடியாததென்பது யாவருமறிந்ததே. அது இப்பரதகண்டத்திற்றோன்றிப் பலலாயிரவருடங்களாகப் பலவேறுசமயத்தாராலும் பயிலப்பட்டுவருவதுமன்றிப் பலவேறுபாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு உலகமெங்கும்பரவிக்கொண்டுவருகின்றது. அம்முறையில் நந்தமிழ்மொழிக்கண்ணும் அது செய்யுள்வடிவாகச்செய்யப்பெற்றும், திரிமதபாஷ்யங்களின் மொழிபெயர்ப்பாக வசனநடையிலெழுதப்பட்டிருக்கிறது.

ஆயினும், அம்மொழிபெயர்ப்பிற்றோன்றாதபலபொருள்களும் நன்குதோன்றுமாறு, சிவநேசச்செல்வரும், இலங்கைஇராஜாங்கச்சட்டநிரூபணசபையின் அங்கத்தவரும், வடமொழிதென்மொழிகளில் வல்லவரும், லோகோபகாரசீலருமான கௌரவ **ஸ்ரீமான்-பொ. இராமநாதத்துரையவர்கள்** ஒவ்வொரு சுலோகவாக்கியங்களுக்கும் மொழிபெயர்ப்பும், அதற்கு வியாக்கியானரூபமான விருத்தியுரையும் தெளிவான தமிழ்நடையில் எல்லோரும் படிக்கும்படியெழுதப்பட்டு யாழ்ப்பாணத்து நாவலர்கோட்டம் **ஸ்ரீமத்-ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை**யவர்களால் நல்லகடிதத்திற் செவ்விதாய்ச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கிறது. இப்புத்தகத்துக்குக் கொழும்புநகரில்விளங்கும் மஹாமஹோபாத்தியாயர் **ஸ்ரீமத்-மு. ஸர்வேஶ்வரசர்மா** அவர்களால் வடமொழியிலெழுதப்பட்ட அணிந்துரையையும், அதன் தமிழ்மொழிபெயர்ப்பையும்நோக்குவார்க்குத் தத்துவஞானசாஸ்திரங்களின் சூக்ஷ்மார்த்ததர்சனங்களாலும்மேம்பட்ட துரையவர்களதுபெருமை நன்குவிளங்கும். இத்தகையபெருமைவாய்ந்தத்துரையவர்கள் "தாமின்புறுவதுலகின்புறக் கண்டு, காமுறுவர்கற்றறிந்தார்" என்னுங்குறளுக்கிலக்கியமாய், அவர்கள் அருமையாய் ஆராய்ந்துணர்ந்த நுணுகிய அரும்பொருள்களை எல்லோரும் எளிதிலுணருமாறு இப்புத்தகத்தையெழுதியுபகரித்தபேருதவிக்குத் தமிழுலகம் நன்றிபாராட்டக்கடமைப்பட்டுள்ளது. இதன்விலை ரூபா இரண்டு. வேண்டுவோர் பதிப்பித்தோர்க்கெழுதிப் பெறலாம்.

2. அரும்பொருட்டிரட்டு:—இது மதுரை நேட்டிவ்காலேஜின் தலைமைத்தமிழ்ப்பண்டிதர் மகா-௱-௱-ஸ்ரீ ம. கோபாலகிருஷ்ணையரவர்களால் இக்காலத்து ஆங்கிலகலாசாலைமாணவர்களுக்குத் தமிழ்கற்பிக்க விரும்பும்பாடபுத்தகங்களின் முறையைத்தழுவி யெழுதப்பட்டிருக்கிறது.

இதன் முற்பாகமாகச் சேர்க்கப்பெற்றிருக்கும்பாடல்கள் பலவும், அன்பு, நட்பு, நன்றியறிதல்முதலிய நற்குணங்களைமேற்கொண்டு பல சந்தர்ப்பங்களிற் றக்கோரைப்பற்றிப்பாடிய பாடல்களாகவும் மற்றுஞ் சில அரியகருத்துக்களடங்கிய ஆங்கிலப்பாடல்களின் மொழிபெயர்ப்பாகவுமுள்ளன.

அவையெல்லாம் படிப்பவர்க்கினியவாகவும் பொருள்விளங்குவனவாகவுமுள்ளன. அவை ஐயரவர்கள் தெளிவாகவும் விரைவாகவும் செய்யுளியற்றுந்திறமையுடையாரென்பதை நன்குவிளக்குகின்றன.

பிற்பாகமாகிய வசனநடையில் அருமையான பல பொருட்பாடங்களெழுதப்பட்டுள்ளன. அவை ஒவ்வொன்றும் பலருமறிதற்குரிய பலவேறுவிஷயங்களை வெளியிடு மரியவியாசங்களாயுள்ளன.

ஆதலால் இப்புத்தகம், படிப்பவர்க்குப் பலவகையினு மறிவுவளர்ச்சியைப்பயப்பிக்கத் தக்கதாயிருக்கிறது.

---

3. ஜீவகாருண்யமாலை —இது கொன்னையூர்மாரியம்மைபேரில், அமராவதிபுதூர் வித்துவான ம-௱-௱-ஸ்ரீ வயி. நா. க. ராம. அ. இராமநாதச்செட்டியாரவர்களாற்பாடப்பட்ட 32 பாடல்களடங்கியது. இதிலுள்ள ஒவ்வொருபாடலும் சிறுதெய்வங்களுக்குப்பலியிடுஞ்சீவவதை, புலாலுண்ணல் ஆகிய இவற்றைச்செய்வோர்மனத்தில் அவை தீச்செயல்களென்றும், அவிவேககாரியமென்றும் பதியும்படி தெளிவாகவும் செவ்விதாகவும் பாடப்பட்டிருக்கிறது. இதன்விலை அணா ஒன்று. வேண்டுவோராசிரியர்க்கெழுதிப்பெறலாம்.

4. ஜோதிடகணிதம்:—இது ஜாதககணிதத்துக்கு அங்கமான அஹர்க்கணனம, சூரியாதிநவககிரஹஸ்புடம, உபக்கிரஹஸ்புடம, லக்கினஸ்புடம, திதிநக்ஷத்திரயோகஸ்புடம், சுதேசராசிமானம, தசவாக்கம் கிரகஸமயம ஆகிய இவையறியுமவிதஙகளைத தெளிவான தமிழ்நடையில வெளியிடுகிறது. ஜாதககணனம செய்பவர்களுக்கெல்லாம மிகப் பயன்படததககது. இதன் விலைமுதலியன தெரியவிருமபுவோர் இதனைப்பதிப்பித்த தரங்கம்பாடி ப. அ. கிருஷ்ணஸ்வாமிப்பிள்ளையவர்களுக் கெழுதிததெரிக.

---

5. பலதீபிகை:—இது மந்திரேசுவரமுனிவரால் வடமொழியிற் செய்யபபட்ட பலதீபிகையென்னும சோதிடநூலின்மொழிபெயர்ப்பாக ஸ்ரீமான் பிருமமஸ்ரீ வேங்கடகிருஷ்ணையரவாகளால தமிழ்நடையி லெழுதபபட்டது. இதிலுள்ள இருபததாறததியாயங்களாலும ஜாதக பலன்களபலவும அறியுமாறு சொலலபபட்டுள்ளன. இதன விலைவிவர முதலியன அறியவிருமபுவோர பறங்கிப்பேட்டை அ. கிருஷ்ணஸ்வாமிப்பிள்ளையவாகளுக்காவது சு. ஏ. குமாரசாமியாச்சாரி அவர்களுக்காவது எழுதிததெரிக.

---

6. வான்மீகிராமாயணக்கிளைக்கதைகள் :— (இரண்டாம்பாகம்) இது, மயிலை ஸெண்தோம கலவிசசாலையில தலைமைததமிழ்ப்பண்டிதராயிருந்த ஸ்ரீமத-தி.வேங்கடராமையங்காரவர்களால வான்மீகராமாயணத்தின் ஆரண்யகாண்டம, கிஷ்கிந்தாகாண்டம, சுந்தரகாண்டம, யுத்தகாண்டம என்னும நான்குகாண்டங்களிலிருந்து இருபததொன்பது உபகதைகளைச சிறுவாசிறுமியர்களுமவிளங்குமாறு தெளிவானநடையி லெழுதிவெளியிடப்பெற்றிருக்கிறது.

இதில் இடையிடையே சந்தர்ப்பத்திற்கேற்றபடி கம்பராமாயணத்திலிருந்து 115 செய்யுள்கள் எடுத்தாளப்பட்டிருப்பதோடு அவற்றின் முதற்குறிப்பும், அபிதானவிளக்கமும், பிழைதிருத்தமும் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. இது சென்னை ஹைகோர்ட்ஜட்ஜாயிருந்த ஸ்ரீமான்-ஸா. எஸ். சுப்பிர்மணியஐயா கே. சி. ஐ. இ. அவர்களுக்கு உரிமைசெய்யப்பட்டிருக்கிறது. இதன் விலை அணா எட்டு. இதன் முதற்பாகம் 1906-ல் வெளியிடப்பெற்றிருக்கிறது. வேண்டுவோர் ஆசிரியர்க்கெழுதிப்பெறலாம்.

---

7. **ஸத்தியவிஜயம்** என்னும் ஒரு தமிழ்நாடகம்'—இது திருச்சிராப்பள்ளி செயிண்டுஜோஸப்காலேஜ் தமிழ்ப்பண்டிதர் வா. பி. வேங்கடராமசாஸ்திரியாரால் வடமொழியிலுள்ள சண்டகௌசிகம் என்னும் நாடகத்தையும், அரிசசந்திரகாவியத்தையும் பெரும்பாலும் தழுவி ஏழங்கங்களாக எழுதிமுடிக்கப்பட்டிருக்கிறது. இதன் விலைமுதலிய விவரம் ஆக்கியோர்க்கெழுதியறிக.

---

8. **ராஜாமணி**'—இது, இராமதீக்ஷிதர் என்னும் தமிழ்நாவலியற்றியவரும், பேனுகொண்டா தாலூகா ஹெட்அக்கவுண்டெண்டு உத்தியோகத்திலிருப்பவருமாகிய ஸ்ரீமத்-அ. ஹரிஹரையரவர்களால் எழுதப்பட்டதொரு தமிழ்நாவல். இயற்கையில் இக்காலநிகழ்ச்சியிலுள்ள லௌகிக வியவகாரங்களைக்காட்டிய மனோபாவத்துடன் படிப்பதற் கினிமையாயிருக்கும்படி யெழுதப்பட்டுளது. இதன் விலைவிவரம் ஆக்கியோர்க் கெழுதித்தெரிக.

பத்திராதிபர்.

உ

கடவுள் துணை.


# செந்தமிழ்

தொகுதி-கங.] ராக்ஷஸ ஆடி [பகுதி-க

Vol. XIII. July—August, 1915 No. 9




## ரஸாயன நூல்

## CHEMISTRY.

### முகவுரை.

நமது தேசத்தில் ஆங்கிலங்கற்க இயலாதவர்கள் 100க்கு 99பேர்களிருக்கின்றனர். இப்பெரும்பான்மையோர், அக்குறையால் நவீன சாஸ்த்ர ரகஸ்யங்களையும், அற்புதங்களையும் அறிந்து, அனுபவித்து, ஆநந்திக்கக்கூடாத நிலைமையிலிருக்கின்றனர் இவர்களுக்கு நமது தேச பாஷைமூலமாய் நவீனசாஸ்த்ரங்களைக் கற்பிக்கவேண்டும் என்று ஆங்காங்குப் பலமுயற்சிகள்செய்யப்பட்டுவருகின்றன. தேசபாஷைமூலமாய் நவீனசாஸ்த்ரங்களைக்கற்பிப்பது கடினமென்று சில நவீனர்கள் தாக்கித்துவருகின்றனர். தேசபாஷைகளில் நவீனசாஸ்த்ரங்கள் எழுதப்படவில்லையென்றும், அவ்வாறு, எழுதுவதற்குவேண்டிய பதங்களும் பரிபாஷைகளும், இதரசௌகரியங்களும் தேசபாஷைகளில் இல்லையென்றும் அவர்கள் கூறுகின்றார்கள். இக்குறையும் ஒருபெருங்குறைதான். ஆயினும் இது தீராக்குறையல்ல. இக்குறையைநீக்குவதற்குத் தமிழபிமானிகள் பலவிதமுயற்சிசெய்யவேண்டியது அவசியமாகும்.

இக்குறையைநீக்க இயலுமா என்று பரீக்ஷைசெய்ய உத்தேசித்தே சில நூல்களைத் தமிழில் இயற்றத்துணிந்தேன். ஏதோ எனதுசிற்றறிவுக்கெட்டியவரை செல்வநூல்(Economy) எனப்தொன்று தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுச் செந்தமிழில் மாதந்தோறும் பிரசுரமசெய்துமுடிக்கப்பட்டது. அங்ஙனமே, ரஸாயனநூலையும் இயற்றுவதாய் உத்தேசம்.

இது, முதன்முயற்சியாதலால் மிகுதிகள், குறைகள், பிழைகள் பல இருப்பது இயற்கையே. ஆதலால், தமிழபிமானிகள்யாவரும் அவைகளை நுட்பமாய்க்கவனித்து, அவர்களபிப்பிராயங்களைத்தெரிவித்துவருவார்களானால், அவைகள் அன்புடன் அங்கீகரிக்கப்படுவதுடன் நமது தமிழபிவிருத்திக்கே பெருஞ்சாதகமுமாகும்.

*

## ரஸாயனநூல். Chemistry.

### அத்யாயம்—1.

### பரிபாஷைகள்.

**ரஸாயனம்** :—(ரஸம்+அயனம்) மூலம் (Elements), மிச்ரம் (Mixture), கல்பம் (Compound)என மூன்றுவகைப்பட்ட ரஸாயனப் பொருள் (Chemical substances) களின் குணம், ரூபம் முதலான தன்மைகளையும், அவைகளின் பரஸ்பரஸம்பந்தங்களையும், அவைகள் சேரும்முறைகளையும், பிரியும்முறைகளையும்பற்றிக் கூறும்நூல் ரஸாயனநூல் எனப்படும்.

ரஸாயனப்பொருள்கள், மூலம் மிச்ரம் கல்பம் என மூன்று வகைப்படும்.

**மூலம்**:—(Element). ரஸாயனமுறையாலாவது வேறு எவ்விதமுறையாலாவது வெவ்வேறுபொருள்களாகப் பிரிக்க இயலாத தனிப்பொருள், **மூலம்** எனப்படும்.

**மிச்ரம்**:—(Mixture). இரண்டு அல்லது அதிகமானபொருள்கள் கலந்திருப்பது மிச்ரமெனப்படும்.

**கல்பம்**:—(Chemical Compound) இரண்டு அல்லது அதிகமானமூலப்பொருள்கள், ரஸாயனமுறைப்படி கலந்து, நாமரூப குணங்கள்மாறி, வேறு புதியபொருளாவது **கல்பம்** எனப்படும்.

**உதாரணம்**:—ஜலம்.

மூலங்கள் = 2 பங்கு ஹைதரம் + 1 பங்கு ஆக்ஸிஜன்.

குறி—$H_2O$ = ஹை$_2$ + ஆ.

அதாவது: †ஹைதரம், ‡ஆக்ஸிஜன் என்னும் மூலப்பொருள்கள் முறையே இருபங்கு ஒருபங்காக ரஸாயனமுறைப்படிகூடி ஜலம் என்னும் கல்பம் ஆகின்றது, என்பதேயாம்.

குறிப்பு:—ஹைதரம்=Hydrogen. ஆக்ஸிஜன்=Oxygen.

---

† நீர்க்காற்று. ‡ உயிர்க்காற்று.

## மிச்ரம், கல்பம்.

மிசரததிற்சேரும்பொருள்கள் தம்தன்மையை யிழக்கமாட்டா. நீரில் உப்பைக்கலந்தால, நீரின்தன்மையும, உப்பின்குணமும வேறாகத தெரிகின்றன.

ஆனால் கலபததிற்சேரும்பொருள்கள் முன்கூறியபடி, தம்தன்மைகளை யிழநதுவிடுகின்றன ஜலததிறசேரும ஹைதரம, ஆகவிஜன் என்னும இரண்டுவாயுபபொருள்களும, தஙகள்குணஙகளையிழநது, ஜலம எனனும் புதிய திரவப்பொருள ஆகின்றன.

## சோக்கை, கலப்பு.

**சோக்கை.**—(Mixture அல்லது Mechanical Mixture). இரண்டு அலலது அதிகமானபொருளகள தமதனமைகுலையாதகூடி மிச்ரமாகமாததிரம ஆகுமமுறை, சோக்கையெனபபடும.

**கலப்பு:**—(Chemical Combination). இரண்டு அலலது அதிகமானபொருள்களகூடித தம நாமரூபகுணஙகளமாறிய புதியபொருளாகுமமுறை, கலப்பு எனபபடும.

## கட்டி, திரவம், ஆவி.

## Solids, Liquids, Gases.

பொருள்கள் உருவததுககுததககவாறு கட்டி, திரவம, ஆவி என மூன்றுவகைகபபடும.

**உதாரணம்:**—

**கட்டி.** கல, தஙகம, பனிககட்டிமுதலியன

**திரவம்.** ஜலம, எணணெய், அமிலம, பாதரஸம முதலியன.

**ஆவி.** பிராணவாயு (Oxygen), நீராவிமுதலியன.

**தன்னிலைமை** —(Normal state). சிலபொருளகள இயறகையிற் கட்டிகளாகவும, சில திரவஙகளாகவும, சில ஆவிகளாகவுமிருக்கும. எநதப்பொருளையும இமமூன்றுநிலைமைககும மாறறலாம.

**உதாரணம்:**-ஜலததுககுத தனனிலைமை திரவததுவம (Fluidity). அதை அதிகமாய்க்காய்சசுவதால ஆவியாய்பபோககிவிடலாம. அதிலுள்ள உஷ்ணததைககுறைபபதால (பனிக)கட்டியாககிவிடலாம.

## அணு, கணம்.

## Atom and Molecule.

**அணு**—(Atom) மூலப்பொருளைச் சேதனமுறையால் பிரிக்கும் பொழுது கடைசியாய்ப் பிரிக்கமுடியாதபரிமாணம் **அணு** எனப்படும்.

**கணம்** —(Molecule) கலப்புப்பொருளைச் சேதனமுறையால் பிரிக்கும்பொழுது, கடைசியாய்ப் பிரிக்கமுடியாதபரிமாணம் **கணம்** எனப்படும்.

**உதாரணம்** —ஜலம்



$$=H_2O=\text{ஹை}_2\text{ ஆ}$$

அதாவது ஒருகணம்ஜலத்தில் இரண்டு அணு ஹைதரமும், ஒரு அணு ஆக்ஸிஜனும் அடங்கியிருக்கின்றன என்பதேயாம்.

### அணுநிறை, கணநிறை

**அணுநிறை** —(Atomic weight) ஓர் அணுவின்நிறைக்கு அணுநிறை எனப்படும். அது மூலங்களுக்குத்தக்கவாறு வித்தியாஸப்படும். உலகத்திலுள்ளமூலங்களிலெல்லாம் அதிகலேசானது ஹைதரவாயு. ஆனதால் ஹைதரஅணுவையே நிறைமானம் (Unit weight) ஆகக் கொண்டிருக்கின்றனர். ஒரு ஹைதரம் அணுநிறை ஒன்று என்று வைத்துக்கொண்டு, மற்றமூலங்களின அணுவை அளக்கின்றார்கள்.

உதாரணம். ஆக்ஸிஜன—அணுநிறை 16. அதாவது ஒரு அணு ஆக்ஸிஜன், ஒரு அணு ஹைதரத்தைப்பார்க்கிலும் 16 மடங்கு நிறையுள்ளது என்பதேயாம்

**கணநிறை** —(Molecular weight). ஒரு கலப்பு கணத்தினநிறை **கணநிறை**யெனப்படும்.

உதாரணம் —ஜலம் = ஹை$_2$ ஆ.

அதாவது $=2$ அணு ஹைதரம் $2\times1=2$

$=1$ அணு ஆக்ஸிஜன் $1\times16=16.$

ஆகையால் 1 கணம் ஜலம் 18 என்பதேயாம்.

அதாவது: ஒருகணம்ஜலம் ஒரு அணு ஹைடிரஜனைப்பார்க்கிலும் 18 மடங்கு நிறையுள்ளது என்பதேயாம்.

## ரஸாயனம், ரஸவாதம்.
## Chemistry and Alchemy.

முன்கூறியலக்ஷணப்படி, நாம்கூறும் சாஸ்திரத்துக்கு ரஸாயன சாஸ்திரம் என்றுபெயர்.

ரஸவாதம், இரும்பு, ஈயம்முதலான தாழ்ந்த உலோகங்களைப் பொன்முதலான உயர்ந்த உலோகங்களாகமாற்றும்முறைக்கு ரஸவாதம் என்றுபெயர். முற்காலத்தில், ரஸவாதம்செய்யவேண்டுமென்ற பேராசையால் செய்யப்பட்டமுயற்சிகளே ரஸாயனசாஸ்திர அபிவிருத்திக்குக் காரணமாயும் அநுகூலமாயும் ஏற்பட்டன.

---

## அத்யாயம்—2.
## பஞ்சபூதங்கள்.
## Five Elements.

இப்ரபஞ்சமானது பஞ்சபூதங்களால் அமைக்கப்பட்டுள்ளதென்று நமது பூர்வசாஸ்திரங்கள்கூறுகின்றன.

பஞ்சபூதங்களாவன —

(1) ப்ருதிவி (=மண்=Earth).
(2) அப்பு (=ஜலம்=Water).
(3) தேயு (=நெருப்பு, ஒளி=Fire).
(4) வாயு (=Air).
(5) ஆகாசம் (=Sky).

பஞ்சபூதலக்ஷணங்களாவன —

| | 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|---|
| ப்ருதிவி:— | சப்தம் | ஸ்பர்சம் | ரூபம் | ரஸம் | கந்தம். |
| அப்பு.— | சப்தம் | ஸ்பர்சம் | ரூபம் | ரஸம். | |
| தேயு:— | சப்தம் | ஸ்பர்சம் | ரூபம். | | |
| வாயு:— | சப்தம் | ஸ்பர்சம் | | | |
| ஆகாசம்:— | சப்தம். | | | | |

குறிப்பு:—மேற்கூறிய அட்டவணையில், பிருதிவிக்கு 5 குணமும், அப்புவுக்கு நான்கும், தேயுவுக்கு மூன்றும், வாயுவுக்கு இரண்டும், ஆகாசத்துக்கு ஒன்றுமிருப்பதைக் கவனிக்கவேண்டும்.

இவை இவ்வாறிருக்க, நவீனமுறையில், பிருதிவியும் ஜலமும் கலப்புகளென்றும், தேயுவைச் சக்தி(Energy)மாத்திரமேயொழியப் பொருளல்லவென்றும், வாயுவை மிசிரமென்றும், ஆகாசம் சூனியமேயொழியப் பொருளல்லவென்றும் விவரிக்கப்படும்.

## அத்யாயம்—3.

### ஜலம். Water.

குறி—$H_2O$. ஹை$_2$ஆ.

**ஜலம்** என்பது சாதாரணமாய் எல்லோருமறிந்த ஒரு பிறவிப் பொருளாதலால் முதன்முதல் இச்சாதாரணப்பொருளைப்பற்றி விவரிப்போம்.

இது பஞ்சபூதங்களில் ஒன்றாய்க்கூறப்பட்டிருப்பினும் நவீன சாஸ்திரப்படி மூலமல்ல. ஜலம், இருமடங்கு ஹைதரமும்(Hydrogen)-ம் ஒருமடங்கு ஆக்ஸிஜனும் கூடிய ஒருகலப்பென்று முன்கூறப்பட்டிருக்கின்றது.

ஜலத்தைப்பிரிக்கும்முறை:—

ஒருகண்ணாடிப்புனலின்சிறுவாயைச் சடை (Cork) யாலடைத்து அதன்வழியாய் மின்ஸாரயந்திரத்தின் இருகம்பிகளையும், புனலுட்புகும்படிசெலுத்தி, அகன்றபுறம் மேலேயிருக்கும்படி திருப்பி, அப்புனலை ஜலத்தால்நிரப்பி, பிறகு தண்ணீர்நிறைந்த இரண்டுகண்ணாடிக்குழாய்களை முன்கூறியகம்பிகளில், கம்பிக்கு ஒருகுழாயாகக்கவிழ்த்து மின்சாரப்பிரயோகஞ்செய்வோமானால் சிறிதுநேரத்துக்கெல்லாம், குழாய்களிலிருந்தஜலம் கீழே இறங்குவதைப்பார்க்கலாம். ஆனால், ஒருகுழாயில் இறங்கியஜலத்தைப்பார்க்கினும் இன்னொருகுழாயில் இருமடங்கு இறங்கியிருக்கும். ஆனால் ஜலமில்லாத இடம் சூன்யமல்ல. ஜலம் கொஞ்சமாய்க்குறைந்தகுழாயில் ஆக்ஸிஜனும், மற்றதில் ஹைதரமும் சேர்ந்திருக்கின்றன. அரைவாசிக்காற்றுள்ளகுழாயைக் கட்டைவிரலா

லடைத்துக்கொண்டு தண்ணீரிலிருந்தெடுத்து, ஒரு தழல்திரியைச் செலுத்துவோமானால், திடீரென்று அத்திரி பற்றி எரியும். இதுதான் ஆக்ஸிஜனுடையலக்ஷணம். அதேமாதிரி மற்றக்குழாயைக் கவிழ்த்த வாறே எடுத்துத் தழல்திரியைச்செலுத்தினால், அது ஆக்ஸிஜனிற் போலப் பற்றி எரியமாட்டாது. ஆனால் எரிதிரியை அதிற்செலுத்தினால் அவ்வாயுவிறப்பற்றி நீலவர்ணமாய் எரியும். இதுதான் ஹைட்ரஜவாயுவின் லக்ஷணம்.

இதனால் நாம் அறிவன —

(1) ஜலம், ஒருகலப்புப்பொருள்.

(2) மின்சாரப்ரயோகத்தால் அதை ஆக்ஸிஜன், ஹைட்ரஜன் என இரண்டு வாயுப்பொருள்களாகப் பிரிக்கலாம்.

(3) இரண்டுபங்கு ஹைட்ரஜமும் ஒருபங்கு ஆக்ஸிஜனுமாகப் பிரியும் என்பனவாம்.

∴ ஜலம்=ஹை$_2$ஆ=$H_2O$.

2 பங்கு ஹைட்ரஜம்+1 பங்கு ஆக்ஸிஜன்

நிறை பொருள் அணுநிறை.

2 அணுஹைட்ரஜம்=2×1= 2

1 அணு ஆக்ஸிஜன் = 16

1 கணஜலத்தின்தன்னிறை=18

ஜலம்: செய்முறை.

இதேமாதிரி, ஹைட்ரஜத்தை எரிக்கும்பொழுது, அது பக்கத்தி லுள்ள ஆக்ஸிஜனுடன்கலந்து ஜலமாகமாறிவிடுகின்றது.

குறிப்பு:—மின்சாரயந்த்ர அமைப்பைப்பற்றிப் பின் யந்த்ரவிவர அத்யாயத்தில் விவரிக்கப்படும்.

## அத்யாயம் 4.

### ஆக்ஸிஜன் அல்லது ப்ராணவாயு.

### குறி. ஆ. O

ஜலத்தைப்பிரிப்பதால, ஆக்ஸிஜன், ஹைதரஜன் என்னும் இருவகை வாயுக்கள் உண்டாகின்றனவென்று முன்கூறப்பட்டது. இப்பொழுது ஆக்ஸிஜனுடையகுணங்களையும், உற்பத்தியையும்பற்றி விவரிப்போம்.

### குணங்கள்.

ஆக்ஸிஜன், என்பது நிறம், ரூபம், ருசியற்ற ஒருவாயு. அது சாதாரணவாயுவில் 4 மடங்கு நைதரவாயுவுடன் கலந்திருக்கின்றது. அது ப்ளூரன்(Flurine) என்பதைததவிர மற்றமூலங்களுடன்சேர்ந்து ஆக்ஸிஜங்கள் (Oxides) ஆகின்றது. ஆக்ஸிஜன மற்றமூலங்களுடன சேருமபொழுது சிலசமயங்களில உஷ்ணமும சிலசமயங்களில ஒளியும உண்டாகின்றன. அதனாலதான் ஆக்ஸிஜன எரிகின்றதென்று சொல்லப்படுகின்றது. பாறைகள், மணலகள், ஈரங்கங்கள முதலான பல பொருள்களில ஆக்ஸிஜன கலந்திருக்கின்றது. பூமணடலத்திற் பாதி நிறைக்குமேல ஆக்ஸிஜன் உள்ளது. ஆக்ஸிஜன பராணிகளின ஜீவாதாரமானபொருளாதலால, பராணவாயுவென்று சொல்லப்படுகின்றது. ப்ராணிகள் ஆக்ஸிஜனை உட்கொண்டு, தங்கள இரத்தத்தைச சுத்தி செய்துகொள்ளுவதுடன், தங்கள தேக உஷ்ணத்தையும காப்பாற்றி வருகின்றன. ஆக்ஸிஜனில்லாவிடில பராணிகள அரைநாழிகைகூட ஜீவிக்கமுடியாது.

### ஆக்ஸிஜன் உற்பத்தி.

### செய்முறை.

ஜலத்திலிருந்து ஆக்ஸிஜன் எடுக்கும்முறை முன்விவரிக்கப்பட்டது. இதுதவிர, பலவித ஆக்ஸிஜங்க(Oxides)களையும், ஆக்ஸிஜகலப்பங்களையும காய்ச்சுவதால ஆக்ஸிஜனைப் பிரித்தெடுக்கலாம.

**உதாரணம்** —ரஸஆக்ஸிந்தூர (ரஸ-ஆக்ஸிஜம-Oxide of mercury) த்தை ஒருகுழாயிலிட்டுக்காய்ச்சினால், ஆக்ஸிஜன்பிரிந்து வெளியே வரும. அதை வகரநாளம (Bent tube) மூலமாய் ஒரு சீசாவில அடைத்துக்கொள்ளலாம.

### பரீக்ஷை. Test.

ஜ்வாலையிலலாமல தழலுடன்கூடிய ஒருதிரியை ஆக்ஸிஜனுள்ள சீசாவில் நுழைத்தால அது பரகாசமாய் ஜவாலையுடன் எரியும். அவ்வாறு எரிவதால, கரியமிலவாயு (Carboric acid gas) உண்டாகும.

## ஆக்ஸிஜகல்பங்கள்.

## Compounds of Oxygen.

ஆக்ஸிஜன் பலபொருள்களுடனசேர்ந்து கலபங்களாகின்றது. அவை, அந்தந்தப்பொருள்களைப்பற்றிக்கூறும்பொழுது விவரிக்கப்படும்.

பொருள்களுடன் ஆக்ஸிஜனசேர்ந்து உண்டாகும் உப்புக்கள் ஆக்ஸிஜங்கள் (Oxides) என்று சொல்லப்படும்.

உதாரணம்:—

| வழக்குப்பெயர் | பரிபாஷை | ஆங்கிலம் |
|---|---|---|
| ரஸஸிந்தூரம் | ரஸஆக்ஸிஜம் | Red oxide of mercury. |
| நாகபஸ்பம் | நாகஆக்ஸிஜம் | Oxide of zinc. |
| மிருதாரசிங்கி | ஈயஆக்ஸிஜம் | Oxide of lead. |

---

## அத்யாயம் 5.

## ஹைத்ரம்.

## Hydrogen.

குறி. ஹை=H.

ரஸாயனப்பொருள்களிலெல்லாம் மிகவும் லேசானது ஹைதரம். இது ஒரு மூலப்பொருள். வாயுரூபமானது. இது முன்கூறியபடி ஜலத்திலும், அமிலங்(Acids)களிலும் இருக்கும். இது மிகவும் லேசான மூலமானதால, ரஸாயனப்பொருள்நிறைக்கு நிறைமான(Unit weight மாக அநுஷ்டிக்கப்பட்டுவருகின்றது.

குணம்:—ஹைதரம் என்பது நிறம், மணம், ருசியற்ற ஒருவாயு. மூலங்களிலெல்லாம மிகவுமலேசானது.

### சோதனை. Test.

ஹைதரம் நிறைந்த சீசாவைக் கவிழ்த்தவாறேபிடித்து, ஒரு எரிதிரியை அதனுட்செலுத்தினால் அதிலுள்ளகாற்று எரிவதையும், திரி

அணைந்துபோவதையும் பார்க்கலாம். மறுபடி திரியைவெளியே எடுக்கும்பொழுது அதேஜவாலையால் திரியும் எரியும். இதுதான் ஹைட்ர வாயுவின்லக்ஷணம்.

**ஹைட்ரம் செய்முறைகள்.**—ஹைதரம பலமுறைகளால எடுக்கப் படும.

(1) ஜலததிலிருநது மின்சாரபரயோகததால ஹைட்ரம எடுக்கும முறை முன் விவரிககபபடடது.

(2) ஒரு மிளகளவு பொடாஸியம் என்னும உலோஹததைத தண்ணீரிறபோடடால, அது தணணீரில மிதககும. தணணீரைத தொடடவுடன அதைசசுறறித தீபபறறி எரியும. அதாவது பொடாஸியம ஜலததிறபடடவுடன ஜலததிலுளள ஹைதரம பிரிகின்றது. அப பிரிவாலுண்டாகும உஷ்ணததால ஹைதரம எரிகினறது. ஜலததிலிருநது ஹைதரமபிரிநதவுடன அதனுடனிருநத ஆகஸிஜன், பொடாஸியததுடன்சோநது, பொடாஸியஆகஸிஜம அலலது பொடாஸியக காரம் (Alkali potash) உணடாகின்றது. இபபுதிய பொருளகலநத தண்ணீரில, சிவப்புலிட்மஸ் நீரைக (Red litmus Solution)கலநதால அது நீலவாணமாய்விடும சிவபபுலிடமஸ்ஸை நீலமாக்குவதுதான் கார (Alkali)ங்களின் லக்ஷணம.

குறிப்பு:—பொடாஸியததை மண்ணெண்ணெயில வைததிருகக வேண்டும. காறறு அலலது ஈரமபடுமபடி வைககலாகாது. கததியால அதைத துண்டிககவேண்டும.

(3) இதேமாதிரி ஸோடியம் எனனும லோஹததைத தணணீரிற்போட்டால ஹைதரமபிரிநது சோடாக்காரம உண்டாகும. ஆனால உஷ்ணம சுவலபமானதால, ஹைதரம எரியமாட்டாது.

வேறுமுறைகள்:—பொடாஸியம, ஸோடியம என்னும *உலோகங்களால ஜலததிலிருநது ஹைதரததைபபிரிககுமமுறைகள் கூறப

*லோஹம் அல்லது உலோஹம்=Metal, உலகம்=World. வித்யாஸததைக் கவனிக்கவும்.

பட்டன. இதேமாதிரி மற்ற உலோகங்களைக்கொண்டும் ஹைத்ரவாயு வைத் தண்ணீரிலிருந்து எடுக்கலாம். அப்பொழுது ஹைதரம் பிரிந்தது போகப் பாக்கி ஆகஸிஜன் அந்தலோகங்களுடன்சேர்ந்து ஆகஸிஜ (Oxides)ங்களாகின்றன.

உதாரணம்:—

(4) அயம் (Iron) ஜலத்தை இரும்பாற்பிரிக்கும் முறை:— ஸோடியம், பொட்டாஷியத்தாற் குளிர்ச்சியிலேயே ஜலத்தைப்பிரிக்கலாம். ஆனால், அயம்போன்ற சில உலோஹங்கள் பழுக்கக்காய்ச்சப்பட்டாலொழிய ஜலத்தைப்பிரிக்கமாட்டா. இரும்பைப் பழுக்கக்காய்ச்சி ஜலத்தில் நுழைத்தால், ஹைதரவாயு பிரிந்துவிடும். மிகுதியான ஆகஸிஜன் இரும்புடன்கலந்து அயஆகஸிஜம் (Oxide of iron) ஆகும். இதுதான் துரு (Iron rust) எனப்படும்.

சில உலோஹங்கள் அமில(acids)சம்பந்தமானாலதான ஜலத்தைப் பிரிக்கமுடியும்.

உதாரணம் —ஒருசீசாவில் தண்ணீரெடுத்து, அதில் ஒரு சிறு நாக(Zinc)துண்டைப்போட்டால், ஒருமாறுபாடும் ஏற்படாது. அதனுடன் கொஞ்சம் கந்தகாமிலம் (Sulphuric acid)சேர்ப்போம். உடனே அது பொங்க ஆரம்பிக்கும். இதுதான் காற்றுப்பிரிவதற்கு அடையாளம். அவ்வாறு பிரிந்துவருமவாயுவை வகரநாளத்தால இன்னொருசீசாவிற் சேர்த்துக்கொள்ளலாம். இதைச் சோதனை(Test)யால ஹைதரவாயுவென்று அறியலாம்.

நாகம்+கந்தகாமிலம்=நாககந்தக உப்பு+ஹைதரம்.

நா +ஹை$_2$க ஆ$_4$ =நா க ஆ$_4$ +ஹை$_2$.

$$Zn + H_2SO_4 = ZnSO_4 + H_2.$$

குறிப்பு:—

நாககந்தக உப்பு=பாலதுத்தம.

### ஹைத்ரவாயுவின்லக்ஷணம்.

(1) ஹைதரம ஓர் எரிபொருள் (Inflammable). அது நீலவாண மாய் எரியும.

(2) அது தானகவே எரியுமேயொழிய, இனனொருபொருள எரிவதற்குச சாதகமாயிராது.

(3) அது எல்லாபபொருளகளிலும லேசானது.

சோதனை:—ஹைதரம நிறைநதசீசாவை எபபொழுதும கவிழத துத்தான் பிடிககவேண்டும. நிமிாததவுடன் அது பறநதுபோய்விடும. இதனல ஹைதரம காற்றைவிட லேசானதென்றறியலாம.

### ஹைத்ரகல்பங்கள்.

### Compounds of Hydrogen.

ஹைதரம பலபொருளகளுடனகலநது கலபஙகளாகின்றது. அது எல்லா அமிலஙகளிலும கலநதிருககின்றது உலோகததுடன (நைதரா மிலமதவிர மற்ற) அமிலம சேருமபொழுது அநதநதலோஹஸமபநத மான உபபும, ஹைதரமும உணடாகின்றன.

ஹைதரமும ஆகஸிஜனும மறறபபொருளகளுடனகலநது உண டாகும உப்புககு ஹைதரஜம (Hydrate) என்றுபெயர். ஹைதர கலபஙகளைபபற்றி அஙகாஙகுவிவரிககபபடும.

(தொடரும.)

ஆர். எஸ். நாராயணஸ்வாமி ஐயர் B.A., B.L.

௨

# உயிரின் தன்மை.

(பசுலக்ஷணம்.)

—:o( )o:—

இவ்வியல்பின் பூர்வபக்ஷத்தைச் சித்தாந்தநூல்கள் அதிகமாக விரித்துக்கூறும். சிவஞானபோதம், சிவஞானசித்தியார் மூன்றும் நான்காம் சூத்திரங்களிலும், பின்னையநூலின் உலகாயதன்மதம் பௌத்தமதம், சமணமதம் முதலியவைகளின் பரபக்ஷத்திலும் இதன்விரிவைக் காணலாம். சிவப்பிரகாசத்திலும் உண்மையதிகாரத்திற பேசப்பட்டிருக்கின்றது. அவைகளைத் தொகுத்துக்கூறுமிடத்து உயிர் பூதமல்ல, பொறியல்ல, கரணங்களல்ல, பிராணனல்ல, உடலல்ல, இவைகளின்கூட்டமல்ல, கடவுளல்ல, வெறும் அறிவுமல்ல, அறியாமையுமல்ல, உருவல்ல, அருவல்ல, உருவருவல்ல, தூலமுமல்ல, சூக்குமமுமல்ல, செயலற்றதுமல்ல, செயலுள்ளதுமல்ல, அணுவுமல்ல, விபுவுமல்ல எனபதே.

ஆயின் இதனுண்மைதான் என்னவெனில், சிவஞானபோதம் 4-ம் சூத்திரம் 2-ம் அதிகரணம் உதாரணச்செய்யுளில், 'அதுவது வாதல்' என்றும், 3-ம் அதிகரணத்தில் 'அரூபசொரூபியாய் நிற்கின்ற தென்றும், 5-ம் சூத்திரம், 1 ம அதிகரணத்தில் "அவற்றின (ஐம் பொறியின்) ஆன்மா ஒற்றித்துக்காணினலலது அவையொன்றையும் விடயியாவாகலான" என்றும், 2-ம் அதிகரணத்து, 'தமதுமுதலாலே யுணரும்' என்றும், 8-ம் சூ 3-ம் அ. "அவைதாம பளிங்கிலிட்டவன் னமபோல காட்டிநறைக்காட்டிநிற்றலான" என்றும், உதாரணச்செய் யுளில் 'பன்னிற மேகாட்டும்படிகம்போல' என்றும்,

சித்தியாரில், சுபக்கம், 4-ம் சூ 10-ம் செய்யுளில்,

"அசித்தருவியாபகம்போலவியாபகமருவமன்றாய்
வசித்திடவருமவியாபியெனுமவழகுடையனுகி
நசித்திடாஞானசெய்தியநாதியேமறைத்துநிற்கும்
பசுத்துவமுடையனுகிபபசுவெனநிற்குமான்மா"

என்றும், 5-ம் சூ. 3-ம் செய்யுளில் "அறிவிக்க அறிவன" என்றும், பரபக்ஷம் உலகாயதன மதம் மறுதலை 20-ம் செய்யுளில்,

"அங்கியானது தானுமொன்றையணைந்து தன்னுருவிகழ்ந்திடும்
பங்கியாதுயிர் தானுமிப்படி பற்றியல்லது நின்றிடா" என்றும்,

சிவப்பிரகாசம், உண்மை, 5-ம் செய்யுளில் 'அதுவதுவாகக் காணும்' என்றும்,

திருவருட்பயனில், (2-ம் அதி 8-ம் செய்யுள்)

"இருளினிருளாகியெல்லிடத்தொளியாம்
பொருள்களிலதோபுவி"

என்றும் படிக்கப்படுகின்றன. இவற்றிற்காணப்படும், உயிரின் அதுவதுவாதற்றன்மையையும், பற்றின்றி நிற்றலாகாத தன்மையையும் பற்றி இங்கு விரிக்கப்படும். இவற்றைப்பற்றி, இப்பொழுதுள்ள உரைகளில், ஒருவரும், அவ்வளவாய் விரித்துப் பேசவில்லை. சிவஞானமகாபாடியம், 6-ம் சூத்திரத்தின் கீழ், யோகிகள் இவ்வான்மாவின் குணத்தைப்பற்றி நமது அத்துவிதசித்தாந்தத்தை விளக்கியுள்ளார். உயிரின்குண மின்னதெனவே, பாசத்தோடும், பதியோடும் இன்னவிதசம்பந்தம்பெற்றிருக்கின்றதென்பது தெற்றெனை அறியலாம். ஆகையால் இவ்வாராய்ச்சியின் விசேஷமும் விளங்கும்.

மேல், அதுவதுவாதல் என்பதன்பொருள் சார்ந்ததன்வண்ணமாதல், யாதொன்றுபற்றின் அதனியல்பாய் நிற்றல், அதாவது, உயிரின் உண்மையியல்பு யாதாயினும், இனனொன்றுடனாதத்தோடு ஒற்றி நிற்கும்போது, தன்னியல்பு சுவதந்திரமுதலியவற்கெட்டு, எதனோடு சார்ந்ததோ அதன்சொரூபமடைந்து, தான் என்பதொன்றிலலாமல் முழுதும் மறைந்துநிற்றல். "இளமையும், வெண்கடுதாசியும் எல்லாப்பதிப்பையும் ஏற்கும்" என்னும் ஆங்கிலப்பழமொழிபோல, மனிதருடையமனத்தில் வெளியினின்று எதிர்ப்படும் எல்லாப்பொருள்களும் செயல்களும் பதிகின்றன. பிள்ளைகளிடம் தங்கள் தாய்தந்தையரின் நடைஉடைபாவனை, குணம், குற்றம், தொனியெல்லாம் படிகின்றன. மாணாக்கர்களிடம் தங்கள் உபாத்தியாயருடைய மாதிரிகளெல்லாம்படிகின்றன. பட்டினத்தான் ஒருவன் திருநெல்வேலியில் வசிப்பானாயின், அவனுக்குத் திருநெல்வேலியாருடைய ஒருமாதிரியானபேச்சு பிடிபட்டுப்போகின்றது.

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே"
"தீயாரைக் காண்பதுவும் தீதே"

என்ற நம் ஔவைப்பிராட்டியின் முதுமொழிகளையே நாம் கவனிக்க வேண்டும். மேலும் இதனுண்மை பலகாலும் எடுத்து ஓதப்படும் பின்வரும் தேவர்குறளாலும் போதரும்.

"நிலத்தியல்பால் நீர்திரிந்தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்பதாகும் அறிவு"

நீர் எந்த நிலத்தோடு சேர்ந்ததோ அதன் தன்மையாதல்போல, மனிதனுடைய குணமும், அவர்கள் சேர்ந்த இனத்தின் தன்மைபோலாகும். வானத்தினின்று இழியும் சலம் நிறமும் ருசியுமில்லாதது. செம்மண்ணில் வீழ்ந்து செல்லும்போது செந்நிறமாயும், கருமண்ணில் ஓடும்போது கறுப்பாயும், உவர்நிலத்திற் பாயும்போது உவர்ப்பாயும், கலங்கியும் அழுக்கடைந்தும், தன் தன்மையும் நிறமும் பரிசுத்தமும் மாறி நிற்கும். அதுபோலவே மனிதனும் நல்லோருடன் சேர்ந்தபோது நல்லவனாகின்றான். தீயவரோடு சேர்ந்தபோது தீயவனாகின்றான். இவ்வினவிதி (Law of Association) பின்வருமாறு பேசப்படுகின்றது. "நாம் எதனை உய்த்துணருகின்றோமோ, எதனுடன் கூடுகின்றோமோ, அதுபோலாகின்றோம்" இவ்விதி, ஜீவதத்துவநூல்களிற் பெரிதும் விளக்கப்படுகின்றது.*

*இதற்கு ஒப்பாக, புறப்பூண்டுகளிலும், பசு பக்ஷி கீடம் முதலியவைகளிலும், விளங்கும் வேறுவேறான தோற்றங்களைக் காட்டலாம். அநேகமாய்த் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும்பொருட்டுப் பூச்சிகளும், பறவைகளும், மிருகங்களும், அவைகள் வசிக்குமிடம்பற்றி நிறம் மாறுகின்றன. பசுமையிலைகளிலும் செடிகளிலும் வசிக்கும் பூச்சிகளும் புழுக்களும் பசுமைநிறமடைகின்றன. கொம்புகளிலும், பட்டையின் மீதும் ஊரும்போது, பட்டையின் நிறத்தையும், குச்சி, இலைத் தாள்களின் உருவத்தையும் அடையும் விளக்குப்பூச்சியின் முட்டைகளிலிருந்துண்டாகும், குச்சிப்புழுக்கள் (Stick-caterpillars) நெட்டுக்குத்தாய்த் தலை கீழும் கால்மேலுமாய் நிற்கும்போது அக்கிளைகளின் சிறுகுச்சியினின்றும் வேறுபடா. குச்சிப்பூச்சிகள் அல்லது கும்பிடும்பூச்சிகள், (மழைப்பூச்சி அல்லது ஓடைப்பூச்சி என்று தமிழில் வழங்கப்படுவன), தமக்கு விரைவாகச்செல்லும் சக்தியின்மையால், தாம் வசிக்கும் இடம்பற்றி, அந்தந்த இலைபோலவும், குச்சிகள்போலவும், பூக்கள், புற்கள்போலவும் உருவடைந்து, செடிகளில் உலாவும் மற்றத் தும்பிமுதலியபூச்சிகளை ஏமாற்றிப்பிடித்து இரையாக்கிக்கொள்கின்றன. இப்பூச்சிகளில் வாகையிலைக்கொத்தைப்போலவும், அறுகம்புற்கொத்தைப்போலவும் (காய்ந்தபுல்நுனியுள்பட) சிலவற்றைப் பார்த்திருக்கின்றோம்.

டார்வின்பண்டிதர்காட்டியது, பன்றிகளைவளர்ப்பவர்கள் பன்றி முகமும், குதிரைகளைவளர்ப்பவர் குதிரைமுகமுமடைகிறார்கள் என்பது. ஒருதலைவனும் தலைவியும் ஒப்பற்றகாதலுடன்வாழுங்கால், முகவிலாசம் ஆரம்பத்தில் எவ்விதவேறுபாடுடையதேனும் வரவர அவ்விருவர்முகமும் ஒரேரூபமடையவும்செய்கின்றது. அவர்களுக்கு இரு உடம்பும் ஒருயிரும் என்பது அல்லவோ உண்மை உயிரொன்றாக உடம்பும் ஒன்றாயிற்று. இவர்களில் ஒருவர்க்குண்டாகிய எண்ணம் மற்றவருக்கும் அந்நேரத்தில் உண்டாவதையும் நாம் கண்கூடாகக்கண்டிருக்கின்றோம். "இயற்கையுலகில் தெய்வீகவியல்" (Spiritual Law in the Natural world), என்னும்நூலிற் பின்வருமாறு காணுகின்றோம் "எல்லாவற்றிற்கும் காரணமாகிய மூலத்தை உய்த்துணர்ந்தவிவேகிகள் அதனோடு ஒற்றித்துநிற்றலால், அவர்களும் காரணர்களாகின்றார்கள்; எதனை உய்த்துணர்ந்தோமோ, எதனோடு நெருங்கச்சார்ந்தோமோ, அதன்வண்ணமாவோமென்பது

---

ஒருசெடி பச்சையாயிருந்து பழுப்புவாணமடையும்போது, இப்பூச்சிகளும் நிறமாறுகின்றன. பச்சோந்தியினியல்பு மிகவும் ஆச்சரியமானது. பயத்தினால் நிறம் மாறுகின்றதில்லை கூட்டிலிருக்கும்போதும், நிறம் மாறாது ஆனால் ஓடும்போது, தரை சிவப்பாயிருந்தாற் சிவப்பாயும், கறுப்பாயிருந்தாற் கறுப்பாயும் இருக்கும். மரத்தில் ஏறும்போது பட்டைநிறமாயும், இலைகளிலிருக்கும்போது பச்சைநிறமாயும் நிறம் மாறுகின்றது. பறவைகள் எவ்விடம் கூடுகள்கட்டுகின்றனவோ அந்தநிலத்தின்சார்பாக நிறமடையும். சிங்கத்தின் நிறமும் அது வசிக்கும் இடம்பற்றியே செடிகள் இல்லாத ஆப்பிரிக்காதேசத்துப் பாலைநிலத்திலே, சிறுகுன்றுகளிலுள்ள நுழைகளில் அவைகள்வசிக்கின்றன அக்குன்றுகளின் ஓரம்நிற்கும்போது, வேட்டைக்காரர்களுக்கு அவைகள் புலப்படமாட்டா, அப்பாறைகளின்நிறமும், சிங்கங்களின் நிறமும் விரவிநிற்றலால் சித்திரக்காரர்களும் படம்தீட்டும்போது இவ்வியல்பை நன்குவிளக்குகின்றார்கள். தூரநின்று பார்க்கும்போது சிறுகுன்றுகளாகத்தான்தெரியும் நெருங்கி உற்றுப்பார்த்தால்தான் பாறையென்றும், மிருகங்களென்றும் பாகுபாடுசெய்யலாம். புலிகளின் நிறமுமஅவைகள்வசிக்கும் மரமடர்ந்தசோலைகளின்மாட்சியே. அச்சோலைகளில், ஒளியும் நிழலும் மாறிமாறிவரும் புலிகளின் படையும் நிழலும் ஒளியும் போன்றது. அதனால், அவற்றை மற்றச்செடிகள்முதலியவைகளினின்றும் பிரித்துக்காணமுடியாது. ஒருவன் கிச்சிலிமரத்தின் இலைகளைப்பார்ப்பானாயின், அதிற் பக்ஷிகளின் கறுப்பும் வெளுப்புமான மலத்தைப் பார்க்கலாம். அவைகள் மலமல்ல, அதுபோன்ற புழுக்கள். அவைகள் பக்ஷிகளுக்கு இரையாகாதிருக்கும் பொருட்டு அப்படி மாறுவேடம்பூண்டுள்ளன. சிலபூக்கள் (புல்லுருவிப் பூடுகளில்) (Orchids) விசேஷமாய்த் தும்பிகளையும் புழுக்களையும் மற்ற உருவங்களையுமே ஒத்திருக்கின்றன. பாடிஞ்சதுரை எழுதிய பூச்சிவருக்கஅதிசயம், (Romance of the Insect world) என்னும்நூலில், 6, 7 அதிகாரங்களில் இன்னும்பார்க்க.

என்றும் மாறாதவிதியாதலின். நாம் எவருடன் நெருங்கிவாழ்கின்றோமோ, அவர்களைப்போலாகின்றோம். முகவிலாசமும், பேச்சும், உருவமும் ஒன்றாகின்றது ஒரொருகால், ஒருபிள்ளை தன்தாயின் வேறாய்ச் செவிலித்தாயினுடைய உருவமடைகின்றது." இவர்கள் கூறும் மனோகரணபலம், அல்லது குணடேபண்டிதர் (Professor Kunte) கூறும் மனிதனுடைய மறைந்தசக்தி (Potential Power) தான், நாம்கூறும் அறிவுத்துவாரத்தன்மை. இந்தக்குணந்தான் எல்லாவுபாசனைகட்கும், சாதனபாவனைகளுக்கும் ஏதுவாய்ப் பந்தமோக்ஷங்களை யெய்துவதற்கும் ஆதாரமாயுள்ளது. நாம் முற்றறிவு, பரிசுத்தம், கடினமையுடையவர்களாயின், சிற்றறிவும் அழுக்கும் கட்டும் நமக்கேன்வந்தது? சிற்றறிவும் சிறுதொழிலும் உடையவர்களாவதில்லையெனின், அது எல்லாருடைய அநுபவத்துக்கும் மாறாகும். வந்த காரணம் தெரியாதெனின், கேட்டதையே மறுத்துச்சொல்லுவதென்னும் தோல்வித்தானமடைந்து, தாக்கறியாயத்துக்கு மாறாகும். முற்றறிவுடையது சிற்றறிவையடைந்ததெனபதற்குச் சான்று ஏதாவது உண்டா? எவ்விதமாய்ப் பின் நமக்குத்தெரிந்தது? இவ்வினத்தார் ஆப்தவசனம், சுருதிவாக்கு என்று கடைசியாகக் கூறுவார்கள். இவர்கள்கூறும் ஒவ்வொருசுருதிக்கும் பதிற்சுருதிகள் சித்தாந்திகளும் காட்டக்கூடுமே? உயிர் இறைவனலன் எனக்காட்டும் சுருதிகள் ஏராளமாகவும், ஏகமென்பதைச்சாதிக்கும்சுருதிகள் மிகவும் அற்பமேயன்றோ? இவ்வற்பசுருதிகளும், நம சித்தாந்தத்துக்குமுரணாகாமையைப் பின்விரிக்கப்போகின்றோமாதலால், ஈங்குக்காட்டுமுயிரினியல்பு, மனிதன் பந்தத்துக்குட்பட்டு, சிறுதொழில் அடைந்ததை விளக்கும். உடம்பினும், ஐம்பொறி கரணங்களினும் வேறாகிய உயிர், தான் அவைகளாகப் பாவிப்பதனால், அவற்றின்கர்மங்கள் நிகழ்ந்தன. அது தன உடம்பினையேபெரிதும்பாராட்டினது. உடம்புக்கும் காணங்களுக்கும் எது இன்பத்தைத்தருமோ அதனையே ஒருவன்செய்யலுற்றான். துன்பத்தைத்தருவனவற்றின்மேரில வெறுப்படைந்தான். இந்நிலையற்ற உடம்பின்சுகத்தைவிரும்பிப் பிற உயிர்களிடத்தும், தன் இறைவனிடத்தும் தான்செய்யவேண்டியகடமைகளை மறந்து பாவங்களைச்செய்தான். அவா என்பது அவன் உள்ளத்திற்புகுந்து பலவக்

தப்படுத்திக் கீழே அவனை வீழ்த்திற்று.* இவ்வாசையே, எல்லாப் பிறப்புக்கும் காரணமாகின்றது. பொய்யாமொழியாரும இதனை இரண்டு திருககுறளால, தொகுத்துக்கூறுகின்றார்.

" அவாவெனபவெல்லாஉயிாககும எஞ்ஞான்றும
தவா அப்பிறப்பீனுமவித்து"

" காமமவெகுளிமயககமிவைமூனறன்†
நாமமகெடகெடுமநோய"

ஈங்குக காமம எனறது நமபொறிகளுககு இனபந்தருவதில் ஆசை அலலது வேணடுதல துன்பமதருவதில வெறுபபு அல்லது வேண்டாமையே வெகுளி மயககம எனபது மெய்யுணாதல எனனு மதிகாரததின முதறகுறளில் இனனதெனவிளககியிருக்கின்றது.

" பொருளல்லவற்றைப்பொருளெனறுணரும்
மருளானுமமாணப்பிறப்பு "

இம்மருள், மயக்கந்தான் ஆணவம, அகங்காரம், அவிதஅதை, (அவிச்சை) அஞ்ஞானம என்பது. ஒருபொருள இல்லாவிடததுஅங்கு ஒருபொருள் இருப்பதாக உணர்வது மயக்கமல்ல. இததிருக்குறளின்படி ஓரிடதது ஒருபொருளிருக்கவும, அதை இன்னொருபொருளாகத திரிவுபடவுணர்தலே மயக்கம. கிளிஞ்சில இலலாத போது வெள்ளியென்று ஒருவன் உணாந்தான் இது ஒன்று. கிளிஞ்சில் இருக்கும்போது அதனை வெள்ளியென்று அறிதல் இன்னொனறு.

* பகவதகீதை - 3-ம அதி - 36, 37, 38-வாககியங்களைககவனிக்க. "பன்னிறககவருமபடிகம" என்ற பண்டை உவமானமும் படிககப்படுகின்றது. வார்ஷ்ணேயரே ! எதனால் இழுககப்பட்டு எதனாற் பலவந்தமாய்ப்பந்திககப்பட்டு, மனிதன் இசசையில்லாமலே பாவம்செய்கினறான.

"அன்புடன்பகவான்கூறுகின்றார் ரஜோகுணத்தின்காரியமாகியஆசையால்தான். அது அவனைமுழுதும மாசுபடுத்தியது. முழுதும் எரிததது. அதுவே இவ்வுலகில் நமககுப்பகையென எண்ணு. அகநி புகையினாலும், பளிங்கு தூசியினாலும், வயிற்றிற பிள்ளை கருப்பப்பையினாலும எவ்விதம் மூடப்படுகின்றனவோ அவ்விதமே, மனிதன இதனால் மூடப்படுகின்றான்."

† பரிமேலழகர், தம் அருமையானஉரையில் வடமொழியார் குற்றங்கள் ஐந்தாகக்கூறுவரென்றார் அவை, அவித்தை, அகங்காரம, காமம், வெகுளி பற்று என்பன. யோகசூத்திரம் II(3)-ல் காண்க. முன்னிரண்டும் மயக்கத்திலும், பின்மூன்றும் காமம் வெகுளியிலும் அடங்கும்.

உலகம், உடம்பு முதலிய ஒன்றுமில்லாதபோது தான் எல்லாம் அவையாகநினைத்தல் இதுவொன்று. உலகம், உடம்பு முதலியன இருக்க, அவற்றைத் தானாக அறிதல மற்றொன்று முன்னையதை மித்தியாவாதமெனவும், பின்னையதைச் சத்காரியவாதமெனவும் கற்றறிந்தோர் கருதுவர். இதனையே தெய்வப்புலமைத திருவள்ளுவநாயனாரும் அதனுவிதசித்தாந்திகளும் ஒப்புவது. இதில், ஒன்றையும் பொய்யெனறு ஒதுக்கவேண்டிய அவசியமில்லை. ஒன்றை ஒன்றாக மதிப்பதனல், முதனமுதற குற்றம உண்டாக, அதினின்று மற்றெல்லாக்காமங்களும நிகழ்ந்தமை போதருகின்றது. இச்சிவஞானமும மேறகாட்டிய உயிரின தன்மை உண்மையினறேல், நிகழ்வதற்கு ஏதுவில்லை.

தானகூடியதோடு தன்னை ஒன்றுபடுத்துமசக்தி மனிதனுக்கு இல்லையேல், தன்னைத தனதேகமாகத தவறமாட்டான். பேய்ன்பண்டிதருடைய "மனதும தேகமும" என்ற நுண்ணியநூலைவாசித்தோர பின்வருபவற்றைக கவனித்திருப்பர. மனது, உடம்பு மூளையல்லவாகியும, மனதும உடம்பும ஆதிஅந்தமாகச் சம்பந்தப்பட்டு இவற்றின்தோற்றஙகள் நேர்பட்டும ஒன்றுபட்டுமிருக்கின்றன. மனது கர்த்தா, கருதுவானுயிருந்தும (Subject) கருதப்படுமநிலையில் (objective condition) உடம்போடு அதுவதுவாகி உடமபிலும் மூளைநரம்புகளிலும கெட்டுப்போகின்றது.* அப்படி மனதுகெட்டுப போயினும, மனமில்லாதபோது உடம்பு, (பொருள் விஷயம்,) என்பது ஒன்று ஏறபடாது. சார்ந்ததனவண்ணமாகும் இம்மனபலமே தன்னிழப்படைதல என்னும சக்தியாகவும கூறப்படும. உயிர் தனனைத தன்னுடமபில இழந்து உடம்பாகியது; உயிர தனனைச் சிவததில இழந்து சிவமாகியது. இங்கே இந்தச்சக்தியினுல, மனிதன், எவவண்ணம மிகவும இழிவான அிருகபிராயததில்அழுந்துகிறுனே, அவ்வண்ணம அதி உன்னததெய்வபிராயம அடைகின்றுன் என்பதைக கவனிக்கறபாலது. அவ்விதமானுல் இககுணததை மனிதனுடையகுற்றமாகவும குணமாகவும கொளளவரும. இப்பகுதியை நாம ஆராய்வாம். ஒவவொரு மதவாதிகளும, ஆஸதிகர்களோ, நாஸ்தி

* கெடுதல் அழிதல் என்னும பொருட்டன்று. 'சாவிகெட்டுப்போய்விட்டது' என்பது உலகவழக்கு 'நான்கெட்டு,' என்பது உயாந்தோர்வழக்கு.

கர்களோ, மனிதன் கடைத்தேறி உய்யும்பொருட்டு, சமயநெறிகளை யும் கடமைகளையும், நீதிநெறிகளையும் கடமைகளையும் கற்பிக்கின்றார் கள். ஆனால் அந்நடையைக் கடைப்பிடித்து நடந்தால், உய்யும்வழி எவ்விதம் சித்திக்குமென்பதைக் காட்டினார்களில்லை. சாதனசதுஷ்ட யங்களை அநுசரித்து குரு உபதேசமடைந்து, தவஞ்செய்து, அட் டாங்கயோக முதலியசாதித்தால், அவித்தையினின்றும், பாவங்களி னின்றும் ஒருவன் எவ்விதம் விடுபடுகின்றான் என்பதை விளக்கினார்க ளில்லை. இல்லையேனும், இதன் மூலம் பண்டைச் சாங்கிய யோக நூல்க ளிலும், சித்தாந்த சாத்திரங்களிலும் விளக்கப்பட்டுள்ளது கபில பாதஞ்சலி மதங்களில், உயிரின் உண்மையை ஒப்பி, அதன் மேற்செல்லு மாறு காட்ட உயிரின் தன்மையை நோக்கவேண்டி வந்தது ஆகவே, இவ்விரு மதங்களும் வேதாந்தத்துக்கும், சித்தாந்தத்துக்கும் அடிப் படை எனச் சொல்லலாம் இவ்வடிப்படையின்றி, மேல்மாடங்கள் செல்ல இயலாது.*

---

* சங்கரமதத்தில் மிகவும் அபிமானம் வைத்தவராகிய மாக்ஸ்முல்லர் பண்டி தர், (Prof Max Muller) ஆதிசங்கரர் உள்பட எல்லா வடமொழி வியாகரணிக ளும், யோகம் என்னும் பதத்தை யுஜ் என்னும் தாதுவிலிருந்து பிறந்ததாகக் கொண்டு, 'கூடுதல்' 'ஒன்றுபடுதல்' என்னும் பொருள் கூறியிருக்கவும், அப் பொருள் பிழையென ஒதுக்குகின்றார். இரண்டு உள்பொருள்களிருந்தா லன்றோ, கூடுதல், ஒன்றுபடுதல் என்னும் வழக்கு உண்டாகும். சங்கர வேதாந்தத்தின்படி, இரண்டு பொருள் இல்லையாகவும், ஒன்றுபடுதல் என்று எங்ஙனம் சொல்லலாம் என்று அவர் காட்டும் தர்க்கரீதிப்படி சரியானதே. ஆனால் அவர் கூறுவதுபோல், எந்த வடமொழிப் புலவரும் (இந்தியரில்) யோகம் என்பதற்கு ஒன்றுபடுதல் என்னும் பொருளில்லை என்று வெளிவராதவரை, யோகத்துக்கும் இவர்கள் வேதாந்தத்துக்கும் வெகுதூரமென்றே கொள்ளவரும்.

இம்மொழியோடு நாம் மேற்கூறும் 'உபநிஷதம்' என்னும் பதவிஷயமாகவும் ஒரு ஜெர்மானிய பண்டிதர் (Dr Deussen டாய்சன் பண்டிதர்) இவ்விதமே இடர்ப்படுகின்றார் ஸ்ரீசங்கரர் தமது பிரகதாரண்யக உபநிடதவிருத்தியின் முதற்கண்ணே இம்மொழியை உப+நி+சத் என்று பிரித்து—கூட நெருங்கவும் + அதிகம் (நெருங்கவும்) + அழிதல் என்னும் பொருளை விளக்கியிருக்கின்றார். பண்டிதர் இப்பொருள், அவர் கொள்ளும் வேதாந்தத்துக்கு முற்றும் முரணென்கிறார் உப என்ற சொல் யோகம் என்ற பொருளைத் தருகிறது இப்படி அத்யந்தமாய்க் கூடுதலினாலே ஏதோ ஒருபொருள் அழிகின்றதென்றும் படுகின்றது. ஒரே பொருள் உண்மையாயின் கூடுதலும் கூடாது; உள்பொருளும் நாசமாகி நாஸ்திகம் அல்லது சூன்யவாதமாகும். இது தான் பௌத்தமதத்தின் உண்மையும் இவ்விருமொழிகளாலும் உண்மைவிளங் குவது முப்பொருளே பசுவும், பதியும் கூடாமற்றடுப்பது பாசம். கூடும்பொழுது, பாசமும், 'நான்' என்று உயிர்முனைத்து நின்றமையும் அழிகின்றது. "சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாம்" 'நான் கெட்டுச் சிவமானவா,'

யோகத்தினின்றும், வேதாந்தத்தை வேறுபடுத்துவது மணலில் அஸ்திவாரம்போடுவதாகும். நாம் வேறு இடங்களிற்கூறியபடி உண்மைவேதாந்தம் அல்லது உபநிடதமார்க்கம், யோகமார்க்கம் ஆகும். யோகம், உபநிடதம் என்னும்சொற்கள் ஒருபொருட்பன்மொழிகளாதலின், சித்தாந்தம் அல்லது ஆகமாந்தமென்பது, ஞானமார்க்கம் அல்லது சன்மார்க்கமென்படும் வேதாந்தசித்தாந்தசமரசம் என்னும் சொற்றொடருக்கும் இதுவே பொருளாகும்.

இதுநிற்க, நாம் மேற்கூறியபடி சாங்கியரும், பாதஞ்சலிகரும், உயிர்க்கு, அதுவாகுற்றன்மையை எடுத்திசைத்து, சாரூபமடைதலையும் சொல்லி, படிகத்தையும், செம்பருத்திப்பூவையும் உதாரணம் காட்டுகின்றார்கள்.* (இதைப்பின் அதிகமாக ஆராய்கின்றாம்) உய்யு நெறியில், உயிர் கீழ்நிலைகளையு மாற்றிச்செல்லவேண்டும். மனிதன் தன்னை உடம்போடு ஒன்றுபடுத்தவும் கட்டுக்குட்பட்டான் இது மாறவேண்டுமாயின், ஆதிகாலந்தொட்டுப்பழகிவரும், இத்தனு கரணபுவனபோகங்களினின்றும், கொடியினின்றும் கக்கரிக்காய் என்னும் பரமோபதேசங்களை இச்சொற்களன்றோ அடக்கி நின்றன. மிகவும் நுண்ணிய அறிவையும், பரஞானத்தையும் உடைய நமது ஆன்றோர் இவ்விதமாக வல்லவோ, சிறுவார்த்தைகளிலும் யாவராலும் என்றும் அழிக்கப்படாமல் அத்துவிதசித்தாந்த உண்மையை அமைத்திருக்கின்றார்கள் நாம் ஒருகால் முத்தி, மோக்ஷம், வீடு என்ற ஒருபொருட்பெயர்களைச் சிந்தித்துக்கொண்டு, அதனால் முப்பொருள் நிச்சயமாதலைக்கண்டுபிடித்து, அக்கருத்தினை நமது காலஞ்சென்ற, அரியநண்பர் ஸ்ரீமான்-தண்டலம் பாலசுந்தரமுதலியாரவர்களிடம் வெளியிட, அவர் நாம்வியந்து உளமகிழும்படி, திருப்போரூர் சிதம்பரசுவாமிகள் அருளிய வேதகிரீஸ்வரர்பதிகத்தில் ஒருபாட்டை எடுத்துச்சொன்னார்கள். அது பின் வருமாறு —

வீடென்றுரைதருசொற்குப்பொருளோவிடுதலையாதலினால்
வீக்குண்டோனுங்கட்டுண்டோனும்விளங்குந்திடமாக
பீடுறுகட்டுத்தானுயவிட்டுப்பெயராதுஇதுசடமாம்
பிணிபட்டோன்சுதந்தரனுக்குமபிணிபெயரச்செய்வோன்
நீடுசுதந்தரமுண்டாமொருவன்எனுமிவ்வேதுவினால்
நிகழ்பதிபசுபாசமெனமுப்பொருள்நிச்சயமென்றருளி
வேடனைவெல்லுங்குருவாமெனையாள்மெய்ப்பொருணீயன்றோ
வேதகிரிப்பவரோகவயித்தியவேணிமுடிக்கனியே.

உயிர் மெய் என்னும் இலக்கணமொழிகளும் நம் அத்துவித இலக்கணத்தை விளக்குவதாயிட்டு; எம், 'அத்துவிதம், சைவசித்தாந்தத்தின்படி, என்ற நூலிலும், இங்கும் விரித்திருக்கின்றோம்.

*யோகசூத்திரம் I 41 சாங்கியசூத்திரம் VI 27, 28 பார்க்க.

அறுப்புண்டுபோவதுபோல (இது உபநிடதங்களிற் காணப்படும் உதாரணம்) எவ்விதம்விடுபடுவது?

மனிதன் இழிபொருளோடுசேர்ந்தபோது இழிபொருளாகுன். உயர்பொருளோடு ஒன்றுவானுயின உயர்பொருளாகக்கூடும். *

நிலையினறிக் கேடுறும்பொருள்களாகிய உடமபுமுதலியவற றோடுகூடியதால், அவன கேடுறறுன

கேடுபடா அமிர்தத்தோடு† அதேசக்தியால் ஒன்றுபடட்டும். உடமபோடொன்றி உடலின்பததை இசசிததவன, இக்காமம, வெகுளி, வெறுபபு, விருபபு, இசசை இவற்றை அறுக்க, அவன் பிறபபை அறுபபான. ஆயின, வெறும ஆசையினமையை ஒருவன அவாவினுல், (வேணடாமை வேண்டின) அதனுலேயே, அவவாசை அறுமோ? சிலர் அங்ஙனம கூடுமென்கிறுாகள. அவர்கள ஏட்டுச் சுரைக்காயைக கறிசமைபபவாகள் இங்கே, உயிரின இன்னெரு குணமாக நாம மேறகூறிய, பறறுக்கோடினறிநிலலாமை என்னும உணமை உபயோகமாகும

உடமபு உலகமாகிய சார்புடனுவது அலலது இறைவனுகிய சாா போடாவது, பறறிக்கொணடிருக்கவேணடும பாசநீக்கமவேண்டு மானுல், பதியைபபறறவேணடும பதியினறேற பாசததுடனென்றிப

---

* கீதை.

"மனதை எனனிடமபதிததது, எனறும ஒபபுடன அயரா அனபுடன யாவா என்னைவழிபடுகிறாகளோ, அவாகளே என எணணததில் யோகததில் முதிாநதவாகளாவா" XII—I.

2 "பொறிகளை வெனறுவிடுதது எவறறினும இருவினையொப்படைந்து, எலலாரும இனபுற்றிருகக உவகையெயதிய இவாகளும எனனை அடைகிறாாகள" (XII 4)

"எல்லாபபணிகளையும எனபணியாககி எனனில மனதைப்பதிததது இருதயததில யோகததியானமசெயபவாகள" (XII. 6)

"இவாகளைப பிறப்பிறப பென்னும கடலினினறும விரைவில எடுக்கின றேன, அவாகளமனம எனனிடம பதிநதிருததலால" (XII. 7.)

"உன உணாவையும உளததையும எனனிற்செலுததுு. பின் ஐயமினறி என்னுடன் இனி எனறும வாழ்வாய" (XII 8.)

† இருக்குவேதம (I 4–3 9) ருததிரசிவனை அமிாதனென முறையிட்டிருககினறது.

'தாமசிகையின அதி உசசியிலுள்ள, ஓ! அமிாதனே! ஓ சோமனே! உனக குரிமையுடையவர்களுக்காகக, உன்னை வந்திப்பாரை நினைக.'

பிறப்பிறப்பினில் மறுபடியும் அழுந்தவேண்டும். உயிருண்மையைக் கூறுதமதங்களிலெல்லாம் ஒரு ஒற்றுமையைக்காணலாம். அவர்களுக்குக் கடவுளென்றபொருளுமில்லை. கௌதமபுத்தர் நுணுக்கமாய் உயிர் உள்ளதோ இல்லதோ என்னுங்கேள்வியைவிடுத்துச் செல்லுகின்றதை நாம் கவனிக்கலாம். அவர் கடவுளில்லையென்றதனால், இப்படி அவதிப்பட்டதென்க எனினும் அவர்வழிவந்தோர் தர்க்கநியாயமுடிவுசெய்து உயிரில்லையென்றும், முற்றும் நாசமடைகின்றதென்றும் நிச்சயமாய்க் கூறுகின்றார்கள். பாசநீக்கத்தின்பிறகு என்னவிருந்தது எனறுகேட்கும்போது என்னபதில்? நிர்வாணம்* (ஒன்றுமில்லை) என்பதே. மேற்கூறியதற்கு விலக்கு ஒன்றுண்டு. நிரீஸ்வரசாங்கியர் கடவுளில்லை எனறுகூறினும் உயிருண்மையை ஒப்புக்கொள்கிறார்கள். எனினும், நாம் மேற்கூறியபடி பசு பதியுடனாகிலும், பாசத்தோடாயினும் பற்றியிருக்கவேண்டும். எல்லாமதங்களிலுங்கூறும் நன்னெறிகளெல்லாம், பாசங்களிலுள்ள பற்றைநீக்கி, பதியின் மீது பற்றை யுண்டாக்கவேண்டியகாரணமாயிற்று. பின்கூறிய பற்றே முன்கூறியபற்றினைவிடற்கு ஏதுவாகும்†

> "பற்றுகபற்றற்றான்பற்றினை அப்பற்றைப்
> பற்றுகபற்றுவிடற்கு"—திருக்குறள், 350.
>
> "சார்புணர்ந்துசார்புகெடஒழுகினமற்றழித்துச
> சார்தராசார்தருநோய்"—ஷை 359.

உரையாசிரியர் உலகப்பற்றினையொழிக்க வேண்டிய ஒழுக்கம் அட்டாங்கயோகமென்றார்; நாயனாரும், முன்மூன்றுகுறளிற் பாசநீக்கம்பெற்றுப் பதியுடன்கூடுகைக்குவேண்டிய மூன்றுசாதனங்களாகிய கேட்டல், சிந்தித்தல், பாவனைகளைக்கூறினார். பதியினைச்

* ரைஸ்டேவிட்ஸ்பண்டிதர் நிர்வாணம என்னும்பதத்துக்குப் பொருள், ஜீவமுத்தத்தசை என்றார். ஆயின, அத்தசைக்குப்பின என்னவாயிற்று? சூத்திரங்களில ஒன்றுமில்லையென்றே சொல்லப்பட்டிருக்கிறது.

† நமக்குப்பிடிபட்டிருக்கும் சிற்சிலபழக்கங்களைநீக்குவது எவ்வளவுகடினமென்று நாமெல்லாரும் அறிந்தது. பழையபழக்கத்தைத்தவிர்க்க, புதியபழக்கம வேண்டுமென்கிறார்கள். பொடிபோடுவதைவிலக்க, சுருட்டைப்பற்றுகிறார்கள். ஒருபெரிய டாக்டர் குடியைவிலக்க, அபின் உபயோகப்படுத்தச்சொன்னது நமக்குத்தெரியும்.

'செம்பொரு'ளென்றும, .'உளளது' என்றும், 'மெய்ப்பொருள்' என்றும் அவர்பேசினர். அதன்பொருளேயும், பாவனை என்பதன் இயல்பையும, உரையாசிரியர் விளக்கியது மிகவும் கவனிக்கத்தக்கது.

"தோறறககேடுகளின்றி யுண்மையின்நிததமாய், நோன்மையாற றன்னை ஒன்றும கலத்தலினமையின, தூய்தாய், தானெல்லாவறறையுங் கலநதுநிறகினறமுதறபொருள விகாரமினறி எஞ்ஞான்றும ஒருதன்மைததாதலபறறி அதனைச் செமபொருள் எனறார். மேல் மெய்பபொருளெனவும, உளளது எனவும கூறியதூஉம இது பறறியென உணாக. அதனை (அசசெமபொருளை)க காண்கையாவது உயிர் தன் அவிசசைகெடடு, அதனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல். இதனைச சமாதி எனவும சுக்கிலததியானமெனவும் கூறுப. உயிா உடமபின் நீங்குங்காலததது, அதனால் யாதோன்று பாவிக்கப்பட்டது, அஃது அதுவாய்த்தோன்றுமெனபது எலலா ஆகமங்கட்கும துணிபாதலின, வீடெய்துவாாக்கு அக்காலததுப பிறபபிறகேதுவாகிய பாவனை கெடுதறபொருட்டுக கேவலப்பொருளையே* பாவிததலவேண்டும"—(திருககுறள, 358-உரை.)

இவ்வதுவதுவாதறசக்தி மிகவும பிரமாதமேயாம. இது தபசு, உபாசனை, தியானம, பாவனைமுதலியவறறுக்கும் மூலாதாரம். இந்தப பாவனாசக்தியைபபற்றி, தேவா இன்னும இரண்டிடங்களிற் பேசுகிறார்.

"வேண்டியவேண்டியாங்கெயதலாற்செய்தவம
மீணடுமுயலபபடும" (265)

"எண்ணியஎணணியாங்கெயதுபவெணணியாா
திண்ணியராகபபெறின" (666)

இதுநிறக, உயிரின் இவ் விரணடாவதுகுணமபறறியே கடவுளொருவன் அவசியம வேணடுமென்னுமவிஷயத்தில் மீண்டும்புகுவோம். கடவுள் இல்லாவிடில் என்னஆகும் என்பதற்கு நாம் அடிக்கடி ஒரு உதாரணம்காடடுவதுணடு. திருவிழாக்காலங்களில், வழுக்குமரமநட்டு அதன்நுனியில் ஒருகொக்கியும் அதிற் பணமுடிசசும

* 'சிவ ஏவகேவல' சுவேதாசு-உபநி-IV. 18.

கட்டுவதுண்டு. அநேகர் மரமேறப்புகுந்தும ஒருவனுவது முடிச்சை அவிழ்ப்பவன் இரான் அப்படி ஏறினவனும அங்கிருக்கும் பற்றுக் கோட்டைப் பறறினுலலலது, மீணடும சறுக்கியேவிழுவன்*. ஆகவே, ஒருமதம் எவவளவு உன்னதமாகபபேசபபடடாலும, கடவுளை நமக்குககொடுக்காவிடில் வீடு, நிர்வாணம், பநதவீக்கம என்ப தெலலாம வெறும்பேசசே. தன்னை அதிகபபிரயாசையுடன் அவா வின்மை முதலியவைகளால ஒருவன சுததனுசகியும பிறப் பிறப்பென் னும படுகுழியில, மீண்டும மீணடும விழவேணடும. விழுந்து மீண்டும மீணடும வழுககுமரததில ஏறவேணடும.† மேல் உயிரின் இவவிருகுணங்களையும ஆராயாதகுறறமே, நாஸதிகாகளையும், மாயா வாதிகளையும் அவலப்படுததியது

உடலோடொனறியபோது உயிர உடலாயிறறு. தனனுருவம் கெடடது. உடலில அதனை எவவித ஆயுதபபிளப்பினுலும் ஆராய்நது கணடுபிடிகக இயலாது. கடவுளும உயிரும ஒனறுன போது நான் என்பதை அபபூரணததிற காணமுடியாது. ஆகவே இவ்விருதிறததாரும, உயிரிலலையென்ருாகள. பின்னையவா 'நான' ஆக எண்ணியதும கடவுளே என்பாாகள். ஆகவே இவ் விருதிறததாாக்கும் அநுபவம் சுவாநுபவம் எனபதும் வெறும் பேசசாகும். பாசக்ஷயம் ஒன்றுமட்டுமே உண்மை. உடனே ஒரு வர்க்கு நிர்வாணமும், நாசமும் மறறொருவர்க்கு பிரமம் சுவச்சொ ரூபமடைதலும் சித்திததது ! எனினும சூனியம அல்லது பிரமத்தி னின்றும உதித்தழிந்த ஒருபொருள் மீண்டும்பிறபபதறகுண்டா கிய தடை என்னவென்பதை விளக்கினுர்களில்லை. இவ்வுண்மையைக் கடைபபிடித்தோ டாய்ஸன்பண்டிதர், சம்சாரசசுழற்சி என்றும் அழியாது என்பதுபறறி உயிர்கள் உண்டாயது என்று சொல்லிய

* ஈங்கு, அதவைதுவாதற்றனமைபொருந்திய உபநிடதப்புழுவை மீண்டும் உவமிப்பாம. அது, யாாசண்ணுக்கும புலப்படாது இலையேயாகி, ஒரு இலையை விட்டு இன்னொரு இலைககுப்போகும்போது, மறறொருஇலையைப் பற்றிக் கொண்டே இருநதஇலையைவிடும்

† இதுகாரணமபற்றியோ, நிர்வாணமடைந்த புததரும மீண்டும மீண்டும் பிறந்து இறந்தாரென்றது ? அவர் இறந்தசரிததிரததை மகாபரி நிர்வாணசூத் திரததிற்காண்க. இக்காலத்துள்ள சில பிரசன்னபௌத்தாகள, மீண்டும் பிறப்பதில்லை எனனும வேதமகுடவாககியங்களைச் சாமான்யமொழிகள் என்ப தும் இதுகாரணம்பற்றியோ ?

றாஉம்? அங்ஙனமாயின் நம நன்னெறியின் அவசியத்தை அழிக்கு மென்பதூஉம், சமயநீதி சாதனங்கட்கு ஊறுசொல்லவேண்டுமென் பதூஉம், உறுதியாம இவ்வளவு முயறசிசெய்தும, மறுபடியும கீழேவிழவேண்டியதாலை, சாதனசதுஷ்டயம, குருபதேசம, தபசுமுதலியன எறறுக்கு? அறறன்று. நமதுமாட்சியும இறை வனில். இறைவனமாடசியில நாம மகிழ்கின்றேம. நமமை விடுவிப போன் அவன. வீட்டினபயனும அவனே. அவனில் நம அநுபவ மின்றேல், வீடுதான் எறறுக்கோ? நாம முறறவரும பரிசு அவனே. சாந்தோக்கிய உபநிடதம கூறுகிறபடி,

"இதை எவன பாாககின்றான, சிந்திக்கின்றான, உணாகின்றான, அவன் கடவுளை நேசிககின்றான கடவுளில இன்புறுகின்றான, கடவுளில் மகிழ்கின்றான, அவன் தன்னரசாகின்றான். சாவ அண்டங் களிலும இறைவனும தலைவனுமாகின்றான." VII. 25.2.

மேல் இவ்வுயிரினியல்பு, துவைதம, அதவைதம், விசிஷ்டாத் வைதம என்னும கக்ஷிகளுக்கு எமமட்டு உபயோகப்படுமெனபதனை ஆராய்வாம் இதனை அதவைதம என்னும நூலில அதிகவிரிவாய் எடுததுப் பேசியிருக்கின்றேம. விஷயமெல்லாம உயிரும் இறை வனும் ஒன்றே, வேறே என்பது. வேறாயின் அகமபிரம்மாஸமி முதலிய மகாவாக்கியங்களுக்குப போக்கெனனே? நாம் வேறு இடங் களிற்காட்டியபடி அதவைதம என்னும் சொல் ஏகம என்னும பொருட்டன்று. மற்றப்பொருள்களினுண்மையைமறுத்ததில்லை. இரு பொருளும் பிரிக்கக்கூடாதது, அநந்நியம, அநநியநாஸதி என்றே பொருள்கொள்ளலவேணடும். வேறாயிருந்தும ஏதோ ஒருவிதசம பந்தத்தினல் ஒன்றாகக்கூடும: இது எபபடியாகும்? "பொய்கண்டார் காணுபபுனிதமெனும் அததுவித மெய்கணடநாத"னும பின்வரு மாறுபேசுகிறார், "இரண்டாயிருபபின் ஒன்றாகா. ஒன்றாயின், சுவாநுபூதியில்லை" இம்முடிச்சை எப்படி அவிழ்ப்பது? இதுகாறும் நாம் ஆராய்ந்துவந்த உயிரின்குணததை ஞாபகபபடுததினல இதனை முடிவுசெய்யலாம். பொருள்வேறாயினும் உயிர் கடவுளுடன் சேர்ந்த போது தான் அதுவாய்த தன்னறிவும் செயலும் அறறுநிறறலால உயிரும் கடவுளும் ஒன்றாகும். இங்கு ஒன்று என்றதும இருபொருள்

ஒரேதன்மைத்து (பொன்னும் அணியும்போல) என்றதைவிட, பொருள்விசேடித்து இருபொருள் ஒன்றின் அதுவதுவாதற்றன்மை யால் ஒற்றித்துநிற்றலையே ஒன்று என்றுகூறுதலும் உண்மை. இது இலக்கணவழக்கினும் காணக்கூடும் "உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே" இவ்வொற்றுமை இயல்பான ஒற்றுமை என்பது சூத்திரக்காரர்கொள்கை

இவ்வுயிரெழுத்தும் உடல (மெய்) எழுத்துமே, நம்முயிருக்கும் உடலுக்குமுள்ள இயைபைக்காட்டி, நமகடவுளுக்கும் நமக்குமுள்ள இயைபையும் காட்டவல்ல முக்ய உதாரணங்களாகும். மேல அப்படி ஒற்றித்தநிலையில, தான் எனக்காணாது, சிவாநுபூதி ஒன்றே விளங்குமாதலால் இங்கு ஒன்று என்றதும், கடவுள் ஒன்றே என்றதும போதரும. இவவுண்மைகளெல்லாம, திருவாசகத்தின் இருதயபாசுரத்தின் அமைந்துகிடப்பதை நாம் "திருப்பாசுரவிளக்கம்" என்ற நூலில் விரிவாய்க்காட்டியிருப்பதை ஆங்குத் தேர்ந்துணாக.

"இன்றெனக்கருளிஇருளகடிந்துள்ளத்
தெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின்றன்மைநினைப்பறநினைந்தே
னீயலாறபிறிதுமற்றின்மை
சென்றுசென்றணுவாயத்தேயந்துதேய்ந்தொன்றும்
திருப்பெருந்துறையுறைசிவனே
ஒன்றுநீயலலையன்றியொன்றிலலை
யாருனனையறியகிற்பாரே" —(கோயிற்பதிகம். 7.)

சிவஞானயோகிகள் தம திராவிடமகாபாஷ்யத்திலே, மிகநுணுக்கிச சொலலுகின்றார்,

"மற்றெனனையோ அத்துவிதமெனனும் சொற்குப்பொருளெனில, சித்தாந்தசைவர் உரைக்குமாறுகாட்டுதும்! அது நீயாகின்றாய்! எ-ம, அது நானாகின்றேன' எ-ம, 'அது இதுவாகின்றது' எ-ம மூவிடம்பற்றிநிகழும தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களைக்கேட்டவழி அதுவெனபது ஒருபொருள், ஆதலின ஒருபொருள் மற்றொருபொருளஆமாறு யாஙஙனம எனனும ஐயம நீங்குதற்கு எழுந்ததாதலின், அதுவதுவாதற்கு ஏதுவாய், அவவிரண்டிற்கும் உளதாகிய சம்பந்தவிசேடமுணர்த்துதலே அத்துவிதம என்னும சொற்குப் பொருள் என்று உணர்ந்துகொளக."

(தொடரும)

ஜே எம். நல்லசாமிப்பிள்ளை, B.A., B.L.,

உ

# கீரன் - நற்கீரன்.

சென்ற சித்திரைமாதப்பகுதியில் மகா-௱-௱-ஸ்ரீ ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள் கீரனைப்பற்றி எழுதியவியாசம் மிகவும் பாராட்டற்பாலதேயாம். ஆயினும், மிக்ககீர்த்தியோடுவிளங்கிய ராய் பகதூர் சுந்தரம்பிள்ளையவர்கள் M A., போன்ற மேதாவிகள் ஸ்ரீ திருஞானசம்பந்தசுவாமிகளது காலம் கி. பி. ௫-வது நூற்றாண்டு என்று கூறிப்போந்தமை பிள்ளையவர்கள் அறியாதிருக்கக்காரணமில்லை அஃதின்னனமாக, சம்பந்தமூர்த்திசுவாமிகளதுகாலம் சுமார் 4000 வருடங்கட்குமுன்னென்ன ஒருசமயம் எழுதிப்போந்தார்கள் இப்பொழுதும் அக்கருத்தையேயுட்கொண்டு காலத்தைநீட்டித்துள்ளார்கள். 'திருநின்றசெம்மையே செம்மையாக்கொண்ட திருநாவுக்கரையரது செவ்வியபண்ணில்'நன்பாட்டுப்புலவன்' என்று கூறப்பெற்றவரும், தருமியெனுஞ்சிறுவன், 'தந்தைதாயிலேன் தனியனாகியமைந்தனேன்,' 'நெடியவேதநூல்நிறையவாகமம், முடியவோதியமுறையினிறகினும், வடுவில்லறவாழ்க்கையினறிநின, னடியருச்சனைக்காவனே' வென்றிறைஞ்சியகாலத்துக் "கொங்குதேர்வாழ்க்கை" யென்றபாசுரமருளியவரும் சிவபெருமானேயென்பதும், அப்பாசுரத்தைக்கொண்டு, தருமி பொற்கிழியை அடையப்போந்தருவாயிற் கீரன் தடுத்தனனென்பதும், உண்மைச்செய்திகளாம் அவ்வமயம் கீரனென்றிருந்தவரே பிறகு அகத்தியபாற்கற்று ஐயநீங்கப்பெற்ற பின் நற்கீரனென்றுகொள்ளுதலே யமைவுடைத்தாம்.

பிரமதேவன்,

நிரப்பியவழிநாணனன்றாடுவாணீண்டவீணை
நரம்பிசைவாணிசாவித்திரியெனுநங்கைவேத
வரம்பின்மனுவாங்காயத்திரியெனுமடவாரோடும்
பரப்பிசைக்கங்கைநோக்கிப்படருவான்படருமெல்லை

(பரஞ்சோதிதிருவிளையாடல LI 3)

வாக்கின்செல்வி, விஞ்சைமாதராளொருத்திபாடுங்கானத்திலுள்ளம்போக்கிநின்றனளாக; அதனைக்கவனியாது பிரமதேவர் கங்கைக்

கரையைநண்ணி நீராடிடப் பின்சென்றபாமகள என்னையின்றி நீர் படிநதவாறென்னுமெனவெகுண்டனளாக,அம்புயத்தண்ணல், குறற நின்மேலதாக, நமமை நீகோபங்கொள்வதென எனறு, அதன் பயனாய்,

முகிழதருமூலநினமெயயாமுதலெழுத்தைம்பத்தொனறிற்
நிகழ்தருமஆகாராதிஹாகாரநீரூசசெப்பிய
புகழதருநாறபததெட்டுநாறபததெணபுலவராகி
அகழதருகடல்சூழ்ஞாலததவதரிதநிடுவெவாக

(பரஞ்சோதிதிருவிளையாடல் LI 8.)

எனற சாபமபெறறு,

அததகுவனனமெலலாமேறினனறவறறவறறின
மெயததகுதன்மையெயதிவேறுவேறியககநதோனற
உயததிலமஅகாரததிற்குமுதனமையாயொழுகுநாதா
முததமிழாலவாயெமமுதலவரமமுறையானமனறே. (LI 9.)

தாமொருபுலவராகிததிருவுருததரிததுசசங்க
மாமணிப்பீடததேறிவைகியேநாற்பததொனப
தாமவராகியுணணினறவரவாககறிவுதோறறி
ஏமுறப்புலமைகாப்பாரெனறனனகமலப்புததேள. (LI 10.)

எனறபடி யவதரிதது, அறிவோஙகியிருககுநாள, பலருமவந்து மத மேறகொணடு விஞய்விஞய வாதஞசெயதமைநோக்கி, ஆலவாயெம பெருமானைவேண்ட அவா, நாமகளுருவாயவநத நாவலர்தமககு வெளளைததாமரையபளிதனனைப பலகையாததநதனராக, அது கொணடு,

நாலுபூநதாமநாறறிநறுமபனிதோயநதசாநதசு
சேறுவணமலாவணடுசெழுமபுகைதீபமாதி
வேறுபலவஙகையாறபூசைவினைமுடிததிறைஞசிககீரன்
ஏறினன்கபிலனேடுபரணனுமேறினனே (LI 27.)

என்றபடி கீரனையுளளிட்டோர் நாறபததொனபதினமரும சங்கப் பலகையேறினா அககாலததரசன வங்கியசேகரனுவான. (LI-39) அவனதுமைநதன், ‘தென்கூடல, முன்னவரனனங்கண்டறியாத முடிக்கேறப, பனமலர்நல்குநநதனமவைக்குமபணிபூண்டு, மாதவி, பாதிரி முதலியவறறோடு சணபகத்தருக்களையும்வைததுச் சண் பகததாமஞசாறறியதுகொணடு சண்பகமாறனெனப் பெயர்வாய்க்கப் பெற்ற வங்கியசூடாமணிகாலததுத தருமிக்குப்பொற்கிழியளித்த

சரிதம் நிகழ்ந்தது. இதனைத் தடுததகீரன "தேய்ந்தநாண்மதிக்கண் ணியானுதல்விழிசசெந்தீப, பாய்நதவெம்மையிறபொறாதுபொறபங் கயததடததுள்" விழுந்தானாக; அனனவனை மறறைபபுலவர்கள் வேணடுகோடபடி கரையேறறியகாலததது, கீரன, தேன ஒழுகு கின்ற கொனறைமாலையையணிந்த கறைககணடன தன் நெறறிக் கணதீயினறசுட்டபோது மனமதன மடடவிழ்மலரோனலும, மாயவனுலுங் காக்கபபடடானிலலையாக, யா மநறறிக்கண்ணி னறசுடபபடடபோது உருபபாநதீரததுக காததது இததாமரைத தடாகமனறோவெனறு மனநினைடநிறுவி, மூனறுகாலமுழுழ்கி, ஆல வாயெமபெருமானைவழிபடுவானாயினனை. கருணைவளளல இவனது இலககணபபயிறசிக்குறைவையுமை அகவிருளையும நிவர்ததிபபான் கருதி, அகததியனபாறபோகவிடடானாக, அவனபால ஐயநதிரநத பிறகே'கீரநாமநறபுலவன'(LV-I)எனறபோபெறறனன. இதுகாறுங் கூறியவறறால நறகீரனும,கீரனு மொருவனேயெனபது ஒருதலையாம. அனறியும, கபிலபரணரோடு ஒருங்கு சங்கமிருநதான் நறகீரன் அல லது கீரனேயாம கபிலபரணரையுள்ளிடட நாறபததொனபதின மரே மூன்றாஞசஙகததது இருநதவாகள். அங்ஙனமாக, இரணடாஞ சங்கததது இருந்ததாகக்காடடுஞ சானறு ஒனறையும பிளளையவாகள குறித்திலா

II கரிகாலனமுதலாவான திருபபாசூாமுதலான க்ஷேததிரங களைக் கணடானெனறு புராணங்கூறும கிளளிவளவன தெனறிரு முல்லைவாயிலைககணடானென்ப அமாநீதிநாயனாரகதை நலலூர்ப புராணததுககாணபபடும அதுபோனறு நாயனமாாசரிதங்களும புராதனகாலததேயுள்ளன புராணங்களிற் கூறபபட்டிருககினறன இறறைககுச சுமாா இரணடாயிரவருடங்கட்குடபட்ட கூறறுக்க ளெல்லாம புராணக்களுட கணடதாக, எம சிறறறிவிற கெடடிய தில்லை நமது அபபாசுவாமிகளும் இககாலததிறகுபபிறபடடவராக வின் அனனார்சரிதம பழையபுராணங்களிற் கூறபபடவிலலைபோலும சுவாமிகள உடலோதயசசெனற கைலாயததை யாவருங்கண்டுகளிக்கு மாறு அருளிய திரு ஐயாறறு க்ஷேததிரபுராணததில்,அத்திருக்கோயி லைப்புதுப்பித்த சோழனொருவன் கூறபபட்டிருத்தல்போல, நமது சுவாமிகள்சரித்திரம் காணப்படவில்லை. இது பிரமகைவர்த்தத்தி

லிருந்து எடுக்கப்பட்ட புராணமாகும். அதனால், சுவாமிகள்காலம் புராணகாலத்திற்கும் பிந்தியதாகும்.

III. திருஞானசம்பந்தசுவாமிகள் கூன்பாண்டியன்காலத்தே இருந்தவரென்பது பிள்ளையவர்கட்கும் ஒப்பமுடிந்ததொன்றும். இக் கூன்பாண்டியனுக்கும், நக்கீரர்காலத்திருந்த சண்பகமாறனுக்கு மிடையே,

இந்திரனறனபழிதீரத்தியரசளித்தப்பின்புகதியினபமீந்த
சுந்தரனபொன்னடிக்கனபுதொடுத்துநறுஞ்சண்பகத்தாரதொடுத்துச்சாத்தி
வந்தனைசெய்திருத்தொண்டினவழிக்கேற்பச்சண்பகப்பூமாறவேந்தன
அந்தரசூடாமணியாஞ்சிவபுரத்துணிலைறசெலவமடைந்தானிப்பால.

ஆறறனமிகுபிரதாபசூரியனவங்கிசத்துவசனளவிலகீர்த்தி
சாறறரியவிரிபுமருத்தனனசோழவங்கிசாந்தகனறுனவென்றி
மாற்றரியபுகழ்ச்சேரவங்கிசாந்தகனபாண்டிவங்கிசேசன
தோற்றமுறுபரிதத்தாவங்கிசசிரோமணிபாண்டீசசுரன்றனமனனே.

துணிவுடையகுலத்துவசனவங்கிசபூடணமாறனசோமசூடா
மணிகுலசூடாமணியேயிராசசூடாமணியேமாற்றாரபோறறிப்
பணியவருமபூபசூடாமணியேகுலேசபாண்டியனேயெனனக்
கணிதமுறுபதினைவாவழிவழிவந்துதித்துநிலங்காவலபூண்டோர.

(திருவிளையாடல். LVI. 2—4)

(பின்பு வாதவூரினகண்ணே அமாத்தியரில் அருமறையிற றூய சிவாகமநெறியின் றுறைவிளங்க, வஞ்சனையான்மாயனிடும் புத்த விருள் உடைந்தோட அவதரித்த வாதவூரடிகளை நல்லமைச்சாய்க் கொண்ட அரிமாத்தனன்)

வாகுவலத்தானசகாத்தவழுதிவேந்தன்மகன்வீர
வாகுவவனசேயவிக்கிரமவாகுவவன்சேய்பராக்கிரம
வாகுவனையானமகன்சுரபிமாறனனையான்றிருமைந்தன
வாகுவலத்தான்மறங்கடிந்துமண்ணளுங்குங்குமத்தென்னன்.

அன்னான்குமரன்கருப்புரபாண்டியனுமவன்சேய்காருணிய
மனனுமவன்றன்மகன்புருடோத்தமனுமவன்றன்மகனுகும்
மினனாமௌலிச்சத்துருசாதனபாண்டியனும்விறல்வேந்தன்
இன்னான்மகன்கூன்பாண்டியனுமிவனரேள்வலியாலிசைமிக்கான்.

திருவிளையாடல் LXII 2, 3.

என்றபடி கூடலாண்டார் இருபத்தெழுவராவர், இவ்வரிசையிற் பிள்ளையவர்கள் பதின்மூன்றாமவனான குலசூடாமணியை மறந்து விட்டார்கள், சண்பகபாண்டியன் வீந்தபின் (திருவிளையாடல்

LVI. 2) நாடாண்டவர் பதினைவராகலின், அவர்களிற் குலசூடாமணியொருவனென்பது வெள்ளிடைமலை. நமதுகாலத்திலேயே மகாராணியார் அறுபதுவருடங்கட்குமேல் இராச்சியபாரம்செய்ய, அவரது திருக்குமாரர் பத்துவருடமேயாண்டனர். மகாராணியார் ஆண்டதே யற்புதமென்பராகலின், மன்னரொருவருக்கு ஆட்சிக்காலம் இருபத்தைந்துவருடமென்றுகொள்ளச் சுமார் 700-வருடங்களாகும். திருஞானசம்பந்தசுவாமிகள்காலம் சுமாராக இதுவென்றே கொண்டு நிற்றலின் அன்னார்காலத்துக்கு 700-ஆண்டுகட்குமுன்னர்த்தான் மூன்றாஞ்சங்கமிருந்ததென்பது உண்மையாம். அக்காலத்தேதான் கீரனும் நற்கீரனும் இருந்தனனென்பது பொருந்தும்.

IV. சேரமான்கணைக்காலிரும்பொறை தனது சேனையோடு வந்து சோழன்செங்கணானோடு பொருது ஆற்றாமையால் அவனாற்சிறையிடப்பட்டகாலத்துப் பொய்கையாரால் களவழிபாடி மீட்கப்பட்டானென்பது யாவரும் அறிந்தவிஷயமே. அச்சோழன்செங்கணானே பலதேவாலயங்களைப் புதுப்பித்து நன்னிலைக்குக்கொண்டுவந்தானென்பது கீழ்வருவனவற்றால் விளங்கும்.

கருவருந்தியின் முன்முகன் கண்ணனென்
றிருவருந்தெரியா வொருவனிடம்
செருவருந்திய செம்பியன்கோச்செங்கண்
ணிருபாதண்டலைநீணெறிகாண்மினே.

(திருஞானசம்பந்தசுவாமிகள் தண்டலைநீணெறிப்பதிகம்.)

செங்கட்பெயர்கொண்டவன் செம்பியர்கோன்
அங்கட்கருணை பெரிதாயவனே
வெங்கண்விடையாய் எம்வெண்ணாவலுளாய்
அங்கத்தயர்வாயினளாயிழையே.

(திருவானைக்காப்பதிகம் சுவாமிநாதபண்டிதர்பதிப்பு பக்கம் 334.)

என்று ஆளுடையபிள்ளையார் சிறப்பித்திருத்தலின் கோச்செங்கட்சோழநாயனார்காலத்துக்குப் பிந்தியது நமது சமயகுரவர்களில் இருவர் காலமும் என்பது நிதர்சனம்.

V. கீரனுயிருந்து அகத்தியரால் ஐயந்திரிபுநீங்கப்பெற்ற பின்பே நற்கீரனார் திருமுருகாற்றுப்படை ஓதினாரென்பது விழுக்கென்னே. அகத்தியமுனிவற்குச் செந்தமிழறிவுறுத்தருளியவர் முருகப்பிரானன்றே. அவ்வகத்தியரது சீடரும் இடையூறுநேர்ந்துழித் தாம் மனத்தூய்மையடைதற்குக்காரணராயிருந்த முனிவரது ஆஸ்ரயதெய்வத்தை வணங்குதல் இயல்பே.

சோமசுந்தரதேசிகன்.

௨

# மேல்நாட்டு நாகரிகம்.

நாகரிகமென்பது நகரத்தார்மரபு என்னும் பொருளுடைய வட மொழிச்சொல். விலைமிகுந்தவுடுபபணிவோரும, சுவைமிக்கவுணவு டியுணபோரும, விதம்விதமானவாகனமூர்வோரும நகரததிலுள்ளோ ராவா. கல்விகேள்விகளிற்சிறந்தோாகள கெழுமிய இடமும் அதுவே. வெகுவாய் ராஜசமூகஙகள நகரஙகளிலேயேயமைநது அரசாபோக் கைப பிரஜைகள்நேரிலறிந தநுசரிககவும அ து வே யிடமாயிருக் கிறது. இததகைய வியாதாரவாழவுக்குரியசாதனஙகள நகரங்களி லன்றிக் கிடையா. மிகுநதபொருளைசசேகாககவும செலவுசெய்யவும நகரங்களே நலவிடஙகளாய் இவ விருதலைப்பாடுள்ளவரும் சென் றடையு மிடங்களாகும. அதுபறறி யங்குளள செல்வர்களும அவர் களை நோக்கிய எளியோரும நடை உடை செய்கை தோறறம முதலிய வைகளால நாட்டாரைக்காட்டிலும மேனமையுடையாயிருபபர். இவறறுள், நடையென்பது பிறருடன்பழகுமமாதிரியையும, செய்கை யென்பது சாஸதிரப்பயிர்சசியாலுண்டுபணணும புகைவண்டி, தநதி, ஓடுசகடம முதலான நவீனசாதனங்களையும், தோறறமென்பது கணணுக்கோ, மனதுக்கோ புலபபடுவனவாய்க் கண்டோரும் அறிந தோரும் மெச்சத்தகுந்த வடிவத்தையும் குறிக்கும்.

நாட்டாரும இத்தகைய நகரத்தார்லக்ஷணங்களையே மேன்மை யுடையவைகளாய்க்கொண்டு தாங்களும் அவைகளைப்பெற!முயல்வர். இ ங ங ன ம நகரததார்பாறறோன்றும்லக்ஷணங்களுக்கே நாகரிக மென்றுபெயர்

ரி, மேல்நாடென்பது, உபலக்ஷணமாய் நம்மிந்தியதேசத் திற்கு மேறகேயிருக் ச ம பலதேசங்களில, தூரம்மிகுந்த ஐரோப்பாக கண்டத்தைப் பொதுவிலும், அதிலுள்ள ஆங்கிலதேசத்தைச் சிறப்புப் பறறியும கூறுமாயினும், இங்கு மேல்நாட்டுநாகரிகமென்பதற்குப் பொதுவாய் ஐரோப்பாக்கண்டவாசிகள்பால்தோன்றும் மேம்பட்ட லக்ஷணங்களென்று பொருள்கொள்ளவேண்டும்.

ஐரோப்பியரின் தற்காலநாகரிகத்துக்குக்காரணம் அவர்கள் சாஸ்திரப்பயிர்ச்சியும், செல்வமும். பிரகிருதிசாஸ்திரத்திலும் ரஸவாதத்திலும், கணிதத்திலும் விசேஷத்தேர்ச்சியுடையவரா யந்நாட்டார், ஜகத்துக்கின்றியமையாத சக்திகளான ஓசை, சூடு, ஒளி, மின்சாரம், காந்தம் முதலியவைகளில் நன்குபயின்று அவைகளை உண்டாக்கவும் சேர்த்துவைக்கவும் அழிக்கவும் வேண்டிய பலவிதகருவிகளைக் கண்டுபிடித்து அவைகளின் உபயோகத்தினால் உலகவாழ்க்கைக்குதவக்கூடிய சௌகரியங்களை யதிகப்படுத்தியிருக்கிறார்கள். அவைகளாற் காததூரத்தைக் கால்நாழிகையிற் கடக்கக்கூடிய வண்டிகளும், பதின்காதமவரை பளிச்சென வீசும் விளக்குகளும், நூறுகாத இடையீட்டிலுள்ளவரோடு நேர்நின்றுபேசுவதுபோற்பேசும் கருவிகளும் சித்தமாயிருக்கின்றன. இன்னும் இவ்வியந்திரஜாலங்களைக் கைத்தொழில்களில் உபயோகித்துத் தினந்தோறும் உலகவாழ்க்கைக்குதவும்பொருள்களை மிகுதியாகச் சொற்பகாலத்திற் குறைந்த செலவிற்செய்து உலகமுழுதும் அனுப்பி விற்று ஏராளமானசெல்வத்தைக் குவித்திருக்கிறார்கள். ஆதலின் அவர்கள் செல்வத்திற்குக் கல்வியும் அதை உலகவிஷயங்களுக்குபயோகித்தலில் விடாமுயற்சியும் ஊக்கமுமே காரணம். பலர்சேர்ந்தஇடத்து ஐக்கியமும், பிறர்மாட்டு நம்பிக்கையும், அவர்க ளொருவருக்கொருவர் தன்னலம் பாராட்டாமையும் முக்கியசாதனங்களாயிருந்து, அவர்கள் பலர்கூடிப் பெரியகாரியங்களிற் றலையிட்டு விசேஷலாபத்தையடையக் காரணமாகின்றன. அவர்கள் கடலைக்கடந்து கண்டவிடமெல்லாஞ்சென்று உடலைவெறுத்துழைத்துப் பாடுபடுதலில் தந்நிகரில்லாதவர். இத்தகையகுணங்களுடைய ஜனங்களிடத்துக் கல்வியிலும் செல்வத்திலும் மேம்பட்டுவிளங்கும் நாகரிகத்தையே மற்றநாகரிகங்களுக்கெல்லாம் உயர்வாகநினைக்கக்கூடிய நாகரிகமெனவெண்ணுகின்றார்கள்.

மேற்சொன்ன கல்வியின்மேன்மையால் உலகத்தார் எல்லோருக்கும் நன்மையையும் சௌகரியங்களையும் விளைவித்த ஐரோப்பியர் தங்களுக்குத் தீமைசெய்துகொள்வதிலும் சமர்த்தரானார்கள். பசுவின் பாலைக்கறந்து பாம்புக்களிப்பதுபோல் தங்கள் கல்வியின் திறத்தைக் கூட்டி உயிர்க்கொலைக்குரிய மகாசாதுர்யமான சாதனங்கள்செய்வதிற் செலவிட்டனர். பீரங்கியினின்றும் வெளிப்பட்டுக் காததூரத்துக்கப்

பாறிப்போய் விழுந்து விழுந்தவிடத்தில் வெடித்துச் சுற்றுமுள்ள உயிர்க ளையும் சகல ஸ்தாவரஜங்கமங்களையும் அழிக்கும் வெடிகுண்டுகளையும், துப்பாக்கிகளினின்றுகிளம்பி மனிதருடலிற்பாய்ந்து தானபதிந்த விடத்தில் வெடித்துக் கொல்லும் வெடிரவைகளையும், பெரியபீரங்கி களை நொடிப்பொழுதில் எத்திக்கிலும் திருப்பக்கூடியகருவிகளையும், அப்பீரங்கிகளுக்குக் குண்டுகளும் வெடிமருந்தும்போட்டுத் தீயும் பற்றவைக்கு மியந்திரங்களையும் கண்டுபிடித்திருக்கின்றனர்.

உலகில்வாழ் மற்றெல்லாவுயிர்களினும் மனிதன் ஒருவிதத்தில் தாழ்ந்தவன். மற்றெல்லாவுயிர்களுக்கும் தம்மைக்காத்துக்கொள்வ தற்கும் பகையைவெல்வதற்கும் இன்றியமையாததான ஆயுத மொன்று சிருஷ்டியில் அமைந்திருக்கிறது. புலிக்கு நகமும், குளி விக்கும் தேளுக்கும் கொடுக்கும், பறவைக்கு மூக்கும் இயற்கையி லமைந்திருக்கின்றன. ஆனால் மனிதனுக்கோ இவ்விரண்டுக்கு முதவக்கூடியவுறுப்பொன்றும் இயற்கையிலமையவில்லை. ஆயினும், வேறு இயற்கைப்பொருள்களைக்கொண்டு இவைகளுக்குதவும் ஆயு தங்களைச்செய்துகொள்ளும்பொருட்டுப் பகுத்தறிவென்னும் விசேஷ பாக்கியத்தை மனிதன் பெற்றிருக்கிறான். படிப்பினால் விஷயங்களை யறிந்து கல்வியாலுண்டாகும் ஆராய்ச்சியாற் புதிதுபுதிதான விநோதங் களைக் கண்டுபிடிக்கிறான். இப்பாக்கியமே யவன்துர்ப்பாக்கியமாய் எக்காலத்திலும் எத்தேசத்திலும் உயர்தரக் கல்வியின், உணவும் பொருளும்பெறற்குரிய சாதனங்கள்மிகுந்தவிடத்துப் பனிச்சென் றொளிமிகுத்துவீசும் விளக்கின்புறத்தேதொடரும் செறியிருள்போல அத்தனைக்கத்தனை கோரமான கொலைக்கருவிகளும் மிகுந்திருக்கின் றன. இயற்கையாற்பெற்ற வுறுப்புக்களைக்கொண்டே யெந்நாளும் ஒன்றுபோற்கொன்றும் தின்றும் உயிர்வாழும் மற்றஜந்துக்களையும் மனிதனையும் நேர்வைத்துநோக்கின் இவன் உயர்வுக்குக்காரணமான பகுத்தறிவே, இவனிழிவுக்குங் காரணமாய் மாட்டுக்குக் கொம்பைப் போலவும், பாம்புக்குப் பல்லைப்போலவு மாய்விடுகிறது.

உலகில் மற்றெவ்வுயிருக்குமில்லாதபொருளைக் கடவுள் கருணை யால் நமக்கருளியிருக்க நாம் அதை மற்ற ஜீவன்களுக்குள்ள வோரு றுப்பினிழிமைக்குத் தாழ்த்திவிடுதல் தேவதூஷணமாகாதா? இப

பகுத்தறிவாற்கண்டறியும் நூதனவிஷயங்களை யுலகத்தின்க்ஷேமத்துக்குமட்டுமே யுபயோகிக்கிறதென்றும், விபரீதங்களுக் குபயோகிக்கக்கூடாதென்றும் வரையறுத்து அங்ஙனஞ் சகலநாட்டாரும் அநுசரித்த அன்றுதான் மனிதனுக்கு மற்றஜந்துக்களைக்காட்டிலும் முயர் வேறுபடும். இத்தகையவிதிகளுக்கடங்கப் போர்புரியா தொருவரையொருவர் கோரமாயக் கொன்றுமாய்க்கும் ஐரோப்பியருடைய நாகரிகமானது, அவர்கள் புத்தியினும் மனத்தினும் புகுந்து அவைகளை விளக்கி, அவர்கள் கலவியும் செல்வமும் தாமவழிப்பட்டு உலகத்தார் நன்மைக்கும் க்ஷேமத்துக்குமே யுதவும்படிக்கும், கொடுங்கொலைத் தொழிலுக் குதவாதிருக்கும்படிக்கும் புகட்டாமையின், வெளியில் மாத்திரம்பொதிந்து உட்புகாத நாகரிகமாக மேல்நாட்டுநாகரிகம் விளங்குகின்றது.

## சிறுபஞ்சமூலம்.



பதினெண்கீழ்க்கணக்குகளிலொன்றாகிய சிறுபஞ்சமூலம் சென்னை ரிப்பன் அச்சியந்திரசாலையிற்பதிக்கப்பட்டிருத்தல் பலரும் அறிவர். அச்சிட்ட சிறுபஞ்சமூலப்பாடல்களுக்கும் புறத்திரட்டிற் கண்ட சிறுபஞ்சமூலப்பாடல்களுக்கும் வித்தியாசம் மிகவுங்காணப்படுவதால், அவற்றிற் சிலவற்றை ஈண்டு வரைகின்றேன்.

பொருளுடையானைக்கண்ணதேபோகமறனு
மருளுடையானைக்கண்ணதேயாகும்—அருளுடையான்
செயயானபழிபாவஞசேரானபுறமொழியு
மூயயானபிறாசெவியிற்குயதது (அச்சுப்பிரதி ௬)

இதனநானகாவதடி "பிறாசெவிககுயதது" என்று புறத்திரட்டிற் காணப்படுகிறது. இதுவே ஓசையினபமுடையதாகவிருக்கின்றது.

வானகுருவிககூடரககுவாலுலணடுகோற்றருதல
தேனபுரிநதியாககுஞசெயலாகா—தாமபுரிஇ
வலலவாவாய்ப்பனவெனனுரொரோரொருவர்க்
கொலகாதோரொனறுபடும். (அசசுப்பிரதி உஎ.)

இதற்கு உரைகாரர்,. .. ."தேன - தேனீக்களாற்றிரட்டப்பட்ட தேன்பொதியும, புரிந்து=விருமபியார்க்கும ... ... ... ஒரோவொருவருககு ஒல்காதோரொன்றுபடும" என்று பொருள் எழுதியிருக்கிறார். இச்செய்யுள, புறததிரட்டில்,

வானகுரீஇங்கூடரககுவாலுலணடுகோறறருதல்
தேன்புரிந்ததியார்க்தஞ்செயலாகா—தாமபுரீஇ
வலலவாவாய்பபனவெனறுரொருவருக
கொலகாதோரொனறுபடும

என்று காணபபடுகிறது. புரிநதது எனறிருபபின, பொருள்கொள்ளுதல சுலபமாகிறது. சங்கசசெய்யுளகளெல்லாம எளிதிறபொருளுணாககூடியன வேயொழிய வலிநதுபொருள்கொள்ளககூடியனவன மையின், புறததிரட்டுப்பாடமே நனறெனறு எணணுகிறேன.

பணடாரமபலகணககுககணகாணிபாததில்லா
ருண்டாரடிசிலேதோழரிற்கொணடாரா
யாககைககுததககவறிவிலலார்ககாப்படுப்பிற்
காககைககுககாப்படுததசோறு. (அசசுபபிரதி ௯௦)

இசசெய்யுளுககு உரைகாரராற கீழ்வருமாறு உரை எழுதபபட்டுள்ளது.

(ப - ரை.) "பணடாரம - பணடாரததினையும், பல்கணக்கு - பலகணககினையும, கணகாணி - கணகாணியையும, இல்லார் - தன்கோயிலிலுளளுறையு மங்கையரையும,உணடுஆர் அடிசில் - தனக குணணவாக்குமுணவினையும, பாதது - பகுதது, யாககைக்குததகக - மக்களுடம்பிறகுததகக, அறிவிலலா - அறிவில்லாரையும, தோழரிறகொணடாராய்-தன்தோழரைபபோலககொணடவராய், கா படுப்பின்-காவாவிடின, (அககாவல) காககைககு - காகததிறகு, சோறுகாபபு அடுதத - சோறறுக்காவலமைந்தாறபோலும" என - று. இது விளங்கவேயிலலை. இசசெய்யுள புறததிரடடில,

பண்டாரப்பலகணககுககணகாணிபாததில்லா
ருண்டார்அடிசிலேதோழனிற் கண்டாா
யாக்கைக்குததககவறிவில்லார்க்காப்படுப்பிற்
காக்கைககுககாப்படுத்தசோறு

என்று காணப்படுகிறது.

பண்டாரம் என்ற ஒருகுழுவினர் சங்ககாலத்திலில்லையென்பது நிச்சயமன்றோ. அஃதன்றியும், காக்கையைச் சோற்றுக்குக் காவலமைத்தாற்போல என்பது உவமானமாகையால், அதற்குத்தக்கபடி மேலும் காப்பு அடுப்பின் என வுச்சரிக்கப்படவேண்டுமேயொழிய கா படுப்பின் எனவுபிரித்துப் பொருள்கொள்ளுதல் பொருந்தாதாம்.

இதன்பொருள், பொக்கிஷக்கணக்கனையும், மேற்பார்ப்போனையும், பாத்திலலாருண்டாரையும், உணவே தோழனாக்கொண்டவரையும், ஸ்தூலதேகமுடையவனாயிருப்பதுகொண்டு அறிவிலியாயிருப்பவனையும் நம்பின், காக்கையைச் சோற்றுக்காவலுக்கு அமர்த்தியது போலாம் - என்பதாம்.

சோமசுந்தரதேசிகன்.

உ

ஸ்ரீவில்லிபுத்தூர் ஹிந்துஹைஸ்கூல்
தலைமைத்தமிழ்ப்பண்டிதர்
ரே. அப்புவையங்காரவர்களாலியற்றப்பட்ட

## அரசவாழ்த்து.

நேரிசையாசிரியப்பா

திருமார்த் திருவுறு திருமறு மார்பன்
சங்கு சக்கர மங்கையிற் கொண்டோன்
நல்லார் தமக்கிட ரெல்லாம் புரிந்த
பொல்லா வசுரரைக் கல்லா வரக்கரை
யமரி லழித்தடை யன்பரை யளித்து
நல்லறம் வளர்க்க நரசிங்க முதலாம்
பலவுரு வெடுத்தருள் சொல்லரும் பரம்பரன்
செழுநீர்க் குளங்களிற் கெழுமிதழ் விரிந்த
செங்கம லத்தில்வெண் சங்குற விங்குள
மின்னார் நுதற்கு மிளிர்முகத் தினுக்குந்
தன்னார் கலைசில தாங்குறை பொழுதும்
பொன்னார் கலையெலாம் பொருந்திய காலையும்

ஒவ்வா திருக்கு முறுதுயர்[1] தவிர்க்க
மதியதி லோர்ந்து மதியெனும் வானவன்
செந்தீ யதனிடைச் சேர்ந்தருந் தவத்தைச்
செய்தலை யொகருந் திருமலவி நாட்டில்
மின்னா பயோதா மேவிய சிறப்பாற்
கொன்னா தடம்புயக் குரிசிலை யொக்கும்
பொழில்புடை சூழும் புதுவைமா நகர்வாழ்
கோதை சூடிக் கொடுத்தருள் தண்பூங்
கோதை சூடிக் குதூகலத் தோடும்
ஐவா யரவி லறிதுயி லமர்ந்தருள்
மணிவண்ண னாகிய வடபத்ர சயனன்
செந்தா மரைபுரை திருக்கண்ண னருளால்
மன்னர்பா லன்பு மறமு மானமும்
உற்றிடத் துதவலு முள்ளுஞ்சோர்வி லாமையும்
முதலிய வாக மொழியு நற் குணமமை
நல்லோர் பல்லோர் நண்ணவு முடன் புறத்தாய்
இங்கில லாப்பொரு ளெங்கணு மிலையெனப்
புங்கவர் புகழெலாப் பொருளு முடையதாய்க்
கண்ட பொழுதே கண்சுழன் றென்னர்
மண்டனில் வீழ்ந்து மாய்ந்திடச் செய்வல
பற்பல வகையா நற்பொறி படைத்ததாய்
அருமையு முயர்வு மகலமுந் திண்மையும்
அமைந்த மதிலா னாழ்திரைக் கடலாம்
நீரரண் முதலிய நீளர ணுடையான
தானமுயன் றியற்றிய தவத்தி லியாவர்க்கும்
வேண்டிய வேண்டிய விழுமிய பொருள்களை
நல்குமா வணங்களு மலங்கா வணங்களும்
மாடமா ளிகைகளுங் கூடகோ புரங்களும்
பாடசா லைகளும் பலதொழிற் சாலையும்
கலங்களிற் சரக்குங் கணிப்பரும் பொருள்களும்
நிலங்களிற் சரக்கு நீணிதி வகைகளும்
இங்கிதிற் போலுல கெங்குமுற் றிலவெனக்
கண்டவர் புகழும் லண்டன்மா நகரான்

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்ட
பெருமை மருவிய பெரியோர் குழாங்களுங்
கலவி யறிவொழுக கங்களோ டுயர்ந்த
செல்வமுஞ் சேருந் திருவுடை மன்னரும்
மணியினும் பொன்னினு மற்றைய பொருளினுஞ்
செய்கல முதலிய சோபபதும விறபதும
ஆம்வா ணிகத்தி லரும்பொருள் பெறுநரும
அவரவா தகுதிக் கமைவதாம முயறசியைக்
குறைவறச செய்து நிறைபொரு ளுறுநரும்
இன்பமு மேமமு மேவியெப பொழுதும
துனபமே யிலாத தோமிலா தோரும
ஆகிய பலவகை யருமபெருங் குடியினுள்
ஒருகா ரியசசெயல பலவாத தோன்றின
அவறறு ளாவ தாராயந தறிந்து
செயுநகால வாய்க்குந திறனறிச் செய்தலுந்
துணிவு பிறக்கும் வகைசொல் லுதலும்
ஆலம் வீழ்போ லாசினை தாங்கலும
வலல வமைசசாகண மனனுநல லவையான
கூறறுவன் றுனை கொதிததுமேல வரினும
மனமலை யாது மலைந்திடு மாறறலசால்
பகைவரை வெகுண்டு பார்க்குங் கண்கள
அவர்வே லெறியவஃ தாறறு திமைக்கிற
புறங்கொடுத திடுதலைப பொருவுமென் றதுவுஞ்
செய்கிலா வீரமுந் தீரமு மேவிப
பறறலா முறறவும படுகளத தவிய
எற்றிடு வனபடை வெறறியம படையான்
பகைவாற காணப படாபபின் பாலன்
எட்வர்ட் சக்ர வர்த்தியின் பாலன்
அவரவர் சமய மாறிய கெடாமற்
றண்ணருள் புரிதலிற றநதைதா யனையான்
இனியன வருளியு மிதமதைப் புரிந்துந்
தனையடை பவர்க்குத தநதைதா யனையான்

இரவி மறையா விரும்பேரு நாட்டினன்
நன்மை யெங்கணு நலம்பெற் றோங்கவும்
புன்மையிவ் வுலகின் புறம்போ யேங்கவுஞ்
செங்கோல் நடாத்தும் ஜயவீர சிங்கம்
ஐந்தாம் ஜார்ஜெனு மழகிய பெயரினன்
நாவலர் புகழுங் காவலர் பெருமான்
எளியரை வலியவ ரெதிர்த்திடா வினைத்தற்
கிரங்கி யவர்க ளிணைவொழித் திடுதற்
கேன்று புரிந்திடு மிப்பெரும் போரிற்
பரவிய கொடிய பகையிரு ளோட்டிப்
பகற்கதி ராமெனப் பல்கொளி நாட்டி
ஆங்கில ராட்சியே யவனியி லோங்க
வெற்றி மாலையை மேதகப் புனைந்து
இங்கிலாந் திந்தியா விவைமுத லெவைக்கும்
ஏகசக் ராதி பதியா யிலகித்
தீர்க்கமா மாயுளுந் திடகாத் திரமுங்
குறைவிலாச் செல்வமு மறைவிலா ஞானமும்
பெற்றொளி நிறுவிப் பெரும்புகழ் தழைத்துப்
பீடுபெறு மேரிப் பெருமாட்டி யொடும்
புத்திர பௌத்திர புகல்பிர பௌத்திர
மித்திர ராதியர் மேதகு கிளையொடும்
பன்னருஞ் சிறப்பொடும் மன்னி
நீடூழி யுலகில்நீ டூழிவா ழியவே.

### மதுரைத் தமிழ்ச்சங்கத்தின்
### பதினான்காம்வருஷோத்ஸவ
# மங்களவாழ்த்து.

#### நேரிசைவெண்பா.

நல்லோர்வரவுநனிநன்றுநல்லகல்வி
வல்லோர்வரவுதனிமாண்புடைத்திவ—வெல்லா
மொருதலைதோன்றவுயர்சாமிக்கண்வேள்
வருதலிதுநலவரவு.

#### நிலைமண்டில ஆசிரியப்பா.

மண்டலமெவற்றினுமெண்டகுசீர்சால்
விண்டலத்தேவருங்கண்டுளமுவக்கும்
நந்தமிழ்நாட்டினுள் அந்தமில்தொல்சீர்ச்
சுந்தரமிகுந்துசந்திரமௌலிமுன்
சோமசுந்தரனெனநாமம்புனைந்து
கோமகனாகிக்குவலயம்புரந்து
நற்றமிழ்ச்சங்கநாயகனாக
வுற்றினிதமர்ந்தவுயர்மதுரைக்கண்
தென்னார்முன்வளர்த்ததிறம்போன்றின்றும்
மன்னவைநிறுவிவளர்த்தனன்றமிழை
வேண்டிநூலியாவையும்விற்பனர்க்குதவும்
பாண்டித்துரையெனுமாண்டகையதன்பின்
தண்டமிழ்காக்குந்தலைவனென்றுயர்ந்தோர்
எண்டிசைபுகழும்ராஜராஜேச்வர
சேதுபதியெனவோதிடுமுகவை
ஆதிபனதிபதியாகவமர்ந்துதன்
முன்னோர்புரிந்தமுறையிற்புரக்குந்
தன்னேரில்லாத்தமிழ்ச்சங்கத்தின்
பன்னான்காண்டெனப்பன்னுமிவ்வருட
நன்னாளுற்சவநலந்திகழ்ந்தோங்க

இந்நிலமதனிற் பொன்னகரெனச்சொல்
சென்னை லண்டனென னுஞ்செழும்பதிகளிற்
கனம்பெறுசர்வகலாசங்கத்தில்
திணைபுகழ்கல்வியிற்றேர்ச்சிபெற்றுயர்தரப்
பட்டமாகியதிவான்பகதூரெனப்பெய
ரொட்டியசிறப்புற்றுயர்ந்தோனாகி
ஆங்கிலமலாட்டினரியபிராஞ்சுட
னோங்கியகிரீக்கெனவுபாகானகுமொழியினும்
வல்லவனாகிச்சொல்லருங்கணித
எல்லைகண்டவனெனறியாவருமியம்பத
தனிநாதானுந்தமிழுமாரியமும
உன்னிப்பயிலுமுயர்குணக்குரிசில
செந்தமிழ்நிலத்துமவந்தமிழ்க்கத்துனு
சந்ததங்கருணைசிந்தனைமறவான்
பூதலத்தெவருஞ்சோதரமுறையில்
ஆதரத்தொடுசேர்ந்தடைந்திடுநன்மை
முக்கியமெனச்செய்யுமைக்கியசங்கம
மிக்கபலகிளையுடன்மேம்படநாளுமச்
சங்கமபலவுந்தமிழ்தமிழ்நாட்டிடுந
துங்கமேவுசுவாமிக்கண்ணனும
பேர்திகழ்பலபெற்றிடுங்கோமான்
சீர்திகழ்ச்சபைச்சிறப்புற்றோங்க
வந்தூற்றலைமைவகித்தனனிதுவும்
நந்தமிழ்ச்சங்கநற்பாக்கியமே
தமிழ்நாடியறிந்தவப்பெரும்பயனே
அமிழ்தனதமிழ்மாதரியநற்றவமோ
யாதெனப்புகல்கேமிப்பெருமபாக்கியம்
மாதலப்புகழ்மதுரைத்தமிழ்ச்சங்கம்
இன்றுபோலென்றுமினிதுதழைத்து
நன்றுபல்லாண்டுநடைபெறும்வண்ணம
எங்கணுநிறைந்துறைபல்லாபவல்ல
புங்கவனிணைப்படிபோதிறைஞ்சுதுமே.

நேரிசைவெண்பா.

வாழ்கமறையோர்மதுரைத்தமிழ்ச்சங்கம்
வாழ்க இவணுறைபுமாசபையோர்—வாழ்க
முறைதிறம்பாக்காத்துமுழுதுலகந்தாங்கும
இறைமகன்செங்கோலுமினிது.

நல்லசிவன்பிள்ளை.

உ

மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்
பதினான்காம்வருஷோற்சவ காலத்தில்
புரொபஸர் ஜே. ஸி. போஸ் அவர்கள்
விஜயஞ்செய்தபோதுகூறிய

# மங்களவாழ்த்து.

கலிவெண்பா.

மன்னு வளம்படைத்த வங்காள நன்னாட்டுத்
துன்னுநலை சேர்மதிபோற் றோன்றியே—பன்னு
திருவகலாச் செம்மை திகழ்தருமந் நாட்டுச்
சருவகலா சாலைச் சபைக்கண்—ஒருவனென
எண்ணுறக் கமர்ந்துலகு மெச்சக்கலையு நனுராய்ந்து
மண்ணிற் பவுதிகத்தின் மாண்பனைத்தும—நுண்ணுணர்வாற்
கண்டுணர்ந்தி யாருமினு காணாப் புதுமையென
விண்டுவியப்பப் பெய்த விளக்கியோய்—உண்டுயிரென்
றெண்ணாத பலபொருட்கு மேயுயிரென் றெவர்க்கும்
கண்ணாரக் காட்டிக் களிப்பித்தோய்—பண்ணார்நின்
தேயமொழி யைப்பரிவிற் செல்வச் செழுஞ்செவிலித்
தாயெனநன் றோம்புந் தகவுடையோய்—தூயவென்றி
மேவுந்திறல் படைத்த மேனாடும் நல்லமெரிக்
காவும் வியந்து களிப்பெய்தப்—பூவுலகில்
தங்குஞ ஜகதீச சந்திரபா சென்றறிஞா
எங்கும் புகழ வினிதிருப்போய்—துங்கமிகு
பாண்டியர்முன் காத்த பயன்மிகுகூ டற்பதிக்கண்
ஈண்டுபுகழ் ராஜராஜேஸ்வரப்பேர்—ஆண்டகையாம்
சேதுபதி காப்பத் திகழுந் தமிழ்ச்சங்கம்
ஆதுபதி லுலாண் டினிதெய்தி—தீதின்றி
மன்னியது மற்றிதற்கு மாதகையோய் நின்வரவும்
உன்னிய திலாமே யுறுதலால்—துன்னு
வளமருவி யாண்டு மகிதலத்திச் சங்கம்
தளர்வகன்று வாழும் தழைத்து.

V. S. அரங்கஸாமி ஐயங்கார்.

செந்தமிழ்

தொகுதி-௧௩.] ராக்ஷஸ ௵ ஆவணி ௴ [பகுதி-௧௦.
Vol. XIII. August–September, 1915. No. 10.



# ருதுமதீவிவாஹமும், அதன் பராமர்சமும்.

## (1) ருதுமதீவிவாஹம்.

இந்த தென்னிந்தியாவிலுள்ள இந்துக்களில் பிராமணர்கள் எல்லாவகுப்பினரும், இதரஜாதியார்களில் சிலவகுப்பாரும், தங்கள் பெண்களை ருதுவாவதற்குமுன்னமேயே மணஞ்செய்துகொடுப்பது என்கிறவழக்கத்தை நீடித்தகாலமாக அநுசரித்துவருகிறார்கள்.

## பராமர்சம்.

(1) இந்த "ருதுமதீவிவாஹம்" என்னும் விஷயபரவசனமானது பெரியகுளம்வக்கீல் மகா-௱-௱-ஸ்ரீ M. R. ஸ்ரீநிவாஸையரவர்களால் வெகுதூரம்பரியாலோசித்து ஆசாரத்திருத்தவிஷயங்களினின்றுஞ்சிறிய தென்றுதெரிந்தெடுக்கப்பட்டதாய்ப் படிப்பவர்மனதிற்பதியும்படி விஸ்தரித்தெழுதப்பட்டுவருகிறது.

இது, நம "செந்தமிழ்"ப்பத்திரிகைக்குப் பொருத்தமில்லாத தென்று சிலர் நினைக்கக்கூடியதாயிருந்தபோதிலும், பரதகண்டமுழுதும்பரவிய இந்துமதத்தினர்க்கெல்லாம் நன்மையுண்டாக்கவிரும்பிய நன்னோக்கத்துடன் விரைவிற்சட்டமாக்கிக்கொள்ளவேண்டுமென்று அபிப்பிராயப்படும்விஷயமென்றுதோன்றுவதால், இதன் சாதகபாதகங்களையும், சாஸ்திரதாற்பரியங்களையும் தக்கமேதாவிகளும் பண்டிதர்களும் பரியாலோசனைசெய்து நன்மையும் உண்மையுமுள்ள ஒரு பக்ஷத்தில் எல்லோரும் ஒன்றுபட்டிசைய உபகாரமாகுமென்னுங்கருத்தால் இடையிடையே பத்திராதிபர்க்குத்தோன்றும் அபிப்பிராயமும் பராமர்சமென்னும்பெயருடையதாய்க் கீழேகுறிக்கப்பெற்று வெளியிடப்படுகிறது.

அதனால் அநேககெடுதல்களுண்டென்றும், ப்ரௌடையானபிறகு பெண்களுக்குக் கல்யாணம்செய்வதாயிருந்தால் அதனால் (2) அநேக நன்மைகள் ஏற்படுமென்றும் பரியாலோசனைபண்ணி அப்படிசெய்யப் பிரியமுள்ளவர்களுக்கு அடிகல்யாணம் சட்டப்படிசெல்லாதென்றாவது அக்கல்யாணத்தின்மூலமாகப்பிறக்கிறகுழந்தைகளுக்கு மற்றக்குழந் தைகளைப்போலதம் வார்சுக்கிரமப்படி சொத்துக்களையடையப் பாத்திய மில்லையென்றாவது ஏற்படாமலிருக்கும்பொருட்டு, ருதுமதீவிவாஹம் சட்டப்படி செல்லத்தக்கது என்று ஒருசட்டம் ஏற்படுத்துவதற்காக மதராஸ் சட்டநிரூபணசபையில் கனம் வி. எஸ். ஸ்ரீநிவாசசாஸ்திரி அவர்களால் ஒருமசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பது யாவருக்கும் தெரிந்தவிஷயம்.

அடி மசோதாவிஷயமாய் எல்லாஊர்களிலும் விசாரணையும், ஆக்ஷேபசமாதானங்களும் ஏற்பட்டு, அவைகள் மீட்டிங்குகள்மூலமா யும் பத்திரிகைகள்மூலமாயும் விவகரிக்கப்பட்டுவந்திருக்கின்றன.

மேலேவிவரித்திருக்கிறகாரணங்களினால், ருதுமதீவிவாஹம் அவ சியமென்றுநினைத்தபோதிலும் அதைச சர்க்கார்மூலமாகச செய்து கொள்ளவேண்டுமா? நாமேசெய்துகொள்ளக்கூடாதா? என்கிறவிஷயத் தைப்பற்றிப் புத்திமான்கள் பலவிதமாக அபிப்பிராயப்படுகிறார்கள்.

நம்முடையதேசத்தில் மகான்களாகிய ருஷிகள் ஆதியில் ஸ்மிருதி கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இப்பொழுது நம்முடைய மடாதிபதிக ளும், சாஸ்திரிகளும் இருந்து ஒருவிஷயத்தை மனதில் ஏற்கனவே தீர்மான அபிப்பிராயமாகவைத்துக்கொள்ளாமல், சாதகபாதகங்களை

(2) பலதேசங்களிற்பரவியிருக்கும் விவேகம்நிறைந்த ஒரு கூட டத்தாரால வெகுகாலமாய் அநுஷ்டிக்கப்படாதுவிட்டிருக்கும் ஒரு புதியவழக்கத்தை ஸ்தாபிக்கப்புகுவதால, பிரகிருதவிஷயத்தில, "ப்ரௌ டாவிவாஹத்தால அநேகநன்மைகளேற்படு"மென்றுமட்டும் சொல்வது போதாது! மனிதர்விரும்பும் ஒவ்வொருவிஷயத்திலும் நன்மைதீமைக ளிரண்டுமேவிரவிக்கிடப்பதால விவாதவிஷயமானஇருவகைவிவாஹங்க ளுள் ஒவ்வொன்றிலுமுள்ள நன்மைகளிவை, தீமைகளிவையென்று சாமான்யஜனங்களு மறிந்துகொள்ளும்படி தேசபாஷையில் வியக்தமா யெழுதிவெளியிடப்பட்டபுஸ்தகங்களைக் காட்டவேண்டும். காட்டினால

யோசித்து ஒருஅபிப்பிராயத்துக்குவந்தால் அதை அநுஷ்டானமாக நாம் எல்லோரும் அநுஷ்டிக்கலாம்.

ஆனால், பிரகிருதஸ்திதியில் அது கொஞ்சமேனும் சாத்தியமில்லையென்பது தெளிவானவிஷயம். (3) இப்படிப்பட்டவிஷயங்களைப்பற்றிப் பேசுவதற்காகக் கூட்டப்பட்ட பரிஷத்துக்களினால் ஒருபயனும் ஏற்படவில்லை, ஏற்படக்கூடியதாகவும் இல்லையென்றுதோன்றுகிறது.

தானாகவே அநுஷ்டானங்களின்மூலமாக வரவரச் சீர்திருத்தங்கள் தேசத்தில் ஏற்பட்டு, அவைமூலமாக ருதுமதிவிவாஹம் முதலியவிஷயங்கள் இத்தேசத்தில் அநுஷ்டானத்துக்குவந்துவிடுமென்று சிலர்சொல்லுகிறார்கள். அப்படிச்செய்வதாயிருந்தாற் கட்டுப்பாடு என்பது இல்லாமல் அவரவர்கள் இஷ்டப்படி நடபடிக்கைகள்நடத்திக்கொள்வதற் கிடமுண்டாய்விடும். அதனால், இப்பொழுது ஏற்கனவே ஹிம்சைகளுக்குக்காரணமாயிருக்கிற பலஜாதிப்பிரிவுகளுக்குள் இன்னும் ஜாஸ்தியான

அவற்றைப்பார்த்து நன்மையுள்ளகக்ஷியில் ஜனங்கள் ஏகீபவித்துநிற்பதற்கு எளிதாயிருக்குமென்றுதோன்றுகிறது.

---

(3) இப்படிப்பட்டவிஷயத்தைப்பற்றிப்பேசுவதற்காகக்கூட்டப்பட்டபாரிஷத்தால் ஒருபயனும் ஏற்படவில்லையென்று சொல்லப்பட்டிருக்கிறது. கூடியபாரிஷதா எடுத்துக்கொண்டவிவாதவிஷயத்தைப் பரியாலோசித்துநிர்ணயிக்கத்தக்கோராய்வந்திருந்தால், பிரதிகூலகக்ஷியை நிரசித்து அநுகூலகக்ஷியின் அபிப்பிராயத்தை யுறுதிப்படுத்தியிருப்பார்களாகையாற் பயனேற்பட்டேயிருக்கவேண்டும். பயனேற்படவில்லையாயின், பரிஷத்தாற் பயனேற்படவில்லையென்றுசொல்வது பொருந்தாது. கூட்டினோர்குறையென்றே கொள்ளவேண்டும். அல்லது ஏற்கனவே ஒரு அபிப்பிராயத்தைத் தீர்மானமாக மனதில்வைத்துக்கொண்டிருப்போமானால், பாரிஷத்தாத்தீர்மானம் நியாயமுள்ளதாயிருந்தாலும், அது எதிர்க்கக்ஷியில்நிற்குமானாற் பயனற்றதாய்முடியும். ஆகையால், பிரகிருதவிஷயத்திற் பாரிஷத்தர்கூட்டம் எந்தவிதத்தாற்பயனற்றதாயிற்றென்பதையோஜித்துப் பயன்படும்வழியில், திரும்பவும்கூட்டவேண்டும். எடுத்துக்கொண்டவிஷயமானது, வெவ்வேறுபாஷைகளையும், வெவ்வேறுகொள்கைகளையும் உடையராயிருக்கச்செய்தேயும்

உட்பிரிவுகளும் கக்ஷிகளுமஏறபட்டு, ஹிந்துமதததுக்கு ஏற்பட்ட தர்மம் இன்னது என்பது வியகதமாயிலலாமலும, ஸ்மிருதிகள் முதலியவிதிக ளுககு ஜனஙகள் கட்டுபபடாமலும குழப்பம ஏற்பட்டு இநதுமதமே சீர்குலைநதுபோயவிடுமெனறுதோனறுகிறது.

அபபடிச சீருகுலைநதுபோவதைவிடச சாதகபாதகஙகளையோசிதது சாசகாரமூலமாக மிகவும அவசியமானகாலங்களிற் சட்டஙகளை ஏறபடுததிககொளவது பாதகமில்லையென்றுதோன்றுகிறது.

இபபொழுதுகொண்டுவரபபட்டிருககிற ஹிநதுருதுமதிவிவாஹ மசோதாவில, "ஹிநதுலாவிதிபில வேறுவிதமாகசசொலலியிருநத போதிலும ருதுமதிவிவாஹம சட்டபபடி செலலாததாகமதிக்கததகக தில்லை" எனபதுமுதலிய விதானஙகளைசசோததிருபபதில அவவளவு விஸ்தாரமானபதங்களைபபிரயோகிபபது உசிதமிலலையெனறுதோன்று கிறது.

---

பாதகண்டமுழுதுமபரவிய விவேகமுள்ள உயாந்தவகுப்பாரெலலோரா லும நீடித்தகாலமாய் வித்தியாசமில்லாமல் அநுஷ்டிககபபட்டுவருமு ஆசாரததைததிருததும பெரியவிஷயமாயிருப்பதால் விஷயகௌரவத் துககேறப ஆசேதுஹிமாசலமாகக கிராமஙகளிலும நகரங்களிலும தககோராயப பிரஸித்திபெற்ற தாமக்ஞாகளாயும், சாஸ்த்ரக்ஞர்களாயும், சதாசாரசீலாகளாயும் உளள பராமாணிகர்களைப் பாரிஷதாகளாககூட்டி

மேலும உபயகக்ஷியிலும சித்தித்த்ராததோன்றை (அதாவது ஒரு கிராமகிராமாணததிற புதிதாய்க்கட்டும் தெருவைக் கிழமேலாயககட்ட லாமா? தெனவடலாயககட்டலாமா? என்பதுபோனறவிஷயததை) நிச சயிபபதறகே, சபையோருட் பாதிக்குமேறபட்ட பெரும்பாலாரபிப்பிரா யம்வேணடுமென்பது வழககததிலிருப்பதால, இபபோது உபயகக்ஷியி லும் அநுபவசித்தமாயுள்ள (அதாவது வெகுகாலமாய்க கிழமேலா யிருநதுவநதிருககிறதெருவையழிததுத தென்வடலாயக கட்டுவோமா? வேண்டாமா? எனபதுபோனற) கந்யாவிவாஹத்தைவிட்டு ருதுமதி விவாஹத்திற்பிரவிருத்தி போமா? வேண்டாமா? என்றவிஷயத்தைநிச யித்து, அநுபவசிததத்தைமாற்றும்பக்ஷத்தில் குறைந்தஅளவு நான்கில் மூன்றுபங்குக்குமேறபட்ட பாரிஷதரபிபபிராயமிருககவேண்டுமென்று தோன்றுகிறது.

ஏனென்றால் ஆதிமுதல் நமது ஆங்கிலேயராஜாங்கத்தார் கூடிய மட்டும் மதசாஸ்திரங்களுக்கு விரோதமில்லாமல் நமக்குச் சட்டம் ஏற்படுத்தி அரசாட்சிசெய்வதாகச் சங்கற்பித்துக்கொண்டிருக்கிறார்கள். அந்தப்பிரகாரமே கோர்ட்டுகளிலும் நியாயம் அளிக்கப்பட்டுவருகிறது. அப்படியிருக்க "ஹிந்துசட்டம் எப்படியிருந்தபோதிலும்" என்று சொல்லுவது இனிமேல் ஹிந்துசட்டத்தை அவமதித்தே சட்டங்கள் செய்யலாமென்று எல்லாரும் வியவகரிக்க ஒருபெரிய ஆதாரவாக ஏற்படக்கூடுமென்று நான் பயப்படுகிறேன்.

மேற்கண்டபடி எழுதியிருப்பதை எடுத்துவிட்டு "ருதுமதிவிவாஹ விஷயமாக (4) இந்துஸ்மிருதிகள் ஒரேவிதமாக அபிப்பிராயப்படாத தனாலும், ஒருஸ்மிருதியாவது அப்படிப்பட்டகல்யாணத்தை வர்ஜிக்கத் தக்கதென்று தள்ளும்படிசெய்யாததனாலும் ஷெ கல்யாணம் ஹிந்து சாஸ்திரசம்மதமா என்கிறவிஷயத்தைப்பற்றிச் சந்தேகங்கள் ஏற்படுவ தால் ஷெசந்தேகத்தைநிவர்த்திக்கும்பொருட்டு" என்று மாற்றி எழுத வேண்டுமென்று தோன்றுகிறது.

---

அல்லாமலும், இத்திருத்தத்தால் ஸ்திரீகளுக்கு அதிருஷ்டபலத்தை யெண்ணிவிட்டாலும், அவர்கள் விவாஹஸம்ஸ்காரத்தால் பால்யத்தி லேயே அடைந்துவந்திருக்கிற த்விஜன்மமென்னும் பழையமேட்டிமை யாகிய திருஷ்டபலத்தை ருதுமதியாகும்வரை சிலகாலமிழந்திருந்து பின் புதியமேட்டிமை (சிவிலிசேஷன்) அடையவேண்டியவர்களாயிருப்ப தால், அவர்களபிப்பிராயங்களையும் ஊர்தோறுங் கூட்டங்கூட்டிக் கேட் டறியாது நாமே பலாத்காரமாய்ச்செய்வதும் நம புதியமேட்டிமைக்குப் பொருந்தியதாவென்பதும் யோசிக்கவேண்டும்.

---

(4) "ஹிந்து ஸ்மிருதிகள் ஒரேவிதமாக அபிப்பிராயப்படாததனா லும்" என்று சட்டமசோதாவைத்திருத்துவதும் ஆலோசித்துச் செய்ய வேண்டுமென்று தோன்றுகிறது. ஏனெனில் ஸ்மிருதிகளெல்லாம் வேதோபப்ருஹ்மணம (வேதத்தின்வியாக்கியானம்) என்றும், அவையெல் லாம் பிரமாணங்களென்றும், பின்னபிப்பிராயங்களில்லாதனவென் றும், ஒரேவிதமானஅபிப்பிராயங்களேயுள்ளனவென்றும் சாஸ்திரக்ஞர்க ளான பிராமாணிகர்கள்சொல்லக்கேட்டிருக்கிறேன். சில இடங்களிற் கேவலவ்யுத்பன்னர்க்குச் சில ஸ்மிருதிவாக்கியங்கள் ஒன்றற்கொன்று

நம்முடையசாஸ்திரங்களுக்கும் ஆதிமுதல் ஏற்பட்டுவந்திருக்கும் அநுஷ்டானங்களுக்கும் முற்றுமவிரோதமாகஇருக்கிற விதவாவிவாஹ விஷயமாக ஏற்பட்டிருக்கும் பூர்வபீடிகை(Preamble)ஹிந்துமதத்தின் விதிகளின் உண்மையானதாத்பரியத்தை அநுசரித்துச் சட்டம் ஏற்படுத்துகிறதாகச் சொல்லுகிறது. அப்படிப்பட்டசட்டமே சாஸ்திர தாத்பரியத்தை அநுசரித்திருவதாகப் பாவனைபண்ணிக்கொண்டு

---

மாறுபட்டஅபிப்பிராயமுடையனபோலத்தோன்றுகின்றன. அவற்றிற் கெல்லாம் சாஸ்திரகளுர்களான பண்டிதர்கள், சாஸ்திரார்த்தங்களை நிச்சயிப்பதற்கென்றேற்பட்டுள்ள நியாயப்ரவிர்த்திகளாலும், உதஸாக் காபவாதலக்ஷணங்களாலும், சாவகாச நிரவகாச ஸாமாத்தியாதி விஷ கங்களாலும் அபிப்பிராயபேதமில்லாதனவாகவே ஆத்தமசொல்லு கிறார்கள். அப்படி ஆத்தமசொல்லும் மார்க்கமானது அவர்களாற் கற் பித்துக்கொள்ளப்படுவதில்லையென்பதும்,சாஸ்திரசித்தங்களாகவேயிருக் கின்றனவென்பதும் நன்றாய் அறியலாம். அந்தமார்க்கங்களைச் சாஸ்தி ரங்களும், ஸ்மிருதிகளும், வேதங்களும் அவலம்பித்திருப்பதால் அந்த வழியில் ஆத்தமபண்ணும்பொழுது ஹிந்துசாஸ்திரங்களெல்லாம் ஒரே அபிப்பிராயமுடையனவாதலன்றிச் சிறிதும் பின்னபிப்பிராயமுடையன வாகக் காணப்படுவனவல்ல. ஆகையால் "ருதுமதீவிவாஹவிஷயமாக ஹிந்துஸ்மிருதிகள் ஒரேவிதமாக அபிப்பிராயப்படாததனாலும்" என்று சட்டமசோதாவைத்திருத்துவதும் பொருந்தாதென்றுதோன்றுகிறது.

அன்றியும், " இந்துலா எப்படியிருந்தபோதிலும்" என்றெழுதுவதையேஸஹியாத நாம "இந்துஸ்மிருதிகள் ஒரேவிதமாய அபிப்பிராயப் படாததனால் என்று எழுதிவிடுவோமானால், இந்துசாஸ்திரங்களில் அலக்ஷியபுத்தியுண்டாயப பிரசித்தத்தில் நமக்கு அங்கீகாரமில்லாததாய்க் கொள்ளப்பட்டிருக்கும் அந்நியஜாதிவிவாஹமுதலாகியகாரியங்களில் எவன் என்னசெய்யவேண்டுமானாலும் செய்யலாமென்பதற்கும் வேண் டிய ஆதாரங்களகாட்டிச் சட்டம்செய்துகொள்ள இடமுண்டாய்விடு மென்பதையும் யோசிக்கவேண்டும். பிரமாணசாஸ்திரங்கள் ஒரேவிஷ யத்திற் பலவிதமானஅபிப்பிராயமுள்ளனவாகக் காணப்பட்டாலும் உண்மையில் அப்படியில்லையென்பதைப் பின்வருமுதாரணத்தாலும் பார்க்கலாம்.

ஏற்பட்டிருக்க, இந்த ருதுமதிவிவாஹவிஷயமாய் ஹிந்துசாஸ்திரவிதிகளை அலக்ஷியம்செய்து சட்டம்செய்வதாக அபக்யாதி ஏன் ஏற்படவேண்டும்.

தவிரவும் ஷெடிமசோதாவானது, ருதுமதிவிவாஹம்செய்கிற பெண்ணுக்கு வயது அளவு ஏற்படுத்தாமல் மேல்நாட்டுஸ்திரீகளைப்போல எந்தவயதிலும்செய்துகொள்ளலாம், அல்லது கல்யாணம் இல்லாமலும் இருந்துவிடலாம் என்ற மனம்போனபடி இருக்கும்படியான ஒருநடபடிக்கைக்கு இடம்கொடுக்கிறது. ஷெடி வழக்கங்களை அநுசரித்துவருகிற தீங்குகளைப்பற்றி நான் இங்கே எழுதி ஒருவரும்தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. அப்படிப்பட்ட தீங்குகள் நமதுதேசத்துக்குவருவதைவிட பால்யவிவாஹம் முன்போல இருந்துவருவதே சிலாக்கியம் என்று சொல்லலாம். ருதுவானபின்பு இத்தனைவருஷத்துக்குள், பெண்ணுக்குக் கல்யாணம்செய்துதீரவேண்டுமென்னும் நிபந்தனம் மிகவும்முக்கியமானவிஷயம்.

---

தெய்வப்புலமைத் திருவள்ளுவர்செய்த திருக்குறளில்,

“ துஞ்சினார்செத்தாரின்வேறல்லரெஞ்ஞான்றும்
நஞ்சுண்பார்கள்ளுண்பவர்” (திருக்குறள்—௯௨௬)

என்பதனாற் கள்ளுண்ணல் தீதென்று இகழப்பட்டிருக்கிறது. அந்நூலுள்ளேயே,

“ உள்ளினுந்தீராப்பெருமகிழ்செய்தலாற்
கள்ளினுங்காம மினிது” (திருக்குறள்—௧௨௦௧)

என்பதனாற் கள்ளுண்ணல் நன்றென்று புகழப்பட்டிருக்கிறது. இங்குக் கேவலவ்யுத்பன்னர்க்குக் கள்ளுண்ணல்விஷயத்தில் திருக்குறள் ஒரேவிதமாக அபிப்பிராயப்படவில்லையென்றுதோன்றுமானாலும் அத்தோற்றம் பொய்த்தோற்றமேயன்றி வாஸ்தவத்திலில்லையென்பதை நூல்வல்லோரெல்லோராலுமறியலாம். ஆகையால், ஹிந்துசாஸ்திரங்களிற் பின்னபிப்பிராயங்களிருப்பனவாகச்சொல்வது யுக்தமாகத்தோன்றவில்லை.

(5) நம்முடையசாஸ்திரங்களில், பொதுவாகப் பெண் ருதுவாகி 3 வருஷம்வரை தகப்பன் கல்யாணம்செய்துகொடுக்கலாமென்றும், அப்படியும்செய்யத்தவறினால், பெண் தானே தக்ககணவனைத் தேடிக்கொள்ளலாமென்றும், ஏற்பட்டிருக்கின்றன. அப்படியே இந்தமசோதாவிற் சங்கதிகள் சேர்க்கப்படவேண்டும். இது ஸ்மிருதிகளின் பொதுவான தாத்பரியமாயிருப்பதோடு சாஸ்திரங்களின்சம்மதமாயுமிருக்கிறது

தேகசாஸ்திரமறிந்த புத்திமான்கள் தேகம் வளர்ச்சியையும் பக்குவ பூர்த்தியையும் அடைந்தபின் மணம்செய்வது சிலாக்கியமென்றுவிவரிக்கிறார்கள். அந்தக்காரணத்தை நான் கொஞ்சமேனும் ஒப்பவில்லை. தற்காலத்துப்பெண்களின் முந்தினபரம்பரைகளில் இருந்தபெண்களுக்கு ருதுவாகி 2, 3 வருஷங்களுக்குள் ருதுசாந்திசெய்யப்பட்டுவந்திருப்பதனால் அவர்களுடைய தேகவலிமைக்கும், தேகவிருத்திக்கும் ஒருஇடைஞ்சலும் ஏற்பட்டதாகச்சொல்லமுடியாது பிஞ்சிற்பழுத்ததுபோல இளமையில் ருதுவாகாமலிருக்கும்படியாக முன்போலுள்ள அப்பியாசங்களும் தேகப்பயிற்சிகளுமே ஏற்படவேண்டும்.

தேகமானது அதனுடையஇயற்கைக்குத்தக்கவாறு பக்குவத்தை அடைந்தபிறகு சுபாவத்துக்குவிரோதமாய் அந்தந்தசமயங்களிற் செய்யவேண்டியகாரியத்தைச் செய்யாதுதாமசிப்பதினால், தேகத்திற்கும் மனதிற்கும் கெடுதல்களுண்டாகுமேயல்லது நன்மையுண்டாகக் காரணமில்லை.

அது எப்படியிருந்தாலும் 3 வருஷம் என்கிற ஒரு வரையறையானது சாஸ்திரசம்மதமாக இருப்பதால் அது அநுஷ்டிக்கத்தக்கதென்று எனக்குத்தெரிந்தமட்டில் தோன்றுகிறது.

ருதுமதிவிவாஹம் இப்பொழுது செய்யவேண்டிய தவசியமா; சாஸ்திரங்களுடையசம்மத மெப்படியிருக்கிறது; நீடித்தவழக்கத்துச்கு விரோதமாயிருக்கிறதே; என்னும்விஷயங்களைப்பற்றிச் சுருக்கமாக அடியிற்கண்டபடி ஆராய்ச்சிசெய்ய உத்தேசித்திருக்கிறேன்.

---

(5) சாஸ்திரங்கள்சொல்லுவதாக எழுதும் வாக்கியங்களுக்குக் கீழ்க்குறிப்புக்கொடுத்துச் சாஸ்திரங்களின்பெயர், இடம், சுலோகம் அல்லது சூத்திரங்களின்எண் இவற்றைக்காட்டி ஷை பிரமாணங்களை

## I. ஹிந்துமத முக்கிய அம்ஸங்கள்.

ஹிந்துமதத்திற்கு ஆதாரங்களாயும் முக்கிய அம்சங்களாயும் இருக்கப்பட்ட விஷயங்கள் சில இருக்கின்றன. அவைகள், வேதத்திலுள்ள வாக்கியங்களைப் பிரமாணமாகக்கொண்டு அந்தப்படி அநுஷ்டித்தல், ஜாதிவர்ணாஸ்ரமதர்மம், த்விஜர்களுக்கு உபநயனசமஸ்காரம், ஸ்திரீகளுக்கு கல்யாணம்செய்யவேண்டியது அவசியமென்பது, ஒருபுருஷனை மணந்தவள் அவனிறந்தபிறகு வேறுபுருஷனை மணம்புரியக்கூடாதென்பது, பிதிர்களுக்குச்செய்யவேண்டிய ஸ்ராத்தமுதலியகடமைகள், தேவர்களுடையதிருப்திக்கும் உலகத்தினுடையக்ஷேமத்துக்கும் செய்யக்கூடிய யாகங்கள் உபாசனை ஆகிய இவைபோன்றுள்ளவைகளே.

சகலஆசைகளையுமதுறத்தல், ஜீவகாருண்யம் முதலிய சன்மார்க்க தர்மங்களை எவ்வளவோமேன்மையாக எடுத்து உபதேசித்தாலும் வேதப்பிரமாணங்களை அங்கீகரிக்கஇசையாத பௌத்தமதம் இந்தியாவில் நிலைபெறமுடியவில்லை. ஜைனமதமும் க்ஷீணதசையை அடைந்தது. வேதத்தை ஒப்புக்கொண்டாலும் ஜாதிபேதத்தைவிலக்குவதற்காக ஏற்பட்டுள்ள "பிரம்மசமாஜம்" "ஆர்யசமாஜம்" ஆகிய இவைகளும் ஹிந்துமதத்துக்குப்புறம்பாகமதிக்கப்பட்டனவேயொழிய அவை ஹிந்துமதத்தின்கிளைகளாகமதிக்கப்படவில்லை.

கல்யாணமேசெய்துகொள்ளாதபெண்களும், விதவையாகி மறுபுருஷனைக்கல்யாணம்செய்துகொள்ளும்பெண்களும் ஜாதிப்பிரஷ்டைகளாகவாவது பாவத்துக்குட்பட்டவர்களாகவாவது மதிக்கப்படுகிறார்கள்.

விதவாவிவாஹம் அங்கீகரிக்கத்தக்கதென்று சுமார் 60 வருஷங்களுக்குமுன்னமே சட்டம் ஏற்பட்டிருந்தும் ஹிந்துக்களுக்குள் விதவாவிவாஹம் ஆதியில் உத்தேசித்தபடி விருத்தியடையவில்லை. ஆங்காங்குச் சிலஇடங்களில்மட்டும் மிகுந்தசிரமத்தின்பேரில் சில விதவாவிவாஹங்கள் நடந்தேறிவந்திருக்கின்றன.

---

வடமொழியிலிருந்தபடியே எழுதியிருந்தால் ஆராய்ச்சிசெய்து தெளிபவர்களுக்கு மிகவும் ஸாதகமாயிருக்கும். அப்படிக்காட்டாதிருப்பினும், சொல்லப்பட்ட வாக்கியப்பொருள்கள் சாஸ்திரங்களில் வாஸ்தவமாயிருக்கலாமென்ற நம்பிக்கைபற்றியே பத்திராதிபருக்குத்தோன்றும் அபிப்பிராயம் இங்கு எழுதப்பட்டுவருகிறது.

(6) மனதினால் ஒருபுருஷனைக் கணவனாகமதித்தாலும் கல்யாணம் செய்துகொண்டபுருஷனுக்குச்சமதவமாகமதித்து அவனைத் தெய்வமாகப்பாராட்டிவந்துள்ள பதிவிரதாசிரோமணிகள் இருந்துவிளங்கிய இந்தத்தேசத்தில ஸ்திரீகள் பொதுவாக மறுபுருஷனைத்தழுவவிரும்புவார்களோ.

ஆதிகாலத்தில எண்ணிறந்தஅரசர்கள் பரசுராமனால்மாண்டார்கள். அப்படி அரசர்களுடையபத்தினிகளெல்லாம வைதவ்யததைதயடைந்து அக்கினியில்விழப்போகுமசமயத்தில் காசிபமுனிவருடைய வார்த்தைக்குக்கட்டுப்பட்டு, ராஜவமசம மறுபடியும உலகததிலதழைத்தோங்குமபொருட்டு, சுத்தமனதையுடையவர்களான ரிஷிகளின்மூலம் புத்திரர்களைப்பெற்று ராஜவமசங்களை மறுபடியுமவிருத்திசெய்ததாகவென்று ஹிதிகாசபுராணங்களில் சொல்லப்படுகிறது. அதேபிரகாரம புருஷனிருந்து புத்திரனையடையப்பிராப்தமில்லாத சுமங்கலிகளும வைதவ்யத்தையடைந்து இஹபரசாதகத்தின்பொருட்டுப புத்திரனை அபேக்ஷித்த பதிவிரதைகளும, காமத்தைத்துறந்தவர்களான மகான்களுடன் கலந்து புத்திரர்களை அடைந்ததாகவும சொல்லப்படுகின்றது. அப்படிப்பட்டமகான்கள் இக்கலியுகத்தில் குறைந்துபோனதினிமித்தம் வமசவிருத்தியின்பொருட்டு ஒருபுத்திரனை ஸ்வீகாரம எடுத்துக்கொள்வதும சாஸ்திரசம்மதமானவழக்கமாகவே ஏற்பட்டுவருகின்றது.

ஸ்திரீபுருஷாள்கல்யாணமென்பது கேவலம இந்திரியசுகத்திற்கென்றுமதிக்கப்படாமல தா்மம, அர்த்தம, காமம், மோக்ஷம ஆகிய நான்குபுருஷார்த்தங்களுக்கும சாதகமாகமதிக்கப்பட்டுவந்திருக்கிறது. ஆதலால் விதவைகளாய்ப்போனஸ்திரீகள் எப்பொழுதும மறுபுருஷனை விவாஹம்செய்துகொள்ளலாமென்றாவது செய்துகொண்டார்களென்றாவது ஸ்மிருதியாவது அநுபவமாவது இருப்பதாக நான் பெரியவர்களைக் கேட்டுத்தெரிந்துகொண்டமட்டில் கிடையாது. ஆதாரவுகளிருப்பதாக வியவகாரத்துக்குப்பேசலாமேயொழிய வேறில்லை.

---

(6) இங்கு விதவாவிவாஹமானது நம்தேசத்துப்பெண்களுக்குத் திருப்தியில்லாமையால் வளர்ந்தேறவில்லையென்றுமட்டும சொல்லப்பட்டிருக்கிறது. அதைக்காட்டிலும் பிள்ளைகளுக்கும் திருப்தியில்லாத முக்கியமானவிஷயம் ஒன்று அவசியம் கவனிக்கத்தக்கதாயிருக்கிறது.

நித்தியகர்மங்களைச் சரியாய்ச்செய்யாதவன்கூடத் தன்னுடைய பந்துஜனங்களுக்கும் ஜாதியார்களுக்குமபயந்து எப்படியாவது தன் பெற்ரோர்களுககு எள்ளுமதண்ணீருமா இறைககிறான். ஆதலால் வைதிகதர்மங்களெல்லாம் நடத்தப்படவேண்டியவைகளேயென்று சுருதி, ஸ்மிருதி, அநுபவங்களைபபற்றித தொடர்சசியாய் அநுஷ்டிக்கப்பட்டுவந்திருககின்றன.

மேற்கண்டவிஷயங்களையெல்லாம் ஒப்புக்கொண்டு அவைகளுக்கு உள்ளடங்கியவிஷயமாக அதாவது (Non-essentials) முககியமிலலாத விதிகள் அநுஷ்டானங்கள்விஷயமாக இநதபபரதககண்டததிற பல இடங்களிலும பலகாலங்களிலும விததியாசங்கள் ஏற்பட்டுவந்திருகின்றன.

பரப்பிர்மமஸ்வரூபவிஷயமாக ஆசார்யர்களுக்குள், பேதமான அபிப்பிராயங்கள் ஏறபட்டு அதன்மூலமாய் வெவ்வேறுவகுப்பினராயுள்ள ஸ்மார்த்தர்களும் வைஷ்ணவர்களும, மாதவர்களும ஒரேஹிந்து மதத்தினர்களன்றோ?

ஒருவருக்கொருவர் கலயாணசமபந்தமில்லாமல் ஒருநாட்டுக்கும் மறறநாட்டுக்கும வெகுவானபோக்குவரத்துசசம்பநதம முன்காலததில் இல்லாததினிமிததம் வடமர்களென்றும, பிரஹசரணாகளென்றும், அஷ்டசகஸ்திரர்களென்றும், வாத்திமாகளென்றும, கேசியர்களென்றும, ஆந்திரர்களென்றும, மகாராஷ்டிரர்களென்றும பலபிரிவினராகிய ஸ்மார்ததாகளெல்லோருமா ஒரே ஹிநதுமததினர்களன்றோ.

---

அது என்னவென்றால, விதவாவிவாஹத்துக்குடம்பட்ட பெண்களின் மனதில், புருஷனிறந்தால் மறுபுருஷனையடையலாமென்ற தைரியமுண்டாவதற்கிடமிருப்பதாற் பெண்கள் பெரும்பாலும இடிப்பாகையிலகப்பட்டுககொண்டு இன்பநுகர்சசிககிடைஞசலான குடுமபச்சசசரவுகளாலவருந்தும பிராஹ்மணஜாதியில இடையிடையே வறுமைமுதலிய பலவழியாலும் புருஷனிடத்துண்டாககூடிய வெறுப்புக்காரணமாகவும், புருஷனிறந்தால் மறுபுருஷனையடைய மாாக்கமிருப்பதுகாரணமாகவும், அவர்கையில் தம்பிராணனை அடைக்கலமாகவைக்கக்கடவரான மணவாளர்களின் உயிர்வாழ்க்கை யென்னவாய்முடியுமென்பதாம.

(7) இன்னும் ஒருவருக்கொருவர் பந்திபோஜனமில்லாமல், சம்பந்தம்செய்தும், செய்யாமலும் மதங்களின் ஸ்தூலசம்பந்தமான அற்ப விஷயங்களைப்பற்றி அடிக்கடி சச்சரவுசெய்துகொண்டிருக்கும் தென்கலைவைஷ்ணவர்களும், வடகலைவைஷ்ணவர்களும் ஹிந்துமதத்தினர்களன்றோ? மாத்துவர்களும் அப்படியே; ஏனென்றால் அவர்கள் எல்லோரும் மேலேசொல்லப்பட்ட முக்கியமான அம்சங்களில் ஒற்றுமையான நம்பிக்கையும், விஸ்வாசமும், அநுஷ்டானமுமுள்ளவர்களாய் இருந்துவருவதுதான்காரணம்.

நமது தேசத்தில் நம்முடைய ஹிந்துமதசாதியார்கள் அபிவிருத்தியடையவேண்டுமென்று விரும்பி முயற்சித்துவருகின்ற ஆசாரசீர்திருத்தக்காரர் (Social Reformer) மேலேசொன்ன முக்கியமான அம்சங்களிற் பிரவேசித்துச் சீர்திருத்தம்செய்ய எத்தனம்செய்தால் அது வீண்பிரயத்தனமாகவே முடியும். ஆனால் காலவித்தியாசத்தினால் ஹிந்துமதவிஸ்வாசிகள் வேதமென்ன, சாஸ்திரமென்ன, யாகமென்ன, எக்ஞமென்ன, எக்ஞோபவீதமென்ன, ஜாதிவித்தியாசமென்ன, சிவன், விஷ்ணு முதலியதெய்வங்களின்பக்தி என்ன என்று ஹிந்துமதமுக்கிய அம்சங்களை அடியோடு தள்ளுவதாயிருந்தால் அப்பொழுது ஹிந்துமதமென்ற கட்டடத்தின் அஸ்திபாரமே உலைவடைந்து அவரவரிஷ்டம்போல மதங்களும் அபிப்பிராயங்களும் அநுசரித்துக்கொள்ளப்படும். ஆனால் ஷடி அபிப்பிராயங்கள் அதாவது ஜாதிபேதத்தினால்தான

(7) வடகலை தென்கலை வைஷ்ணவர்கள் மதசம்பந்தமாகச் சச்சரவுசெய்துகொண்டிருப்பதாகக் கண்டிருக்கிறது. விவாஹஸம்பந்தமுள்ளவர்களாயும் ஒரேசித்தாந்தமுடையவர்களாயுமுள்ள வடகலைதென்கலை வைஷ்ணவர்களுக்குள்ளுண்டாகும் சச்சரவுகள் மதசம்பந்தமான ஸ்வல்பவித்தியாசம்பற்றியதாயிருக்குமானால், விவாஹசம்பந்தமில்லாதவராயும் வேறுவேறுசித்தாந்தமுடையராயுமுள்ள ஸ்மார்த்த மாத்துவர்களுக்கு எவ்வளவு மிகுதியானசச்சரவிருக்கவேண்டும்! ஆயிரவருஷகாலங்களிற்பார்த்தாலும் ஒருசச்சரவாவது உண்டாயிருந்ததாகக் காணப்படவில்லையே! அதிருக்கட்டும்; வைஷ்ணவர்களுக்குத்தான் ஸ்மார்த்தர்களோடாவது மாத்துவர்களோடாவது சச்சரவு நேர்வதுண்டா? அப்படியுமில்லாதிருக்கச்செய்தே வடகலைதென்கலைவைஷ்ணவர்களுக்குமட்டுமுண்டாகும் சச்சரவுகளை மதசம்பந்தமாயுண்டானவன

நமதுதேசம் க்ஷேமம் அடையவில்லை, விதவைகளுக்குக்கல்யாணம் செய்தாலதான் ஸ்திரீசுதந்திரமென்கிறபாக்கியம பலிதமாகும என்பது முதலிய சீர்திருத்தங்களை முயற்சித்துவரும ஆசாரத்திருத்தக்காரர் (Sodial Reformer) ஏதோ அதிர்ஷ்டவிசேஷத்தால இன்னும இந்த தேசத்திற் போதுமானபடி விருத்தியடையவில்லை. அதுபற்றியே இந்துமதம இந்தமட்டில ஜீவித்திருக்கிறது.

## II. ஹிந்துமதத்தின் முக்கியமில்லாதவிதிகள்.

ஹிந்துமதத்தின் முக்கிய அம்சங்களடங்கிய கட்டடத்திற்கு உலை விலலாமல இரண்டாமபக்ஷமாவதும, காலதேசவாத்தமானத்துக்குத் தக்கபடி மாறக்கூடியதுமான சில சீர்திருத்தங்களை நமமுடையதேச க்ஷேமத்தினபொருட்டுத் தேசாபிமானிகளும, மதாபிமானிகளும முயற்சிசெய்ய ஏற்படடால அதனால நமமுடையமதத்துக்கே பிருந்த அபாயமவந்துவிடடதாகப பயந்து, பெரியவாகள் ஏறபடுத்தினவழக் கத்தை ஏன் மாற்றவேண்டும்? அதறகுச்சாஸ்திரம இடமகொடுக்க வில்லை, அபபடிச் சாஸ்திரம இடமகொடுத்தாலும அது கலியுகத்திறகு ஏற்படடதில்லை யென்று இந்துக்களிற் பெருமபானமையோர் ஒரேபிடி வாதமாய் ஆக்ஷேபணைசெயதுவருகிறார்கள். அது மிகவும பரிதபிக்கத் தக்கது.

வேதங்களினாலும, ஸ்மிருதிகாத்தாக்களினாலும எபபொழுதும ஒரேவிதமான அபிபபிராயத்துடன் மாறுதலிலலாமல உபதேசிக்கப படடுவந்தவிதிகளிற சில அநுஷ்டானங்களிற சேராது சமயமபோலவும அந்தந்தருஷிகளினுடைய அபிப்பிராயமபோலவும மாறுதலகளை யடைந்துவந்திருக்கின்ற ஹிந்துமதக்கடடடத்திறகு அநுகூலமாயுள்ள கௌணசாரங்களில (Non-essentials) பிரௌடாவிவாஹமெனபதும ஒன்று.

---

வென்றுசொலலுவது சிறிதுமபொருந்தாது என்பதை அறிவுடையோர நனகறியவேண்டும. பினனை எதனாலுண்டாவதென்றால மறறும உல கத்தில ஒருவர்க்கொருவருண்டாகும குடுமபச்சச்சரவுகள் எபபடியோ அபபடியே பாத்தியாபாத்தியவியவகாரம காரணமாகவே உண்டாவதா யிருக்கிறது. ஏகதேசங்களில மதசமபந்தமாகவும ஜாதிசமபந்தமாகவும சச்சரவுண்டாவதாயிருந்தபோதிலும, அது, அவிவேகிகளினகூடடத்தி லுண்டாவதலலது விவேகிகளின்கூட்டத்தில உண்டாகாமையால, அதற்கு அவிவேகமேகாரணமென்பதலலது மதபேதமும ஜாதிபேத மும காரணமென்றுகொள்வது பொருந்தாததாயிருக்கிறது.

## III. ருதுமதீவிவாஹம், சாஸ்திரதாத்பரியம்.

மேற்கண்ட முக்கியமானவிஷயங்களில் இடங்களினாலும் காலங்களினாலும் மாறுபடாத ஒரேவித அபிப்பிராயங்கள் ருஷிகளாற் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் ஒரு ருதுவானபெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ளலாமென்ற விஷயத்தைப்பற்றி அவர்கள் அபிப்பிராயங்கள் வித்தியாசமாயிருக்கின்றன. இதனாலேயே ப்ரௌடாவிவாஹமென்பது சரியில்லையென்று யோஜிக்காமல் தள்ளுவது நியாயமில்லை என்றும் ஆக்ஷேபசமாதானங்களைக்கேட்டு ஆராய்ந்து ஒருமுடிவுக்குவரவேண்டிய விஷயமென்றும் தெரிகிறது.

(8) சில ஸ்மிருதிகளில் ருதுவானபின்பு விவாஹஞ்செய்விக்கும் தகப்பனுக்கும், அவ்வதூவரர்களுக்கும் ஏதோ பாபம்சம்பவிக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறதேயொழிய, ஒரு ஸ்மிருதியிலாவது ருதுமதீவிவாஹம், விவாஹமே அல்லவென்றாவது, அவ்விவாஹஞ்செய்து

---

உண்மை இப்படியிருக்க, மதபேதங்களும் ஜாதிபேதங்களும் சசசரவுக்குக்காரணமென்று அவற்றை அறிவுடையோரும் தூஷணைபுரிவதானது, நம்மவாக் கின்னுமசிறிதிருக்கும் மதாபிமானத்தையும், ஜாத்யபிமானத்தையும் அடியோடுகெடுக்கவேண்டிச் சுயேச்சையென்னும் காமசாரத்தைநிலைநாட்டேங்கருத்தினராலெழுதப்பட்டபுத்தகங்களையும் பத்திரிகைகளையும் படிக்கும்வாஸனையாற்றோன்றியதென்று பிராமாணிகரா லநாதரிக்கத்தக்கதாயிருக்கிறது.

---

(8) இங்கு, "ருதுமதீவிவாஹத்துக்கு ஏதோ பாபம்சொல்லப்பட்டிருப்பதல்லது ஒருஸ்மிருதியிலாவது அது விவாஹமாகமாட்டாதென்றாவது, செய்யப்பெற்றவர்கள் ஜாதிப்பிரஷ்டர்களாவரென்றாவது சொல்லப்படவில்லை" என்றவிஷயங்கள் நாம் உத்தேசிக்கும் ருதுமதீவிவாஹத்துக்கு எவ்வளவுதூரம் சாதகமாகின்றனவென்றுபார்ப்பே.

ஸ்மிருதிகள், ருதுமதீவிவாஹம் பாபகிருத்தியமென்றுசொல்லியிருப்பதைத்தெரிந்துகொண்டேபிரவிர்த்திக்கும் நாம் அப்பாபத்துக்குப் பிராயச்சித்தமுண்டா இல்லையாவென்பதை அவசியம் அறியவேண்டியவர்களாயிருக்கிறோம். பிராயச்சித்தமில்லையென்று ஏற்பட்டுவிட்டால் பிராயச்சித்தமில்லாத புத்திகிருதபாபம் ஜாதிப்பிரம்சகாரணமாகுமா ஆகாதாவென்பதையும் பார்க்கவேண்டும். அது ஜாதிப்பிரம்சகாரணமாகும்பக்ஷத்தில் ஜாதிப்பிரஷ்டர்களாவார்களென்று சாஸ்திரம்சொல்லவேண்டியதில்லையே! ருதுமதீவிவாஹம் பாபகாமமென்றுசொல்லப்பட்டிருக்கும்போது, புண்யகர்மமாகிய விவாஹமாகமாட்டாதென்பது தனியாய்ச்சொல்லவேண்டிய தவசியமா! ஆகையால் பாபமுண்டென்று தெரிந்துசெய்யப்பட்ட ருதுமதீவிவாஹத்துக்குப் பிராயச்சித்தமுண்டா இல்லையாவென்பதைப் பரியாலோசித்துப் பிராயச்சித்தமுண்டென்று

கொண்ட வதூவரர்கள் ஜாதிப்பிரஷ்டர்களாவரென்றாவது சொல்லப் படவில்லை.

(9) ஆனால நாரதர் பெண் பெரியவளானபிறகு அவளுககுச

---

தெரிநதுகொண்டாலன்றி, ருதுமதீவிவாஹம விவாஹமில்லையென்றா வது, செய்தவர் ஜாதிப்பிருஷ்டர்களென்றாவது ஸ்மிருதிகள்சொல்லா திருப்பதே அநுகூலமென றுகொள்ளுவதற்கிடமில்லையென்று தோன்று கிறது.

---

(9) "பெண் பெரியவளானபிறகு சீக்கிரம் விவாஹம்நடக்கவேண் டும" என்ற நாரதவாககியம ருதுமதீவிவாஹநிஷேதவாக்கியங்களைவிரோ திப்பதுபோலத் தோன்றுகிறது. இது எந்தமட்டில்விரோதிக்கிறதென் பதைப பரியாலோசிப்போம. இநதவாககியததுக்குப பெண் பெரியவ ளானபிறகு விவாஹமசெய்யவேண்டும என்பதில தாதபரியமா? அல்லது பெண் பெரியவளாய்விட்டால் விவாஹம தாமசிக்கலாகாது என்பதிற் றாறபரியமா? என்பதைப பரியாலோசிக்கவேண்டும. சீக்கிரம் என்று விரைவுபடுத்துவதால், தாமசிக்கககூடாதென்பதில முக்கியநோக்கமென் றும, இவ்வளவுகாலததுக்குள் என்று சொல்லாமையால நியாயமாய் எவ்வளவுகாலத்துக்குள் செய்யமுடியுமோ அவ்வளவுக்குள செய்துவிட வேண்டுமென்றும, கீழெல்லைசொல்லாமையால் ஸ்நாநாநந்தரமே செய் யககூடுமானாலும செய்துவிடவேண்டுமென்றும, அப்படிசசெய்யாமல தாமசித்துச்செய்தால் அநதவிவாஹம விதிப்படிசெய்ததாகமாட்டாதென் றும தாதபரியங்கொள்ளக்கிடக்கிறது.

அன்றியும், ருதுமதியானால், சீக்கிரம்விவாஹம்செய்யவேண்டுமென்று விரைவுபடுத்துவதால் ருதுமதியாகுமுன்னே பிதா சாவகாசமாக விவா ஹமசெய்விக்கக் கடமைபபட்டவனென்பதும, அப்படிச்செய்யாதிருப்பது விவாஹகாலநிர்ணயத்தைக கடப்பதாயிருக்கிறதென்பதுமான அபிப் பிராயததுடன்கூடியிருப்பதால, நாரதருக்கும் கந்யாவிவாஹமே அங்கீ காரமென்பதும், ருதுவானபின் தாமசிப்பதில் இஷ்டமில்லையாதலால, தாமஸித்துச்செய்யும விஷயததில ருதுமதீவிவாஹ நிஷேதவாக்கியங்க ளில் தமக்கு ஆக்ஷேபமில்லையென்பதும் வெளியாகின்றன.

இதனால் விவாஹங்கள், கந்யாவிவாஹம், ருதுமதீசீக்கிரவிவாஹம், ருதுமதீவிளம்பவிவாஹம் என மூன்றுவகையாகப்பிரிக்கப்படுகின்றன. அவற்றுள், கநயாவிவாஹத்தால பிதாவுக்கு ஊர்த்துவலோகப்பிராப் திக்குஹேதுவாகிய புண்ணியம் சொல்லப்பட்டிருககிறது. ஆகையால் அது புண்ணியகர்மமாகிறது. காலவிளம்ப ருதுமதீவிவாஹததால் பிதா வுககும் வதூவரர்களுக்கும் பாபம் சொல்லப்பட்டிருப்பதால் அது பாப
[illegible] ரே
அபிப்பிராயமென்பதை ஆக்ஷேபிக்க இடமில்லை. ஆனால் ருதுமதீசீக்கிர

சீக்கிரம் விவாஹமடக்கவேண்டுமென்று கூறுகிறார்.

---

விவாஹத்திலமட்டும் கந்யாவிவாஹவிதிவாக்கியங்களையும், ருதுமதி விவாஹநிஷேதவாக்கியங்களையும் விரோதிப்பதுபோல் தோன்றுகிறது. அதுவும் வாஸ்தவமா என்பதைப் பரியாலோசிப்போம்.

சாஸ்திரவாக்கியங்களெல்லாம் விதிநிஷேதங்களையே விஷயமாகக் கொண்டுள்ளன. அவை விதித்தவிஷயத்தையே நிஷேதித்தாலும், நிஷேதித்தவிஷயத்தையே விதித்தாலும் ஒரேவிதமான அபிப்பிராயமில்லையென்று சொல்லலாம். இங்கே விதித்ததை நிஷேதிக்கிறதா, நிஷேதித்ததை விதிக்கிறதாவென்று பார்க்கவேண்டும். காலக்கிரமத்தில் முன்னாலே கந்யாவிவாஹம் விதிக்கப்பட்டிருக்கிறது. பின்னாலே ருதுமதீ விவாஹம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. இவ்விரண்டுக்கும் நடுவே அசுர சந்திபோல ருதுமதீசீக்கிரவிவாஹமொன்று பிராப்தமாகவே ருதுமதியான காரணத்தைக்கொண்டு, ருதுமதீவிவாஹ நிந்தாவாக்யம் நிஷேதிக்கத்தொடங்கலாம். ஆனால், கந்யாவிவாஹஞ்செய்விக்கப் பரீக்ஷித்திருக்கும் பிதா தெய்வாதீனமாய்ப்ப்ராப்தமான ருதுவுக்குக் காரணமாகாமையால் அவனைப் பாபத்திற்குள்ளாக்குவது நியாயமில்லாதிருப்பதாலும், ம்ருததிதியில் பண்ணக்கடவதான சிராத்தத்தை ஆசௌசாதிகளாலுபஹதியுண்டாகவே அது கழிந்தவுடனே தாமஸியாது வேறுதிதியிற் செய்தாலும் தத்தினசிராத்தமாகவே பாவிக்கப்படுவதுபோல ருதுமதீ சீக்கிரவிவாஹமும் கந்யாவிவாஹம்போலவே பாவிக்கத்தகுமென்று தோன்றுவதாலும் சீக்கிரஞ்செய்துகொள்ளும்படி எச்சரிக்கத்தக்கதாகவேயிருக்கிறது.

ஆகையால் இங்குக்காட்டப்பட்ட நாரதவாக்கியமானது, ருதுமதீ விவாஹநிஷேதவாக்கியத்தையாவது கந்யாவிவாஹவிதிவாக்கியத்தையாவது விரோதியாமலே ஆதரித்துக்கொண்டு அவ்விதிநிஷேதங்களிரண்டும்கூடிச்செய்த ஒரு எச்சரிக்கைநோட்டீஸ்போலிருப்பதால் மூன்றும் ஒரேவித அபிப்பிராயமுடையவாயிருக்கின்றன. ஆகையால் இங்குக் காட்டப்பட்ட நாரதவாக்கியமானது நாம் உத்தேசிக்கும் ருதுமதீவிவாஹத்துக்கு ஆதரவில்லாமற்போவதுமன்றி விரோதமுள்ளதாகவும் இருக்கிறதென்று தோன்றுகிறது.

பரிபாஷைகள (Technical terms.)

(1) ஆக்ஸிஜம்:-(Oxide). மூலஙகளுடன் ஆக்ஸிஜன்மாத்திரம கலந்துண்டாகும கலபததுக்கு ஆகஸிஜம் என்றுபெயர். உதாரணம்:— கரி ஆகஸிஜம, வங்காக்ஸிஜம, நாகாகஸிஜம்.

(2) ஹைத்ரஜம்:-(Hydrate). ஆகஸிஜனும் ஹைதரமும் வேறு மூலங்களுடன்கலநதுண்டாகும கலபங்களுக்கு ஹைதரஜஙகள் என்று பெயர். உதாரணம —கரிஹைதரஜம (Carbo-hydrate).

(3) கரிஜம்:-(Carbonate). கரியும ஆக்ஸிஜனும வேறுமூலங்க ளுடன்கலந்துண்டாகும கலபங்களுககு கரிஜஙகள் என்று பெயா. உதாரணம:—ஸோடியம கரிஜம (Sodium-carbonate) முதலியன.

(4)—ஜம்:—பொதுவாய் '—ஜம' என்னும விகுதி, ஆக்ஸிஜகல பத்தைக்குறிககும. உதாரணம —க்ளோரஜம, நைதரஜம, கநதஜம முதலியன.

குறிபபு:—முன்கூறியவைதவிர, இரண்டுமூன்றுமூலஙகள்சேர்ந்த கலபங்கள், அமமூலப்பெயர்களைக்கொண்டும, ஸஙகேதாக்ஷரங்களைக கொண்டும ஆங்காங்கு ஸமயோசிதமாய்க குறிபபிடபபடும.

முறகூறிய ஆகஸிஜஙகள், ஹைதரஜங்கள், கரிஜங்களைப்பற்றி அந தநத மூலங்களைப்பற்றிககூறுமிடததில விவரிக்கபபடும.

---

## அத்யாயம்—10.

### நைத்ரம்.

### Nitrogen.

நை=N.

நைத்ரம் என்பது வாயுவர்க்கததைசசேர்ந்த ஒரு மூலப்பொருள். அது சாதாரணக்காற்றில், சுமார் 5-ல் 4 பங்கு கலந்திருக்கும். காற்றி லுள்ள ஆக்ஸிஜனைப்பிரித்துவிட்டால மிகுதியுள்ளது விசேஷமாய் நைத்ரமாயிருக்கும. இதுதவிர நைதரம்கலந்த அநேககல் கின்றன.

லக்ஷணங்கள்.

(1) நிறம், ரூபம், ருசி, வாசனையற்ற ஒருவகைவாயு.

(2) தண்ணீரிற்கரையாது.

(3) எரியும் ஜ்வாலையை அணைத்துவிடும்.

(4) தாமரம, தகரமமுதலான லோஹங்களை அதில் எரித்தால் அவைகளில யாதொருமாறுபாடும் உண்டாவதில்லை.

(5) அதில் இருமபு, துருபபிடிப்பதில்லை.

---

## அத்யாயம்—11.

### நைத்ரகல்பங்கள்.

### Nitrogen compounds.

i. நைத்ராக்ஸிஜங்கள் (N+O)

ii. நைதரோ ஹைத்ரங்கள் (N+H)

iii. நைதர உப்புக்கள் அல்லது நைதரஜங்கள் (Nitrates).

### i. நைத்ராக்ஸிஜங்கள்.

### Oxides of Nitrogen.

நைதராக்ஸிஜங்கள், நைதரததுடனகலந்திருக்கும ஆக்ஸிஜனு டைய அளவுக்குததக்கபடி 5 வகைப்படும். அவையாவன:—

நைதர—ஏகாகஸிஜம $N_2O$.

நைதர—தவயஆக்ஸிஜம $N_2O_2=NO$.

நைதர—தரயஆக்ஸிஜம $N_2O_3$.

நைதர—சதுராக்ஸிஜம $N_2O_4=NO_2$.

நைத்ர—பஞ்சாக்ஸிஜம $N_2O_5$.

இவைகளில இரண்டுபங்குநைதரததுடன ஆக்ஸிஜன் முறையே 1, 2, 3, 4, 5 பங்குகளாககலந்து 5 வகை நைதராகஸிஜங்கள் உண் டாகின்றன.

### நைத்ர ஏகாக்ஸிஜம்.
### Nitrous-oxide.
### சிரிப்புவாயு.
### Laughing gas.
### $N_2O$.

நவச்சார நைத்ரஜ(Ammonium-Nitrate)த்தைக் காயவைப்பதால் ஒருவிதவாயு உண்டாகும். இதுதான் நைத்ர ஏகாக்ஸிஜம். இது இருபங்குநைத்ரமும் ஒருபங்குஆக்ஸிஜமும் கலந்த ஒருவகையான கலப்பவாயு.

லக்ஷணங்கள்:—நைத்ரவாயுவுள்ள ஒருசீசாவில் ஒரு தழலைச் செலுத்தினால் அது திடீரென்று பற்றியெரியும். ஆனால் அது ஜீவாதாரமானவாயுவல்ல. சாதாரணவாயுவுடன் அதைக்கலந்து உட்கொண்டால் தசைகள்சுருங்கி, தன்னையறியாமற் சிரிப்புண்டாகும். அதனால் அதற்குச் சிரிப்புவாயு என்றுபெயர். அதிகமாய் உட்கொண்டால், சரீரத்தில் உணர்ச்சியின்மையும் கடைசியாய் மரணமும் உண்டாகும். இது சீக்ரம் தண்ணீரிற்கரையும். ஆனால் தண்ணீருடன் கலந்து கல்பமாகமாட்டாது.

### நைத்ர-த்வயாக்ஸிஜம்.
### Nitric oxide.
### [$N_2O_2$ or NO.]

நைத்ரத்வயாக்ஸிஜம் (Nitric acid):—தண்ணீர்கலந்த நைத்ராமிலத்துடன் தாம்ரத்துண்டுகளைச்சேர்த்தால் நிறமற்ற ஒருவாயு உண்டாகும். இதுதான் நைத்ரத்வயாக்ஸிஜம். நைத்ரமும் ஆக்ஸிஜமும் ஸமஅளவாய்க் கலந்துள்ளது. தாம்பிரக்கம்பியைக்காய்ச்சி இந்தவாயுவுள்ளசீசாவிற்செலுத்தினால் நைத்ரம்பிரிந்து தாம்பிரஆக்ஸிஜம் உண்டாகும்.

பாஸம (Phosphorous) முதலான எரிபொருள்கள் இந்தவாயுவில் நன்றாய் எரியும். கரி, கந்தகம் முதலானவைகளைக்கொளுத்தி இந்தவாயுவுள்ளசீசாவிற் செலுத்தினால் அவை அணைந்துவிடும்.

* (நைத்ரத்ரயாக்ஸிஜத்தைப்பற்றி எழுதப்படவில்லை.)

## நைத்ர-சதுராக்ஸிஜம்.
## Nitrogen-peroxide.
## $N_2O_4$ or $NO_2$.

இருபங்குநைத்ரமும 4 பங்கு ஆகஸிஜனும்சேர்ந்து இவ்வாயு உண்டாகின்றது. இது கபில(Brown)வர்ணமானது. சீக்ரம தண்ணீரிற் கரையும்.

செய்முறைகள்:—முற்கூறிய நைத்ரத்வயாக்ஸிஜததுடன் ஆக்ஸிஜனைக்கலப்பதாலும, சுததநைத்ராமிலததுடன் தாமபிரத்தைககலபபதாலும், இன்னும பலவித லோஹநைத்ரஜங்(Nitrates)களைக் காயவைபபதாலும், நைத்ராமிலததைக காய்சசுவதாலும இவ்வாயு உண்டாகின்றது. இதைச சுடுதண்ணீரிற்கலந்தால் நைத்ராமிலமும, குளிர்ந்த தண்ணீரிற்கலந்தால் நைத்ரஜாமில(Nitrous acid)மும உண்டாகும.

$$2\,HNO_3 = H_2O + 2\,NO_2 + O.$$

## நைத்ரபஞ்சாக்ஸிஜம்.
## Nitrogen-pentoxide.
## $[N_2O_5]$

இது 2 பங்குநைத்ரமும 5 பங்கு ஆகஸிஜனும்கலநத ஒரு கட்டிப் பொருள். பாஸ பஞசாகஸிஜ(Phosphorous-pentoxide)த்துடன் நைத்ராமிலததைக்கலந்தால இப்பொருள் உண்டாகும.



# அத்யாயம்—12.

## ii. நைத்ரோ-ஹைத்ரம்.
## Nitrogen and Hydrogen.

### நவச்சாரவாயு.
### Ammonia.
### $[NH_3]$

நவச்சாரவாயு என்பது 1 பங்கு நைத்ரமும 3 பங்கு ஹைத்ரமும் கலநத ஒருவாயு. இது சாதாரணமாய் ப்ராணிகளின்சரீரம அழுகிப் போவதால் உண்டாகும் சாதாரணவாயுவிற் கலந்திருக்கின்றது. நிலக்கரியைப் பாத்திரததிலமூடி எரிப்பதாலும உண்டாகும.

செய்முறை :— நவச்சாரத்தைச் சுண்ணாம்புநீருடன்கலந்தால் இவ்வாயு உண்டாகும்.

2 நவச்சாரம்+சுண்ணாம்புநீர்.

=சுண்ணக்ளோரம்+2 ஜலம்+2 நவச்சாரவாயு.

$=2\ NH_4\ Cl+Ca\ O_2H_2=Ca\ Cl_2+2\ H_2O+2\ NH_3.$

=2 Sal ammoniac+Slaked lime=Calcuim chloride+2 water+2 ammonia.

பிரிக்கும்முறை :—நவச்சாரவாயுவில மின்சாரப்ரயோகம்செய்தால் நைதரமவேறு ஹைதரமவேறாகப் பிரிந்துவிடும்.

$$2\ N\ H_3=N_2+3\ H_2.$$

நவச்சாரம்.

Sal ammoniac.

நவச்சாரவாயுவும் க்ளோராமிலமும் கலந்தால நவச்சாரம என்னும் உப்பு உண்டாகும.

நவச்சாரவாயு+க்ளோராமிலம=நவ சாரம

Ammonia+Hydrochloric acid=Sal ammoniac

$NH_3+HCl=NH_4Cl.$

நைத்ராமிலம்.

Nitric acid.

நைதரம+ஹைதரம+ஆக்ஸிஜன்.

$[H\ NO_3]$

மறுபெயர்கள்-சங்கத்ராவகம, அகநிதராவகம்.

நைத்ராமிலம் என்பது 1 பங்குநைதரம, 1 பங்குஹைத்ரம் 3 பங்கு ஆக்ஸிஜம கலந்த ஓர் அமிலம். நைதரபஞ்சாக்ஸிஜத்தை ஜலத்திற்கலப்பதாலும, $[N_2\ O_5+H_2O=2\ H\ NO_3.]$ வெடியுப்பைக் கந்தாமில(Sulphuric acid)த்துடன்சேர்ப்பதாலும நைதராமிலம உண்டாகும்.

*வெடியுப்பு+கந்தாமிலம=பொடாஷியகந்தஜம்+நைத்ராமிலம்.

Nitre+Sulphuric acid=Potassium sulphate+Nitric acid



$KNO_3+H_2SO_4=KHSO_4+HNO_3$.

லக்ஷணங்கள்:—நைத்ராமிலம்பட்ட இடமெல்லாம் வெந்துபோம். ஆதலால் அதிகஜாக்ரதையாய் அதைக் கையாடல்வேண்டும்.

---

## அத்யாயம்—13.

### iii. நைத்ரஜங்கள் அல்லது நைத்ரஉப்புக்கள். Nitrates.

நைத்ரமும் ஆக்ஸிஜனும் மற்றமூலங்களுடன்கலந்து உண்டாகும் உப்புகள் நைத்ரஉப்புக்கள் அல்லது நைத்ரஜங்கள் எனப்படும்.

உதாரணம்:—சாம்பலகார (Caustic potash=K OH)த்துடன் நைத்ராமிலத்தைக்கலந்தால் வெடியுப்பு(Nitre or potassium nitrate)ம் ஜலமும் உண்டாகும்.



=†சாம்பலகாரம+நைத்ராமிலம=வெடியுப்பு+ஜலம.



=Caustic potash+Nitric acid=Nitre+water



$=KOH+HNO_3=KNO_3+H_2O$.

நைத்ராமிலத்துடன் தாம்ரத்தைக்கலந்தால், தாமரநைத்ரஜம் (Copper nitrate) உண்டாகும். இதேமாதிரி எந்தலோஹத்தினுடைய கரிஜ(Carbonate)த்தை நைத்ராமிலத்துடன்கலந்தாலும் அந்த லோஹநைத்ரஜமும், கரிவாயுவும் உண்டாகும்.

(தொடரும்.)

ஆர். எஸ். நாராயணஸ்வாமி ஐயர். B.A., B.L.

---

* வெடியுப்பு 1 பொடாஸியம்+1 நைத்ரம+3 ஆக்ஸிஜன்.

† சாம்பலகாரம=பொடாஸியம ஹைத்ராக்ஸிஜம். Nitre=Saltpetre=potassium nitrate=பொடாஸியம நைத்ரஜம.

# முருகேசபண்டிதர்பாட்டு.



இவர்சரிதத்தைச் சுருக்கியும, பாட்டுக்களை நீட்டியும் கூறுதும். பாட்டுக்கள் செநதமிழ்படிப்பவர்க்குப் பயன்படும என்பது எமது கருத்து. முருக+ஈசர் என்பன முருகேசர் என வடமொழிவிதியாகிய குணசநதிபெறுவது எப்படி? விதியீறுய்நின்ற முருக என்பது தமிழ் மொழியன்றே! தமிழ்மொழிககுங் குணசந்தி உண்டா? இது வழு வன்றே! எனச சிலர் ஆக்கேபிப்பர். "கந்தமுருகேசன்விடுகாளை செயல்காணு"எனக் கந்தபுராணகாரர்கூறுதலானும், வேல+இந்திரன் என்பனவற்றை "வேலேநதிரன்"எனவும, உலக+ஈசன் என்பனவற்றை "உலகேசன்"எனவும புணர்தநி முதநுபபுலவரும, பிறருங்கூறுத லானும், குட+ஆகாசம்=குடாகாசம எனவும, குள+ஆமபல்= குளாம்பல் எனவுமவருதல மருஉ எனச சிவஞானசுவாமிகள்கூறுதலானும் முருக+ஈசா=முருகேசர் என வருதலும வழுவாகாது எனக் கொள்க.

இவர், யாழ்ப்பாணததுள்ள சுன்னுகத்திலே வேளாளகுலத்திலே பிறந்தவர். சங்கரபண்டிதரிடத்திலுஞ், சிவசம்புப்புலவரிடத்திலுஞ் சிலசிலநூல்கள் கற்றவர். பாரதம, இராமாயணம, கந்தபுராணம், சேது புராணமமுதலிய இலக்கியங்களிலும, நன்னூல், சின்னூல், நம்பியகப் பொருள், தண்டியலங்காரம், யாப்பருங்கலக்காரிகைமுதலிய இலக்கணங் களிலும் பெரிதுஞ்சென்றவர். இலககணவாதங்களிற் பலரையும வென்றவர். யாழ்ப்பாணத்திலே மலலாகம சுன்னுகமமுதலிய பலவிடங் களில் ஆசிரியராயிருந்தவர். பின்னர் வடதேசஞ்சென்று சிதம்பரம, கும்பகோணம, சென்னைமுதலிய இடங்களிலும் ஆசிரியராயிருந்தவர். இங்கும் அங்கும் பலர்க்கு ஆசிரியர். எமக்குந் தமிழாசிரியர். ஆங்கில

திராவிடபண்டிதர் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளைக்கும், சுத்தாத்துவித சைவசித்தாந்தபிரசாரகர் சு. சரவணமுத்துப்புலவருக்குந் தமிழாசிரியர். பல தனிக்கவிகளுக்கும் மயிலணிச்சிலேடைவெண்பா, குடந்தை வெண்பாமுதலியவற்றிற்கும் ஆசிரியர்.

நடுவெழுத்தலங்காரம்.

மைந்தன் விரை மாமிகவா வழிமீ ரொன்று
மதனவேள் புறவிதழ்வ் வேழிரு மீது
வந்தநடு வெழுத்தெனக்குச செய்தான் மற்றை
வரிகள்பதி னொன்றினையுந் தானே கொண்டான்
அந்தநாள வளைத்துசசி தரித்துத் தமமை
அருச்சிக்கு மவர்க்ககற்றி யங்கை யேந்தி
முந்தவதன் கீழிருந்து நடனஞ் செய்து
முனிந்துரித்தான் மயிலணிவாழ் முதல்வன் றானே.

இந்தச்செய்யுளின்கருத்து, மயிலணி என்னுந்தலத்தில் வீற்றிருக்குஞ் சிவபிரான் எனக்குத் தத்துவராமற்செய்தான் என்பது. நடுவெழுத்து எடுத்துச்சேர்க்கும்படிநின்றசொற்கள் மைந்தன், விதை, மாமி, கவர்வழி, மீரொன்று, மதனவேள், புறவிதழ் என்பனவற்றால் முறையே பெறப்படும் மதலை, வித்து, மாதுலை, கவலை, ஆரால், காமன், புல்லி என்பன. இந்த எழுசொற்களிலுமுள்ள நடுவெழுத்துக்களை எடுத்துக் கூட்டத் "தத்துவராமல்"என்பது பெறப்படும். தத்துவராமல என்பது எனக்குசசெய்தான் என்பதுடன் இயைந்து தத்துவராமல் எனக்குச் செய்தான் என நிற்கும்.

மற்றைவரிகள் பதினொன்காவன நடுவெழுத்துக்கள் எடுக்கப்பட்ட மலை, விது, மாலை, கலை, ஆல், கான், புலி என்பன. வரிகள்—எழுத்துக்கள். விது—சந்திரன். மாலை—மயலை. கலை—மான். ஆல்—ஆலமரம். கான்—காடு. மலைமுதலிய இவ்வேழனுள்ளே அந்தநாள்வளைத்தது மலை. உச்சிதரித்தது விது. உச்சி—சிரம். அருச்சிக்குமவர்க்கு

அகற்றியது மாலே. அருச்சித்தல்—பூசைசெய்தல். அங்கை ஏந்தியது கலே. அதன்கீழ்—அந்த ஆலின்கீழ். நடனஞ்செய்யப்பெற்றது கான். முனிந்தெரித்தது புலி.

அருச்சிக்கும்வாக்கறறி எனபது பொதுவாய்நிற்பினும் மேருவை வளேத்தல, சந்திரனைத்தரித்தலமுதலிய சிறபபுச்செயலகளாற் சிவபிரானையேகுறிப்பதாயிற்று. மயிலணி பனனுகததுளள ஒரு சிவஸ்தலம.

விரோதச்சிலேடை.

நாலுகால் படைததிருககும நடப்பதிலலே
  நமமைப்போ லிருகையுணடாம பிடிப்ப தில்லே
வலமே பினனலுண்டா முடிப்பதில்லே
  இடையிடையே கணகளுணடாம பாரப்பதில்லே
கோலமுடி யரசருககு மெலலா ருககும
  கொடுததிடுமுட் காருதலேத் தவிரப்பதிலலே
சீலமிகு பொருளவிளங்க வெஙகு மாகித
  திகழுதய பானுவே செப்புவாயே.

இங்கே குறிககபபட்டபொருள் கதிரை என்பது. நாலுகால படைததிருக்கும் என்பது மிருகஙகளுககுங் கதிரைக்கும் பொருட் சிலேடை அவறறுள் ஒன்ருகிய மிருகம நடப்பதிலலே என்பதனுல மறுக்கபபட்டது. இருகையுண்டாம் என்பதும் பொருட்சிலேடை. பின்னல என்பதும கதிரைககும சடைக்கும சிலேடை. கண்கள் என்பதும் பார்வைக்குந் துவாரங்களுககும பொதுவாய்நின்றது. உட்காருதல் என்பதும பொதுவாய்நின்றது. உட்காருதல—இருததல, மனமுவர்த்தல். இது விரோதசசிலேடை. விரோதசசிலேடையாவது முன்னர்ச் சிலேடிக்கப்பட்டபொருள்களுள் ஒன்று பின்வருமபொருளால் மறுக்கப்படுவது. கம்பநாடரும இசசிலேடைகூறுவர்

இராமாயணம்.

பாடகக் காலடி பதுமத தொப்பன
சேடரைத தழீஇயன செய்ய வாயன

நாடகத் தொழிலன நடுவு துய்யன
ஆடகத் தோற்றத்த மகளி ரல்லன.

(இ - ள்) பாடகக் கால அடி பதுமத்து ஒப்பன - பாடகத்தை அணிந்த காலின் அடி தாமரைமலரை ஒப்பன. (பாடு அகம் கால் அடி - பெருமையைத் தமயிடத்துடைய தூண்களின் அடி) சேடரை தழீஇயன - பாங்கர்களை(ஆதிசேடரை)த்தழுவின. செய்யவாயன - செம்மையான வாயகளையுடையன. (நேர்மையானவாயில்களையுடையன.) நாடகம் தொழிலன - நடனத்தொழில்களையுடையன. (நாடு அகத்தொழிலன - நாடப்படுகின்ற அகத்தொழிலையுடையன.) நடுவு துய்யன - இடை பஞ்சினநுனிபோலவன. (நடுப்பாகம் துய்யன) ஆடகம் தோற்றத்த - பொன்போலும் தோற்றத்தையுடையன. (பொற்றொழில அமைந்த தோற்றத்தையுடையன.) மகளிர் அல்லன - பெண்களினவடிவங்களல்லாதன எ - று.

முன் வைக்கப்பட்ட சிலேடைப்பொருள்களால் மகளிர்வடிவங்கள் என்பது கொள்ளக்கிடத்தலபற்றி அப்பொருளைவிட்டு மாளிகைகள் எனனுமபொருள்கொள்ளுமாறு மகளிரலலன என்றார். அடி என்றது அடிப்பாகத்தை. சேடா என்பதற்குப பெரியோர் என்பதும பொருந்தும. அகத்தொழில என்றது உள்ளேசெய்யப்பட்டிருக்குஞ சிறப வேலையை. துய்யன - சுத்தமுடையன. இ த னு ல களங்கமிலலாத வெளியையுடையன என்பது பெறப்படும.

(வரும.)

இங்ஙனம,

அ. குமாரசுவாமிப்பிள்ளை,

# சிந்தாமணியுரையிற் சிறிதொருசந்தேகம்.*

சீவகசிந்தாமணிப் பதுமையாரிலம்பகத்து 52-வதுசெய்யுளில், சுதஞ்சனென்னும் இயக்கராசன் சீவகனுக்கு மூன்றுமந்திரங்களைக் கற்பித்ததாகக்கூறிவிட்டு, ஒவ்வொன்றினாலும்விளையக்கூடிய நன்மை இதுவென அவைகளின்வேறுபாடறிய அவன்கூறினதாக அடுத்த 53-வதுபாட்டிற் சொல்லப்பட்டுளது. அச்செய்யுளும் உரையும் அடியில்வருமாறு:—

> “கடுந்தொடைக்கவர்கணைக்காமன்காமுறப்
> படுங்குரநருமிதுபாம்புமல்லவுங்
> கடுந்திறனோய்களுங்கெடுக்குமவேண்டிய
> வுடம்பிதுதருமெனவுணரக்கூறினான்.”

“இ - ள். இது காமன்விரும்பப்படுஞ் சரீரத்தைத்தரும்; இது பாம்பினவிடத்தையும், ஒழிந்த மண்டலிமுதலியவற்றின்விடங்களையும், நோய்களையுங்கெடுக்கும்; இது வேண்டியவுடம்பைத்தருமென்று அவற்றின்வேறுபாடறியக்கூறினானென்க. காற்று, நெருப்பு, நீர் முதலியவற்றைக் கடுந்திறலென்றான்.”

வடமொழியிலுள்ள க்ஷத்திரசூடாமணி, கத்தியசிந்தாமணி, ஜீவந்தரசம்பு என்னும் நூல்களையும் உடன்வைத்து ஒப்புநோக்கியக்கால், அந்நூல்களிற்கண்டபொருள்களும் சிந்தாமணியிலுள்ள இச்செய்யுளின் பொருளும் ஒத்திருப்பதாகவேகாணப்படுகிறது.

அடியில்வருஞ்சுலோகம் க்ஷத்திரசூடாமணியிலுள்ளது:—

> “காமரூபவிதாயீநம் மந்த்ரம் விஷஹரம் ச ஸுஸ்வரம் ।
> யக்ஷேந்த்ர: ஸ்வாமிநே பஸ்சாத் மந்த்ரத்ரயம் உபாதிசத்॥” 5,27.

(இ - ள். வேண்டியரூபத்தைத்தரவல்லதும், கானத்தில்வன்மையையுண்டாக்குவதும், விடங்களைத்தீர்க்குந்திறனுடையதுமாகிய மூன்று மந்திரங்களை இயக்கராசன் சீவகனுக்கு உபதேசித்தனன்.)

* இதற்குப் பதிராதிபரபிப்பிராயம் அடுத்தெழுதப்பட்டிருக்கிறது.

க்ஷத்ரியசிந்தாமணியினின்றும் ஜீவந்தரசம்புவினின்றும் எடுத்து அடியில் எழுதப்படும்வாக்கியங்களின்கருத்தும் க்ஷத்திரசூடாமணியிற் கண்டவாறே இருக்கின்றது.

"ஸ்தித்வா தஸ்மிந்... ....ஸர்வவிஷாபஹாரேண மாந்த்ரிகோ வேஷதாரக்ருதேந காமோ-ஸ்ப்ருஹவிக்ஷண் ஸ்வேச்சயா ஸந்தர்ஸ்ய ஸ்த்ரீர் காமாந்தக்ருத் யஸ்மி" க்ஷத்ரியசிந்தாமணி.

"அதம் க்ஷணே யக்ஷாய ஸ்வேஷணோபதிஷ்டம் காமரூபவ வியாந்தமாந்தவிஷஹராந்தஸ்த்யஸ்தம் விரக்தம் ஸ்த்ரீரக்தம் வஹம்ஸ ந்ரூபாந்ம்....... ." ஜீவந்தரசம்பு.

வடமொழிநூல்களிலுள்ள (மாந்த்ர) காநம் என்ற வடசொல், மேலே காட்டிய சிந்தாமணிச்செய்யுளிற் குரல் எனக் காணப்படுகின்றது. செய்யுளின் உரையில்மட்டும் சரீரம் என்றுளது. ஏட்டிலெழுததோ? எழுதுவோர்பிழையோ? "கடுந்தொடைக்கவாக்ணைக்காமன்காமுறப் படுங்குரற்றுமிது" என்பதின் கருத்து "எவரினுமிக்கவனப்பும், மெல்லியநறுமலர்களையே கணைகளாகக்கொண்டு உலகெலாம்வசீகரிக்கும் வன்மையும்படைத்த காமனும், இத்தகைய தீங்குரலுமிருப்பின் எவ்வளவு உதவியாகவிருக்குமென விரும்பப்படுங்குரலைத்தரும்" என்பதாக வெனக்குத் தோன்றுகின்றது. இம்மூன்றுமந்திரங்களாலும் ஜீவகன் பயனடைந்தது பதுமையாரிலம்பகத்தையும் சுரமஞ்சரியாரிலம்பகத்தையும்வாசிக்க நன்குவிளங்கும். கந்தாவத்தையாரை ஜீவகன் பெறகணவே வென்றது யாழினாலல்லது குரலினாலன்று. பழையவேட்டுப்புத்தகங்களில், சாரீரம் என்றிருந்து எழுத்துப்பிழையாலோ அச்சுப்பிழையாலோ உரையிற் சரீரம் என விழுந்திருக்கலாமோவென எனக்கும் இங்குள்ள மற்றொருக்கும் ஒரு சந்தேகம்.

ஆகலின், சிந்தாமணியினேட்டுப்புத்தகங்களை கைவசமுள்ளபண்டிதர்கள் அவைகளையும் பார்த்துத் தமது அபிப்பிராயங்களை இச்செந்தமிழ் வாயிலாய் வெளியிடுவார்களெனவேண்டுகிறேன்.

டி. யஸ். குப்புஸ்வாமிசாஸ்திரி.

ஸ்ரீ:

# பத்திராதிபராபிப்பிராயம்.

“சிநதாமணியுரையிற சிறிதொருசநதேகம”என்னும விஷயததின் முடிவுரையில, “சிநதாமணியினேட்டுபபுததகஙகள்கைவசமுள்ளபண்டிதாகள் அவைகளையுமபாாததுத தமது அபிபபிராயங்களை இசசெந்தமிழ்வாயிலாய்வெளியிடவேண்டு’’மென்றுகேட்டுககொண்டிருப்பதால இச்சிறியவிஷயததில அபபண்டிதர்களுககுச சிரமமிலலாதிருககும பொருட்டு நானே அபிபபிராயமெழுதுகிறேன்.

இது ஒரு சநதேகமாக எனககுததோன்றவிலலை. ஏனெனில் மூலததில “ குரலதரும ” என்று சொலலபபட்டிருக்கிறது. குரல சாரீரம என்பதைப் படியாதபேதையர்களும “எனககுககுரலிலலை, குரலுள்ளவள்பாட்டடும”எனக கலயாணபபநதரிற பார்பபனமகளிர் சடஙகுகளிற (வசசுப்பாடல முதலியவற்றில) பேசககாணலாம்.

மூலததைபபடிககும்பொழுதே சாரீரமென்னும்பொருள் வெளிப்படையாயிருபபதால உரைநோககியுணரவேண்டுவதிலலை. ஆயினும உரையில என்ன எழுதியிருககிறதெனறுபாாககுஙகால, சகரநெடில காலகுறைநதிருபபினும பொருளுணாசசிவலியாற சாரீரதலைததரு மெனறே படிககததககசதாயிருப்பதாலும, சரீரமெனறு படிககப் பொருடபொருததமிலலாமையாலும இதிற சநதேகமுண்டாகவே யிடமிலலை.

அன்றியும, ஏடுகளில ஏகார ஓகார உயிரும உயிாமெய்யுமாகிய எழுததுககள அவறறின குறிலொடு சிறிதும வேறுபாடிலலாதிருக்கச செய்தே பிழையறபபடிககவலல நமககுச சகரநெடிலுககுரிய காலடையாளமிலலாமைபறறி இசசநதேகமுண்டாய்விடமாட்டாது.

சுககு என்று அசசிடவேண்டிய இடததில, ககரவொற்றுக்குப புள்ளிகொடாமல சுககு எனறு அசசிடபபட்டாலும அடையாளமிலலாமைபறறிச சுககு எனபபடியாது சுககு என்றே படிபபதுபோல இஙகும் சாரீரமென்று படிககததககதாயிருக்கிறது.

அன்றியும், சரீரம் என்பது பிறிதொருசொல்லாயிருப்பதாற் சந்தேகத்துக்கு இடமுண்டாயிற்றென்றுகொண்டாலும், அச்சொற்பொருளில, குரலென்னுஞ்சொல வழங்கப்படாமையால் அது அரும்பதமெனத்தோன்றுமாதலால உடனே சிந்தாமணிப்பதிப்பிற்சேர்த்திருக்கும் அரும்பத அகராதியைப்பாராதது, அதில, "குரல்—சரீரம்" என்றெழுதியிருப்பதைக்கண்டு, இச்சந்தேகத்தை யொழித்திருக்கலாம.

ஆகையால நெடிலடையாளம வீழ்ந்த அறபவிஷயங்களிற் பண்டிதர்களைப் பரியாலோசித்த தபிப்பிராயமெழுதும்படி கேட்பது உசிதமென்றுதோன்றவில்லை.

அன்றியும, நிருபநேயர் எழுதிய சிந்தாமணிப்பாட்டினுள், "வேண்டிய, வுடூமபிதுதரு"மெனறெழுதப்பட்டிருக்கிறது. இது திருத்தப்படாமையாற சந்தேகத்துக்கிடமாயிருந்தபோதிலும, உரையில உடமபைததருமென் றெழுதப்பட்டமையால, சந்தேகநிவிர்த்தியாய் எழுத்துவீழ்ச்சியெனறறிந்து பராமுகமபண்ணுவதுபோலவே இதுவும பராமுகம்பண்ணததக்கதாயிருக்கிறது.

ஆகையால நிருபநேயர், இன்னோரன்ன எழுததுவீழ்ச்சிகளைப பொருட்படுத்தாமலே சொலலாலும, பொருளாலும, சொற்றொடர்களாலும ஒன்றலலாத பலசந்தேகஙகளுக்கும, பிழைகளுக்கும இடமாய இவ்வருடம் பதிக்கப்பட்டிருக்கும் ஆங்கிலகலாசாலைப பிரவேசபண்டிதர் தமிழ்ப்பாடப்புததகம(Matriculation Tamil Text for 1915-16) போன்ற பதிப்புக்களை யாராய்நதுதோன்றும பலவிடயங்களைச சுருக்கியெழுதுவாராயின் அது பரீக்ஷைக்குப்படிக்கும மாணவர்களுக்கும பிறர்க்கும மிகவும்பயன்படுமெனறுதோனறுகிறது.

திரு. நாராயணையங்கார்,

செந்தமிழ்ப்பத்திராதிபர்.

உ

# * நமதரசவாகை.



"குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு"—திருக்குறள்.

மலர்தலையுலகிற் குயிரெனச்சிறந்த நம் ஐந்தாம்ஜார்ஜ்சக்கரவாத்தி யார் இங்கிலாந்துதேசத்திருந்து என்றுங் கோமுறைகோடாக்கோல் நடாத்தி, துஷ்டசிஷ்டநிக்கிரஹானுக்கிரகஞ்செய்துவருகின்றனரென்ப தறியாரார் ?

மடிமையில்லாக்குடிகளும், அன்னவாசக்கரநெறியைப் பற்றுக் கோடாகக்கொண்டு நீர்வழித்தாம் புணைபோ லியங்குகின்றனரென்றால், குடிகளின் இயற்கைப்புணர்ச்சி இத்தன்மைத்தென்வமையும். இதனால், நெறிப்பட்ட அரசும், வழிப்பட்ட குடியும் நம் சக்ரவர்த்தியும், அவராட் சிக்குட்பட்டோருமெனச் சிறப்புவகையாற்போதரும். ஆகவே,

"அரசுங் குடியு மொத்தால் ஆட்சிக் கிடையூ றில்லை"

என்ற முதுவாக்கும் "நமதரசவாகை"யை வலியுறுத்தாநிற்கும்.

நமதுமுடிமன்னர், அரசியலுக்கேற்ப ஆறு அங்கங்களையும் தம ஓரங்கமாகக்கொண்டனரன்றோ ?

அங்கம் ஆறாவன: அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்பன. என்னை?

"படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு" - திருக்குறள்.

ஆகலினென்க.

(1) அமைச்சு:—'வினைசெய்யுங்கால் அதற்குவேண்டுங்கருவிக ளும், அதற்கேற்றகாலமும், அதுசெய்யுமாறும், அவ்வாற்றிற்செய்யப் படும் அவ்வரியவினைதானும் வாய்ப்பஎண்ணவல்லவனே அமைச்ச னாவா'னென்ப. நமது மிக்கசீர்த்திபெற்ற சக்ரவர்த்தியாருக்கு, எவ்வினை எத்தேசத்து எவ்விடத்து எச்சமயத்து எம்மாதிரியியற்றல்வேண்டுமோ அங்ஙனம் இயற்றும் நுண்மாணுழைபுலப் பார்லிமெண்டு அமைச்சர் பலராவர்.

---

* இந்தவியாஸம், 25—9—15ல் செங்கிபட்டி போர்டு எலிமெண்டரிப் பாடசாலையிற் பட்டுக்கோட்டைரேஞ்சு ஸ்கூல்ஸ் சூப்பர்வைஸர் ஸ்ரீமான், கனம் ஐயாச்சாமிஐயரவர்கள் அக்கிராசனத்தின்கீழ்க் கூடிய உபாத்தியாயச் சங்கத்திற் படிக்கப்பட்டது.

(2) நாடு:—'குன்றாதவிளையுளைச்செய்வோரும், அறவோரும், கேடில்லாச்செல்வமுடையோரும் ஒருங்குவாழ்வதே நா'டென்ப. நமது கோவிதிவாய்ந்தபூபதிக்கு இத்தகைய எதத்னையோநாடுகளுள.

(3) அரண்:—'எஞ்ஞான்றும்வற்றாத நீரரண், பரந்தநிலவரண், உயர்ந்தமலையரண், அடர்ந்தகாட்டரண்'என்ப. நமது அன்னைபோலும் மன்னருக்கு,இயற்கையும செயற்கையும் ஆய இந்நான்குவகையரணும, மற்றேனையவரண்களுமுள.

(4) பொருள்:—'நாட்டானும, அரணானும ஆக்கவுங் காக்கவும படுவ'தென்ப. நமது மாசுபடுவதிலலா ராஜராஜர், நாட்டாரால ஆககப் பெற்று அரணாற்காக்கப்பட்ட கழிபெருஞ்செலவமுடையாரென்க.

(5) படை.—'ஊறஞ்சா வெல்படையாய யானைமுன்னாற் படை'என்ப. நமது வெற்றிவாய்ந்தகொற்றவர், நீர்விமானமும, நில விமானமும,ஆகாயவிமானமும,அதிரதமுதலிய நான்குரதங்களும், வன சரம், கிரிசரம, நதிசரமுதலிய யானைபபடையும, வங்கம, கலிங்கமுத லியதேயதத்தானையதும, மல்லகதிமுன்னாககதிவாய்ப்புற்ற காற்றன்ன கடுமையும், கூற்றன்னகொடுமையுமுடைய எண்ணிறநதகுதிரைப் படையும, ஆட்படையும, வாட்படைமுதலிய எலகொணியன்ற அததிர சத்திரப்படையும் உடையார்.

(6) நட்பு:—'இயற்கை செயற்கை யிருவகையானுயது நட்பு' என்ப. நமது பங்கமிலலாத இங்கிலாந்தரசர், முகம் அகம் இருவயினும உண்மைமலரபபெற்ற நேசபபடைமுன்னாப் பலதேசமனனரை நட்கப் பெற்றாரென்க.

இங்ஙனமாக முறைப்படுததிய இவ்வாறங்கத்தினும் ஒரங்கமேனும குறைவுறாத நமதரசர், மண்ணாட்சிபுரிவது காட்சியிற் காணக்கிடப்ப தன்றி அவர்சசுட்டிப்பேசிய சரிததிரவாயிலானும, பிறவாற்றானும் அறியவரும். ஆகவே இத்துணைப் போதிய ஆற்றலமைந்த நம் மன்ன ரின்மண்ணை வேற்றரசர்கொள்ளுவதெங்ஙனமாகும்? பின்னருமஆராய் வாம்.

உலகத்துயிர்கள் நிலைபெற்றியங்குதற் கின்றியமையாதன நெல்லும் நீரும்; நெலலின்றேல நீபருகிச சின்னுட்கடததலமையும்; நீரின்றேல அங்ஙனம நாட்கடதத லரிதன்றே? இங்ஙனமாக உவையிரண்டும இலலையாயின் உயிரெனனுமபெயரு மிலலையாகும; ஆகவே, நெலபலகுதற்கு நீர்வேண்டும; நீரமலகுதறகு வேள்விவேண்டும; வேள்விநிரமபற்கு மறைகள்வேண்டும; மறைகள்நிலைறவுற மன்னவன்செங்கோல வேணடும; எனவே, உலகததுயிர்நிலைபேறறினுக்கு மன்னவன்செவ்விய கோல காரணமெனககணடாம. அஙஙனம நீதிககோலநடாய் நெறிமுறையாளும அதிபதி, நதிபதிசூழும இவவவனியாளும நம ஜாஜ் சக்ரவர்த்தியாரென்பது காடசியளவையாற கண்ணுறலமையும. எதிர்காலததில அரசுபுரியவரும இவர்சசுடடியன்றே 'நசசுமபெருமை முசசஙகததுட் கடைசசஙகபபுலவர்கள அருளிசசெய்த எட்டுததொகையுள'ஒன்ருகிய புறநானூற்றின் அடியிலவரும பாவடிகள் எழுநதவெனக் கோடலமையும. வருமாறு:—

"நெல்லு முயிரன்றே நீரு முயிரனறே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம."

அன்றிக்கே, மக்கண்மாட்டு மாதாவுககுநிகழும அன்பின்பெருககை அளவிடலரிதே. அங்ஙனமாக, நமசக்ரவாத்தியார் மடிமடிக்கொண்டொழுகாககுடிகண்மாடடு நிறைநதஅன்பினராதல அவர் சரிததததானும், மகுடாபிஷேகககாடசியானும புலனும. அற்றாக, நம மன்னரை அன்னையென்னலாம. அவர் ஆடசியில, குடிகள் அடையும பலநலங்களாற் றவமென்னலாம. குடிகண்மாடடுள்ள மறநிலையொரீஇ அறநிலை நிறீஇ யவாக்கின்பளிததலிற் சேயென்னலாம. தாய்மார்கள், நோயாற் பீடிக்கபபட்டசேய்கட்குக கயப்புமருந துணக்கொடுததுப் பின்னயப் படுத்துமாறுபோல வறுமைநோயுறபபெற்றுக களவுமுதலியவற்றுனுயிர்ன்மையேறப்பெற்றோரைத் தண்டமென்னும மருந்தூட்டி யவர்க்கு நன்மையயததல அரசன்கடமையாகவே, காராக்கிரஹங்கண்டு, அதிற் கல்விசசாலை, தொழிற்சாலையமையக்காண்டலின் நிரலே நோயென்னலாம். மருந்தென்னலாம். ஓங்குபுகழ்வாய்நத ஆங்கிலமுதலிய பாஷாஞானம், நுணுகிய கேள்விஞானம உறலின் அறிவென்னலாம. இவையிற்றினுக்கும நமது புவிசசக்ரவர்ததியார், உருவகமாகலின் அடியில்

வரும் கவிச்சக்ரவர்த்தியின் அரும் பொருட்டொடர்நிலைச்செய்யுள் ஒன்று என் நினைவுக்குவரலாயிற்று. அதுவருமாறு.—

"தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்பயப்பிற்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்குநீரால
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்குகேள்வி
ஆயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்குமன்னன"

அன்றிக்கே,

"இருமுந்நீரக் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும், என்றாங்
கவையளந் தறியினு மளத்தற் கரியை
யறிவு மீரமும பெருங்க ணோட்டமும
சோறுபடுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே
திருவி லல்லது கொலைவில லறியார
நாஞ்சி லல்லது படையு மறியார
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே
யம்புதுஞ்சுங் கடியரண
லறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை
யனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லா நினனஞ் சும்மே."

என்ற புறப்பாட்டின்படி, கடலினாழமும, உலகத்துப்பரப்பும், இவறுதி யங்குங் காற்றும, நிலைஇய ஆகாயமும ஆகிய இவற்றை அளவிட்டறி யினும நமதரசரறிவும, அன்பும, வலியும அளவிட்டறியப்படா. அவர்குடைநிழற்கண்ணுள்ளோர், சோறடுந்தீயின வெம்மையும,

ஞாயிற்றின்வெம்மையும் அல்லது பிறிதொருவெதுப்பறியார்; இந்திர தனுவல்லது எதிரியின் கொலைவில் அறியார்; உழவுகருவியல்லது ஊறு படுக்கும் படைக்கருவியறியார்.

நமதுமன்னர், கருப்பமுற்றபெண்கள் விருப்புடன்கொண்டுண்ணுவ தன்றிப் பகைவர்கொள்ளா மண்ணினையுடையார்; பிற அமைவன அமைந்தார்; புவிக்கெனத்தோன்றிய தூமகேதுமுதல உற்பாதங்கட் கிடையாதசேமமுடையார். இத்தகைய நமது ஐந்தாம்ஜார்ஜ்சக்ர வர்த்தியார்,

> "காவ லமைந்தான கடலுலகங் காவலா
> லோவ லறியா துயிர்க்குவகை"

என்ற புறப்பொருட்பாவின்படி, தற்போதுநேர்ந்த வீரயுத்தத்தில் வாகைசூடி வாகைநாடிமன்பதைக் கன்புபெருகக இறைவன் அருள்புரி வானாக. சுபம்! சுபம்!! சுபம்!!!

I. M. முருகையவாத்தியார்,
B. E. ஸ்கூல், செங்கிபட்டி.

---

௨

## புத்தகமதிப்புரை.

1. **அகலிகைவெண்பா** —(வசனத்துடன்) இது, சென்னைப் பிரஸிடென்ஸி ஸிவில் வெற்றெறிநெறி டிபார்ட்டுமெண்டு டிபுடிசூப்ரின் டெண்டும், இந்துதேசத்துக் காலநடைக்காரர்புத்தகம், நெல்லைச்சிலே டைவெண்பா, கோம்பிவிருத்தம், சுவர்க்கநீக்கமுதற்காண்டம்முதலிய நூல்களின் ஆசிரியருமாகிய ம-ா-ா-ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணியமுதலியா ரவர்களாலியற்றியச்சிடப்பட்டு, மதுரைத்தமிழ்ச்சங்கத் தலைவரான மாட்சிமைதங்கிய முத்துவிஜயரகுநாத ராஜராஜேஸ்வர முத்துராமலிங்க சேதுபதியவர்களுக்கு உரிமைசெய்யப்பெற்றிருக்கிறது. இதிலுள்ள

வெண்பாக்களெல்லாம் சொற்சுவை பொருட்சுவைபொருந்திய திருந் திய செய்யுளாய்ப் படிப்பவர்க்கு மனமகிழுமாறு பழையகவிகள்போற பாடப்பட்டுள்ளன. ஒவ்வொருசெய்யுளுககுமுரியபொருள்களை யாவ ரும எளிதிலறியுமபடி தெளிவான தமிழ்நடையிலெழுதிய வசனபகுத மொன்று சேர்க்கபபெற்றிருக்கிறது. இதன்விலை அணு 8. தபாற்கூலி அணு 1 வேண்டுவோர், திருநெலவேலிஜில்லா, சுரண்டைபபோஸ்டு, வெள்ளககால, ம-௱-௱-ஸ்ரீ வெ. ப. இராமலிங்கமுதலியாரவர்களிடத திறபெறலாம.

2. இரகுவம்மிசம்:–(உரையுடன்) இது, யாழபபாணததுநலலூர் மஹாவிததுவான் அரசகேசரியென்பவரால, தமிழிலக்கியங்கறபவாககுப பெரிதும உபகாரமாகப பாடபபட்டதொரு சிறநதகாவியமென்பது யாருமறிநததே அதறகுப புன்னாலைககட்டுவன விதவான ஸ்ரீமத-சி கணேசையரவாகளால இனியதமிழுரையொனறு எழுதியசசிட்டு வெளியிடபபட்டிருக்கிறது. கறகுமமாணவாகளுக்கும பிறாக்கும மிகப பயன்படததககது. இதன்விலை ரூபா இரண்டு வேணடுவோா ஷை ஐயரவாகளுக் கெழுதிப்பெறலாம.

3. கோகுலாசரித்திரம் :—இது, இநதியஜனததலைவருளொருவ ராய்த தேசநன்மைக்குழைதத புண்ணியபுருஷரான கெண்ணியமுளள கோபாலகிருஷ்ணகோகலேஎனபவருடைய ஜீவியசரிததிரமாகச சுதேச மித்திரன் உதவிப்பத்திரிகாசிரியா கே. விசுவநாதையரவாகளால, தெளி வான தமிழ்நடையில நனறுயெழுதப்பபட்டிருக்கிறது. இதனால அப புணணியபுருஷரது கலவிததிறமையும, குணவிசேஷங்களும, புததி சாதுரியமும, ஜனோபகாரசீலமும படிபபவாகளுக்கு நன்குபுலபபடுவ துடன ராஜ்யநிர்வாககாரியங்களிலுள்ள சாதகபாதகங்களையாராயு மறி வுடைமையும உண்டாகததககதாயிருககிறது. இதன்விலை அணு எட்டு. வேண்டுவோா ஆககியோாகெழுதிபபெறலாம.

4. பூஸ்திதியைஆளும்வழி –இது, தஞ்சாவூர்ப பள்ளியககிரஹா ரத்திலுள்ள ஸ்ரீமத-டி. கே. வெங்கட்டராமையரவாகளால யாவரும படிககுமபடி எளியதமிழ்நடையிலெழுதபபட்டிருககிறது. இதில,

பூஸ்திதியை ஆட்சிசெய்வதற்கு அறியவேண்டிய பலவிஷயங்கள் எழுதப்பட்டிருப்பதால், பூஸ்திதியுள்ளவர்களாலும், அவர்கள் பெண்டுபிள்ளைகளாலும் இது விரும்பிப்படிக்கத்தக்கது. இதன்விலை அணா எட்டு. வேண்டுவோர் ஆக்கியோர்க்கெழுதிப்பெறலாம்.

---

5. **கதையும்பாட்டும்:**—இது, அறுப்புக்கோட்டைரேஞ்சுப்பள்ளிக்கூட ஸப் அஸிஸ்டெண்டு இனிஸ்பெக்டரும், மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் அங்கத்தினருமாகிய ஸ்ரீமத்-வே. **முத்துஸாமிஐயர் எம்.ஏ.எல்.டி.** அவர்களாலும், ஷையூர் எஸ். பி. கே. ஸெகண்டரிஸ்கூல்போதகாசிரியர் **ஏ. கே. ஸுப்ரமண்ய ஐயர**வர்களாலும் இயற்றப்பட்டதொரு சிறுபுத்தகம். இதிற் பாலபோதனைமுறைக்கேற்ற சிலசிறியகதைகளைத் தமிழ்நடையிலெழுதியும், அக்கதைகளையே வர்ணமெட்டுள்ள பாட்டுக்களாகப் பாடியும் சேர்க்கப்பட்டுள்ளன. கதைகளை வசனநடையில் எழுதியிருப்பது திருப்திகரமாயிருக்கிறது.

பாடல்கள் சிறுவருக்குப் பயிற்றுவிக்கவேண்டுமானால், சங்கீதமுறையையே முக்கியமாகக்கொள்ளாமற்படிக்கும்படி முன்னோர்முறையையே பின்பற்றி அகவல், வெண்பா, கலிவிருத்தம் முதலிய சிறியசெய்யுட்களைக் கற்பிப்பதே சிறந்தமுறையென்றுதோன்றுகிறது. சங்கீதமெட்டுடன்கற்பிப்பதற்கு உபாத்தியாயர்களுக்கும், மாணவர்களுக்கும் சங்கீதமெட்டுக்கேற்ற சாரீரசம்பத்தும், தாளப்பயிற்சியும் அமைவது அரிதாகையால், அவை, சர்வாதிகாரயோக்கியமில்லாமையாலும், பக்திமார்க்கப்பிரஸங்கமல்லாத சாமான்யகதைகளில் நாடகபாத்திரங்களுக்கே யுரியவாகையாலும், அவைவல்லநடர்களைச் சிற்றினத்துட்சேர்த்து எண்ணியிருத்தலாலும் பெருமையுடையராக விரும்பும் நம் மாணவர்களைக் கூத்தாடிகள்போலச்சாமான்யகதைகளைச் சங்கீதமெட்டுடன்கூடிப்பாடும்படி கற்பிக்கமுயல்வதானது தகாதகாரியமாயிருப்பதுமன்றி, இப்பொழுது கல்விப்பயிற்றற்கென்று வரையறுக்கப்பட்டிருக்கும் அருமையான சொற்பகாலத்தையும் பாழாக்கவல்லதாயுமிருக்கிறதென்றுதோன்றுகிறது. இதன்விலை அணா நான்கு. வேண்டுவோர் ஆக்கியோர்க்கெழுதிப் பெறலாம்.

பத்திராதிபர்

## 1915-ஆம் அக்டோபர்மீ 3உ
## காலை 8-மணிக்குநடந்த மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் காரியநிர்வாஹஸபையில் முடிவுசெய்யப்பட்ட தீர்மானங்களின் விவரம்.

---

1. மாட்சிமைதங்கிய இராமநாதபுரமாராஜா ஹிஸ் ஹைனெஸ். பா ராஜராஜேஸ்வரசேதுபதியாகிய முத்துராமலிங்கசேதுபதியவர்கள், அக்கிராசனாதிபதி.

2. மகா-௱-௱-ஸ்ரீ M. ஆபிரஹாம்பண்டிதரவர்கள்.

3. ,, கானபகதூர H அபதுல்சுபானசாஹிப அவாகள்.

4. ,, V S. இராமஸ்வாமிசாஸ்திரியவர்கள் B. A., B. L.

5. ,, T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் B. A., B. L.

6. ,, T. N. சுந்தரராஜஐயங்காரவர்கள் B. A., B. L.

(5, 6: கௌரவ காரியதரிசிகள்.)

இவர்கள வந்திருந்தார்கள.

### தீர்மானங்கள்:—

I. (1) மகா-௱-௱-ஸ்ரீ S. Rm. S. A. குட்டயனசெட்டியாரவர்கள, கொத்தமங்கலம.

(2) ,, C. சுநதரமையரவர்கள் B. A. வக்கீல், தேவகோட்டை.

(3) ,, சிற. பொ. குப்புசாமிதீக்ஷிதர் அவர்கள், சிதம்பரம்.

இவர்களைச் சங்கத்தின் அங்கத்தினராக அங்கீகரிக்கலாயிற்று.

II. 1915-ஆம் ஜூன், ஜூலை மாதங்களின வரவு செலவு கணக்குகள், வாசித்து அங்கீகரிக்கப்பட்டன.

III. செந்தமிழ் 11, 12-வது தொகுதிகளைப் பாதிவிலைக்கு விற்க்க தீர்மானம.

IV. மாறனலங்காரச் சித்திரக்கவிகளை அச்சிடத் தயாரித்த பிளாக்குகளின்செலவு ரூ 17—8—0ம் அங்கீகரிக்கலாயிற்று.

V. இப்போது நடக்கும் பெரியயுத்தத்தில் வெற்றியும் புகழும் சீக்கிரத்தில் நமது ஆங்கிலத்துரைத்தனத்தாருக்குக்கிடைக்கவேண்டுவதாக சங்கம் 14-வது வருஷோத்ஸவக்கூட்டத்திற் செய்த தீர்மானத்தை, சென்னைக் கவர்னமெண்டாரவர்கள் அங்கீகரித்து, ஷை கூட்டத்து அக்கிராசநாதிபதி மகா-ா-ா-ஸ்ரீ திவான் பகதூர் L. D. சுவாமிக்கண்ணுபிள்ளையவர்களுக்கு ஷை கவர்ன்மெண்டு பிரதான செக்ரிடெரி அவர்கள் எழுதியகடிதம், வந்தனத்துடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

VI. சென்னைச்சர்வகலாசங்கத்தார், பரீக்ஷைகளுக்கு ஏற்படுத்தியிருக்கும் பாடபுத்தகங்களிற் பிழைகளிருப்பதால் அவை சம்பந்தமாக லிட்டரரிகமிட்டி (Literary Committee) மெம்பர்களை ஆலோசித்துக்கொண்டு, மகா-ா-ா-ஸ்ரீ பிரசிடெண்டு அவர்கள், சர்வகலாசங்கத்தாருக்கேனும், கவர்ணமெண்டாருக்கேனும் வேண்டியகடிதங்கள் எழுதும்படி, பிரசிடெண்டு அவர்களைக் கேட்டுக் கொள்ளலாயிற்று.

VII. சந்தாப்பாக்கி விஷயமாய், காரியதரிசிகள் லெட்டர்மூலமாகவும், லாயர்லெட்டர்மூலமாகவும், உசிதம்போற் கேட்டுவசூலித்து அதன்முடிவைத்தெரிவிக்கத் தீர்மானம்.

VIII. (1) Life Member சந்தா ரூ 100-யும், வருஷாந்தரச செலவுக்கு உபயோகிக்காமல் மூலதனமாகவைத்து, அதன் வட்டியைமட்டும் செலவுசெய்யவேண்டுமென்று தீர்மானம்

(2) 1915-16ம் வருஷத்து Draft Budget அங்கீகரிக்கப்பட்டது.

(3) சங்கத்திற்குப் பணம் தேவையாயிருக்கும்விஷயத்தில் யாவரும் முயற்சிசெய்யவேண்டுமென்று தீர்மானம்.

B. RajaRajeswaran
President
Madura Tamil Sangam.

3—10—15

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கங.] ராக்ஷஸ ஸ்ரீ ஐப்பசி மீ [பகுதி-கஉ.

Vol. XIII. October—November, 1915. No. 12.

## *அசோகனது ஆக்ஞாபத்திரங்கள்.

[அசோகனது ஆக்ஞாபததிரங்கள் என்ற மகுடததின்கீழ்க கல்கததாநகரில, கியாதிவானும சாஸ்திரபரிசீலனையிலேயே காலததைச செலுததுபவரும, இங்கிலாநதிலுள்ள ஆகஸ்போர்டுசர்வகலாசாலையிற் சிரேஷ்டவிதயாபட்டம (M. A.) பெற்றவரும, பாரிஸ்டாபரீக்ஷை கொடுத்தவருமான மிஸ்டா K. P. ஜேயஸ்வாலஅவர்கள் M A (Oxon) Barrister-at-law. தமது ஆராய்சசியாற்செய்த மொழிபெயர்ப்புடன் மாடர்ன்ரிவியூசஞ்சிகையிற்றோனறியதை, தமிழறகுப் பெரிதுமபயன்படுமென்றுகருதி யீண்டுததருகின்றேன் ]

ஈண்டு எழுதபபெறும மொழிபெயர்ப்பானது இதுகாறுஞசெய்யப்பட்டவைகளினும மேலானதாயிருக்குமென்று கருதப்படுகிறது.

இதுவரையில அசோகமகாராஜனதுசாஸனங்கள் எழுதப்பட்டபடியே வெளிப்போந்ததில்லையாதலால், அவைகளை ஒருமாசிகசஞ்சிகை மூலமாக, அசோகமகாராஜனது ஜனசநததியாருக்கு தொடககமாகக்கூறுகிறேன். அசோகமகாராஜன் அக்காலதது லஙகாதவீபமுதல் ஆப்கானிஸ்தானமவரையுள்ளஜனங்களா லறியப்படடபாஷையை யுபயோகிததுவநதார். இப்பொழுது இங்கு எழுதப்படுமபாஷையும சகலராலும் அறியப்பட்டதே. (தேவநாகரியில் அசசிடப்பட்டிருககிறது.)

---

* இதிலுள்ள சிலவிஷயங்களும் சாசனங்களின் சுததபாடமும் நன்கு விளங்காவிடினும் மிகப்பழமைபற்றியதாயிருப்பதால் நிருபநேயா திருததியனுப்பியபடியே பதிக்கப்பெற்றிருக்கிறது. ப—ர்.

இந்த ஆக்ஞாபத்திரத்திற்கண்ட இடம் தெற்கில் மைசூரும் வடபால் பாரசீகராஜ்ய எல்லையுமுடையதாயினும், ஆக்ஞாபத்திரத்திற் காணப்படும் விடயங்கள் ஆசியா, ஆபிரிக்கா, ஐரோப்பா ஆகிய மூன்று கண்டங்களிலும் செல்லத்தக்கன. அசோகஅரசனது சாஸனங்களிற் கண்டபடி, அந்தியகவினராசசியமான சிரியாநாட்டிலும், மேஸிடோனியாவிலும், எகிப்து, ஸைரனிலும் வைத்தியசாலைகள் மனிதருக்கும் மிருகங்கட்கும் உபயோகமாகும்படி ஏற்படுத்தியதோடு, மதவிஷயங்களைப் பற்றிப் பிரவசனஞ்செய்யவும் ஏற்பாடுசெய்திருந்தார்.

## முதல்வகுப்பு.

### மலைகளில்வெட்டப்பட்ட அசோகனது 13, 14-ம்வருஷத்துத் தாமத்தைப்பற்றியசாஸனபத்திரங்கள்.

இந்தவகுப்புச்சாஸனங்களை ஐரோப்பிய பூர்வீகஆராய்ச்சியாளர் மலைவெட்டுக்கள்(Rock Edicts)என்பர். இவைகள் அசோகமகாராஜனால் "ஸிலாபலகா" (சிலாபலகா)என்று சொல்லப்படுகின்றன. அவை 14 பாகமாகப்பிரிக்கப்பட்டு ஒவ்வொருபாகமும் தனித்தனிஆரம்பித்து எழுதப்பட்டிருக்கின்றன. முற்றுப்புள்ளிகளும் அரைப்புள்ளிகளும் இடைவெளிவிலாசத்தாற்காட்டப்பட்டிருக்கின்றன. எல்லைப்புறத்தில் இரண்டிடத்தில் இந்தச்சாஸனங்கள் காணப்படுகின்றன. ஒன்று பெஷாவருக்கு 40 மைல் வடகிழக்கில் கபுர்தகிரி என்னுமூரிலும், மற்றொன்று எல்லைப்பிரதேசத்தில் ஆபட்டாபாத(Abottabad)என்னுமநகருக்கு 50 மைல்வடக்கிலுள்ள மானசாரம்என்ற ஊரிலும் தென்படுகின்றன. இவை கரோஷ்டி என்றபாஷையில் வெட்டப்பட்டிருக்கின்றன. இப்பாஷை பாணினிபகவான்காலத்திற் பாரசீகர்களால் அந்தப்பிராந்தியங்களிற் கொண்டுவரப்பட்டது. மற்றவை, தேவநாகரி, வங்காளி, தமிழ்முதலிய எழுத்துக்கட்கு மூலஎழுத்தான பிராமியெழுத்திற் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இவை காணப்படுமபிராந்தியங்கள் (1) யமுனையும டான்ஸ் எனறநதிகளும சங்கமமாகும மஸ்ஸோரி என்றவூருக்கு 15 மைல்தூரத்திலுள்ள கலாஸி (2) ஸோபாரா (சூரப்பராகா) அக்காளில பம்பாய் போலவது; சிரியாநாட்டிற்குச்செல்லக் கப்பலேறுமிடம் (3) அசோகனதுகாலத்தில மேலநாட்டிற்குப் பிரதானநகராகிய கிர்நார் (4) தவுலி (புராதனதோஷாலி) புவனேசுவரமென்னும் புரிக்ஷேத்திரத்திற்கு 7 மைல் வடபுறமுள்ளது (5) கஞ்சமஜில்லாவிலுள்ள ஜோகார் என்னும் இடங்கள்.

## முதலாவது சாஸநம்

𑌇𑌯𑌂 𑌧𑌰𑍍𑌮𑌲𑌿𑌪𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂-𑌪𑍍𑌰𑌿𑌯𑍇𑌨, 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾 𑌰𑌾𑌜𑍍𑌞𑌾 𑌲𑍇𑌖𑌾𑌪𑌿𑌤𑌾. 𑌇𑌹 𑌨 𑌕𑌿𑌂𑌚𑌿𑌜𑍍𑌜𑍀𑌵𑌂 𑌆𑌰𑌭𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍁𑌹𑍋𑌤𑌵𑍍𑌯𑌂 𑌨 𑌚 𑌸𑌮𑌾𑌜𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃। 𑌬𑌹𑍁𑌕𑌂 𑌹𑌿 𑌦𑍋𑌷𑌂 𑌸𑌮𑌾𑌜𑍇𑌷𑍁 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂-𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌰𑍍𑌶𑍀 𑌰𑌾𑌜𑌾। 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌪𑌿 𑌤𑍁 𑌏𑌕𑌤𑍍𑌯𑌾𑌃 𑌸𑌮𑌾𑌜𑌾𑌃 𑌸𑌾𑌧𑍁𑌮𑌤𑌾 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂-𑌪𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌞𑌃। 𑌪𑍁𑌰𑌾 𑌮𑌹𑌾𑌨𑌸𑍇 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂-𑌪𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌞𑍋 𑌅𑌨𑍁𑌦𑌿𑌵𑌸𑌂 𑌬𑌹𑍂𑌨𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌶𑌤𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌿 𑌆𑌰𑌭𑍍𑌯𑌨𑍍𑌤 𑌸𑍂𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯। 𑌤𑌦𑌦𑍍𑌯 𑌯𑌦𑌾 𑌇𑌯𑌂 𑌧𑌰𑍍𑌮𑌲𑌿𑌪𑌿𑌰𑍍𑌲𑌿𑌖𑌿𑌤𑌾 𑌤𑍍𑌰𑌯 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌆𑌰𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑍂𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌦𑍍𑌵𑍌 𑌮𑌯𑍂𑌰𑍌 (1) 𑌏𑌕𑍋 𑌮𑍃𑌗𑌃 𑌸𑍋𑌽𑌪𑌿 𑌮𑍃𑌗𑍋 𑌨 𑌧𑍍𑌰𑍁𑌵𑌃। 𑌏𑌤𑍇𑌽𑌪𑌿 𑌤𑍍𑌰𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌃 𑌪𑌶𑍍𑌚𑌾𑌨𑍍𑌨 𑌆𑌰𑌪𑍍𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇।

## ஆங்கிலத்தின் தமிழ்மொழிபெயாப்பு

தேவர்களுக்குப்பிரியமானவனும், அரசனுமாகிய பிரியதாசியின் பஹிரங்கபத்திரம்.—இனி யாதொருபிராணியும் வதைசெய்யப்படவாவது அக்கினிக்குப்பலிகொடுக்கப்படவாவது கூடாது தேவர்கட்குப் பிரியமானவனும், அரசனுமாகிய பிரியதரிசி, சமாஜங்களில் அதிக தீய வழக்கங்களைக்காண்பதால் இனி சமாஜங்கள்கூடக்கூடாது ஆயினும், வாதப்பிரதிவாதமற்றகூட்டங்களைப்பற்றி மதிப்புண்டு. முன்னாளில் தேவர்கட்குப்பிரியமாகிய அரசனாகிய பிரியதரிசியின அட்டிலில, நூறு, ஆயிரக்கணக்கானபிராணிகள் போஜனத்திற்காக வதைக்கப்பட்டன. அதன்பொருட்டு, இந்தத்தர்மசாசனம் எழுதுங்காலத்தில இரண்டு மயில்களும், ஒருமானுந்தவிர மற்றவை வதைசெய்யப்படுவதில்லை. மான்கூட ஏகதேசமே. இனி அவைகூட வதைக்கப்படமாட்டா.

---

(1) கபுர்திகிரி, மானசாரம், கலவெட்டுகளில் 𑌦𑍍𑌵𑍌 𑌏𑌕𑍋 என்றபதங்கட்குப்பின் 2, 1, என்ற எண்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. பிரியதரிசியென்பது அசோகமகாராஜனின் மற்றொருபெயரெனத் தீபவம்சமகூறும். வின்சண்டு ஸமித் துரை அருணிறைந்தபெருமான் (Gracious Majesty)என்றுகூறுவது முத்ராராக்ஷஸத்தில் 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌰𑍍𑌶𑌨 என்ற பதத்தைக்கொண்டுபோலும். ஆங்கு அது பெயருரிச்சொல்லாகப் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. 𑌮𑌯𑍂𑌰𑌾𑌃 கபிகள் என்றபொருளுடையதாயினும் அது போஜனமெனக்கொண்டேன்.

## II-வது சாஸநம்

[illegible](2)[illegible]

## தமிழ்

தேவாகடகுபபிரியமானவரசனாகிய பிரியதரிசியின்சக்கிராதிபததியததிலும அதன எலலைப்புறஙகளிலும உதாரணமாக, சோழ, பாண்டிய, சததியபுததிர, கேரளபுததிர, லங்காதவீபமவரைககும, கிரேகக அரசனாகிய அந்தியோகாவின்ராசசியததும்,அநத அநதியோகஸுக்குபபககததுள்ள இராசசியஙகளிலும, எலலாஇடஙகளிலும, தேவர்கட்குப் பிரியமாகிய அரசனான பிரியதரிசி இரண்டுவிதமான சிகிசசாசாலைகள்—மனிதாகடகொன்றும மிருகஙகடகொன்றும ஏறபடுததியிருக்கின்றார். அவ்விடங்களிலெல்லாம மனிதருககும ஜீவஜநதுக்கட்கும பிரயோஜனமுள்ள ஔஷதிகளும பயிரசெய்யப்பட்டிருக்கின்றன. சாலைகளிற் கிணறுகள் தோண்டப்பட்டதோடு நிழலைததரும் விருக்ஷங்களும மனிதருக்கும மிருகங்கட்குமபிரயோஜனமாகப பயிரிடபபட்டிருக்கின்றன.

### (மிஸ்டர் ஜேயஸ்வாலவர்கள் குறிப்பு.)

சோழா...........சோழாகள் தெறகிலுள்ளவர்கள். ராஜநகரமான உறையூர உரகபுரம் என மகாகவி காளிதாசனால மொழிபெயர்க்கபபட்டிருக்கிறது சோழதேசம புததர்காலததிலேயே வடநாட்டில வழஙகபபட்டிருககிறது. பாணினிசூததிரத்திற் சோழநாட்டுவஸ்திரம

(2) கலிஙகததுபபிரதியில [illegible] எனறுகூட்டியும, கபூர்தகிரி வெட்டில் [illegible] என்றாவது [illegible] என்றாவது காணப்படவுமில்லை.

சொல்லப்பட்டிருக்கிறது. அசோகன்காலத்தில் லங்கையென்றுபொருள்படும தாமிரபர்ணி பாண்டியநாட்டிலோடுகிறது. அர்த்தசாஸ்திர ஆசிரியர் பாண்டியர்களது முத்துசசலாபத்துறைகளையறிவர். மகாஸ்தனிஸ் பாண்டியர்களைப்பற்றிப் பாடலிபுததிரததிற் கேட்டதுண்டு.

சதீயபுத்ரர் —மிகபபுராதனமான ஆசிரியரின்கருத்துபபடி புததிரா என்பது அநநாட்டு அரசருககிடப்பபடடதொரு படடமாகும். சதீயர்களது அரசனுகலாம. ஒருகால, குடிகளாலதெரிநதெடுக்கப்படடவனுகவுமிருக்கலாம இவாகள ஐதிரேயபிராமமணத்திறகூறிய சத்வததுககளே. இவர்களதுராசசியம தெறகிலிருநததென்றும, போஜ்யரென்ற பிரஜாநாயகமாகவிருநததென்றுநதெரிகிறது. மகாபாரததகிற கூறப்பபடடபோஜர்கள, அபராநததேசததிலுள்ள அந்தகர் விருஷ்ணிகளைப்போன்ற ஒரு கூடடததாரெனஅறியபபடுகிறது இநதக்குலததாரின்போ மகாபாரதத்தில் சத்யகி என்னும பிரஜாநாயகன்பெயரால் நிலைநிறுததபபடுகிறது. இநதச் சதவததுகள அலலது சதீயாகள்தான் சதவாகனா என்னுமபெயரோடு பினன ராணடனரென்றெண்ணுகிறேன. பவிஷ்யபுராணததின்படி, சதவாகனவமிசோற்பவன் முதன்முதலில இராசசியமிலலாதவிடதது அதாவது பிரஜாதிபததியமாயிருநதவிடததில, இராசசியஸ்தாபனம்செயதானென்று சொலலப்படடிருககிறது. ஒரு ஜைனகாவியததில இவாகள் கேரளராசசியததிறகுப்பககத்தே இருநததாககூறபபட்டிருககிறது. அசோகனே கேரளபுததிருக்குபபககததே சதீயபுததிராகளைககூறுகிறுன. தெனனுடடிற சேர சோழ பாண்டிய இராசசியஙகள் இருநதநிலைமையில் இநத சதீயபுததிரா கேரளததிற்கு வடபாலிருநதிருககவேண்டுமென்பதோடு, ஆரியஅரசர்களாயிருநதிருககவேணடுமென்றும.தெரிகிறது. இவாகளைபபற்றித தமிழநூலகளிற் கூறபபடடவையிலலை*. இஃதொன்றே இவாகள ஆரியரெனபதை வலியுறுததும. இநநானகு இராசசியங்களும சுயஇராசசியமாயினும அசோகனது மதசமபநதமானதாமஙகளுக்குக கட்டுபபடககூடியவை.

**அந்தியகஸ்:**—சிரியா, பாரசீகதது அரசனுன செலுககவின் பெயரன. அசோகனது இராசசியம தறபோதைய ஆபகானிஸ்தானமுள்படப பரவியிருநதது.

---

* தொல்காப்பியச சொல்லதிகாரததிற கிளவியாககம் ௩௪-ம சூததிரவுரையுள், "பவளககோட்டு நீலயானை சாதவாகனன்கோயிலுளளு மில்லை" எனச் சேனுவரையர்கூறியவாற்றுல இவன் சிறந்த சர்வமிருகசநதாசனசாலையொன்று வைததிருந்தானென்பது; தமிழ்நூலால்வெளியாகிறது. ப—ர்.

## III-வது சாஸநம்

𑀤𑁂𑀯𑀸𑀦𑀁𑀧𑀺𑀬𑁄 𑀧𑀺𑀬𑀤𑀲𑀺 𑀭𑀸𑀚𑀸 𑀏𑀯𑀁 𑀆𑀳 𑀤𑁆𑀯𑀸𑀤𑀲𑀯𑀸𑀲𑀸
𑀪𑀺𑀲𑀺𑀢𑁂𑀦 𑀫𑀬𑀸 𑀇𑀤𑀁 𑀆𑀜𑀧𑀺𑀢𑀁। 𑀲𑀭𑁆𑀯𑀢 𑀯𑀺𑀚𑀺𑀢𑁂 𑀫𑀫 𑀬𑀼𑀢𑀸 𑀘 𑀭𑀸
𑀚𑀽𑀓𑁂 𑀘 𑀧𑁆𑀭𑀸𑀤𑁂𑀲𑀺𑀓𑁂 𑀘 𑀧𑀁𑀘𑀲𑀼 𑀧𑀁𑀘𑀲𑀼 𑀯𑀸𑀲𑁂𑀲𑀼 𑀅𑀦𑀼𑀲𑀁
𑀬𑀸𑀦𑀁 𑀦𑀺𑀬𑀸𑀢𑀼 𑀏𑀢𑀸𑀬𑁂𑀯 𑀅𑀣𑀸𑀬 𑀇𑀫𑀸𑀬 𑀥𑀁𑀫𑀸𑀦𑀼𑀲𑀲𑁆𑀢𑀺𑀬
𑀬𑀣𑀸 𑀅𑀜𑀸𑀬 𑀧𑀺 𑀓𑀁𑀫𑀸𑀬। 𑀲𑀸𑀥𑀼 𑀫𑀸𑀢𑀭𑀺 𑀘 𑀧𑀺𑀢𑀭𑀺 𑀘 𑀲𑀼𑀲𑁆𑀭𑀽𑀲𑀸 𑀫𑀺
𑀢𑁆𑀭𑀸𑀲𑀁𑀲𑁆𑀢𑀼𑀢𑀜𑀸𑀢𑀻𑀦𑀁 𑀩𑁆𑀭𑀸𑀫𑁆𑀳𑀡𑀲𑀫𑀡𑀸𑀦𑀁 𑀲𑀸𑀥𑀼 𑀤𑀸𑀦𑀁 𑀧𑁆𑀭𑀸
𑀡𑀸𑀦𑀁 𑀲𑀸𑀥𑀼 𑀅𑀦𑀸𑀭𑀁𑀪𑁄 𑀅𑀧𑀯𑁆𑀬𑀬𑀢𑀸 𑀅𑀧𑀪𑀸𑀡𑁆𑀟𑀢𑀸 𑀲𑀸𑀥𑀼
𑀧𑀭𑀺𑀲𑀸 𑀧𑀺 𑀬𑀼𑀢𑁂 𑀆𑀜𑀧𑀬𑀺𑀲𑀢𑀺 𑀕𑀡𑀦𑀸𑀬𑀁 𑀳𑁂𑀢𑀼𑀢𑁄 𑀘 𑀯𑁆𑀬𑀁
𑀚𑀦𑀢𑁄 𑀘।

தேவர்கட்குப் பிரியமானவனும், அரசனுமாகிய பிரியதரிசி பின்வருமாறுசொலகின்றூா:—சென்ற பன்னீராண்டின்முன்னாப பட்டாபிஷேகமபெறறகாலததது, நாம நமது சக்கிராதிபததியததிலுள்ள ஒவவொரு உததியோகஸ்தரும, ராஜுகர்களுைம, பரதேசிகர்களுைம, ஐநது வருடததுககொருமுறை சுற்றுப்பிரயாணஞசென்று இராஜாங்ககாரியஙகளைககவனிபபதோடு பின்வருவனவறறைறபபற்றி ஜனங்களுககு வறபுறுததவேணடுமெனறு ஆகஞாபிததிருககிறூேம. தாய்தந்தையருக்குக்கீழ்ப்படிதல் உத்தமமானகாரியம். நட்பினர், தெரிநதோர், உறவினா, பிராமணா, சிரமணாகளிடம் தயை சிலாகிக்கத்தக்கது. அஹிம்சை பரம தர்மம். சீரானசெலவும் சீரானதனமும் சிலாக்கியமானது. மநதிரிசபையினர் இநதவிடயஙகளைபபறறி உததியோகததினருககு வறபுறுததுவார்களாக.

குறிப்பு —ராஜுகர், ப்ரதேசிகர் இவர்களிருவரும் கீழ்த்தரஉத்தியோகஸ்தர்கள். ஆர்த்தசாஸதிரபபடி ப்ரதேஷ்டிரிகள் கீழ்ததரக்குற்றவிசாரணை அதிகாரிகளாவர். டாக்டர் தாமஸ் அபிப்பிராயப்படுவதுபோல், ப்ரதேஷ்டிரிகளும், ப்ரதேசிகர்களும் ஒருவரேயென்று நானும் அபிப்பிராயப்படுகிறேன். ராஜுகர்கள் என்போர் உயர்தரநீதிவிசாரணைக்கர்த்தர்களாவர்.

## IV-வது சாஸநம்

𑌅𑌤𑌿𑌕𑌾𑌤𑌂 𑌅𑌂𑌤𑌰𑌂 𑌬𑌹𑍂𑌨𑌿 𑌵𑌾𑌸𑌸𑌤𑌾𑌨𑌿 𑌵𑌢𑌿𑌤𑍋 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾-
𑌰𑌂𑌭𑍋 𑌵𑌿𑌹𑌿𑌂𑌸𑌾 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌂 𑌞𑌾𑌤𑍀𑌸𑍁 𑌅𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍀 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮-
𑌣𑌸𑍍𑌰𑌮𑌣𑌾𑌨𑌂 𑌅𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍀 𑌤 𑌅𑌜 𑌦𑍇𑌵𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌸 𑌪𑍍𑌰𑌿𑌯-
𑌦𑌸𑌿𑌨𑍋 𑌰𑌾𑌞𑍋 𑌧𑌂𑌮𑌚𑌰𑌣𑍇𑌨 𑌭𑍇𑌰𑍀𑌘𑍋𑌸𑍋 𑌅𑌹𑍋 𑌧𑌂𑌮𑌘𑍋𑌸𑍋
𑌵𑌿𑌮𑌾𑌨𑌦𑌸𑌣𑌾 𑌚 𑌹𑌸𑍍𑌤𑌿𑌦𑌸𑌣𑌾 𑌚 𑌅𑌗𑌿𑌖𑌂𑌧𑌾𑌨𑌿 𑌚 𑌅𑌞𑍍𑌞𑌾𑌨𑌿 𑌚 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾-
𑌨𑌿 𑌰𑍂𑌪𑌾𑌨𑌿 𑌦𑌸𑌯𑌿𑌤𑍍𑌪𑌾 𑌜𑌨𑌂 । 𑌯𑌾𑌰𑌿𑌸𑍇 𑌬𑌹𑍂𑌹𑌿 𑌵𑌾𑌸-
𑌸𑌤𑍇𑌹𑌿 𑌨 𑌭𑍂𑌤𑌪𑍁𑌵𑍇 𑌤𑌾𑌰𑌿𑌸𑍇 𑌅𑌜 𑌵𑌢𑌿𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌿-
𑌯𑌸 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌸𑌿𑌨𑍋 𑌰𑌾𑌞𑍋 𑌧𑌂𑌮𑌾𑌨𑍁𑌸𑌸𑍍𑌟𑌿𑌯𑌾 𑌅𑌨𑌾𑌰𑌂𑌭𑍋 𑌪𑍍𑌰𑌾𑌣
𑌨𑌂 𑌅𑌵𑌿𑌹𑍀𑌸𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌂 𑌞𑌾𑌤𑍀𑌨𑌂 𑌸𑌂𑌪𑌟𑌿𑌪𑌤𑍀 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣-
𑌸𑌮𑌣𑌾𑌨𑌂 𑌸𑌂𑌪𑌟𑌿𑌪𑌤𑍀 𑌮𑌾𑌤𑌰𑌿 𑌪𑌿𑌤𑌰𑌿 𑌸𑍁𑌸𑍍𑌰𑍁𑌸𑌾 𑌥𑍈𑌰-
𑌸𑍁𑌸𑍍𑌰𑍁𑌸𑌾 । 𑌏𑌸 𑌅𑌞𑍍𑌞𑍇 𑌚 𑌬𑌹𑍁𑌵𑌿𑌧𑍇 𑌧𑌂𑌮𑌚𑌰𑌣𑍇 𑌵𑌢𑌿𑌤𑍇
𑌵𑌢𑌯𑌿𑌸𑌤𑌿 𑌚𑍇𑌵 𑌦𑍇𑌵𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌸𑌿 𑌰𑌾𑌜𑌾 𑌧𑌂𑌮𑌚𑌰𑌣𑌂
𑌇𑌦𑌂 । 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾 𑌚 𑌪𑍋𑌤𑍍𑌰𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌪𑍋𑌤𑍍𑌰𑌾 𑌚 𑌦𑍇𑌵𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌸
𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌸𑌿𑌨𑍋 𑌰𑌾𑌞𑍋 𑌪𑌵𑌢𑌯𑌿𑌸𑌂𑌤𑌿 𑌇𑌦𑌂 𑌧𑌂𑌮𑌚𑌰𑌣𑌂 𑌆𑌵 𑌸𑌵𑌟𑌕𑌪𑌾
(a) 𑌧𑌂𑌮𑌮𑍍𑌹𑌿 𑌸𑍀𑌲𑌮𑍍𑌹𑌿 𑌤𑌿𑌸𑍍𑌟𑌂𑌤𑍋 𑌧𑌂𑌮𑌂 𑌅𑌨𑍁𑌸𑌾𑌸𑌿𑌸𑌂𑌤𑌿 । 𑌏𑌸
𑌹𑌿 𑌸𑍇𑌸𑍍𑌟𑍇 𑌕𑌂𑌮𑍇 𑌯 𑌧𑌂𑌮𑌾𑌨𑍁𑌸𑌾𑌸𑌨𑌂 𑌧𑌂𑌮𑌚𑌰𑌣𑍇 𑌪𑌿 𑌨 𑌭𑌵𑌤𑌿
𑌅𑌸𑍀𑌲𑌸 । 𑌤 𑌇𑌮𑌮𑍍𑌹𑌿 𑌅𑌥𑌮𑍍𑌹𑌿 𑌵𑌧𑍀 𑌚 𑌅𑌹𑍀𑌨𑍀 𑌚 𑌸𑌾𑌧𑍁 । 𑌏𑌤𑌾𑌯
𑌅𑌥𑌾𑌯 𑌇𑌦𑌂 𑌲𑍇𑌖𑌾𑌪𑌿𑌤𑌂 । 𑌇𑌮𑌸 𑌅𑌥𑌸 𑌵𑌧𑌿 𑌯𑍁𑌜𑌂𑌤𑍁 𑌹𑍀𑌨𑌿 𑌚
𑌮𑌾 𑌲𑍋𑌚𑍇𑌤𑌵𑍍𑌯𑌾 । 𑌦𑍍𑌵𑌾𑌦𑌸𑌵𑌾𑌸𑌾𑌭𑌿𑌸𑌿𑌤𑍇𑌨 𑌦𑍇𑌵𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑍇𑌨
(b) 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌸𑌿𑌨𑌾 𑌰𑌾𑌞𑌾 𑌇𑌦𑌂 𑌲𑍇𑌖𑌾𑌪𑌿𑌤𑌂 ।

### தமிழ்

சென்றகாலங்களிற் பிராணிவதையும, ஜீவஹிம்சையும், உறவினர், பிராம்மணர்-ஶ்ரமணர்களிடத்துவெறுப்புமே மேலாடிவந்தன. தேவர் கட்குபபிரியமானவனும், அரசனுமாகிய பிரியதரிசியினது தர்மப்ரவசன மானது ஜனங்கட்குப் பறைசாற்றுவித்து அறிவிககப்பட்டதினின்றும்,

---

(a) 𑌕𑌪𑍇, 𑌕𑌪𑍍𑌵 என்ற பாடபேதங்கள் காணப்படுகின்றன.

(b) முடிவில் 𑌇𑌦𑌂 என்று சிலவற்றிலிருக்கின்றது.

ஆகாயவிமானம், யானையேற்றம், வாணவேடிக்கைமுதலியவற்றாலும், பன்னூற்றாண்டுகளாயறியாத இந்தவதை ஜீவஹிம்சைமுதலியவைகள் குறைந்துவருவதோடு, உறவினர், பிராமமணா, சிரமணர் இவர்களிடத்து நன்னடக்கையும், பெற்றோர், மூததோரிடததுக் கீழ்ப்படிதலும மேலாடிவருகின்றது.

இநதத தர்மக்கோட்பாடுகள் பலவிததகிலும பரவிவருவதால் தேவர்கட்குபபிரியமானவனும அரசனுமாகிய பிரியதரிசி இனனும் இத தர்மம பரவ ஏறபாடுசெய்வார். இன்னும, பிரியதரிசியின்புததிரர், பௌததிரர், பிரபௌததிரர்களும் இநததர்மம விருததியாகுமபடியாக இநத ஸமவர்ததகலபம முடியுமவரை பார்பபார்களாக. இவர்கள் தாஙகள இநததாமங்களை உறுதியாககக்கடைபபிடிபபாாகளாக. இவர்கள் உறுதியாகக்கடைப்பிடித்துசசெய்யாவிடின், தாமபபிரவசனம முடியாதகாரியமே. இவ்விஷயததில் விருததி சிலாககியமேயொழிய அழிவன்று. இதன்பொருட்டுப பின்வருமாறு ஆகஞாபிககின்றோம. ஒரு விஷயததின்விருததியின்பொருட்டுப பாடுபடவேண்டும. அதன் அழிவைச சகியாதே. இவவிதமாகத் தேவாகடகுபபிரியமான அரசனாகிய பிரியதர்சியால, தமது இராஜபாரமபரியம பன்னிராண்டுகழிநதபின் ஆக்ஞாபிககபபடுகிறது.

குறிப்பு —ஆரமை என்றபதத்துக்கு மிஸ்டர் வின்சென்டு ஸ்மித் யக்ஞபலியென்றுகொளகிறார். முதலாவதுசாஸநத்தைக்கவனிக்க அது வதையென்று ஏற்படும். அசோகனமுதலாம்சாசனம் எழுதும்காலத்திலேயேபௌத்தமதத்தைத் தழுவினவனுதலாற் றனது அட்டிலிற் பிராணிவதையைப்பற்றிககூறுகின்றான்.

விமானம் - ஆகாயக்கப்பல் அல்லது புஷ்பககூடுகள்; வைசேஷிகவிதிகளெழுதியவாகளால் ஒருவாகனமெனக கூறப்பட்டிருக்கின்றன. டாகடர், ஸ்ரீ ஜேந்திரநாதஸீல் எழுதிய இந்தியரின்விசேஷகிரநதஙகள் என்னும்புத்தகத்தின் XVI பதுமம் 351-வது பக்கத்தில் [illegible] என்று காணப்படுகிறது. பாணகவி சரித்திரவிஷயங்களைப்பற்றிப் பேசும்போது, ஒரியந்திரத்திற்பறந்து அதினின்று விழுந்து இறந்தாரென்று கூறுகின்றார்.

## V-வது சாஸநம்

[illegible]

(c) கலாஸி கல்வெட்டிலிருந்து பூர்த்திசெய்யப்பட்டது.

(d) கலாஸி கல்வெட்டில் [illegible] என்பதில்லை.

(e) [illegible] என்றிருக்கவேண்டும்.

* [illegible] என்றிருக்கவேண்டும்.

## தமிழ்

தேவர்கட்குப்பிரியமான அரசனாகிய பிரியதரிசி இவ்விதமாகக் கட்டளையிடுகிறார். நன்மைசெய்வது கஷ்டம். ஒரு நல்லகாரியத்தை முதலில் ஆரம்பிப்பவன் கஷ்டமானகாரியத்தைச் செய்கின்றான். அப்படிப் பலவிஷயங்கள் என்னால் செய்யப்பட்டிருக்கின்றன. என்னுடைய புத்திரர்களும், பௌத்திரர்களும், அவர்கள்பின்னோரும் இதேமாதிரி சற்காரியங்களைக் கல்பாந்தரகாலம் ஸ்தாபித்துச்செய்துவருவது உத்கிருஷ்டமானகாரியங்களைச் செய்துவருவதாகும். ஆயினும், இப்பொழுதுநடந்தேறிவருவதைக்கூடப் புறக்கணிப்பவன் பாபத்தைச்செய்தவனாவான். பாவஞ்செய்தல் எளிது.

சென்ற பண்டைகளில் தர்மமஹாமாத்திரர்களென்று ஒருசபையோ ரில்லை. அதனை எனது பதின்மூன்றாவதுவருடத்தில் ஸ்தாபித்திருக்கின்றேன்.

அவர்கட்குப் பாஷண்டரைக்கூட விசாரணைபுரிய அதிகாரமுண்டு.

மாகாண அத்தியக்ஷர்களை விசாரணைபுரியவும், கிரேக்க, காம்போஜ, காந்தார, ராஷ்டிரிக, பேதணிகர் மற்ற அபராந்தா நடுவிலேற்பட்டிருக்கும் தர்மபிரசாரகர்கட்கு உதவிபுரியவும் அதிகாரமுண்டு.

ஆதரவில்லாதவர்கட்கும், பெருமையிழந்தவர்கட்கும், அநாதைகட்கும், வயோதிகர்கட்கும் ஹிதஸௌகரியங்களைச்செய்ய அதிகாரமுண்டாவதோடு, தர்மபிரசாரகர்கள் அதிக சிரமப்படாமற் பார்க்கவேண்டும்.

தண்டனையில், சரீரவாதனைக்குட்படுத்தப்பட்டபோது, கடுங்காவற்றண்டனைகளை மாற்றவும், குழந்தைமுதலானவர்கள் குற்றவாளியைச் சம்ரக்ஷணைக்கு எதிர்பார்க்கும்போதும், வயோதிகனாயினும் விடுதலை செய்யவும் அதிகாரமுண்டு.

அவர்கட்குப் பாடலிபுத்திரத்திலிருக்கும் என்னுடைய சகோதர சகோதரிகள் உறவினருடைய அரமனைகளிலும், மற்றத் தலைமைநகரங்களிலும் அதிகாரம் செல்லும்.

இத்தேசமுழுவதும், தர்மபிரசாரகர்களாயினும், அத்தியக்ஷர்களாயினும், தர்மாதிகாரியாயினும் எல்லோர்மேலும் தர்மமஹாமாத்திரர்கள் அதிகாரஞ்செலுத்தக்கூடும்.

இதற்காக இந்தப்பத்திரம் எழுதப்பட்டது. இது நீடூழிவாழ்வ தாக. என் சந்ததியார் இதனை அநுசரிப்பார்களாக.

குறிப்பு —இந்தச்சாசனத்தில் அசோகமஹாராஜன் புதிதாக ஒருஸ்தாபனம் உண்டாக்கியிருப்பதாகக் கூறுகிறார்.

மஹாமாத்திரர்கள் என்போர் அர்த்தசாஸ்திரப்படி முக்கியமந்திரிகளா வர். பாடலிபுத்ரத்திலிருக்கும் மஹாமாத்திரர்கள் இப்பொழுது நாம் இம்பீரியல் மந்திரிகள் என்போரைப்போன்றோர்கள்.

தாமத்தைப்பரிபாலனம்செய்ய அசோகமஹாராஜன் புதிதாக ஒருவித அதி காரிகளை நியமித்தார். அவர்களே தாம பிரசாரகர்கள். இவர்களை மஹாமாத்திரர் கள் விசாரிக்கத்தபடி தாமமஹாமாத்திரர்களென ஒருவகையினரைநியமித்தனர். அரசன் விசாரணையிலிருந்த அநேகவிஷயங்களை இவர்களைக்கொண்டு விசா ரணைபுரிய ஏற்படுத்தினர் என்று அர்த்தசாஸ்திரத்தால்(பக்கம் 39)தெரிகிறது. ([illegible]) இவர்களெல்லாம் தாமமஹா மாத்திரர்களது விசாரணைக்குட்படுத்தினர்

## VI-வது சாஸநம்

[illegible]

வஹூமம குராயய நூாதவைதாய கூராய கூயம யஜூஹீலீவெவாவி
தா,। கிந்தி, விரம் திவெஷயயிதி தயாவ வெ8 வாதூா வொதூாவ
வ வொதூாவ கூநாவதராப வவ வெகாஹிதாய உகராதா
ஐஉம் கூஜூத கூவெமந வாராகூவெ8ந।.

### தமிழ்

தேவர்கட்குப்பிரியமான அரசனாகிய பிரியதாசி இவ்விதமகட்டளையிடு கிறார் முன்னாட்களில அரசன் சதாகாலமும சமஸ்தானவிஷயங்களைக கவனிததில்லை. அரசனிடமதெரிவிப்பதுமில்லை. நான பின்வருமாறு உததரவிடுகிறேன. “ஆகாரமசெய்யும்பொழுதும, அரமனையிலிருக குமபோதும, அநதப்புரததிலிருககுமபோதும, தேகாப்பியாசம், ராணுவப்பயிற்சிசெய்யும்பொழுதும், உய்யானவனததிலிருககுமபோதும, அரசாங்க உததியோகததினா கூடவிருநது சமஸ்தானவிஷயங்களைத தெரிவிககவேண்டியது. அந்தஇடங்களிறகூட அவைகளை நான் கவனிப்பேன். மேலும நான் வாககால தெரிவிததலைத நிறைவேற்றுமல மநதிரிகட்கு வேறுவேலையிருநதபோதிலும அபிப்பிராயபேதமேற்பட்டாலும உடனுககுடன் தெரிவிககவேண்டியது. இவ்விதமாகக் கட்டளையிடுகிறேன். நான் இபபொழுதுசெய்துவருமசமஸ்தானவிஷயம திருபதியைக கொடுககவில்லை. ஜனங்கள் க்ஷேமமாயிருககவேண்டுமென்பதே என்கடமை. அதன் இரகசியம பொதுக்காரியததைத ஊக்கததோடு செய்வதே. பொதுக்ஷேமததைததேடுவதைவிடப் பெரியவேலை இல்லை.

நான் ஏன் இவ்வளவு பிரயாசைபபடவேண்டுமெனின், நான் உலகததிற்குசசெய்யவேண்டியகடமையைச செய்யவேண்டுமென்றேதான். சிலரையாவது இமமையில சநதோஷமாயிருக்கசசெய்வேனேயாயின் மறுமையில அவர்கள் சுவாககததையடையக்கூடும.

இநத ஆகஞாபததிரம பிறககககாரணமென்னவெனின், இச சாசனம நிலைபெறவும, எனது புத்திர பௌததிர பிரபௌததிரர்கள் பொதுநலததைககோருவது அதியூககமின்றி நடைபெறக்கூடாததாகையால் அதனைக் கடைபபிடிததொழுகவுமேயாம்.

குறிப்பு,—இந்தச்சாசனத்தில் மந்திரிகட்கும், தனக்கும் ஏற்பட்ட அபிப்பிராயபேதங்களைத் தெரிவிப்பதால் இது வெகு முக்கியமானது. மந்திரிகள் இந்தத் தர்மமஹாமாத்திரர்களிடம் அருவெறுப்புடையராயினரென்றுகாண்கிறது. திவ்யவாதனத்தால், பண்டாரியான ராதாகுப்தர் அசோகமஹாராஜனது ஆக்ஞைகளைப் பௌத்ததர்மங்கள்விஷயமாய் நிறைவேற்றுவதாகத்தெரிகிறது.

வார்சசா, விநீத என்ற பதங்கட்கு ஒதுக்கிடம் என்றும் வாகனம் என்றும் ஐரோப்பியா பொருள்கொள்கின்றனர். அர்த்தசாஸ்திரம், யாஜ்ஞவல்கியஸ்மிருதிகளிற கூறப்பட்ட ராஜகாலதாமதத்தைக் (Time-Table) கவனிப்போமாயின் விசதமாகும். அர்த்தசாஸதிரப்படி அரசன் அதிகாலையில் சிம்மாசனத்திற்கு வந்து இராஜாங்க விஷயங்களைக் கவனித்துப் பிறகு பொதுமனுக்களை அங்கீகரிப்பான். 9 மணிக்கு ஸ்நானமும் காலைப்போஜனமும். சந்திரகுப்தன்காலத்தில், யவனதூதனான மகாஸ்தனிஸ அரசனை மனுப்பெறுங்காலமாகக்கூறுவதுமிதுவே. போஜனத்திற்குப்பிறகு கல்வியாராய்ச்சி. அசோகன் அரமனையிற் போஜனத்திற்குப்போகுங்காலத்திற்கூடப் பிரஜைகளதுநன்மையைக் கவனிப்பதாகக்கூறுகிறான். 10-30முதல்12 மணிவரை பொதுவிஷயம் கவனித்தல், 12முதல்1-30 மணிவரைவேடிக்கைவிநோதங்களும ஓய்வும். அசோகன் நிலக்கீழறை(காப்ப-அகரம்)யில் தங்கல் [illegible] । [illegible] । சாயங்காலம ராணுவப்பயிற்சிக்குச் செல்லுதல. பிறகு ஸந்தியாவந்தனம. அசோகனுக்குச் சந்தியில்லாமையால உத்யானத்திலிருப்பான்.

இலக்கணவிளக்கபரம்பரை,

திருவாரூர்-சோமசுந்தரதேசிகன்.

உ

# *வேத்துணையோர்பரிபாடல்.



தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்றுசங்கம் இரீஇயினர் பாண்டியர்கள். அவருள் தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும் திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும், குன்றமெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின்கிழவனும் என இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்றுநாற்பத்தொன்பதின்மர் என்பது. அவருள்ளிட்டு நாலாயிரத்துநானூற்றுநாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்பது. அவர்களாற்பாடப்பட்டன வேத்துணையோர்பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையும் என இத்தொடக்கத்தன............... அவர்களைச் சங்கமிரீஇயினார் காய்சினவழுதிமுதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்மர் என்ப. இங்குச்சொல்லப்பட்ட "வேத்துணையோர்பரிபாடல்" என்பதை நோக்குக. இஃது இறையனாரகப்பொருளுரையிற்கூறப்பட்ட தமிழ்ச்சங்கவரலாறு. இவ்வுரையைப் பரீக்ஷை செய்து அச்சிட்டவர் நமது நண்பராகிய சி. வை. தாமோதரம்பிள்ளை.

பின்னர் இதனைப் படியெடுத்துத் திராவிடப்பிரகாசிகையிலே உகூ-ம் பக்கத்திலே கோப்பாய்ச் சபாபதிநாவலர்கூறினர். அஉ-ம் பக்கத்திலே "வேத்துணையோர்பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை என்றித்தொடக்கத்துத் தலைச்சங்கஇலக்கியம்" என்றார். இங்கேயும் இரண்டிடத்திலே "வேத்துணையோர்பரிபாடல்" என்பது வருகின்றது. இந்த "வேத்துணையோர்பரிபாடல்" என்பதைப்பற்றி ஞானசாகரப்பஞ்சிகை ஒன்றிலே தடைகாட்டி வாதித்தாம். விடையோ வந்திலது.

பின்னுஞ் சங்கவிஷயங்கூறுவார்பலர் 'வேத்துணையோர்பரிபாடல்' என்பதையும் வழிமொழிகின்றனர். அறிவுவிளக்கம் என்னும் பத்திரிகையிலும் ஒருவர் வழிமொழிந்தனர். வேறும் ஒருவர் ஒருபத்திரிகையில் வழிமொழிந்தனர். பேரகத்தியப்பிரசரமுகவுரையிலும் "வேத்துணையோர்பரிபாடல்" என்பது வருகின்றது. இங்ஙனமே "வேத்துணையோர்பரிபாடல்" என்பது வழிவழிவந்து பலராலும் வழங்கப்படுவதொன்றாயிற்று. நிற்க.

---

* இதற்குப் பத்திராதிபரபிப்பிராயம் அடுத்துச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இனி இந்த "வேத்துணேயோர்பரிபாடல்" என்பது யாதோ என வினவித்தெளிதல் யாவர்க்கும் ஆவசியகம். "வேத்துணேயோர்பரிபாடல்" என ஒருநூல் உண்டென்பதற்கு அஜபரம்பரைநியாயமாக வந்த இவையன்றி வேறுசான்றுகளும் உளவா? வேத்துணேயோராவார் யாவர்? பாடினவரா? பாடுவித்தவரா? பாடினவரெனின், "அவர்களாற்பாடப்பட்டன" என முன்வருதலால் அது பொருந்தாது. பாடுவித்தவரெனின், வழுதிமுதலியோருள் ஒருவரெனலகூடாமையானும், வேந்துகூறுமையானும் அதுவும் பொருந்தாது. பிறரெனின், அவர் தாம் யாவர்?

சிலப்பதிகாரத்திலே வேனிற்காதையுரையிலே அடியார்க்குநல்லார் தலைச்சங்கப்புலவர்பாடல்கூறுங்கால் "எண்ணிறந்த பரிபாடலும் முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையுமுள்ளிட்டவற்றைப் புனைந்து" என்றார். சிலப்பதிகாரவுரையின் உதாரணவிவரணத்திலே பழந்தமிழ்ப்பரிபாலனத்திற் சிறந்துவிளங்கும் மஹாமஹோபாத்தியாயராகிய சாமிநாதையரவர்கள் "தலைச்சங்கப்புலவர்களால் எண்ணிறந்த பரிபாடல்களும்" என்றார்கள். இங்கேயும் இறையனாரகப்பொருளிலேயும் தலைச்சங்கப்புலவர்பாடல் எனக்கூறிய பரிபாடலிரண்டும் ஒன்றேயன்றோ! இங்கே பரிபாடற்குக்கூறிய "எண்ணிறந்த"என்னும் விசேடணம் அங்கே வராதொழியுமா? இவ்விசேடணமாவது இவ்விசேடணப்பொருளாவது அங்கேயும்வரும் எனக்கொண்டு அதனை எத்துணேயோர்பரிபாடல் என்று திருத்திக்கொண்டால் என்னை? "எத்துணேயோர்" என்பது எண்ணிறந்த எனப் பொருள்படாதோ? "அவரால் பாடப்பட்டன எத்துணேயோர்பரிபாடல்" என்பது பழைய ஏட்டிலே "அவராற் பாடப்பட்டன வெத்துணேயொர் பரிபாடல்"என இலேககரால் எழுதப்பட்டிராதா: எத்துணே என்பது வகரவுடம்படுமெய்யொடு "வெத்துணே"என எழுதப்படுதலும், குறினெடிற் பேதமின்மையும், பிழைபட ரகரமெய்போலப் பலகூட்டியெழுதலும் இலேககர்வழக்கான்றோ! இதனைநோக்கி இங்கே பத்திராதிபரவர்கள் அபிப்பிராயங்கூறல் நன்று. மகாமகோபாத்தியாயராகிய சாமிநாதையரவர்களும் சாவகாசமாயின், அபிப்பிராயங்கூறல் நன்று. திருத்தமுளு சித்திக்கும்.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை,
சுன்னுகம்.

---

ஸ்ரீ:

# பத்திராதிபராபிப்பிராயம்.

அசசிட்ட களவியலுரைப்பாயிரததுள்ளும், பிறபுததகமுதலியவற்றுள்ளுமமுதற்சஙகநூலகளையெண்ணுமிடததது "வேத்துணையோரபரிபாடல்" என்றெழுதியிருப்பபதைப்பற்றிச சுன்னாகம் விதவான் ஸ்ரீமதஅ. குமாரசுவாமிப்பிள்ளையவாக ளாராய்ந்தெழுதியதிருததம மிகப் பொருததமுடையதாயிருககிறது. சிலப்பதிகார உரைப்பாயிரததின் கீழ்க்குறிப்பில மஹாமஹோபாத்தியாய ஐயரவர்கள்காட்டியதொரு பழையபாட்டினுள் முதற்சங்கநூலகளையெண்ணியவிடதது, "புரிநதனசெய்யுட் பெரும்பரிபாடலும்"என்றதன்கண்ணும் பெருமை எண்ணின் மிகுதிபற்றியதெனக்கொள்ளினும் இழுக்காமையா விதுவும் அதனை விரோதிக்கவிலலை.

அசசிட்ட களவியலுரையுள் முன்புறதது "வடவேங்கடநதென்குமரி, ஆயிடைத, தமிழ்கூறுநலலுலகதது" என்னுந தொடாகளைத தொலகாபபியனாசொலலியதாக இடைசசெருகி எழுதியிருப்பதால அதன் மூலபபிரதி, முன்னோரெழுதிவைதத சொன்முறையைப் போற்றியெழுதாது தமக்குததோன்றியவற்றையும இடைசசெருகியெழுதுமவராலவரையபபடட பிழைபபிரதியாயிருககவேண்டுமென்று தோன்றுகிறது. ஆதலால அதன் பின்புறததிலுள்ள "வேததுணையோர் பரிபாடல" என்பது பிழையிலலதாயிருககலாமென்று நமபுவதற்கிடமில்லை.

நம தமிழ்சசங்கத்திலுள்ள ஒரு பழையபிரதியில முதறசங்கநூலகளை யெண்ணியவிடததும் "வேத்துணையோர்பரிபாடல்"என்றுகாணபபடவில்லை. முதற்கட் பரிபாடையும,என்று தெ -யெழுதப்பட்டிருக்

கிறது. கடைச்சங்கநூல்களையெண்ணுமிடத்து நெடுந்தொகை முதலிய வற்றை முற்படவெண்ணி யிடையே "எழுபது பரிபாடலும்" என்று தெளிவாயெழுதப்பட்டிருக்கிறது. ஒருவரெழுதியதான உரைநடையில முதலும் இடையுமாகவைத்தெண்ணிய இடவேறுபாட்டையும், பரிபாடை, பரிபாடல் என எழுத்தானும தெளிவாயெழுதிய சொல வேறுபாட்டையும உற்றுநோக்குமபொழுது கடைசசங்கநூலுளெண்ணிய பரிபாடலினின்றும, முதற்சங்கநூலுளெண்ணிய பரிபாடை என்பது பிறிதொன்றே? அன்றேயென ஜையுறுதற்கிடனுகின்றது.

வடமொழியுள் நூற்பொருளையுணர்தற்கு உதவியாகத் தெளிவிக்குங்கட்டுரைகளைப் பரிபாஷையென்பா. அவற்றை விரித்துணர்த்தும தனிநூலும உண்டு. தமிழிலும சித்தர்பாடலுள்ளும பரிபாஷை என நூற்பெயரவழங்குவதுண்டு. "வழக்குஞ் செய்யுளுமாயிரு முதலி, னெழுத்துஞ் சொலலும பொருளு நாடி"ய தொலகாப்பியத்துள் நூலிலக்கணஞ்சொலலப்பட்டமையால அவ்விலக்கணமமைந்த பல தமிழநூலகள் தொலகாப்பியத் துக்குமுற்பட்டிருந்தனவென விளங்குகின்றன. அவற்றிற்கின்றியமையாத பரிபாஷைமுறைகளை (அதாவது "முற்கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்து"என்பதுபோன்ற நூற்பொருளைமொழிக்கு நெறிகளை) விரித்துரைத்துள்ளதொரு தமிழ்நூல முதற்சங்ககாலத்தி லிருந்திருக்க வொண்ணுதாவென்பதுசங்கை. இதுவும, பலபிரதிகளைக்கொண்டு பண்டிதராலாராய்ந்து தெளியத்தக்கது.

திரு. நாராயணையங்கார்,

செந்தமிழ்ப்பத்திராதிபர்.

# ஆக்கச்சொல்விளக்கம்.

"செந்தமிழ்" (தொகுதி கஉ பகுதி ௨-ல்) ௫௬-ம்பக்கத்தொடர்ச்சி.



இனி, ஆண்டு("செப்பமுடையவனாக்கஞ்சிதைவின்றி, யெச்சத்திற் கேமாப்புடைத்து" எனப்புழி) கூறப்பட்டது செயற்கைப்பொருளென்ற வாறு என்னை? அதுபற்றி வருவிதந்துரைக்கப்பட்ட அவ்வாக்கச்சொல் ஐயுருபேற்ற தொழிற்பெயராதல்வேண்டுமாறும் என்னையோவெனிற் கூறுதும்.

இத்திருக்குறளின்பொருள் —செப்பமுடையவனது செல்வம் சிதைவுள்ளதாகாது. அதனால் அச்செல்வம் அவன்வழியிலுள்ளார்க்கு வலியாதலையுடைத்து என்றவாறு.

ஏனையோர்போலச் செல்வமுடைமையே உடைமையெனக் கொண்டு மயங்குதலிலனாய் உடைமையெனப்படுவது செப்பமுடைமையேயெனக்கொண்டு மற்றெதனைவிடுவானாயினும் அதனை விடாது காத்தொழுகுபவனை எனபார செப்பமுடையவன என்றும், அவன் 'திறனறிந்து தீதின்றிவந்தபொருள்'கொண்டு 'இல்லதென்' என்றற்கு ஏதுவாகிய மாண்புடைமனையாளொடும் தலையாய அறம்புரிந்து ஒழுகுமாற்றால், தக்காரக்கைப்பட்டு வானசிறிதாப்போதத்துவிடுமென வளர்ந் தோங்குசெல்வம் என்பார ஆக்கம் என்றும், அவன்வழியிலுள்ளாரும் அவ்வாறே அறம்புரிந்து இன்பமெய்தி உயிர்க்கு உறுதியானவற்றை எளிதின் அடைதற்கு அச்செல்வம் ஏதுவாம் என்பார எச்சத்திற் கேமாப்புடைத்து என்றும் கூறினர்.

அவன்வழியிலுள்ளார்க்கு வலியாமெனவே அவனுக்கு வலியாமென்பது சொல்லாமையே பெறப்பட்டது.

வழியிலுள்ளார் என்பது இரட்டுறமொழிதல்.

ஆக்கம் மேன்மேலுயாதல, செல்வத்துக்கு ஆகுபெயர்.

செப்பம், தகுதி, நடுவுநிலைமை, கோடாமையென்பன ஒரு பொருட்கிளவி.

எச்சம் என்பதனுள் அம் வினைமுதற்பொருளையுணர்த்தும் விகுதி.

செப்பமுடையவன் என்பது இருமனப்பெண்டிருங் கள்ளுங் கவறு மென்னும் இத்தொடக்கத்தனவற்றின் தொடர்பிலன் என்னும் ஏதுவை உட்கொண்டுநின்றது.

இனி, ஆக்கம் என்பது செல்வமாத்திரைக்கேயன்றி அறம் புகழ் கட்குமாம். இது 'பேதைமையென்பதொன்று' என்னும் குறளுரையுட் பரிமேலழகர் கூறியவாற்றானும் அறிக. அக்கருத்துக்கியையப் பொருள்படுமாறும் உய்த்துணர்ந்துகொள்க.

இனி, செல்வம் என்பதோ சிதையுமாலைத்தாம், அது 'அற்காவியல் பிற்றுச்செல்வம்' எனனும் திருவாக்கானும் தெளியப்படும். ஆகவே ஆக்கம் சிதையும் எனக்கூறின இயற்கைப்பொருளை யிற்றெனக்கிளத்தலாம். ஈண்டு ஆக்கம் சிதைவில்தெனக்கூறலின் செயற்கைப்பொருளா மாறுகண்டுகொள்க. செயற்கைப்பொருளை ஆக்கமொடுகூறல்வேண்டு தலின் சிதைவில்து என்பதற்குச் சிதைவுள்தாகாதென உரைவிரிக்கப் பட்டது. இனி இது காரணமுதற்றாய்வந்தவாறும் மேற்கூறியவாற் றான் அறிந்துகொள்க.

இனி, அச்செல்வம் சிதைவுள்தாகாமை மேலும் அதுகாரணமாக அவன்வழியிலுள்ளார்க்கு வலியுமாயின் அதுவுஞ் செயற்கையேயாக லின் அத்திருக்குறளுட் கூறப்பட்டது செயற்கைப்பொருளாதல் தெ ளிந்துகொள்ளப்படும் என்க.

சிதைவின்றியென்னும் செயவெனெச்சக்குறிப்பு, காரணகாரியப் பொருட்டு. அது வினைமுதல்வினையான்முடியும், மருந்துண்டுநல்லன், ("வளர்ந்தயானை", "ஈந்துபுகழ்பெற்றான்") என்புழிப்போல. அஃது ஈண்டு 'ஆக்கம். . ..... ..எச்சத்திற்கேமாப்புடைத்து' என்னும் மேற் கோளைச்சாதிக்கும் குறிப்பேதுவாய் நின்றவாறறிக.

சிதைவின்றியென்பதற்குச் சிதைவுள்தாகாது அதனால் என உரைவிரிக்கப்பட்டவாறும் இவ்வேது காரியப்பொருண்மை யினிது விளங்குதற்பொருட்டென்க. இந்நெறியை 'உயிரெனப்படுவதிந்தவுட லின்வேறாதாயுற்று' எனனும் சிவஞானசித்தியாருரையுள் ஆசிரியர் சிவஞானமுனிவர் இவ்வாறு விரித்துரைத்து உள்தாய் முதலிய வ்ழும

குறிப்பேதுவாகலான் அவற்றை யிவ்வாறு விரித்துரைக்கப்பட்டதென விசேடவுரைகூறி விளக்கியவாற்றானுந் துணிந்துகொள்க.

ஆசிரியர்பரிமேலழகர் 'உழுதுண்டுவாழ்வாரே'என்னுங் குறளுரையுள் உழுது அதனால் தாம உண்டு எனவும், 'கலந்துணர்த்துங்காதலார்' எனனும குறளுரையுள கலவிதன்னானீக்கவலல எனவும கூறியதும இககருததுபபறறியே என்க.

இனி, 'உழுதுண்டுவாழ்வாரே' என்புழி உழுது என்பதற்கு உழுதலைசசெய்து எனவும, 'ஏரினுழாஅர' என்புழி உழாா என்பதறகு உழுதலைசசெய்யாா எனவும், 'அழுககற்றகன்றாரும்' என்புழி அழுக கறறு என்பதறகு அழுக்காறறைசசெய்து எனவும, 'அன்பிலனன்ற' என்புழித துவவான் எனபதறகுத துவவினைசசெய்யான எனவும்,கொல லாமை எனபதறகுக கொலலுதலைசசெயயாமை எனவும, பொச்சா வாமை என்பதறகுப் பொசசாப்பைசசெய்யாமை எனவும், கள்ளாமை எனபதறகு வஞ்சிததுககொளளககருதாமை எனவும, அவா சொற்பெய் துரைததவாறெலலாம காரியபபொருணமைவிளஙகுதற்பொருட்டென அறிக. அஙஙனம விரிபெற்றசொற்களைக காரியவாசகமென உரையாசிரியர்கள் குறியிட்டாளுதலானும அவ்வுண்மை துணிந்து கொள்ளபபடுமெனக.

பாவகததைபபாவிததல (சிவஞானபோதம) அணியனும அணிந தன்று (கலிததொகை) கொளலோகொண்டான் என்புழிக் காரியவாசகம வநதவாறுகாண்க. இவற்றியலபெலலாம 'வினையேசெய்வது' என்னும சூததிரவுரையானும, தருக்கசங்கிரகவுரையீற்றில் ஆசிரியா சிவஞானமுனிவர் விரிததுரைததவாறறானும அறிந்துகொள்க.

'பிரியாரெனவிகழ்ந்தேன்முனனமயான்பின்னையெற்பிரியிற்,றரியாளெனவிகழ்நதாாமன்னாதாம' என்னும திருக்கோவையார் உரையுட பேராசிரியா பிரியின என்பதறகுப பிரிகின்றாராகஉணரின என்று பொருளுரைதது, 'உணமையாற் காரணமாவனவும உணரபபடடாற் காரணமாவனவும எனக காரணம இருதிறததன. அவற்றுட் பிரிவு தரியாமைககு உணரபபடடாற காரணமாம; ஆகலின் பிரியின் என்புழிப் பிரிகின்றாராகவுணரின எனபது ஆறறலாற்பெற்றாம. புலிவரின் அஞசும என்புழிப்போல'என்று விசேடவுரைகூறியவாறு மறிக. இததுணையுங கூறியவாறறால, காரணகாரியபபொருண்மைபறறிச சொற்கள் விரிததுரைக்குமாறு உணாததப்பட்டது.

ஆகவே, ஆண்டுச் செயற்கைப்பொருள் காரணம் அடுத்துவந்த வாறு தெளியப்படும். படவே, அதற்கு ஆக்கச்சொல்வேண்டுமென்ப தாயிற்று.

அதுநிற்க, அத்திருக்குறளுட் சொற்கள் நின்றாங்குநிற்ப ஆக்கம் எனனும் எழுவாயும், சிதைவின்றி என்னும் செய்தெனெச்சக்குறிப்பும், ஏமாப்பு என்னுஞ்சொல்லும் முடியாவாயின. ஆகலின் அவற்றிற்கு முடிபு வேறுதல் வேண்டப்படும்.

மற்று, அவையெல்லாம் உடைத்து என்னும் வினைக்குறிப்புமுற் றைக்கொண்டு முடிந்தனவென்றற்படும் இழுக்கென்னையோவெனின், அற்றேல் ஆக்கமும் ஏமாப்பும் பொருளான் ஒன்றென்பதுபடாது, வெவ்வேறாய், ஒன்று உடையதும் மற்றொன்று உடைமையுமாம் எனப் பட்டுப் பொருளில்மொழிதலென்னும் குற்றமாமென மறுக்க.

அதுநிற்க, ஏமாப்பு என்பது செயப்படுபொருளன்மையால், உடைத்து எனபது செயப்படுபொருளை அவாய்நின்றதாயிற்று. அஃது அவாய்நின்றதென்பது 'உடைத்தமவலியறியார்' என்னுங் குறளுரை யிற் பரிமேலழகர் உடைய என்பதற்குக் 'கருத்தாவாதலையுடைய' என்று சொற்களவருவித்துரைத்து 'உடையவென்பது அவாய்நின் றமையின் செயப்படுபொருள்வருவிக்கப்பட்டது' என்று இலக்கணம் விளங்க உரைத்தவாற்றானும் உணர்க.

ஆகவே, இக்குறைபாடெல்லாம் நீக்குதல்வேண்டி உரையாசிரியர் பரிமேலழகர் ஏமாப்பு என்பதற்கும் உடைத்து என்பதற்கும் இடை யிலே ஆதல் என ஆக்கச்சொலவருவித்து ஐயுருபு விரித்துரைத்து முடித்தாரென்க.

சிதைவின்றியென்னும் செய்தெனெச்சக்குறிப்பிற்குமுடிபும் உடைத்து என்பதற்குச் செயப்படுபொருளும் ஏமாப்பாதல் எனபது. அஃது ஒருசொன்னீர்மைத்து. இதனைக் 'கேளிழுக்கங்கேளாக்கெழு தகைமைவல்லார்க்கு' என்னும் குறளுரையிற் கெழுதகைமைவல்லார் என்பது ஒருபெயராய்க் கேளாதவென்னும்பெயரெச்சத்திற்கு முடி பாயிற்று என்று அவர் கூறியவாற்றானும் உணர்க.

ஆதலையுடைத்து என்பதும் ஒருசொன்னீர்மைத்தாம்.

ஏமாப்பு என்பதுபெயர். ஆக்கம் ஏமாப்பாதலையுடைத்து என்பது, சாத்தன் தலைவனாயினான் என்றாற்போலநின்றது.

இம்முடிபுபற்றிப பிரயோகவிவேகநூலாரும் உடனிகழ்கின்ற என்னும சூத்திரவுரையுள் ‘வடநூலார் தேவதத்தன் நெடியன், தேவதத்தன ஒருவன் என்னும தத்திதத்தொடும எண்ணொடும முடிவனவற்றை நெடியனாயினான் ஒருவனாயினான் எனச சனகொடுத்துக் காரகமாக்குவா. ‘ஆக்கஞ்சனனென்றறைந்தனாபுலவா’ என்பது உரைசசூத்திரம்’ என்று கூறியவாற்றானும, ‘பிணையுஙகலையும’ என்னும திருக்கோவையாருரையுட பேராசிரியா ஏகின என்னும வினையெசசம பணையுந்தடமுமா மெனவிரியும ஆக்கத்தோடு முடிந்தது என்று கூறியவாற்றானும தெளிந்துகொளக.

இவ்வாக்கச்சொல்லின அருமைகருதிப்போலும ‘உயர்திணையெனமனா மககட்சுட்டே’ என்னும் சூத்திரவுரையுட் கல்லாடனாரும் சொறபொருளையுணர்த்துமவகைகளுள ஆக்கவகையும ஒன்றெனக கூறிச சாத்தன் தலைவனாயினன என உதாரணம காட்டியதூஉமென்க.

அற்றேல் லஃதாக, அத்திருக்குறளுரையுட் பரிமேலழகா ஆக்கச சொலவருவித்துரைககபபட்டதென விளங்ககக்கூறாமை யெனனையோவெனின, அவா ஆண்டுக்கூறிற்றிலரேனும வேறுசிலகுறள்களினுரையுள விளங்கக கூறிபபோந்தமையால ஆண்டும அஃது உயத்துணாந்து கொள்ளப்படுமெனக.

‘தமராகித்தற்றுறந்தாா் கூற்றம’ என்னும குறளுரையுள், கூற்றம் என்பதனமேல ஆதல் என்னும சொலலைவருவித்துப்பொருளுரைத்து ‘ஆக்கமவருவித்துரைக்கபபட்டது என்று கூறினா.

‘மன்னர்க்குமனனுதல செஙகோன்மை’ என்னும குறளுரையுள், செஙகோனமை என்பதறகுச செஙகோனமையான ஆம் என்று பொருளுரைத்து, ஆக்கமவருவித்துரைககபபட்டதென்று கூறினார்.

‘பசக்கமற் பட்டாஙகென்மேனி’ என்னும குறளுரையுள், பட்டாங்கு எனபதற்குப் பட்டதுபட எனபபொருளுரைத்து பட்டாஙகாக என ஆக்கமவருவித்துரைக்கவென்று கூறினர்.

'பகைநட்பாக்கொண்டொழுகும்' என்னுங்குறளுரையுள் 'வேண்டியவழிப் பகையைவேறுபடுத்துத் தனக்கு நட்பாகச்செய்துகொண்டு' என்று பொருளுரைத்து வேண்டியவழி என்பது ஆக்கத்தான்வந்தது. வேறுபடுத்தல் பகைநிலைமையினீக்குதல் என்று கூறியவாறும் அது பற்றி.

ஆசிரியர் சிவஞானமுனிவரும் சிவஞானபோதத்தில் 'அவனவளது வெனுமவை' யெனும் முதற்சூத்திரவுரையிலே அவை சுட்டுப்பெயரெனக்கொள்ளின் உளவெனப்பிரித்துப் பயனின்மையாகலின் ஆக்கச்சொல் வருவித்துக்கொள்க (உளவாம் என) எனவும், மூன்றாஞ் சூத்திரத்து 'அன்றனறென நின்று' என்னும் செய்யுளுரையிலே, 'அனைத்துநின்று' என்புழி ஆக்கச்சொற்றந்துரைக்க (அனைத்துமாய்நின்று) எனவும், ஏழாஞ்சூத்திரத்து 'அருவுருவந்தானறிதல்' என்னும் செய்யுளுரையிலே, அருவுருவாய் என்புழி ஆக்கம் உவமைப்பொருள் குறித்துநின்றது. 'ஆள்வாரிலிமாடாவேனோ' என்புழிப்போல' எனவும், எட்டாஞ்சூத்திரத்து 'அறிவிக்கவன்றியறியா' என்னும் செய்யுளுரையிலே (மாபாடியம்) முன்பின்னாகவென ஆக்கச்சொல்வருவித்துரைக்க எனவும், ஒன்பதாஞ்சூத்திரத்து 'நிர்க்குணனாய் நின்மலனாய்' என்னும் செய்யுளுரையிலே நிர்க்குணனாய . . . .தற்பரனாய் என்புழி ஆக்கச்சொல் உண்மைகுறித்துநின்றது வடமொழிமதம், ஆனவறிவாய என்புழி ஆக்கம் முன்னாச சூனியமபோற்றோன்றுவோன் பின் வாயத்தோன்றுவான் என வேறுபாடுகுறித்துநின்றது எனவும், 'சுட்டியுணர்வதனை' என்னும்செய்யுளுரையிலே, தைவமபுணர்ந்தத னால என்புழித் தைவமாயென ஆக்கச்சொலவருவித்துரைக்க, உண்மைக்குத் தைவமாதலபுணர்வினென உருபுமயக்கமாகக்கொண்டுரைப்பினும் அமையும் எனவும், பத்தாஞ் சூத்திரத்துச் 'சார்ந்தாரைக்காத்தல்' என்னும் செய்யுளுரையிலே, தானாகச்செய்து என்புழி ஆக்கம் உவமவுருபின்பொருள் குறித்துநின்றது எனவும், பதினொன்றாஞ்சூத்திரத்து 'ஏகமாய்நின்றே' என்னும் செய்யுளுரையிலே போகமாய் என்புழிச 'சேறறுநிலமிதித்துச்சென்றானுக்கு வன்னிலம்போலப் பர போகவின்ளவு செயறகைப்பொருளாய்நிற்றலின் ஆக்கமுங்காரணமும் அடுத்துவந்தது 'செயற்கைப்பொருளை ஆக்கமொடுகூறல, ஆக்கந் தானே காரணமுதற்றே' என்பவாகலின், எனவும்,

சிவஞானசித்தியாரிலே 'ஒருவனோடொருத்தியொன்று' என்னும் செய்யுளுரையிலே, சித்துருமன்னி என்பதற்குச சித்துருவாய்மன்னி யென ஆக்கச்சொல்வருவித்துரைக்க எனவும், 'சொன்னவித்தொழிலக ளென்ன' என்னும் செய்யுளுரையிலே துடைப்பது துடைப்பதாகவு மென ஆக்கச்சொலவருவித்துரைக்க எனவும்,'எங்குநதான்வியாபியாய்' என்னும் செயயுளுரையிலே எல்லாம எல்லாமாய் என ஆக்கச்சொல் வருவித்துரைகக எனவும், மிக்கதொருபகுவத்தின்' என்னும் செய்யு ளுரையிலே, சீவன்முத்தராகி என்புழி ஆக்கச்சொல உவமப்பொருள குறித்துநின்றது 'ஆளவாரிலிமாடாவேனோ' என்றாற்போல, எனவும், இவ்வியலபுவிளஙக விரித்துரைத்தார.

இவவாசிரியா சிவஞானமுனிவா் வடமொழியினும தென்மொழி யினும மற்றெவரினும அதிநுட்பமதியுடையார என்பதற்கு மேற்காட டிய அவர உரைபபகுதிகளே அமையுஞ சானறாதலுமறிக. மற்று அவர் தம உரைநுட்பஙகளை உள்ளவாறுணரமாட்டாதார் அவரொடு முரணிப பலகூறி மயஙகுப. அதுகிடக்க,

இவவியலபுபறறிப புறநானூற்றுரையாசிரியர்முதலியோாகூறு மாறும கண்டுகொள்க.

(இன்னும வரும.)

## பிழைதிருத்தம்.

---

செநதமிழ்த்தொகுதி 12.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 52 | 26 | ஆக்ககிளவி | ஆககந்தானே |
| 55 | 31 | மாட்டெறிந்தவாறே | மாட்டெறிந்தவாறென்று |

ம. தா. சோமசுந்தரம்பிள்ளை.

# ரஸாயனநூல்.

# CHEMISTRY.

"சேந்தமிழ்" (தொகுதி-கஉ-பகுதி கக-ல்) சகக-ஆம்பக்கத்தொடர்ச்சி.

---

## அத்யாயம்—14.

## கந்தகம்.

## Sulphur.

[S]

1. **கந்தகம்,** கட்டிப்பொருள்வர்க்கத்தைச்சேர்ந்த ஒரு மூல பதார்த்தம். இது ஒரு பிறவிச்சரக்கு. இது, **குச்சிக்கந்தகம்** (Roll sulphur) என்று கட்டியாகவும், **பூக்கந்தகம்** என்று பொடியாகவும் இருவகையாய் அகப்படும். இது கரிகந்தநீரி(Carbon-di-sulphide)ற் கரையும். ஜலத்திற் கரையமாட்டாது.

2. **லக்ஷணங்கள் :—**கந்தகம் ஆக்ஸிஜனில் லகுவாய் எரிந்து **கந்தாக்ஸிஜம்** (Sulphur-di-oxide) ஆகும் அதேமாதிரி ஹைதரம், கரி, க்ளோரம் முதலானவைகளுடன் கந்தகம் கலந்து, முறையே **ஹைத்ரோகந்தம்,** கரி-கந்தம், க்ளோரோகந்தம் என்னும் கந்தககலப்புகள் (Sulphides) உண்டாகின்றன.

3. **கந்தகமும் உலோஹங்களும்.** கந்தகம் பல லோஹங்களுடன் கலந்து அந்தந்த **லோஹக்கலப்பு** ஆகின்றது. தாம்ரத்துடன் சேர்த்தெரித்தால் **தாம்ரம் கந்தம்** (Copper sulphide) என்னும் கறுப்புப் பொருளும் அயத்துடன்சேர்ந்து, **அயகந்த**(Sulphide of iron)மும், அவ்வாறே வங்கம் **கந்தம்** முதலானவைகளும் உண்டாகின்றன.

(1) 2 வெள்ளி+கந்தகம்=வெள்ளிகந்தம்



$2Ag+S=Ag_2S$

(2) 2 தாம்ரம்+கந்தகம்=தாம்ரகந்தம்



$2Cu+S=Cu_2S$

(3) அயம்+கந்தகம்=அயகந்தம்



$Fe+S=FeS.$

கந்தக்கலப்புகளெல்லாம் நொறுங்கும் (Brittle) தன்மையுடையவை. ரஸத்துடன் பூககந்தகத்தைச்சேர்த்தரைத்தால், **ரஸகந்தம்** என்னும் கறுப்புநிறமான கலப்புமுண்டாகும்.

குறிப்பு:—ரஸகந்தம=ரஸம+கந்தகம

=லிஙகம,

=Mercury sulphide,

=Cinnabar,

=Hg S,

**கந்தாக்ஸிஜங்கள்**

(1) கந்தத்வயாக்ஸிஜம (Sulphur-di-oxide=$SO_2$)

(2) கந்தத்ரயாக்ஸிஜம (Sulphur-tri-oxide=$SO_3$).

4. (1) **கந்தத்வயாக்ஸிஜம்** என்பது 1 பங்கு கந்தகமும் 2 பங்கு வங் கலந்த ஒரு நிறமற்றவாயு. அதன்வாசனை மூச்சடைக்கத்தக்கது தண்ணீரிற் கரையக்கூடியது. நோயாளிகளிருக்குமறைகளைச் சுத்தபபடுத்துவதற் குபயோகமானது.

செய்முறை:—மூடியபாத்திரத்திற் கந்தகத்தை ஆக்ஸிஜனுடன் எரிப்பதாலும, கந்தாமில(Sulphuric acid)த்தைத் தாம்ரத்துடன் ஏக் காய்ச்சுவதாலும இவ்வாயு உண்டா

லக்ஷணம்:—கந்தத்வயாக்ஸிஜத்தைப் பனிக்கட்டியாற் குளிர்ச்சி செய்யப்பட்ட குழாய்வழியாய்ச்செலுத்தினால், அது த்ரவமாய்விடும். இன்னும் அதிகமாய்க்குளிர்ச்சிசெய்தாற் கட்டியாகவும் மாற்றிவிடலாம.

**குணம்**:—கந்தத்வயாக்ஸிஜம், எரிக்கவாவது ப்ராணிகள் உட்கொள்ளவாவது உபயோகமில்லை. இதனால் புஷ்பம் முதலான தாவர வர்ணங்களைச் சலவைசெய்யலாம். வைக்கோல, பட்டு முதலான இளம்பொருள்களைச் சலவைசெய்யத் தொழிலாளிகள் உபயோகிக்கின்றனர்.

## 2 கந்தத்ரயாக்ஸிஜம்.

(Sulphur-tri-oxide.)



$[SO_3]$

5. **கந்தத்ரயாக்ஸிஜம்** என்பது 1 பங்கு கந்தகமும் 3 பங்கு ஆக்ஸிஜனும் கலந்துண்டாகுமவாயு. சாதாரணமாய், கந்தத்வயாக்ஸிஜத்தையும் ஆக்ஸிஜனையும் கலந்து எரிப்பதால் இது உண்டாகும்.

**லக்ஷணங்கள்** —இது காற்றிலுள்ள நீராவியைக் கவர்ந்துகொள்ளக்கூடியதாகையால், இதைக் குழலில் அடைத்துவைத்திருக்கவேண்டும். இது தண்ணீரிற் சீக்கிரம் கரைந்து கந்தகாமிலம் (Sulphuric acid) ஆகின்றது.

## ii. கந்தாமிலங்கள்.

(1) கந்தஜாமிலம் (Sulphurous acid $=H_2SO_3$)

(2) கந்தகாமிலம் (Sulphuric acid $=H_2SO_4$)

6. (1) **கந்தஜாமிலம்.** கந்தத்வயாக்ஸிஜ($SO_2$)த்தைத் தண்ணீரிற் கரைத்தால் இவ்வமிலம் உண்டாகும். இவ்வமிலத்தைக் காய்ச்சினாலும், வெளியேவைத்தாலும் மறுபடி இரண்டும் பிரிந்துவிடும்.

கந்தத்வயாக்ஸிஜம் + ஜலம் = கந்தஜாமிலம்.



$$[SO_2+H_2O=H_2SO_3.]$$

## 2. கந்தகாமிலம்.

Sulphuric Acid.



$H_2SO_4$.

7. **செய்முறை** :— கந்தத்ரயாக்ஸிஜ($SO_3$)த்தைத் தண்ணீரிற் கரைப்பதால் இது உண்டாகும். முன்கூறிய கந்தஜாமில($H_2SO_3$)த்தை, நைத்ராமிலப்புகையுடன் கலந்து அதிக ஆக்ஸிஜமாக்குவதாலும், கந்தகாமிலம் செய்யப்படுகின்றது.

கந்தத்ரயாக்ஸிஜம் + ஜலம் = கந்தகாமிலம்



$$SO_3+H_2O=H_2SO_4.$$

குணங்கள்:—கந்தகாமிலம் தண்ணீருடன் லகுவாய்க்கலக்கின்றது. அப்பொழுது மிகுந்த உஷ்ணமுண்டாகின்றது.

உலோஹம்+கந்தகாமிலம்.

8. கந்தகாமிலம் பலவகை ரஸாயனச்சரக்குகள்செய்ய உபயோகப்படுகின்றது. பொதுவாக அநேக லோஹங்களுடன்கலந்து அந்தந்த லோஹ கந்தஜம (Sulphate) உண்டுபண்ணுகின்றது.

தாமரம்+கந்தகாமிலம=தாமரகந்தஜம+ஹைதரம்.


$$[Cu+H_2\ SO_4=Cu\ SO_4+H_2.]$$

அல்லது, தாமரம+2கந்தகாமிலம=தாமரகந்தஜம+ஜலம்+கந்தஜாக்ஸிஜம.


$$[Cu+2\ H_2\ SO_4=Cu\ SO_4+2H_2O+SO_2.]$$

குறிப்பு:—தாமரகந்தஜம=மைலதுத்தம=Copper sulphate, நீலவாணமானது.

9. கறி உப்பு+கந்தகாமிலம்.

கறியுப்பும் கந்தகாமிலமும் கலந்தால் ஸோடியம ஹைதரோகந்தஜமும், க்ளோராமிலமும உண்டாகும.


$$\left.\begin{matrix}\text{கறியுப்பு}\\+\\\text{கந்தகாமிலம}\end{matrix}\right\}=\left\{\begin{matrix}\text{ஸோடியம ஹைதரோகந்தஜம}\\+\\\text{க்ளோராமிலம}\end{matrix}\right.$$


$$[Na\ cl+H_2\ SO=Na\ H\ SO_4+H\ Cl]$$

குறிப்பு:—கறியுப்பு=ஸோடியம+க்ளோரம

க்ளோராமிலம=ஹைதரம+க்ளோரம்.

கந்தக்கலப்புகள்.

Sulphides.

(1) ஹைத்ரோகந்தம்.

Hydrogen Sulphide.


$H_2S.$

(10) ஹைத்ரோகந்தவாயு. இது 2 பங்குஹைதரமும் 1 பங்கு கந்தகமுமசேர்ந்த ஒரு கலப்பவாயு. இது அதிகதுர்நாற்றமுடையதாதலால் இதை அபானவாயு என்றும சொல்லுவதுண்டு.

**செய்முறை.** கந்தகத்தைக் குழலிலடைத்து அதனுடன் ஹைத்ர வாயுவைச்செலுத்திச் சுடவைத்தால் இவ்வாயு உண்டாகும். அய கந்தமுதலான கந்தக்கலப்புகளு(Sulphides)டன் க்ளோராமிலத்தைக் கலந்தும் இவ்வாயுவை உண்டாக்கலாம்.

உதாரணம் :—



நாககந்தம் +2 க்ளோராமிலம் } = { நாகக்ளோரம் + ஹைதரோகந்தம்.



$$ZnS+2Hcl=ZnCl_2+H_2S.$$

**குணங்கள்.** ஹைதரோகந்தம் தண்ணீரிற்கரையும். அதை தரவமாகவும் கட்டியாகவும் ஆக்கலாம். இது ஒரு விஷவாயு. சுடவைத்தால், ஹைதரமும் கந்தகமும் பிரிந்துவிடும். காற்றில் எரித்தால், தண்ணீரும், கந்தஜாமிலமும் உண்டாகும்.

ஹைதரோகந்தமும் க்ளோரமுமகலந்தால், கந்தகமும் க்ளோராமிலமும் உண்டாகும்.



$$[H_2S+Cl_2=2HCl+S.]$$

ஹைத்ரோகந்தம் அநேகலோகங்களுடன் கலக்கும். அப்பொழுது ஹைத்ரம்பிரிந்து, மிகுதியுள்ளவை அந்தந்தலோஹ கந்தககலப்பு (Sulphides)களாகும். உதாரணம்:—

வங்கம்+ஹைதரோகந்தம்=வங்ககந்தம்+ஹைதரம்.



$$[Sn+H_2S=SnS+H_2]$$

நாகம்+ஹைதரோகந்தம்=நாககந்தம்+ஹைதரம்.



$$[Zn+H_2S=ZnS+H_2]$$

குறிப்பு—வங்கம்=Tin.

நாகம்=Zinc.

லோககந்தங்களில் அநேகம் தண்ணீரிற் கரையமாட்டா. பல வர்ணங்களுடையன.

**கந்தக்கலப்பு, செய்முறைகள்.**

11. (1) கந்தகத்தை நேரே அயமுதலான மற்றமூலத்துடன் கலப்பது. உதாரணம்:—அயகந்தம், வெள்ளிகந்தம்.

(2) ஹைதரோகந்தமும் லோஹமுமகலப்பதால், ஹைத்ரம் பிரிந்து மற்றவை கந்தக்கலப்பாவது. உதாரணம்:—

வங்கம்+ஹைத்ரோகந்தம்=வங்ககந்தம்+ஹைதரம்.

(3) ஹைட்ரோகந்தத்துடன் காரப்பொருள்(Alkaline substances) கலந்து நிஷ்காரம் (Neutralization) ஆவதால் உண்டாவது.

உதாரணம்:—ஸோடியம ஹைத்ராக்ஸிஜமும், ஹைத்ரோகந்தமும கலநதால, ஸோடியகநதம உண்டாகும்.

(4) உப்பும் ஹைதரோகநதமும கலநதால, அவ்வுப்பிலுள்ள உலோஹம், கநதகததுடனகலநது அநதநத லோககந்தம உண்டாகும. அது கசடாய்(Precipitates)ததஙகிவிடும. உதாரணம:—


(i) ஈயநைதரஜம+ ஹைதரோகநதம } = ஹைதரோநைதரஜம+ ஈயகநதம.


(ii) தாமரகநதஜம+ ஹைதரோகநதம } = ஹைதரோகநதஜம+ தாமரகநதம.


(iii) 2 வெள்ளிநைதரஜம+ ஹைதரோகந்தம } = வெள்ளிகந்தம்+ 2 ஹைதராமிலம்.


$[2AgNO_3+H_2S=Ag_2S+2HNO_3.]$

குறிப்பு. நைதரஜம=Nitrate.

கந்தஜம=Sulphate.

## கந்தகஉப்புக்கள்.

## Sulphur salts.

(1) கந்தஉபபு (Sulphites).

(2) கநதஜம (Sulphates).

12. கநதக உப்புககள் இருவகைப்படும. அவையாவன-(i)கநதஜாமிலததிலிருநது உண்டாகும உபபுககள், (ii) கநதகாமிலத்திலிருநது உண்டாகும உப்புககள் என்பனவாம.

13. (i) கந்தஜாமில உப்புக்கள்=கந்தஉப்புக்கள்.

(Salts from Sulphurous acid அல்லது Sulphites).

கந்தஜாமிலம் உலோஹஙகளுடன்கலந்தால் அந்தந்தலோஹசமபநதமான உபபுக்கள் உணடாகின்றன. உதாரணம:—


சுண்ணம+ கநதஜாமிலம } = { சுண்ணகந்தஉப்பு+ 2 ஹைதரம.


அதாவது. $[Ca+H_2SO_3=CaSO_3+H_2]$

(குறிப்பு. சுண்ணம் = Calcium = Ca.)

14. (11) கந்தகாமிலஉப்புக்கள் = கந்தஜங்கள்.

(Salts from Sulphuric acid அல்லது Sulphates.)

### (1) கந்தகாமிலமும் உலோஹங்களும்.

கந்தகாமிலம், பல உலோஹங்களுடன்கலந்து கந்தஜங்கள் (Sulphates) ஆகின்றது. உதாரணம்:—நாககந்தஜம் = (Zinc Sulphate).







அல்லது







குறிப்பு—நாகம = Zinc = Zn.

நாககந்தஜம் = Zinc Sulphate = பால்துத்தம் என்றும் சொல்லுவதுண்டு.

### தாம்ரகந்தஜம்.

### Copper Sulphate.







குறிப்பு—தாம்ரகந்தஜம = மைல்துத்தம் என்றும் சொலலப்படும்.

கந்தஜங்களிற்சில:—

பால்துத்தம் = Zinc sulphate = $ZnSO_4$.

மைல்துததம் = Copper sulphate = $CuSO_4$.

அன்னபேதி = Iron Sulphate = $FeSO_4$.

சீமை இந்துப்பு = { Magnesium sulphate அல்லது Epsom salt } = $MgSO_4$

## 15. கந்தகாமிலமும் ஆக்ஸிஜமும்.

ஆக்ஸிஜ(Oxide)த்துடன் கந்தகாமிலத்தைக்கலந்தும் கந்தஜங்கள் செய்யலாம. உதாரணம்:—

நாகாக்ஸிஜம+கந்தகாமிலம.

=நாககந்தஜம்+ஜலம.



$[ZnO+H_2SO_4=ZnSO_4+H_2O]$

குறிப்பு—நாகாக்ஸிஜம=Zinc oxide=ZnO.

## 16. சுருக்கம்.

i. கந்தகம (Sulphur=S).

ii. கந்தகம+ஆக்ஸிஜன்.

(1) கந்தத்வயாக்ஸிஜம ($SO_2$).

(2) கந்தத்ரயாக்ஸிஜம் ($SO_3$).

iii. அமிலங்கள்.

(1) கந்தஜஅமிலம (Sulphurous acid=$H_2SO_3$).

(2) கந்தகாமிலம (Sulphuric acid=$H_2SO_4$).

iv. கந்தகம+ஹைதரம்.

=ஹைத்ரோகந்தம் (Hydrogen sulphide=$H_2S$).

v. கந்தகக்கலப்புகள் (Sulphides).

=கந்தகம+ஏதாவது ஒருமூலம்.

vi. உப்புக்கள்.

(1) கந்தஉப்பு (Sulphites).

(2) கந்தஜங்கள் (Sulphates).

(தொடரும்.)

ஆர். எஸ். நாராயணஸ்வாமி ஐயர். B.A., B.L.

உ

இராமநாதபுரத்தில்

இராசாதி-ராஜ முத்துவிஜயரகுநாத

ராசராசேசுவரமுத்துராமலிங்கசேதுபதிமன்னரது

அரமனையிற்கூடிய ௧௯-ம வருட மகாசபையிற் படிக்கப்பட்ட

# மதுரைத்தமிழ்ச்சங்க மங்கலவாழ்த்து.

இது

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம் வித்வான்

ஸ்ரீமத்- அ. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள் இயற்றியது.

## வெண்பா.

சங்கப் புலவரொடுந் தாமொருவ ராயிருந்து
துங்கத் தமிழ்புரந்த சொக்கேசர்—செங்கமலச்
சேவடியைச் சிந்திப்பாஞ் செந்தமிழ்ச்சோ சங்கமிது
பூவுலகி லோங்கும் பொருட்டு.

## விருத்தம்.

பூவரசு தொழுமரசு ராம நாதப் புரவரசு தமிழரசு புகழ்போ யெங்குந
தாவரசு ராசரா சேசு ரப்பேர்த் தனியரசு தமிழ்வளர்க்கு முரிமை யெல்லாம்
மேவரசு மதுரைநகர்த் தமிழ்ச்சோ சங்க வியனரசாய் வீற்றிருக்கு மேன்மை தந்த
தேவரசு நான்மாடக் கூடன் மேவுந் திருவிளையாட் டரசுபதஞ் சென்னி வைப்பாம்

## கட்டளைக்கலித்துறை.

துங்கந் கெழுராச ராசே சுரத்துரை தொன்மதுரைச்
சங்கம் புரப்பவ ஞயினன் கேளுந் தமிழ்ப்புலவீர்
சங்கம் வளருந் தமிழ்நூல் வளருந் தமிழ்ப்புலவர்
அங்கம் வளருந் தமிழும் வளரு மசைவில்லையே.

## விருத்தம்.

ஆதிமறை யாகமநூன் முகில்கள் வாழி
அந்தணரா தியர்வாழி பசுக்கள் வாழி
தாதையொடு மூதாதை முதலோர் போலத்
தமிழ்வளர்க்குங் கடப்பாட்டிற் றனக்கொப் பில்லாச்
சேதுபதி ராசரா சேசு ரப்பேர்ச்
செகபதியு மகிதலத்திற் சிறந்து வாழி
தாதவிழும் பொழின்மதுரைச் சங்கம் வாழி
தமிழ்ப்புலவர் குழுவொடுசெந் தமிழும் வாழி.

உ

# நாநாதேசவிவாகமுறை.

---

இந்துதேசத்தில், பிரம, க்ஷத்ரிய, வைஸ்ய சூத்திரர்கள், பிரமம், முதலிய பலவகைமணங்களை அநுஸரித்துவருவது,யாவருமறிந்ததே. இவ்வழககங்களினால், இந்துதேசதது நாகரிகமும் பெருமையும் இறறென எவரு மறிந்துகொளளக்கூடியதாயிருக்கிறது.

நாகரிகமுதிர்ந்தும, பாதிமுதிர்ந்தும், முதிராமலுமிருக்கும் மேனாட்டுவழக்கங்கள்பலவற்றை அறிவதிலிருந்து, பலபாஷைகள் பேசும பலஜாதியாருள்ளும் எவ்வாறு நாகரிகமும் பெருமையும் முதிர்ந்திருக்கிறதென்று தெரிந்துகொளளக்கூடியதாயிருக்கிறது.

இவவாறு பூமியிலுளள பலஜாதியாருள்ளுமிருக்கும பழக்க வழக்கங்களை, நனகு ஆராய அவர்களுள், “பெண்கள் மணம்புரிவதில் வழங்கும் பழக்கங்கள்” சிலவற்றை எடுத்துச்சொல்வோம். இவ்வழக்கங்கள் அவவந்நாட்டார்களுள், ஸஹஜமாயிருபபினும் இந்தியர்போன்ற சிலர்களுக்கும, ஐரோப்பியதேசவாசிகளுக்கும் தங்களுள் முறறும்வேறுபட்ட விநோதமாய்பபடுமாகையால், அவைகளிற சிலவறறையே இங்கெடுத்து விவரிப்போம்.

பிஜியத்தீவிலுள்ள பீஜியனொருவன் (A. Fijiam) மேனாட்டு ஐரோப்பிய கிழிநதியகலியாணவழக்கங்களைச சாஸதிரத்திற்கு ஒத்தவை என்று அறியாமல், தன்னுடைய தேசவழக்கத்திற்கு விரோதமானவை என்று நினைக்கிறான்.

புன்சிரிப்பும், நகைப்புப்பருவமும்கொண்ட ஸந்தோஷமான காலம் ஸ்த்ரீஜாதிகளின் இளமைப்பருவம என்பதும், ஒத்தாசையில்லாமற் கண்ணீர் ஒழுக்குடனும், வேலைத்தொந்தரவுடனும்கூடியது அதன்பின் மணக்கும்பருவமென்பதும் பிஜியத்தீவார்கொண்டிருக்கும் அபிப்பிராயமென்று அவர்களுடைய தேசசரித்திரம் கூறுகின்றது. நாகரிகம்மிகுந்த மேற்றேயத்தார் அத்தேசத்தின் சிலபாகங்களிற்போய், இம்மாதிரியான எண்ணத்தை அவர்களினின்றும் ஒழிக்கமுயன்றும் அவ்வெண்ணம் அவரினின்றும் இன்னும் நீங்கினபாடில்லை. மனிதர்கள் தம்மினத்தவர்களையே அடித்துத் தின்று

கொண்டிருந்தகாலந்தொட்டு, இக்காலம்வரையிலும் (பிஜியத்தீவு பிரிட்டிஷ்காலனியாக (British Colony) மாறியபிறகுங்கூட) பழுப்பு நிறங்கொண்ட பிஜியப்பெண்களை இளம்வயதிலேயே மணம்புரிவிக்கிறதென்கிற வழக்கம், பழக்கத்திலிருக்கிறது. இப்போதுகூடக் கைக்குழந்தைகளுக்கு இத்தீவில் மணம நடந்தேறிவருகிறதாகத்தெரிகிறது. எவ்வளவுக்கெவ்வளவு பெண் வயதிற்குறைந்தவளோ அவ்வளவுக்கவ்வளவு புருஷன் வயதில் மூததவனுயிருக்கவேண்டுமென்பது, அந்நாட்டுத் தாம்பத்தியததைய நுஸரித்த விதியாயிருக்கின்றது போலும்.

பிரிட்டிஷார், பிஜியத்தீவைக கைக்கொணடிருக்கும இக்காலத்தில, கவர்ன்மெண்டார் இததீவாரின்கலியாணவிஷயங்களிறகுறுக்கிட்டுச் சிலநிபநதனைகள் ஏற்பாடுபண்ணியிருக்கிறார்கள். ஒருவன் தான் கலியாணம்பண்ணிக்கொளள நினைக்குமபெண்ணுக்கு ஒருவீடு ஸம்பாதித்துவைத்தபின்னரே அப்பெண்ணைப் போய்ப பார்க்கலாம. பழையகாலததிய வழக்கபபடி கலியாணம்செய்துகொள்ளுமுன்னுற் செய்யும் காரியங்களைச்செய்ய இடம்பெறுகிறான். இவ்வாறு செய்தபின் இம்மணமகன், தன்தேகமாதியந்தம தேங்காய் எண்ணெயைத்தடவிக்கொண்டு, தன்தலையைக்கோதிச் சொருக்கிட்டுப் பெரிதாகக்கட்டிக்கொண்டு பெண்ணின் தந்தைவீட்டுக்குக் காட்டுத்தனமான பழையவழக்கத்துடனபோய்ப பெண்ணின் தகபபனிடத்தது திமிங்கிலததின்பல்லொன்றோ, பாயோ, வஸதிரமோ கொடுத்து, அவன்பெணணைத் தனக்கு மனைவியாகக்கொடுக்கக்கேட்கிறான். பெண்ணைக்கொடுக்கத் தந்தை இஸையும்பக்ஷத்தில் அப்பெண்ணினை அநேகமங்கலஸதிரீகள்சேர்ந்து, புருஷன்வீட்டுக்கு அழைததுப் போவார்கள். அங்கு அந்த ஸ்திரீகள் வஸ்திரமோ, பாயோ, திமிங்கிலப்பல்லோ பரிசாகப்பெறுகிறார்கள். இநதப்பெண, தன்மணமகனவீட்டுக்குப்போனதும தன்ஜாதிவழக்கப்படி அழுவாள். இநத அழுகையில் பிஜியஜாதிஸதிரீகள் மிகுதியும் பேர்போனவர்கள். இநத அழுகையை அநேகஸ்திரீகள்சேர்ந்து, ஸமாதானப்படுததி நிறுத்தி, அவளுக்குச் சிலபரிசுகளுமம, அளிக்க, அழுகை நின்றுவிடும். போதியகாலம்சென்றவுடன் அவள் தன்னுடைய ஸ்வயநிலையையடையும்படியான கண்ணீர்துடைப்பதைச்செய்துகொள்கிற

ஸம்ப்ரதாயத்தையே, (Vakamamaca) வகமாமகா என்று சொல் வது, அந்நாட்டாரின் வழக்கம். பிஜியஜாதிப்பெண்களை, அவர்க ளுள் தலைவர்களுக்காவது அவர்களைச்சேர்ந்த பந்துவர்க்கத்தவர் களுக்காவது கொடுக்க நிச்சயம்செய்யப்பெறின், அவ்வாக்குத்தத்தம் தவறினால், அத்தவறுதலுக்காகக் கடுமையானதண்டனை விதிக்கப் பெறுதலுண்டு. அதனால், அவர்கள், அப்படிப்பட்டவாக்குத்தத்தத்தி னின்றும் தவறுவதில்லை.

பெண், தன்கணவன்வீட்டுக்குப்போய்க் கண்ணீர்துடைக்கும் ஸம்ப்ரதாயத்தை அநுஷ்டித்தபிறகு தன்னுடையகணவனுலமைத்து வைக்கப்பெற்ற ஆஹாரத்திற் பங்குபெறுவதுண்டு. இதன்பின் அப் பெண் மஞ்சளை முகத்திற்பூசிக்கொண்டு மூன்றுநாள் தன் கணவன் வீட்டிலிருக்கிறாள். அப்போது, அவளிடத்தில், பெண்மக்கள் மட்டுமே அணுகிப் பேசமுடியும். இதன்பிறகு, இப்பெண் ஸமுத்ர ஸநாநம்செய்து தனனுடைய தோழிகளுடன் கூடிக்குலாவிப் பேசிச் சிரித்து விளையாடிப் பின் சிறிது மீன்பிடிக்கிறாள். பிஜியச்சிறுமிகள், மீன்பிடிப்பதிற் கைதேர்ந்தவர்கள். மீன்பிடித்துத் தன்கணவனுக்கும் அவனுடைய நண்பர்களுக்குமுபயோகமாகுமாறு, இப்பெண் அன்று தானே சமயல்செய்கிறாள். சமயலமுடிந்துசித்தமானபின் பெண்ணின் கணவன், தான் முதன்முதல், தன்னுடையமனைவியின்முன்தோன்றின தேங்காயெண்ணெய்பூசியகோலத்துடன் தன்னுடையநண்பர்களுடன் செல்ல இதுவரையில் இருவரும்பூண்டமணக்கோலத்தை மிகவுமெளி தில் மாற்றுகிறார்கள். அப்போதே இம்மணமகள் தன்வீட்டலுவல் களைப்பார்க்க ஆரம்பிக்கிறாள். தன்னுடையகணவனுக்கும், அவனைச் சேர்ந்தவர்களுக்கும், அவள் அன்றையதினம் உணவு அளிக்கிறாள். பின் சிலநாள்கள், உபவாஸமிருந்து, அவர்கள் தாம்பத்தியத்தை ஒழுங்காய் நடத்துகிறார்கள். இதே பிஜியத்தீவார் கலியாணவிஷயத் தில் அநுஸரிக்குமுறை.

அரபியாதேசத்தில் விதவைகள் மறுமணம்புரியும்போது, அநு ஸரிக்கும் விநோதமானமுறை கவனிக்கத்தக்கது. அராபியவிதவை மற்றொருவனை மணம்புரிய நிச்சயித்திருக்கும் முந்தைநாளன்றிரவு, தன்னுடைய இறந்தகணவனுடைய கல்லறைக்குப்போகிறாள்.

அங்குச்சென்று அவன் தன்மேல் அஸ்டையைகொள்ளாதிருக்குமாறும், மனம்நோகாதிருக்குமாறும், ஸமாதியிலிருக்கும்புருஷனை மன்றாடி, முழங்காலிட்டு வேண்டிக்கொள்கிறாள். தன்செயலுக்காகத் தன் கணவன் ஒருவேளைகோபிப்பானோ என்னும் கவலைகொண்டு, பயமுற்றவளாகையால், அவனுடைய கோபசமனார்த்தம் தன்னுடன் கழுதைமேல் நீர்ச்சித்தையில் நீர்கொண்டுபோய், அதனைத் தன்னுடையவேண்டுகோளுக்கப்புறம் அவன்ஸமாதிமேலூற்றி நனைக்கிறாள்.

நியூகினிக்கு(New Guinea) உத்தரபாகத்திலிருக்கும் இயற்கை வனப்பிற்சிறந்த நியூப்ரிடன் (New Britain) என்னும் பெருந்தீவில், நரமாம்ஸபக்ஷணிகள் நிறைந்திருக்கிறார்கள். அத்தேசத்தவர்களுள் நடக்கும் கலியாணமுறை, கவனிக்கத்தக்கது. இத்தீவின் ஸ்வதேசி, தான் தனிமையாயிருந்து காலங்கழிப்பதில் அலுப்புற்றானால் ஒரு பெண்ணைக் கலியாணம்செய்துகொள்ள நினைக்கிறான். தன் எண்ணத்தைத் தன்னுடையநன்மையைக்கோரின தன் தந்தைக்கோ, தாய்க்கோ, தெரிவிக்கிறான். தாய்தந்தையற்றவன், தான்மணக்க விரும்பிய பெண்ணைப்பற்றித் தன தலைவனுக்குத்தெரிவிக்கிறான். அப்படித் தெரிவித்ததின்மேல் அவன் மரங்களடர்ந்தபுதருக்குள், பிரவேசிக்கிறான். ஊரிலுள்ள அவனுடைய சிநேகிதரையுள்ளிட்ட எல்லோரும் அப்பெண்ணின்வீட்டிற்குச்சென்று அப்பெண்ணின்தாயாருக்குத் தாம்வந்தகருத்தைத்தெரிவித்துத் தாம பெண்ணின்பொருட்டுக் கொடுக்கவிருக்கும் கிரயப்பொருளையோ, பரிசையோ தெரிவிக்கிறார்கள். கீழ்நாட்டு அடிமைவ்யாபாரத்திலுள்ள கிராக்கிகளெல்லாம காட்டப்பெற்றுக் கடைசியிற் பெண்ணின்பெற்றோர் தாம்விரும்பிய படி பரிசுவிஷயத்தைப்பற்றி ஏற்பாடுசெய்துகொள்ளுகிறார்கள்.

கலியாணதினத்தன்று மணப்பெண் தன்னுடையதாதிகள் பந்துவர்க்கத்தார்புடைசூழத் தானமணக்கவிருக்கும மணமகன்வீட்டிற்குப்போய் அங்கே இவர்கள்யாவரும, மருஷ்டான்னபோஜனம் பண்ணுகிறார்கள். விருந்துணடிமுடிந்தபிறபாடு, அங்குப் பெண்களெல்லாமசேர்ந்து கும்மியடிக்கும் ஆட்டமநடத்த, அந்நடனத்தில் இம்மணப்பெண் ஒருமுக்கியமான நடனஞ்செய்வாள். இந்நடனம் முடிவானதும், பெண்ணைசசேர்ந்தவர்கள்யாவரும் மணமகனை

அங்குவிட்டுத் தத்தம்வீடுசேருகிறார்கள். இக்காலங்களிலெல்லாம் மணமகன்சென்ற காட்டின்புதரிற்போ யவனைவரவழைப்பதற்கு மனிதர்கள் செல்லுகிறார்கள். காட்டிற்போ யவன் தனிமையைசஹி யாது, அக்காட்டில் இங்குமங்கும் அலைந்து கடைசியிற் காட்டின் உட்பாகத்தில் தன்னையறியாமற்சென்று அங்குள்ள துஷ்டமிருகங் களாகிய சிங்கம், புலி, சிறுத்தை முதலிய ஜந்துக்களுக்காவது தன்னைபபோலொதத காட்டுமனிதனுக்காவது இரையாவதுமுண்டு. அநாகரிக ஜாதியாரின் இக்கலியாணவழக்கம், பிராணஹானியில் முடிவதுமுண்டு. க்ஷேமமாய் நாடுவந்து அம்மகன் தான் இச்சித்த பெண்ணை மணப்பதுமுண்டு.

இச்சாதியார் மனைவியைக் கணவனுடையஸொததே என்று மதித்து, அவளுடைய உயிர்மேலும் கணவனுக்கு அதிகாரம கொடுத்திருக்கின்றார்களாம. ஒருஜாதிவிட்டு, மறறொருஜாதியில் மணந்துகொள்ளுவதைபபறறி, இததேசவாசிகளுள், கண்டிப்பான சட்டதிட்டங்களுண்டு. இத்தீவாரில், ஒவவொருஜாதியிலும இரண்டுபிரிவுணடு. அவ்விருபிரிவில். ஒருபிரிவிலிருப்பவன் அதே பிரிவிலிருபபவரோடு ஸமபநதமசெய்துகொள்ளக்கூடாது. பொது வாய், அத்தீவின் ஆண்பிள்ளைகள், தம்மினின்றும, அநநியஜாதிப பெணகளைத் திருடியோ, விலைக்குவாங்கியோ, மணம்செய்து கொண்டுவிடுகிறார்கள். கலியாணமசெய்யுமவயதுவநதபெண்ணின விலை இரண்டுபங்காகிறது. அப்பெண்ணின் தாய்தந்தையருக்குக் கொடுபபது, ஒருபங்கு. அச்சாதியின தலைவனின் அநுமதிக்காக அவனுக்குக்கொடுபபது மறறொருபஙகு. ஜாதிததலைவன் அநுமதி யின்றிக் கலியாணம்நடைபெறுவதேயிலலை. ஜாதிததலைவன் அநு மதியின்றிக கலியாணமசெய்துகொளளுமபெணணின தலைவன், அத்தேசவாசிகளின சடடபபடி தன்தலையை இழபபான்.

பெண்களுக்குப் பணங்கொடுதது மணம்புரிவதென்பது, க்ளோ விஸ் (Clovis) காலம்முதல நடைபெறறுவருகிறது. க்ளோவிஸ் க்ளாத்லிட் (Clothilde) என்னும்ராணியை மணந்தபோது, அப் பெண்மணிக்காகச சிறிது தனமகொடுத்தான். ஆகையால், அன்று முதல் இன்றுவரையில, பிரான்ஸ்தேசத்தில் அம்மாதிரி பெண்களுக் குப் பணங்கொடுபபது, வழக்கத்தையொட்டியது என்றுவழங்கு கிறது. ஆனால், ஸம்பந்திகளின் ஏற்றத்தாழ்வான அந்தஸ்தைப் பொறுத்து, அவர்களுள், கொடுத்துவாங்கும் பணத்தொகையின் அளவு ஏற்படுகிறது.

முன்காலத்தில் இம்மாதிரியானவழக்கம், இங்கிலாந்திலும் இருந்துவந்தது. மணமகளோ தனக்காகக் கொடுக்கவிருக்கும்பணத்தைவாங்கத் தன் முதுகிற் சித்திரித்த அழகான பணப்பையைத் தாங்கிப்போவாள். அப்பை மணமகளைச்சேர்ந்தவர்களாற் கொண்டு போகப்படுவது முண்டு. இதனையே சீதனமூட்டை என்று சொல்லுவது. (Dow purse = Dowry) இம்மாதிரியான சீதனம் நாட்டுப பாகங்களில் இன்னும வழக்கத்திலிருந்துவருகிறது. இதனாலேயே ஸதிரீகள், தம்முடைய பெறறோர்களிடமிருந்தும் பெறும் தனத்தையோ, நகையையோ சீதனம் என்கிறார்களபோலும.

இத்தீவில பெண்கள், எப்போதும் புருஷர்கண்ணில் படுவதில்லை. இவர்கள் உடுக்கும் உடை கீழ்நாட்டையொத்ததுதான். துருக்கியிலும் ஆர்மீனியாவிலும் பெணகள புருஷர்கள்பார்க்க வெளியிலவராமலிருப்பதுதான் தேசாசாரம். தம் தேகாத்யந்தம், ஸதிரீகள போர்வைபோர்த்து, மூடிக்கொணடுவிடுவதனுல் அவர்களின் கிட்டினபந்துக்கள்கூட அவர்களின் அலஙகாரங்களைப்பார்க்கமுடிவதில்லை. மணமகனுகநிசசயிக்கபபட்டவன்கூடத் தாலிகட்டும்வரையில் தன் மனைவியைக் கண்ணெடுத்துபபார்ப்பதுகூட இல்லை. இம்மாதிரியானபோர்வையினுற்போதரும பயனைப்பறறி, ஒரு சிரிக்கத்தகக கதைசொல்லுவதுண்டு.

[ஒருவன் தன்மனைவியைப்பார்த்து "ஏ! பெண்ணே நீ உன்இஷ்டப்படி உலகத்திலுலாவலாம என்று நான் உனக்கு உத்தரவு கொடுத்துவிட்டேன்" என்றுசொல்ல, தன்மனைவியைப்பார்த்து அவன் அபபடி ஏன்சொன்னுன் என்று பிறர்சங்கிக்க அவள் அழகாயிராததனுல் அவளைவிரும்பத் தனக்கு மனமில்லையென்றுனும். இதனுல் அழகுள்ளபெண்கள் தம்கணவனன்றிப் பிறர்தம்மைப் பாராதிருக்குநிமித்தமாகத் தம்மை மறைத்துவைத்துக்கொள்வதற் கென்றே இப்போர்வை ஏற்பட்டிருக்கின்றதென்று தோன்றுகிறது.]

துருக்கியரின்கலியாணவழக்கம் ஆராயத்தக்கது. மணமகளுக்குரிய பொருளையும் மணமகனுக்குரிய வருமானப்பொருள்களெல்லாவற்றின்நிலையையும், பத்திரமொன்றில்வரைந்து ஸம்பந்திகளிருவரும் கையெழுத்திட்டு, மற்றும் நண்பர்கள் கையெழுத்திடக் கலியாணம்

முடிவுபெறலாகும். ஒரு துருக்கியன் நியாயப்படி, நாலுமனைவியரையும் அடிமைப்பெண்களில், நால்வர்வரையிலும், மணம்புரியச் சட்டமிருக்கிறதாம். தன்னுடையமனைவிக்குச் சீதனமாகப் பொருள்கொடுக்கக் கணவன்கடமைப்பட்டவனாயினும் அது பெற்றோர்களின் இஷ்டத்தைப் பொறுத்திருக்கிறதாம். கலியாணத்திற்குமுந்திப் பெண்ணின்பெற்றோருக்குக் கணவனால், சீதனமாகச் சிறிது திரவியம், கொடுக்கப்படுகிறதாம். இத்திரவியம், கலியாணச்செலவில் உபயோகமாகிறதாம். அதிற் சிறிதுபாகம், பெண்ணின்தோழிகள்பெற்றுச் சிலநிபந்தனைகளின்பேரில் வைத்துக்கொள்வார்களாம்.

இத்தேசத்தில் மணமகள் கலியாணத்திற்குமுந்தி ஸ்நானஞ்செய்யப்போம்போது ஒரு அபூர்வமானவழக்கம் அநுஷ்டானத்திலிருக்கிறது. முன்னாலதீவட்டிகள் வரிசையாய்ச்செல்ல மணமகள் தன்தலைமயிரை ஒருவாறுகட்டிக்கொண்டு, வீதியிற்செல்லுகிறாள். கலியாணதினத்தன்று மணமகன் மணமகள்வீட்டிற்குச் சிலரை அனுப்பி, அப்பெண்ணினைச்சேர்ந்தவற்றையெல்லாம் எடுத்துப் பகிரங்கமாய்த் தன்வீட்டிற்குக் கொண்டுவரும்படிசெய்ய, மணமகளும், தன்னுடைய பந்துவர்க்கத்தவரும், தன்னுடையஸாமான் வண்டியும் பின்தொடரத் தன் புக்ககம்புகுகிறாள். அப்போது அந்த ஊர்கோலத்திற் கலந்தவர்களில் அவளுடைய கிட்டின உறவினர்பலரும் துக்ககோலத்தைக்கொள்கிறார்கள். ஜெப்தாவின்பெண்விஷயமாய் (Jeptha's Daughter) க்கொண்ட துக்கக்கோலம், பைபிளில் (Biblical allusion) இருப்பது, இங்குக் கவனித்தமைத்துக் கொள்ளத்தக்கது. இப்பெண்மணி, புக்ககம்செல்லும் ஊர்கோலத்தில், தான்கண்ட எவரையும் தலைகுனிந்து வணக்கம்செய்து, மரியாதைசெய்துசெல்லவேண்டும். இச்சமயமே பிறரைப்பார்த்து, இவள் தன்வணக்கத்தைக்காட்டும் ஸமயம். கலியாணநியாயங்களில், துருக்கியில், மற்றொருவிதமுமுண்டு. அவர்கள், இறந்தவர்களைக்கூடக் கலியாணம்செய்துகொள்வதுண்டாம், ஜீவதசையிலுள்ள தன்மனைவியின்சகோதரிகளைக்கூட, ஒருபுருஷன் கலியாணம்செய்துகொள்ளலாமாம். ஆனால், அவர்களில் மூத்தவள்முதலாக, வரிசைக்கிரமமாய் மணக்கவேண்டும். ஒருபுருஷன் இளையவளைமணந்திருப்பானாயின், அவன் அந்தவம்சத்தில், வேறுபெண்ணை மணக்கக்கூடாது.

ருஷியாவிலும் ஒருஅதிசயமான வழக்கம் விவாககாலத்தில் அநுஷ்டானத்திலிருந்துவருகிறது. கிராமாந்தரகலியாணங்களில், மணப்பெண்கள் கலியாணத்தின் உறுதிப்பாட்டிற்குக் கோயிலுக்குப போய்வந்ததும் தங்களுடைய அழகிய சுருட்டைமயிரின்பாகங்களிற் சிறிது துண்டித்துவைக்கிறார்கள். அத்தேயததினர், அம்மாதிரி துண்டிக்கப்பட்டதற்காக ஒரு துக்கப்பாட்டுப்பாடுகிறார்கள். பொன் மயமான வளைவான மயிரின்பாகம் வெட்டுண்டு பிரிக்கபபட்டதாக ஒருதுக்கப்பாட்டைப் பாடுகிறார்கள். கலியாணகாலத்தில் ஆசார்யர், கோயிலில் ஒரு"ரொட்டியை ஓதிக்கொடுக்கிறா. அவர்கள் இருகை களையும சேர்த்து, ஒருமித்து, எப்போதும் ஸுகமாய் ஜீவிக்கவும், வீட்டைச்சேர்ந்தகாரியங்களை ஒழுங்காய்க்கவனிக்கவும் உபதேசிக் கிறார். கலியாணம பணணிக்கொணட சுகமானகாலங்களிலும் துக்கம் ஸம்பவிப்பது ஸஹஜம். துக்கம்கலவாத ஸந்தோஷமில்லையென்றதை ஸூசிப்பிக்கும்படியான மாலையொன்றினையும், அவர் அத்தம்பதி களுக்கு அணிவிக்கிறார். கடைசியாக ஒரு நல்ல ஆசிர்வாதம்செய்கிறார். பிறகு ஆசார்யர், அத்தம்பதிகளின்க்ஷேமத்தின்பொருட்டு, ஒரு அழ கியமரப்பாத்திரத்திலிருந்து, திரவப்பொருள் ஒன்றினை அருந்துகிறார். இம்மாதிரியே தம்பதிகளு மருந்தியபின் கணவன்,தன் பாத்திரத்தைத் தன் காலின்கீழ்ப்போட்டுமிதித்து, "எங்களிருவருள்ளும துன்பததை யும், மனஸதாபத்தையும் வருவிப்பவன் இக்கதியாருக" என்று சொல்லி உடைக்கிறான். இப்படிக கலியாணம்முடிந்து, தம்பதி கள் வீட்டுககுபபோனதும், கணவன், தன்மனைவியைத் தன்காற் (Boots)செருப்பைக் கையில்எடுக்கச்சொல்லி,"ஒரு கையிற சாட்டை யும், மற்றொருகையிற் பணமும் இருக்கின்றது" என்று சொல்லுகி றான். இதிலிருந்து அவன்மனைவி "அணைக்க ஒருகை, அடிக்க ஒரு கையுள்ளது"; ஆதலின், ஜாககிரதையாயிருந்து குடிததனம் செய்ய வேண்டியது என்று அறிந்துகொள்ளவேண்டும் போலும். இம் மாதிரியாய் ருஷியாதேசத்தின்வழக்கம் இருக்கின்றது.

ஸ்வீடன்தேசத்துக் கலியாணவழக்கம் ஒருவிதமானது. மண மகள், மணமகனின்முன்னால், தன்வலதுகாலைக் கோயிலின் பலிபீடத் தின்மீதுவைத்தால், சீக்கிரத்தில் அவள் உன்னதஸ்திதிக்குவருவாள் என்பது, ஸூசகமாகும். கலியாணதினத்தன்று, கணவன் பார்க்கு

முன்னரே அவனை மணமகள் முதலிற்பார்த்துவிட்டால், கணவனின் அத்யந்தப்பிரியத்திற்குப்பாத்ரமாவாள் என்பதும், அந்நாட்டாரின் கொள்கை.

யூததேசத்து (Jewish Custom) வழக்கம், தம்பதிகள் இருவரும் கலியாணதினத்தன்று ஒரேபாத்திரத்திற் பானமருந்துவதும், அதனை உடனே, உடைப்பதுமாம். அப்படி உடைப்பதுவே இப் புன்மையான உலகின ஸுகஸௌக்கியங்களெல்லாம, நிலையற்றன, அழிந்துவிடத்தக்கன எனபதைக்காட்டுமாம்.

கோரியா, ஜப்பான்தேசங்களிற்பெண்கள், கலியாணமானவர்கள், ஆகாதவர்கள், என்று அவர்கள் தலைப்பின்னலினின்று அறியலாம். இந்தியாபோனற கீழைநாடுகளிற பெணகள் உடையினின்றே இதனை அறியலாம். இளம்வயதுள்ள கலியாணமாகாதவாலிபன் கோரியாவில் வெறுந்தலையுடன் முதுகின்பின்னால் ஒருசுருட்டைமயிர் தொஙகு மாறுபோவான். அவன் கலியாணமபண்ணிக்கொண்டதும், தலைமயிர் நன்றாகக்கட்டப்பெற்றுத் தலையின்மீதேறும். தங்கள்கறுப்புமயிரின் அழகும் பருமனும் குறைநதுபோகாவண்ணம் பார்த்துக்கொள்வதிற் கோரியாதேசத்தவர், இந்துதேசததவர்முதலியோர் ஜாககிரதையுள்ள வர்கள். மயிர் நிறைய இருக்கிறது என்றுகாட்டுவதற்காகப்பொய் மயிர்களைப்போன்ற சவரியை உபயோகப்படுத்துவதுண்டு. கோரி யப்பெண்கள் பொய்மயிர்களை உபயோகபபடுத்திக் கட்டுகள்கட்டித் தலைமேல் ஊசிசெருகி ஜாக்ரதையாய்வைததுக்கொள்வதுண்டு. கோரியாவில் ஏழைகளை, தஙகள் தலைமயிர்களைத் தலைமுண்டாசுகட்டிக் கொள்வதுபோல், தலைமீது சுருட்டிவைத்துக்கொள்வதுமுண்டு.

வீ. சுப்ரமணியஐயர்.
தமிழ்ப்பண்டிதர்,
முனிசிபல்ஹைஸ்கூல், மாயூரம்.

# புத்தகமதிப்புரை.

1. நம்முடைய கடமைகளும், ஜெர்மனியின் கொடுமையான செய்கையும்:—(ராஜத்தின்தெளிபோருட்டிபம்—2.) இச சிறுபுததகம, உறந்தை கி. ராஜகோபாலன் என்பவராலெழுதப்பெற்றது. இதில் நம சிறுவர்களும் தெரிந்துகொள்ளவேண்டிய சில அரசியல்முறைகளேயும், அவற்றுள்ள நன்மைகளேயும் விவரிததிருப்பதுடன், மாதா, பிதா, குரு, தெய்வம, அரசன் இவர்களிடதது விசுவசிப்புடனிருக்கவேண்டு வது நமதுகடமையென்றுபோதிததிருப்பது திருப்திகரமாயிருக்கிறது. இதன்விலே அணு 2.

2. வில்லியம் எவர்ட் கிலாட்ஸ்டன் சரிதம்:—இது கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல உபாததியாயராயிருநத கே. வேங்கடராமையர் பி. ஏ. அவர்களால எழுதப்பட்டது. இது உலகப்பிரஸிததிபெற்ற கிலாட் ஸ்டன் பிரபுவினுடைய ஜீவியசரிததிரததின்சுருக்கமாயவரது ஒழுக்க வழக்கங்களேயும், குணவிசேஷங்களேயும தமிழ்மககள் நன்குணருமாறு தெளிவாயெழுதப்பெற்றிருககிறது. இதன்விலே அணு 8.

3. பெண்கள் நீதிவிளக்க வினுவிடை:—இது மயிலாப்பூர்க் குப்புஸாமிநாயகரா லெழுதப்பட்டது. இதில இநதியப்பெண்மககளுக குரிய வொழுககவழககங்களேயும கற்புநிலேமுதலிய கடமைகளேயும பறறிப் பிராசீனமுறையைததழுவி யுகதியுகதமாகவும், சாஸ்தரஸமமத மாகவும வினுவிடைநடையில விளககி யெழுதப்பட்டிருக்கிறது. இதன் விலே அணு 4.

மேற்கண்டபுத்தகங்கள் வேண்டுவோர் ஆக்கியோர்க் கெழுதிப் பெறலாம்.

4. காதல்வேற்றி:—இது, வி. பி. கிருஷ்ணஸ்வாமி பி. ஏ. அவாக ளால் எழுதபபட்டதொரு சிறிய தமிழ்நாவல இதில ஒருபெண் தனது மனசுககுபபிடிததவாலிபனே விவாகமசெய்துகொண்டதாகக் கதையைக்கற்பிதது, கணவருககடஙகாதமனேவியரியலபும, மனேவிகட் கடங்கிய கணவர்களியலபும, பிறவும வேடிக்கையா யெழுதப்பட்டுள் ளன. இதன்விலே அணு 4. ஜனுபிமானியின சநதாதார்களுககு மாததிரம அணு 3. வேண்டுவோா ஜி. ஏ. வைதயராமன் அண்ட் கமபெனி, 3—4 கொண்டிசெட்டிதெரு, மதராஸ். என்று எழுதிப் பெற்றுக்கொள்ளலாம.

பத்திராதிபர்

உ

# விளம்பரம்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தினின்றும் மாதந்தோறும் பிரசுரமாகும் "செந்தமிழ்"ப்பத்திரிகைக்குப் பெரும்பான்மையும் தமிழிலக்கிய இலக்கணவிஷயங்களும், தமிழ் நாட்டுப் புராதனசரிதங்களும், சாஸனங்களும், வடமொழியினும் ஆங்கிலத்தினும் தமிழிற்கு வேண்டுவனவாகக்கருதப்படும் சாஸ்திரமொழிபெயர்ப்புகளும், ஒன்றையொன்றிகழாச்சமயக்கொள்கைகளும், தமிழின் அருமைபெருமைகளைக்காட்டும் ஆராய்ச்சிவிஷயங்களுமாகிய விஷயதானஞ்செய்வோர்க்கு, 'செந்தமிழ்'ப்பக்கம் 1-க்கு வியாஸத்துக்குத்தக்கவாறு 8 அணா முதல் 2 ரூபா வரை ஸம்பாவனை கொடுக்கப்பெறும். இந்த ஸம்பாவனை வியாசங்கள் ஒப்புக்கொள்ளப்பட்டுப் பிரசுரமானபிறகே எழுதியநிருபருக்கு அனுப்பலாகும். ஏற்றுக்கொள்ளப் படாத விஷயதானங்களை நிருபர்களுக்குத்திருப்பத் தேவையாயிருந்தால் அவர்கள் தபாற்செலவிலேயே அனுப்பப்பெறும்.

B. இராஜராஜேஸ்வர ஸேதுபதி,

அக்கிராசநாதிபதி,

மதுரைத்தமிழ்ச்சங்கம்.

## 1915-ஆம் அக்டோபர்மீ 23உ
## காலை 9-மணிக்குநடந்த மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் காரியநிர்வாஹஸபையில் முடிவுசெய்யப்பட்ட தீர்மானங்களின் விவரம்.

1. மாட்சிமைதங்கிய இராமநாதபுரம்ராஜா ஹிஸ் ஹைனெஸ். பா. ராஜராஜேஸ்வரசேதுபதியாகிய முத்துராமலிங்கசேதுபதியவர்கள்—அக்கிராசநாதிபதி.

2. மகா-௱-௱-ஸ்ரீ கான்பகதூர் H அப்துல்கபான்சாஹிப் அவர்கள்.

3. ,, R. இராகவையங்கார் அவர்கள்.

4. ,, V. S. இராமஸ்வாமிசாஸ்திரியவர்கள், B. A., B. L.

5. ,, T. N. சுந்தரராஜ ஐயங்கார் அவர்கள், B. A, B. L., (கௌரவகாரியதரிசி.)

இவர்கள் வந்திருந்தார்கள்.

தீர்மானங்கள்:—

I. (1) மகா-௱-௱-ஸ்ரீ T. இராமஸ்வாமி ஐயங்கார் அவர்கள், தமிழ்ப்பண்டிதர், சூலூர், கோயம்புத்தூர்ஜில்லா.

(2) ,, K. சுப்பிரமணியபிள்ளை அவர்கள், M.A, Apprentice-at-law, மைலாப்பூர்.

இவர்களைச் சங்கத்தின் அங்கத்தினராக அங்கீகரிக்கலாயிற்று.

II. 1915ஆம் ஆகஸ்டு, செப்டம்பர்மாதங்களின் வரவு செலவு கணக்குகள், வாசித்து அங்கீகரிக்கலாயிற்று.

III. கல்வி அபிவிருத்திவிஷயமாய்ச் செய்யவேண்டிய காரியசம்பந்தமாகத் தொல்காப்பியச்செய்யுளியலும், பழமொழியும் இவ்வருஷம் அச்சிடும்படிக்கும், தமிழ்நாவலர்சரிதை, நீலகேசி இவற்றையும் கூடியமட்டில் அச்சிடவும் தீர்மானம்.

IV. சங்கம்கலாசாலைமாணவர்கள் படித்தபின் கலாசாலையைவிட்டு நீங்குங்காலத்தில், அவர்கள்பெற்றுக்கொண்ட புஸ்தகங்களைக் கலாசாலைத் தலைமையுபாத்தியாயரிடம் ஒப்புவித்துவிடவேண்டியதாகத் தீர்மானம்.

V. சங்கமாபீஸ் டிரெடில் மெஷீனுக்குப் புதிதாகச் சக்கரம் ஒன்று வாங்கவேண்டியவிஷயம் கமிட்டியிற்கொண்டுவரவேண்டியது அனாவசியமென்றும், பிரசிடெண்டு அவர்களும் காரியதரிசிகளும் பைசல்செய்யவேண்டியவிஷயமென்றும் தீர்மானம்.

B. RAJA RAJESWARAN,

*President,*

23—10—15. Madura Tamil Sangam.

இ - ள்) தளை ..... ....விறகோ - பாசமாகியவிலங்கைவிட்டு நீங்கினார்விரும்பும் மாறனென்னுந்திருநாமத்தையுடையவன்வெற்பி னிடத்து வானிற்றோன்று மிந்திரதனுபபோன்றநுதலையுடையீர்! உங் களுமுன்றிலின்கண், சங்குவளைவிறகவோ ? மன்மதனம்படுக்க - (இது கடை) என்னிடததுநிலைபெறறவிருபப மெனதறிவையகப் படுத்தாநிற்ப. வளைவிறகோ - வளைகருங் கருபபுவில்லையுடையபகை யாகிய. மன்மதனமபடுககவோ - காமன்றொடுககும் பூப்பாணங்களை நுமதுகுழறகணியும மாலையாகததொடுக்கவோவென்றவாறு. ஓகா ரம் முதலு மீறும வினா. இரண்டாவது அசை. கோ - பகை. பருதி- குறையுறவுணர்தல் துறை - குறையுற்றுநிறறல்; பணிவிடைகிளத் தலுமாம்.

காா்வானமால்வரையாய்கட்டுரை கூறுறொருவன்
சூா்வாரணததானபொறசூழியினறறோறறஞ்சாா்
சூா்வாரணத்தான்பொற்சூழியினற்றோற்றஞ்சாா்
போா்வாங்குசேயகலானபூமபுனமென்செய்வதே. (740)

இஃ திடையீரடியு முற்றுமடக்கு

(இ - ள்.) காா்வான...... .னொருவன் - திருக்காா்வானத்துத் திருமால்வரையினுள்ளாய் ! ஒருவன் கட்டுரையுங்கூறுகின்றிலன். சூா்வாரணததான - பகைவா்க்குநோயைச்செய்யுங் கோழிக்கொடி யனுமாய். பொறசூழியினறறோறறஞசாா் - பொன்னினறசெய்த முகபடாத்தோடெ பெருமைபெறற. சூா்வாரணத்தான் - அஞ்சாத யானையையுடையனுமாய். பொறசூழியினறறோற்று - பொலிவு பெறற சரவணப்பொய்கையினிடத்துப பிறக்கப்பட்டவனுமாய். அஞ் சாா்போா்வாங்குசேய் - சத்துருககள்போரைநீக்கும முருகனையான். பூம்புனமகலான்-பூவையுடையபுனத்தைவிட் டகல்வதுஞ்செய்கின்றி லன். என்செய்வதே - இதற் கியான்செயத்தகுவ தியாதென்றவாறு. கட்டுரை - அழகியவுரை. வாங்கும் - நீக்கும். ஆல் அசை. பருதி- குறைநயப்பு. துறை - குறிப்பறிதல்.

ஒருத்தல்வெறபுடையானும்பா்துற்றுறை
வருத்தமன்கடன்மாவணமேபுக ,

லருத்திநாண்மலர்கொய்தறலாடியோ
வருததமன்கடனமாவனமேபுகல். (741)

இஃ திரண்டாமடியுமீறறடியு முற்றுமடக்கு.

(இ-ள்.) ஒருத்தல்வெறபுடையான் - அத்திகிரியினையுடையான். உம்பர்துறறுணுவருதத - தேவாகளபொசிக்கு மமிர்தத்தையுண்டாக் குமபடிக்கு மனகடல - நிலைபெறறகடலிற கடைந்துபிறந்த. மா - திருமகளே! வனமேபுகல - புனலேபுகலிடமாகிய. அருத்திநாண மலர்கொய்தறலாடியோ - கணடாாவிருமபும பருவமலர்களைக்கொய் தோ? புனலாடியோ? அன்றியாதானோ? வருததமன்கடன் - உனது திருமேனிக்குத தளர்சசியெய தியமுறை. மாவனமேபுகல் - பெருமை பெற்ற அன்னம்போலுநடையினையுடையாய்! கூறுவாயாகவென்ற வாறு. துறறுணு வினைததொகை வருதத - உணடாக்க. மா அண்மைவிளி. வனம-தண்ணீர்; நநதவனமுமாம். புகல-புகலிடம. அருததி - விருபபம. நாணமலர் - பருவமலர். ஒகார மிரண்டிடததுங் கூட்டுக. கடைநதெனபதும, திருமேனியென்பதும் முதலாயின சொல்லெச்சம். பகுதி - முன்னுறவுணர்தல. துறை - வாட்டம் வினுதல். இவையாறு மீரடிமுழுதுமடக்கு.

இனி மூன்றடிமுழுதுமடக்குவருமாறு:—

காவியங்கணல்லாரபடிகாவிரி
காவியங்கணல்லார்படிகாவிரி
காவியங்கணல்லார்படிகாவிரி
வாவியும்புடைசூழரங்கேசனென்மனததான். (742)

இஃ திற்றடியொழித தேனைமூன்றடியு முற்றுமடக்கு.

(இ ள்.) வாவியும - வாவிகளும. விரிகாவியங்கணல்லார்படி காவிரி - மலர்ந்தநீலோற்பலம்போலும் அழகியகண்ணையுடையமக ளிர் புனல்குடையுங் காவிரியும். விரிகாவியங்கணல்லார்படிகா - அற முதலியநாற்பொருளுங் குறைபாடின்றிப்பரந்தகாப்பியங்களை நல்லோ ரிருந்துகற்பனசெய்யுங்காவும். படிகா-ஊரைக்காக்கபபட்ட. காவியம்- வாரிஞற்கட்டித்தோளிறகாவியவாச்சியங்கள். அல் ஆர் கண்-இரவின் கண்ணாரவாரிக்குமிடங்களும். புடை......மனத்தான்-பக்கமெல்லாஞ் சூழப்படாநின்ற திருவரங்கேச னென்மனத்துளா னென்றவாறு.

இதனுள் சூழ், படி, படி, விரி, விரி என்பன இறந்தகாலமு நிகழ் காலமுங்கரந்துநின்ற பெயரெச்சவினைத்தொகைவாய்பாடு. "எஞ்சு பொருட்கிளவிசெஞ்சொலாயிற, பிறபடக்கிளவாமுறபடக்கிளத்தல்" என்பதனுற காவிரியும் காவும அல்லார்கணனும் என்பனவற்றிற் குமமைகொடாராயினா. திணை - பாடாண். துறை - கடவுள்வணககம். பா - கலிததாழிசை; என்னை? "அநதடிநீணடிசைப்பிற், கடிதலில் லாக்கலிததாழிசையாகும" என்பவாகலான். (செய்யுள்) "வாள்வரி வேங்கைவழங்குஞ்சிறுநெறியெங், கேளவருமபோதினெழால்வாழி வெண்டிங்காள், கேள்வருமபோதினெழாலாய்க்குறலியரோ, நீள்வரி நாகதெயிறேவாழிவெணடிங்காள்" என பதிற் காண்க. இது விதலையாபபுப்பொருளகோள. "அணியுமமிழ்தும" எனனும்பாட் டில் மினனும, பணியுமபுரைமருங்குறபெருநதோளிபடைக்கணகள், பிணியுமதறகுமருநதுமபிறழபபிறழ எனபதனலறிக.

ஆமோதமுநதுவரிவணடுகணீா
தாமோதரன்றஞ்சையர்ககோதிலவணடேன
ஆமோதமுந்துவரிவண்டுகணீர்
ஆமோதமுநதுவரிவணடுகணீர். (743)

இது முதலயலடியொழித தேனைமூன்றடியு முற்றுமடககு.

(இ - ள்.) ஆம ஓதம் உநது உவரிவண்டு உகள நீர் - (இது முதலடிமுற்றும்) ஆக்கஞசெய்வதாந திரை கரையிலெறியும சமுத் திரத்திறசங்குதவழும புனலையுடையவாவியில். வண்தேன் ஆமோத முமஅது - வளவியதேனையும், பரிமளத்தையுமுண்ணும். வரிவண்டு கணீர் - பாட்டையுடையவண்டுகளே நீர். மோதமுநது உவர் இவ் வண்டுகள் - என்னைபபொர எனமுனனெதிர்நத (உவராகிய) காமனு ருமம, இபபஞசபாணங்களும எனனைவருததுமிதனை தாமோதரன தஞ்சையாக்கோதில - தாமோதரனது திருததஞசையிலுள்ளாராய தலைவர்க் குரைபபீராகில். நீராம-(நாலாமடியீறும் முதலும) உமக்கு நலலதாமென்றவாறு. ஆம் - ஆக்கஞ்செயயும. ஓதம - திரை. உநது- எறியும். உவரி - சமுததிரம. வணடு உகள் - சங்குதவழ். நீர் ஆகு பெயர். ஆமோதம - பரிமளம. து - உண். "எஞசுபொருட்கிளவி செஞசொலாயிற், பிறபடக்கிளவாமுறபடக்கிளத்தல்" என்பதனுல்

வண்டேனென்பது உம்மையில்சொல்லாய் முன்னின்றது. வரி - பாட்டு. வண்டுகள்! அண்மைவிளி. உவர் முன்னிலைச்சுட்டுப்பெயர். வருந்துமித்தனையென்பது சொல்லெச்சம். பொருள்கோள் - மாட்டுறுப்பு. பகுதி - இரவுக்குறி. துறை - காமமிக்ககழிபடர்கிளவி.

நாகவரையானளியமலருளளா
ஞகவரையானளியமலருளளான
பாகவதர்தம்பிரான்பாமாறனறமபிரா
ஞகவரையானளியமலருளளான. (744)

இஃது ஈற்றயலடியொழிந்த தேனைமூன்றடியு முற்றுமடக்கு.

(இ-ள்.) புலவீர்காள்! பாம்பையணியும் அரையையுடையசிவன், வண்டுறுதலையுடைய தாமரையையிடமாகவுடைய பிரமன், பொன்னுலகினெல்லையையுடைய இந்திரன், கருணையையுடைய அழுக்கற்றோரென்னு மிவர்களுள்ளத்திற் குடிகொண்டிருப்பான்; (நளிய மலருள்ளான. நாலாமடியீறு) சிறந்த அழுக்குடையோரைத் திருவுளத்தானினையான; அவன்யாரென்னில்? பாகவதர்தம்பிரானாகிய பாமாறனுக்குத்தம்பிரானாகிய அத்திகிரிநாதனென்றவாறு. புலவீர்காளென்னுமெழுவாய்முன்னிலை யெச்சம். அவனை மனமொழிமெய்களினினைந்து வாழ்த்திவணங்க அறமுதலியநாற்பொருளுமெய்க்குமென்பது கருத்து.

சிலைநுதாலொழிதேடுதல்பார்சுலா
மலையுமாரமணியாவரிவளை
மலையுமாரமணியாவரிவளை
மலையுமாரமணியாவரிவளை. (745)

இது முதலடியொழிந்த தேனைமூன்றடியு முற்றுமடக்கு.

(இ-ள்.) (நாலாமடியீறும் முதலடிமுதலும்) வரிவளைசிலைநுதால் - நாரிஞலவரிவனவாய் வளையப்பட்ட விற்போலுநுதலினையுடையாய்! (முதலடியீறு மிரண்டாமடிமுதலும்) பார்சுலாம் அலையும் - பூமியை வளைக்குங் கடலும். (இரண்டாமடியீறும் மூன்றாமடிமுதலும்) அரிவளைமலையும் - குரங்குகள்சூழப்பட்டபருப்பதமும். (இரண்டாமடி

மூன்றாஞ்சீரிறுதி) ஆ - தம்மிடத்துண்டாக்கப்பட்ட. இரண்டா மடியில் ஆரமணி, மூன்றாமடியீற்று வரிவளை, நாலாமடியில் ஆரம்-முத்தையும் மாணிக்கத்தையும் சங்குகளையும் சந்தனத்தையும். அணியா அணியா-அழகுபெற அணிவனவல்ல. ஆகையால், நீபெற்ற இவளு முனக கநீாமையளென்பதறியாதே தேடிப பின்றொடர்ந்து வருதல், (மலையுமார என்பவற்றை ஆரமலையுமெனப் பாடமாற்ற) உலகியற்கு மிகமாறுபடுமென்றால். (முதலடி) தேடுதலொழி - தேடு தலையொழிவாயாகவென்றவாறு. இதுவும் மாட்டுறுப்பு. இத னுள்ளுஞ் சொல்லெச்சங்கள்வந்தனவுங் காண்க. பகுதி - உடன் போக்கு. துறை - உலகியலுரைத்தல்.

ஆனகமலனயனததானத்தா
வானகமலனயனததானத்தா
வானகமலனயனததானதா
வானகமலனயனததானத்தா. (746)

இது நான்கடியும ஏகபாதமாக முற்றுமடக்கு.

(இ - ள்.) ஆல் நகம மலல் நயனததானததா - ஆலந்தளிராகிய பாம்பினை வளபபதைதையுடைய திருக்கண்டுயிலிடமாகவுடையவனே! ஆல நகு அமலநதது ஆன அததா - வெள்ளததினிடததுமிளிரும அழுக்கறற சங்கிருபபானதிருககைகையயுடையவனே! ஆனகமலன் அயன ந தானததா-உனதுந்தியிறறோன்றின தாமரையானுகிய ஆதிப் பிரமனில்லையாக மீளவுமபெற்றளிததகொடையினையுடையவனே!* வான கமல னயன் - ஆகாயததாகிய கங்கையைத்தரித்தவனுஞ் சிவன மூதாதையே! நத்தானததா சிறபபுடையமுக்கியத்தானமாகிய பரம பதத்தையுடையவனே! இடைசசொல் ந-சிறப்புப்பொருட்டு. (இரண்டாமடியில்) நய - எனனை ஆட்கொள்ளவிருமபுவாயாகவென்ற வாறு. ஆல் ஆகுபெயா. நகம - பாம்பு. (விகாரம்) மலல் இடைக் குறை. நயனத்தானம் - துயிலணை. ஆல - வெள்ளம். நகு - மிளிர். அமலம் - அழுக்கறற ஆன -இருப்பான. (மூன்றாமடியில்) ந - இல்லை. ஒழிந்தனவு முறையிறகொள்க. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து. (சஉ)

* இவ்வடிக்கு, ஆனகமலனயன நதது ஆன் அததா - பிரமன்விரும்பிக் கவர்ந்த ஆன்வடிவெடுத்த அததனே! எனினுமமையும்.

264. ஒருசொலின்மடக்கலுமுளவெனமொழிப.

(எ - ன்) இதுவும் அம்மடக்கினதுபேதமுணர் - றறு.

(இ - ள்.) ஒருபாவினதுநான்கடியு மொருசொல்லானே முற்று மடக்குவதுமுண்டென்றுகூறுவர் பெரியோரென்றவாறு. யமயமக மென்பது மிது.

அரியாரரியார
அரியாரரியார்
அரியாரரியார்
அரியாரரியார். (747)

இஃ தொருசொல்லின்மடககல.

(இ - ள்.) அரியார் - யாவராலும் அளவிடற்கரியார. அரி ஆர் - சத்துருக்களுயிரைபபருகும. அரியார - சக்கிராயுததகையுடையார. அரியார் - பாம்பை மிக்க. அரியார - சயனமாகவுடையார். அரியார் - ஏனமாக அவதரிததவா. அரியார - அனுமானையுடையவர். அரியார் - அவாயாரெனில்? அரியென னுநதிருநாமததையுடையாரென்றவாறு. எனவே அவரேபரபபிரமமாவாரெனபதூஉ மவரே முததிக்குவித தாவாரென்பதூஉ மாயிறறு. துறை - கடவுளவாழ்தது. பா - குற ளடிவஞ்சித்துறை. (கஙு)

265. பதத்தொடுபதமடககுதலபதமடக்கே.

(எ - ன்.) இனனும அமமடககினையே வேறுபடுததுக்கூறு கின்றது.

(இ - ள்.) ஒருசெயயு ளுன்கடியாய்வருவதனுள் இரண்டடி யொருநோக்கமாகமடக்குதல் பாதமடகெனப்பெயர்பெறுமென்ற வாறு.

சக்கரநாகணை ததகைததலததின
சக்கரநாகணை ததகைததலததின
விக்கரைதென்குருகூாமன்னேமவா
விக்கரைத்தென்குருகூர்மன்னேமவா. (748)

இது முதலிரண்டடியுங் கடையிரண்டடியு முற்றுமடக்கு.

(இ - ள்) கடலிற் றுயிலும் பாம்பணையாகிய அழகிய இடத்தை யுடையவனே! சக்கரத்தையுஞ்சங்கையுந்தரித்த கையையுடையவனே! கரும்பினடியிலே அழகியசங்குதவழு மாக்கதோடு மின்பந்தரும் வாவிக்கரையையுடைய பொருனைதெதன்கரைக்குருகூர்க்குமன்னவனே! என்னைக்காக்கவருவாயாகவென்றவாறு. துறை - இதுவுமது.

தரணிகுடையாவெழுமைவராக
முரணரரிவாமனனத்தன்முனபான்
றரணிகுடையாவெழுமைவராக
முரணரரிவாமனனதன்முனபான். (749)

இது முதலடியுமூன்றாமடியு மிரண்டாமடியுநாலாமடியு முற்று மடக்கு.

(இ - ள்) பூமியானது பிரளயத்துளாழ (அதனையெடுத்தற்குத) தோன்றும அழகிய ஏனம்; பெருமையையுடைய நரசிங்கம்; வாமன ரூபமானவன்; பாஞ்சசன்னியத்தையுடையான; கோவர்த்தன கிரியைக் குடையாகவெடுத்துநிமிரு மிடுக்கினையுடையான்; (இதன் கண் முன்பான் என்னு மிரண்டாமடியினிறுதியைசசேர்க்க.) பஞ்ச பாண்டவர்களுள்ளத்துக்குமாறுபாடானாற் றுவர்க்குக் கூற்றுவன்; தாவும் அன்னத்தையுடை யபிரமனுககுப் பிதா; எல்லாக்கடவுளர்க்கு முன்னுனவனென்றவாறு. முரண் - பெருமை. நரரி - நரசிங்கம். முன்பு - மிடுக்கு. அரி - யமன். ஒழிந்த அரும்பதமு முறையிற் கொளக. துறை - இதுவுமது.

இலங்கொண்மூவெயில்குன்றவில்லேற்றுவா
னலங்கல்வாரியமைந்திறப்பெய்தவே
ரலங்கல்வாரியமைந்திறப்பெய்தவே
ரிலங்கொணமூவெயில்குன்றவில்லேற்றுவான். (750)

இது முதலடியுநாலாமடியுந் தம்மிலும், இடையிரண்டடியுந் தம்மிலும் முறறுமடக்கு.

(இ - ள்) முதலேநின்ற இலங்கொண்மூவெயில் என்பவற்றுள் இல்லை யீறுக்கி அங்கொண்மூவெயிலில் எனச்சேர்தது, செலத்தைத் தரித்தமேகம் வெயிலினுமிருந்து என்க. நாலாமடியில் இல் நிற்ப

விருவினையொருங்குவென்றிறைநிலையிஃதென
வொருதலைபற்றினரிருமையுமுணர்நதோா
முக்குணமவற்றுண்முற்குணனமைந்தவருட
னாலாங்கடவுள்வீற்றிருக்குநற்றிசைவரு
மிளங்கதிரகிலத்தினுயிரஞ்ச
வாழ்நாளறுத்தியிலவவவுதறகமைதத
நமன்றிசையெழுதிறனிறுமபூதெனன
வறுகாலஞ்சிறையளிக்குல்நானகுளா
முருகவிழ்நறுநதாமுந நூனமாபத
திருபிறபபாளனோரிடதெதிருபு
நலஙகிளரொருதனிமுதலெனநாடிப்
பொலஙகழலிரணடையுமபுலனுறமேதகு
முபபொறிகளினுனமுயறசியிறபோறறலு
நாற்பொருள்பயககநறகனிவாயினைததிறந
தேறபுடைசசெய்யுளைநதினுககிலககணமென
வாறறியநதணாருமறைபபொருளா
லெழுகடறபுவனதெதழுநதிறைவெளிவா
வறுசுவையினுளதிமதுர முககியசசுவை
யுறுபொருளைநதுடனுயர்தமிழ்மொழியா
லைவகைபபனுவன்மூவுலகமுமளநதவ
னிருசெவிககமுதாமெனவினிதளிதத
வொருபோரணமையினுயிரகடாமனைததும
பிறநதிறநதுழலுமபெருமபிணிதவிர்ததருள்
ஞானபூரணசுகோதயநாவீற
மானபூடணகுருகாபுரிவரோதய
மறுசமயததவாமததமாலயானையைத
தெறுமொருசிஙகமாந்திருப்பெருமபூதூர்
வருமெதிராசனைமனமகிழ்நதாண்ட
விருசரணமபுயததென்னையுமொன்று
யருள்புரிநதாண்டதற்காதிக்காலத
திமமாநிலதெதன்பொருட்டாற்
கைமமாறெவனீகைககொண்டதுவே. (803)

இது எழுகூற்றிருக்கை.

(இ - ள்) (முன்னீர . . . . .வியப்பான்) சமுத்திரத்தையெல்லை யாகவுடையநிலத்தின்கண் ணுயர்திணையிடத் தாண் பெண் ணென்னு மிரண்டுபாலு மதிக்கும்படிக்கு (இருவிசும்பொழுக்கத்து) பெருமையையுடைய ஆகாசவீதியிலிடத்து (ஒருஞான்று. . . . . . வழுப்பின்) ஒருநாளின்கண் ணொருகணப்பொழுது மொழிவில்லாத முயற்சியோடும் (ஒருதனி . . . . . யூர்தியின்) ஒன்றென்னப்பட்ட ஒப்பற்றவுருளோடு தாளிரண்டுமில்லாதபாகனையுடையதேரின்மீதே (ஒருபிணா . . . . . .செம்மலின்) ஒன்றாய சக்கரவடிவினையுடைய பெரியகையினையும், பெருகாது சிறுகாது சுமரி லொத்தபுழையொடு கூடிய விரண்டுகரடத்தினையும், முன்றுமதத்தினையும், நான்றவாயினையு முடையயானையையுரிக்கு முந்துசெண்டப்பண்ண சிவந்து, (இருகணு மிமையாததேவர்கள் . . . . . .நாலாங்கடவுளீறறிருக்குமந் திசைவருமிளங்கதிர்) இரண்டுமான முரியலாமையாதவரொ ரொருகால முமவிட்டுநீங்காது திரிகின்றகரணங்க ருமாதயஞானத்தட னொருநெறிப் பட விரண்டுகரங்களையுங்குவித்து முன்றும்பொழுது தலைவணக்கஞ் செய்ய, நான்குமுகங்களையுடையபிரமனைப்போல விரும்பியதெல்லாங் கொடுக்கு மைந்துவிருக்கமாகிய கற்பகாடவியின் நிழலிலே அறமுதலாய நாலுபொருள்களுள் முன்னேநின்ற முன்றுபொருளுந் தமமாலாய பெரிய வின்பத்தைக் கைக்கொள்ளவாயாகவென் றெதிர்கொண்டுநிற்ப, விரண்டு பக்கமு மின்போன்றதொழுமருங்குலையுடைய வானவமகளிர் தாள முங் கானமும் வாச்சியமு மபிநயமு மொருங்கூற்றாடியத விரண்டு பதங்களினாலு நாடகத்தைநடித் தொழுகாநிறப, நாலுதிக்கிலுமுள்ள சத்துருக்களமாறுபாட்டைக்கெடுத்து மூன்றுமுரசமும நீங்காமன் முன்றிலின்கண் ணாரவாரிப்ப, செவியாதிய பொறியைந்திலுந்தங்கப் பட்ட சத்தாதிகளைந்தினையுமடக்கி யுண்மைப்பொருளைக்கூறு நாலு வேதத்தினையுந் தெளியவாராய்ந்த முக்கோற்பகவராகி யெடுத்தசென னந்தோறு மிழைத்தமுறையே யடைந்தபாமலவரு நல்வினை தீவினை யென்னுமிரண்டையு மொக்கவென் றுபரத்துவ சொரூபரூபகுணவிபூ திகளினிலைமையித்தன்மைத்தென நிச்சயமாகவுட்கொண்டோ ரிம்மை மறுமையிரண்டுந் தெளிந்தோர சாத்துவிக ராசத தாமதமென்னுங் குணமூன்றனுள முற்குணங்குடிகொண்டோராகிய எதிகளுட னாற் பெருங்கடவுளென்னும் இந்திர னொருபராகக்கறவீற்றிருக்குங் கிழக் கென்னு நல்லதிக்கினிலுதிக்கு மிளையஞாயிறு, உலகின்கண் ணுள்ள

வினியவுயிர்க ளஞ்சுவதாக அவரவர்வாழ்நாளற்றஅந்தியத்தி லுயிரை யுண்ணும்படிக்குவிதித்த நமனறிக்கிலெழுந்தகூற்றுபாடு ஆச்சரிய மென்று, நினதுதிருமேனியிற் கடாக்ஷசோதியைக்கண் டுகொண் டது விளங்கும்படிக் குத்தரகங்கையினின் ற்ம ஆறுதாளையு மழகியசிறை யையுமுடைய வண்டினசாதிநான்குங் குடையத்தேனையொழுக்கு நறு விதாந் தாமரைத்தாநு முப்புரி நூலுங் கிடக்கு மார்பினையுடைய இரு பிறப்பாளனாகிய மதுரகவி, பொருந்தானத்தெற்கிருந்து, மேபாானநதந தலையாநின்ற மூவரா மொ நதலி முதலாகிய ஸ்ரீமந்நாராயணனென்ன ஞானத்தா லுட்கொண்டு, பொன்னுறைசெய்த வீரக்கழலையுடைய நினது திருவடிகளிரண்டையுங் கட்புலனுறவும் பெருமையெய்திய மனனுவாக குக்காயங்களின் முயற்சியாற்போற்றுவ, அறமுதலிய நான்குபொரு ளுமய்யப்படாத கல்லைக்கனிப்பொன்ற திருப்பள்ளத்தினைத்திறந்து, வெண் பா வாசிரியங் கலி வஞ்சி மருட்பாவென்ப் பெயர்பொருந்துதலுடைய யாப்பைந்தினுக்கு மிலக்கணமென்றுசொல்வதாக, ஆறங்கத்தையுந் தெளிந்த வந்தணர்க்குரியவா யறிதற்கரியவா நாலவேதப்பொருளினுற பரமபதநாதனாகியவிறை ரநடவாகனத்தேறி யெழுகடலுஞ்சூழ்ந்த பூலோகத்திலெளிவரும்படிக்குச் சுவையாறனுளளு மதிமதுரமென்னு முக்கியசுவைமிகுவதாக, ஐந்துபொருளொடுங்கூடிய தமிழ்மொழி யால், திருவிருத்தந் திருவாசிரியந் திருவந்தாதி திருவாய்மொழியென்னு நான்குகூறுபாடுடைய நாலாயிரப்பிரபந்தங்களையு முலக முன் றுமளந்த வன்றிருச்செவிக்கு அமிர்தமென்றுசொல்லும்படி யினிமையெய்த லூட்டிய வொப்பற்ற வரியசெயலொடு முலகின்கண்ணுள்ளவுயிர்கள் யாவும் பிறந் திறந் தலைவரு பிறப்பாகிய பெரியபிணியைத்தீர்த்துக் கிருபைசெய்த ஞானபூரணனே! ஆனந்தத்திறகுப்பிறப்பிடமானவனே! நாவீறுடையானே! அபிமானபூஷணனே! குருகைமாநகரிடத்துதித்த பலவாங்களு முதயமானவனே! பரசமயிகளான மதயானைத்திரளை வெல்லும் ஒருசிங்கமான திருப்பெரும்பூதூரடிகளாகிய வெதிராசனைத் திருவுளமகிழ்ந் தினிதாகவாண்ட இரண்டெனனுஞ் சரணதாமரையால

அறிவில்லாத என்னையும் ஒருபொருளாகக் கருணைபுரிந்தடிமைகொண் டதற் கிந்தப்பெரியநிலத்து முந்நாலத் தெனது ஏதுவாக நீ கைக் கொண்ட கைம்மா றியாதென் றுசொல்லுவாயாகவென்றவாறு. இத னுள் ஒருபகலென்றது கணப்பொழுதை, "ஒருபகலுள்ளேயுருப்பவிர்" என்பதனாலறிக. ஓடியா வுழப்பு-ஒழிவில்லா முயற்சி. பாகன் பாகுடை யென அன்விகுதிகெட்டது. பிணர் - சருச்சரைவடிவு. செம்மல் - பெரியோன். இன உவமவுருபு. நசைஇய-விரும்பப்பட்டன. முழு நலம் - பேரானந்தம். தெற்றென - தெளிய. பிறழாது - மாறுபடாது. ஒருங்கு - ஒக்க. ஒருதலை - நிச்சயம். இருமை - இம்மை மறுமை. முக்குணம்-சாத்துவிககுணம். நாலாங்கடவுள்-இந்திரன். அமைத்த- விதித்த. இறும்பூது - ஆச்சரியம். உளைதல் - குடைதல். அவிழ்த் தல் - ஒழுக்குதல். நலம் - ஆனந்தம். நாற்பொருள் - அறம்பொரு ளின்பம்வீடு. உறுபொருளோடுடன் என்பது "மிக்கவிறைநிலையு மெய்யாமுயிர்நிலையுந், தக்கநெறியுந்தடையாகித் - தொக்கியலு, மூழ் வினையும்வாழ்வினையும்" என்னும் பொருளோடுடன் என்றவாறு. பேராண்மை - அரியசெயல். பொருட்டு - ஏது. கைம்மாறு - உப காரங்கொண்டு உபகாரஞ்செய்கை. எவன் - யாதென்றவாறு. முந் நீர்வரைப்பி னிருபாலவிப்பா னிருவிசும்பொழுக்கத்து ஒருதனித் திகிரிப் பதமிரண்டிலாப்பாகுடைப்பாகியின் முக்கட்செம்மலி னலாங் கடவுளிற் றிருக்குந்திசைவரு பிள்ளைகத்தி, நமன்றிசையெழுந்திற னிறும்பூதென்ன விருபிறப்பாளர்க்குறிட்டதெதிருப்பு முதலென்னாடிப் போற்றுவ கனிவாயினதத்திந்த நமறைப்பொருளா லெழுகடற்புவ னத்தெழுந்திறையொளிவர வுறுபொருளோடு னுயர்தமிழ்மொழியா லுலவகைப்பனுவல் முழுவுலகமுமளந்துவ னிருசெவிக் கமிர்தாமெனவினி தளித்த பேராண்மையி னுயிர்கட்கும் பிறந்திறந்துழலும் பிணிதவிர்த் தருள் ஞானபூரண! நாவீற! குருகாபுரிவரோதய! எதிராசனை யாண்ட விருசரணமுபயத் தென்னையுமொன்று யருள்புரிந்தாண்டதற் கென்பொருட்டாற் கைம்மாறவனீ கைக்கொண்டதுவே எனக்கூட்டுக.

மாத்திரைப்பெருக்கமாவது முன்புபோலவருஞ்சொற்களுள் முத லெழுத் தொருமாத்திரையேறப் பிறிதுபொருள்பயப்பது. அவ்வாறு இதனுள்வந்ததாவது:—எண்ணெனபது என்னும், இதனைக்கருதென் னும் வேறபொருளும், கெணிதமும் எனனும் மூன்றுபொருள்பயக்கும் பததினமுதலெழுததாய எகரததை யொருமாததிரைபெருகக ஏண் என்ன நிலையுடைமைபபொருளைககாட்டினவாறுகாணக.

முநதுதனிததன்மைமொழியையொடுபுணாநதிட
டநதமுதலபுள்ளியழிநதககாற—செநதேன
வழிநதமகிழததாரமாறன்வண்புலவீரசொலலி
யொழிநதவறறினபேராயுறும். (806)

இதுவு மாததிரைபபெருககம.

இதனுள, தனிததனமையெனபது யான. அதனை என் எனத் திரிதது, அதனை யிரணடாவதனைபபுணாததது, எனையென்றாககிப புளளியையழிகக ஏனையெனச சொலலியொழிநதனவாயபொருளைக் காட்டினவாறுகாணக திணை... துறை.. . ...

ஓராழிவையததுதயமபுரிநதுதினம
போராவிருடணிககும்பெறறியா—ரீராறு
தேசுறறநாமஞசிறநதோராபரிதியொடு
மாசறறெழுமாதவா (807)

இது ஒறறுபபெயாததல.

இதனுள மாதவா என்றுநின்றது மகரவொற்றைபபெயாகக ஆத வா என நின்றவாறுகாண்க. முதலேநின்றமொழியின்முதலெழுததி லொறறைபபெயாததலால ஒற்றுபபெயாததலாயிறறு. இ த னு ள் ஓராழிவையம - ஒபபறற சமுததிரஞசூழ்நதபூமி எனவும, ஒற்றை வணடிபூணடதோ எனவும, போராவிருடணிததல - தன்னைநினைநத வடி யாரிடதது எடுததசெனனநதோறுமவிடடுநீஙகாத அகவிருளையறுததல எனவும, உலகததைவிட்டுநீஙகாத அந்தகாரததையோட்டுதல எனவும், ஈராறுநாமம - கேசவாதிதுவாதசநாமம எனவும, தாதுருமுதலிய துவாதசாதித்தியநாமமெனவும, பரிதியொடும-சககரததோடும எனவும் விளக்கததோடும எனவும, மாசற்று ஆசற்று எனவும சிலேடை வாய்பாட்டான்வநதன. திணை... ... .துறை...... .

முந்தமாயன்பதியாய்முற்றியபேர்மூன்றெழுத்தில்
வந்தமுதலீறிசையாய்மறறிடையீ—றநதச
சுதரிசனததான் றுணைததாள்சூழ்சிலமபுள்ளீடாய்
வதரிவரிதரியாமாம. (808)

இது திரிபதாதி. இதனுள வதரியென்பது திருபபதி. அதனை முதலு மீறும வரியாகவி இடையுமீறுந தரியாகவி அவவாறுதல கண்டுகொள்க.

எநதைபிராமறகிமையோாசரணபுகுத
முநதநகரிமுதலெழுததிலலாநகரி
யுநதுதிரடகிள்ளையிடையொறறிலாநகிள்ளைகடோ
சிநதமுழுதுமிழுநதானறெசமுகனே. (809)

இது அககரசசுதகததிலோாபேதம.
மானவனுமேவலாமாறனிததமாமாலை
யானதவபோதனுமாயாய்நதகோ-மானவடி
நாதனின்மேனனகலனபூணௌனமுனநீவாநெதவனென்
றுதயமாவன்புலமாய. (810)

இது சதுரஙகபெநதம. இதனுள் நாலுபககமும மையஙக ளுன்கு பதினுறலைறயிலும நடுவி னலைறயிலும மாதவன் எனனுநதிரு நாமம நின்றவாறு கணடுகொளக

(இ - ள்) ஒனறுதயமா - சருவானமாககளோடுமபொருந்தாத நமனே! மானவனு-மனுகுலஙகாவலனுக. மேவலாமாறன-நஙகையாாக குங் காரியாாகரும புதகிரமோ நநதீராப புதகிரனும மாறனென்னும பிள்ளைத்திருநாமததைபுடையவன. நிததமாமாலை-அழிவிலலாத பெரிய பிராட்டியாருடன்கூடிய பெரியோனை ஆன-தனனிடத தாக்கமபெறற. தவபோதனுமா-மெயததவததினுலேகூடி ஞானவானுமாகி. ஆய்நத கோ-அவனேபரததுவமெனறுதெளிநத தெரிசனராசன். மானவடி - பெருமையையுடையதிருவடிகளை. நாதனின்மேல-எனதுநாவினிடத தும அதற்குமேலானசிரததினிடததும. நனகலன்பூண்-நலல ஆபரண மாகப்பூண்ட. என்முனநீவநதவன - எனமுன்னேவநது நீசாதிபப தெதுதான? ஒன்றுமிலலை. வனபுலமாய-எனனிடம நீவருதற கெளிய இடமன்று வலியஇடமாகபபட்டன,ஆதலா லுனககு வரபபோகாதென் றறிந்துகொள ளெனறவாறு. மேல-இடமபற்றிய ஆகுபெயர் திணை-வாகை. துறை - அறிவனவாகை.

கோலநிலமேலழகுகூடுநெடுவீடுறமா
மூலமெனச்சென்றுதவுமுன்னோனே—நீலமணி
வண்ணவடமலையாமாதவாகஞ்சமலாக
கண்ணசரணாகதி. (811)

இது கடகபெந்தம். நெடுவீடு-பாம்பதம். திணை-பாடாண். துறை-கடவுள்வணக்கம்.

நாகநகராகநிதிநாகரிகராகநிறை
யேகநாகநிபிணையிலலா—தாகநிகழ்
தென்னரங்களாயசீராளராஞான
நன்னரங்காகக்கேயடியேனன். (812)

இதுவும் கடகபெந்தம். ஆக மாத்திரைச்சுருக்கமுதற் கடகபெந்த மீறாகச் சித்திரகவியாறு மடைவேகாணக. திணை - ... ... துறை - சமயவணக்கம். (௪அ)

சித்திரகவிமுற்றும்

---

தருகாளமேகங்கவிராயராயன்சடையனன்பாற்
குருகாபுரேசர்புனையலங்காரங்குவலயத்தே
கருகாதசெஞ்சொலுரைவிரித்தான்கற்பகாடவிபோல்
வருகாரிரத்னகவிராயனபேரவரோதயனே.

சொல்லணியியலுரை முற்றும்.



ஸ்ரீ:

நான்காவது:

# எச்சவியலுரை.

300. மொழிந்ததைமொழிதன்மாறுபடுபொருண்மொழி
பிரிபொருட்சொற்றொடர்கவர்படுபொருண்மொழி
*நிரனிரைவழுவேயதிவழுச்சொல்வழுச்
சந்திவழுவொடுசெய்யுள்வழுவென
வந்தவொன்பதுமொருவழிக்கடிவழுவே.

என்பது சூத்திரம். இவ்வோத் தென்னபெயர்த்தோவெனின் எஞ்சி நின்றவழுவணிபுணர்த்தினமையான் எச்சவியலென்னும்பெயர்த்து. ஆயி னித்தலைச்சூத்திர மென்னுதலிற்றோவெனின் முன்னரோதப் பட்ட வணிபெறுஞ்செய்யுள்கட்குப் பொருந்தாதவழுக்களு ளொரு வழிக் கடியப்பட்டவழுக்களைத் தொகுத்துணர் - ற்று.

(இ - ள்) மொழிந்ததைமொழிதன்முதலாகச் செய்யுள்வழு விறுகச் சொல்லப்பட்டுத் தொன்றுதொட்டுவந்தவொன்பதுஞ் செய்யு ளகத்துவருமெனி லோரிடங்களிற் களையப்பட்ட வழுவாமென்றவாறு. வழி - இடம். ஓரிடங்களிற் களையப்படுமெனவே சிலவிடங்களில் வழு வமைதியாகக் களையப்படாதென்பதூஉமாயிற்று. அவையெல்லா மேற் காட்டுதும். (க)

301. அவற்றுள்,
பழியறவொருபொருண்மொழிபரியாய
மொழியொடுதொடர்வதுமொழிந்ததைமொழிதல்.

(எ - ன்) வைத்தமுறையானே மொழிந்ததைமொழிதலென் னும்வழுவாமா றுணர் - ற்று.

(இ - ள்) அங்ஙனந் தொகுத்துக்கூறப்பட்டவொன்பதுள், மொழிந்ததைமொழிதலென்னும்வழு ஒருபொருளைக்காட்டுநிலைமொழி யப்பொருளைக்காட்டும் பரியாயமொழியொடுதொடர்வதாமென்றவாறு.

* 309-ம் சூத்திரத்திலும், நிரனிரையென இடையினரகரவைகார ஈறான பாடங்கொண்டு நிரை - கூட்டமென வுரையெழுதப்பட்டிருக்கிறது.

உடுத்தாரகைபோன்றொளிர்மலர்ப்புன்னைக்
தடுத்தாள்விழிகடுத்தானன்பா—நடுத்தா
னிலையென்பதாகுமிணைமேருவாகு
முலையென்பனதேமொழி. (813)

இது மொழிந்ததைமொழிதல்

இதனுள் உடுத்தாரகைபோன்றொளிர்மலர் என்றதனு லவ்வா றாதல்காண்க. நடு - இடை. தேம் - தேன். அஃதேற் சொற்பின்வரு நிலையும் பொருட்பின்வருநிலையும் சொற்பொருட்பின்வருநிலையு மல் வாற்றலவோவெனின் அற்றன்று, அவற்றிற்குப் பொருள் வேறென்க. என்னையெனின், சொற்பின்வருநிலையென்பது மொழிந்தசொல்லே வரினும் பொருள்வேறுபடும். அது "மானைப்பொருகயற்கண்மானைப் புவனமட, மானைக்கமலமலர்மானை - மானை" என்பதனாலறிக. பொருட் பின்வருநிலையென்பது மொழிந்தபொருளேமொழியினும் சொல்வேறு பட்ட பொருளொன்றுவதோரலங்காரம். அது "மாய்த்தேன்சென னமவைத்ததேனெனவல்வினையைத், தேய்த்தேனறிவின்சிறுமைபினை" என்பன. சொற்பொருட்பின்வருநிலையென்பது சொல்லும் பொரு ளும் பெயர்த்து வேறுவேறாகிச் சொல்லொன்றாய்வருவது. அது "மாதர்மாதாகூர்வாளமருண்கணமானிலத்து, மாதாமாதாகூாவண்டிமி ரளியதாமரைப்பூ, மாதாமாதாகூா" எனவரும் (உ)

302. அதுவே,
சிறப்பினும்விரவினுஞ்சிலைதவின்றாகும்.

(எ - ன்) இதுவும் முன்பெய்திய திகந்துபடாமற்காக்கின்றது.

(இ - ள்) அங்ஙனமொருபொருண்மேற் பலசொல்வருதல் சிறப்பின்கண்ணும் விரவின்கண்ணுமவருமெனி லிலக்கணவழுவின்று மென்றவாறு. என்னை "ஒருபொருட்பன்மொழிசிறப்பினிலவழா" என்பதனாலறிக.

பூமிசைத்தாய்த்தோன்றுமழல்வெண்மதிவந்தாவிறைவா
யாமிசைப்பதொன்றுளதாயெய்யேமாற்—பூமிசைவாழ்
பொன்னங்கொடிநோய்புடைபெயர்போழ்துற்றுணர்ந்த
நின்னன்பிதுவானினைந்து. (814)

இது சிறப்பின்கண் ணொருபொருட்பன்மொழிவந்தது. கள்ளர் கள்ளர் பாம்புபாம்பு தீத்தீத்தீ போபோபோ விரைவின்கண் இரண்டும் மூன்று மொருபொருட்குவந்தன. என்னை? "அசைநிலைபொருணிலையிசைநிறைக்கொருசொ, லிரண்டுமூன்றுநான்கெல்லைமுறையடுக்கும்" என்பதனு லறிக. பொருணிலை, விரைவு வெகுளி யுவகை யச்சமவலமென்னு மைந்துபொருண்மைக்கண் ணுமவருமெனினும் இவை விரைவு. (௩)

303. பகர்ந்தமுன்மொழிப்பொருளொடுமுரண்பான்மையிற
புகன்றிடுமதுவேமாறுபடுபொருண்மொழி.

(எ - ன) மாறுபடுபொருண்மொழியாமாறுணா - றறு.

(இ - ள்) முன்னாமொழிந்தமொழிப்பொருளொடு மதனபின்னர்வருமொழிப்பொருள மாறுபடுபகுதியையுடைத்தாகக் கூறு மது மாறுபடுபொருண்மொழியாமென்றவாறு பின்னாவருமொழிப்பொருளென்பது எதிரமறையெச்சம.

முற்றவுரைத்தமுதுவேதநுட்பமெல்லாங
கற்றுணாந்துமெய்ஞ்ஞானங்கைக்கொண்டீர்—தெற்றெனவே
தத்துவங்கண்மூன்றினையுஞ்சந்தயந்தீர்ந்தினிமே
னித்தமநித்தநதெளியீர்நீ. (815)

இது மாறுபடுபொருண்மொழி. என்னை? இதனுள், முதுவேத நுட்பமெல்லாங் கற்றுணாந்துமெய்ஞ்ஞானங்கைக்கொண்டீர் என்று கூறி, தெற்றெனவே தத்துவங்கண்மூன்றினையுஞ்சந்தயந்தீரா என்றதனுன் மாறுபடுபொருண்மொழியாயிற்று. தெற்றென - தெளிய. தத்துவங்கண்மூன்றென்பன - சித்த தசித்த தீசுரம. (௪)

304. அச்சமுங்காமமுமகமிகினுரித்தே.

(எ - ன்) இதுவு மெய்தியதிகந்துபடாமற்காக்கின்றது.

(இ - ள்) அச்ச மகத்துமிகினுங் காம மகத்துமிகினு மவ்வாறுரைக்கப்படு மென்றவாறு. அகம் - உள்ளம். காமம் - விருப்பம்.

வாசமலர்மெல்லணைமேல்வைத்தாலுமணடழல்போற்
கூசுமலர்ச்சிற்றடிக்குக்கொற்றவா—நேசமது

நெஞ்சத்தடங்காத்தேரிழைநின்னோடுவரிற்
கஞ்சத்தடங்காண்கடம். (816)

இது காமப்பிரகிருதியான்வந்த மாறுபடுபொருண்மொழி. அச்சப்
பிரகிருதியானவருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க. (௬)

305\. உரியசொற்பலபொருளொன்றினென்றுதன
பிரிபொருட்சொற்றொடரெனும்பெயருடைத்தே.

(எ - ன) முறையானே பிரிபொருட்சொற்றொடரெனுமவழு
வாமாறுணா - ற்று.

(இ - ள்) செய்யுளகத்துப் புலவனாற்சோதத்தற்குரிய பலசொற்களினது பலபொருள்களுமொன்றினொடொன்று பொருந்தாதன வாகச்சொல்லப்பட்டது பிரிபொருட்சொற்றொடரெனும்பெயரினையுடைத்தென்றவாறு. எனவே வேறுவேறுநோக்கப் பொருளுடையனவாய்க் கூட்டிநோக்க வொருபொருளாகவுரைக்கப்படாதென்றவாறு. இதனுள் ஒன்றெனபது சொல்லெச்சம்.

கங்கைக்குக்கணிநெடுங்காதங்கஞ்சமலா
மங்கைக்குமாயோன்மணவாள—னங்கைக்கு
ளெட்டாவுறுப்புடலுள்யாதுமில்லைக்காமனைப
பட்டாணிரதிபதி. (817)

இது பிரிபொருட்சொற்றொடா. இதனுள், பலசொல்லுந் தனித்தனிநோக்கப் பொருளுடைத்தாய்க் கூட்டிநோக்கப் பொருளன்றுதல் கண்டுகொள்க. (௧)

306\. அதுவே,
கள்ளுண்மாந்தாபித்தரிற்கடிவரையில

(எ - ன) இதுவும் முன்பெய்திய திகந்துபடாமறகாக்கின்றது.

(இ - ள) முன்மொழிந்த பிரிபொருட்சொற்றொடா கள்ளுண்டு களித்தமாந்தாற கூறுமிடத்தினும் பித்தினன்மயங்கப்பட்டார் கூறுமிடத்தினும் வழுவென்றுநீக்கப்படாதென்றவாறு.

பெற்றபதிவானோர்பெருமான்புரந்தபதி
புறறரவின்பிள்ளைபுதன. (818)

இது களளுணடுமயங்கினானமொழிநதது. பிததாகூறுவனவும வந்தவழிககண்டுகொளக. வரையிலவெனனுது கடிவரையிலவென்ற தனால, பிள்ளைமையான்மொழிபுஙகானுமாம அஃதே லிககுறறங்க ளெலலாஞ செய்யுளுககேவருவனவாதலாற செய்யுட கிலக்கணங்கூறு நூலினுளன்றேபுணாததுவ தீண்டுரைததல பிறிதெடுததுரைததலென் னுஙகுறறமாமெனின,நனறுசொனனாய! அசசெயயுளெனபன சடடகம அலஙகாரமென விரணடாம; அவறறுள அலஙகாரமெனபன அச சட்டகததைப பொலிவுசெயவனவாமாதலாற செயயுடகுப பொலிவு செயவன வீணடு முறகூறியதன்பின்னரொழிபிற செயயுடகுப பொலி வழிவுசெயவன செயயுடகுவாராமறபுணாககவென வீண்டுரைககப பட்டதாதலாற பிறிதெடுததுரைததலெனனுஙகுறற மாகாதென றறிக.

307\. உவாபபறததுணிநதொருபொருள்குறிததுரைததசொற் கவாததிருபொருட்குறலகவாபடுபொருணமொழி.

(எ - ன) வைததமுறையானே கவாபடுபொருணமொழியாமா றுணா - றறு.

(இ - ள்) ஒருபொருளைககூற்றமறத்தெளிநதுட்கொண்டுரைதத சொறகுப பொருள் கவாததுப பிறிதுமொருபொருளைக்காட்டுவ தாகி யிரணடுபொருளைககாட்டுதல கவாபடுபொருண்மொழியென்னும வழுவாமெனறவாறு.

பறறறறிடுதிடததாறபறறியதேபறறியயன
மறறொனறுதன்னைமதியாதாங்—கொற்றமிகும
வேலவிடடெறிநதனையவெயயவிழிநோககததாய்
மாலவிட்டுநீங்காமனம. (819)

இது கவாபடுபொருணமொழி.

இதனுள, மாலவிடடுநீங்காமனம எனபது ஸ்ரீமந நாராயணனவிட்டு நீங்காதாமனமெனவும பிததுவிடடுநீஙகாதாமனமெனவும முதலே தெளிநதுகொண் டுரைததபொருளைககாட்டுவதுட னிருபொருட்குக் கவாததவாறுகாணக. பததாமேறசொலலுஙகாற பறறறறிடுதிடததா லென்பது அயனரன மண பெண் பொன னெனனுமாசைகளைவிட்டு

நீங்கிய வுண்மைஞானத்தால, என்பதாம். பற்றியதேபற்றி என்பது அநாதியாமியாகநின்ற அவனது சொரூபரூபகுணவிபூதியையுட் கொண்டு அதுவேதியானமாக என்பதாம். அயல் மற்றொன்று தன்னைமதியாதாம எனபது அவைநாலுமேயன்றி வேறொன்றினையு முடகொள்ளாதாமென்றவாறு. பிததாமேற்சொல்லுங்கால, பற்றிய தேபற்றி யயன்மற்றொன்றுதனனைமதியாதாம எனபது சான்றோர் தெருட்டத தெருளுறுது தான்பறறியதேபறறிகொணடு உண்மை யாக வொனறினையுமபறறுததாம என நின்று கவாததுகாண்க. (அ)

308. வசைபொருநதாவழிவரினதுமரபே.

(எ - ன்) மேற்சொன்ன கவாபபொருணமொழி வழுவலலவா மிட முணா - றறு.

(இ - ள்) அககவாபபொருண்மொழி குறறமபொருந்தாவிடத் துப பொதுபபடவுரைப்பின் வழுவனறு, இலககணமாமென்றவாறு.

> பரப்பமாகண்ணுட்கிடுமபைபாலிகருமென்றே
> னிரபபிடுமபையாககெதிர்சென்றீயா—நிரபபே
> பெருநிரபபெனகினறுய்பெருமானேயெண்ணி
> யிருநிதிகருபபோவேனெனல. (820)

இதனுள எனல எனனும அலலீறறுவியங்கோள, விதியும விலக்கு மாகநின்றும வழுவனறுயிறறு என்னை ? யா னவவணணங்கூறவு நீ யதனையுட்கொளளாயாககூறுகினறுய்; நினது திருவுள்ள மதுவேயாகு லிரண்டையு மனததாலெணணித துணிந தென்னுடனே பொருண் மேற்செலவேனெனறு கூறுதொழிவாயாக வெனவும, அதுவல்லது செலலததுணிநதாயெனில எமபெருமானே யிறைவியோடும நின் செலவை நீயேசென் றியான் பொருணமேறசெலவேனெனறுகூறுவா யாகவெனவும இரண்டாய கவாபபொருண்மொழி விதியினும விலக கினும் குற்றமலலவாயிறறு. பகுதி - பொருள்வயிறபிரிதல். துறை - நின்செலவை நீயேகூறெனறல. (க)

309. முன்னரெண்ணிறகுமொழிமாற்றிகொளப
பின்னரெண்ணிரலபிறழுவதுநிரனிரைவழு.

(எ - ன்) வைததமுறையே நிரனிரைவழுவாமாறுணர் - ற்று.

(இ - ள்) செய்யுளகத்து முன்னரெண்ணப்பட்ட பெயர்வினைக ளானமுறைதனக்கு மொழிமாற்றிக்கொள்ளுமபடிக் கதன்பின்னரெண் ணப்பட்டுவரும் பெயர்வினைகள் முறைபிறழவைக்கப்படுமது நிரனிரை வழுவாமென்றவாறு. பெயர்வினையென்பது சொலலெசசம. நிரல் - முறை. நிரை - கூட்டம. பிறழ்தல - தானமாறுதல.

கலவமயிலசாபஙகழுநீர்குமுத
மிலவநுதலசாயலிதழ்வா—யுலவுவிழி
நண்பாபொனஙகொடிதானண்ணுமிடநாவீறன
பண்பாதுடரியிலோர்பால். (821)

எனவரும. இதனுள, மயில சாபங கழுநீா குமுதமென முதலே யெண்ணப்பட்டபெயாமுறைதனக்குப பினனா இயல நுதல நோக்கம வாய் என்னாது, நுதல சாயல வாய் நோககமென முறைபிறழவைததமையா னிரனிரைவழுவாயிறறு. (௧௦)

310. உய்த்துணரிடமெனி லுரிமையுடைத்தே.

(எ - ன்) அமமுறைபிறழ்சசி யாமாறுணா - த்று.

(இ - ள்) அங்ஙனஞசொலலப்பட்ட முறைபிறழ்சசி உய்ததுக கொண்டுணரபபடுந்தானமாகில வழுவன்றெனறுகொள்ளு மிலக்கண முறைமையுடைத்தெனறவாறு. அங்ஙனஞசொலலபபட்ட முறை பிறழ்சசியென்பது அதிகாரநோககததா லெசசமாகவிரிந்தது.

மநதன்கதிாமழைககோளவானோாகுருமேதை
யிநதுநிலமகனபாமபெனபவறறுட—பைநதொடியாய்
தேறுமிடைநானகுநதெரிசுபககோளேனையவாயக
கூறியவைபாவககோள். (822)

எனவரும. இதனுள உய்ததுணாநதுகொள்ளப பிழையாமல வைத்தவிடமாவன ' மநதனமுதலாகப பாமபீறாக வடைவேயெண்ணி, மழைக்கோள வானோாகுரு மேதை யிநது வென்னு மிடைபபட்ட நான்குஞ் சுபக்கோளெனறும, மநதன் கதிா நிலமகன பாமபு என முத லினு மீறறினுநின்ற நானகும பாவககோளென்று முயததுணரவைதத வாறு கண்டுகொள்க. பாமபு - சாதியேகவசனம. (௧௧)

311. நசைதீர்யதிவழுநாடிகிலோசை
யிசைதரநிகழாதிழுககுவதாகும.

(எ - ன்) முறையே அறிவழுவாமாறுணர் - ற்று.

(இ - ள்) விரும்பப்படாத அறிவழுவெனப்படுவதனை யாராயுங்காலத்துச் செய்யுட்கமைத்த புணர்ச்சியிசைபொருந்துவதாய்க்கூடாது மரபு வழுவுவதாமென்றவாறு.

பார்க்கும்பொழுதுநிலம்பார்த்துப்பார்வையையா
நீக்கும்பொழுதுநிலம்பார் — நோக்கு
வடைவடைவேவந்தவவற்றுண்முதனோக்கந்
தடையறியாமவாழ்வதற்கோர்சார்பு. (823)

இதனுள், நோக்கடைவடைவேவந்தவென்புழி நோக்குவடை வடைவேவந்தவெனச் சொற்கூடாத் தொடுத்திசைத்தது வழுவாயிற்று. (௧௨)

312. அதுவே,
வழுவின்றாகுமெனல்வகையுளிக்காகும்.

(எ - ன்) மேலெய்தியதிகந்துபடாமற்காக்கின்றது.

(இ - ள்) அங்ஙனம் வரப்பட்டவறிவழு வழுவில்லையென்று சொல்லப்படுவது வகையுளியாகச்சேர்த்துக்கொள்ளுமிடத்துக் குற்றமில்லையாமென்றவாறு.

வாளிவேல்சேலாமதர்நோக்கமேருமலை
வேளினடலவிறப்போனமிளிருந்த — லாளிநிகர்
காவலவனுற்றலதுகாய்ந்தகனிவாய்ப்பவளம்
யாவருணர்வுட்காதிவட்கு. (824)

இதனுள் வகையுளிசேர்த்தேகொள்ளக் குற்றமின்றாயிற்று. துறை-குறிவழிச்சென்றபாங்கன் றலைவனைவியத்தல். (௧௩)

313. திணைமுதலாகச்செப்பியவழுவினொன்
றணைதருமாயினுமதுசொல்வழுவே.

(எ - ன்) முறையே சொல்வழுவாமாறுணர் - ற்று.

(இ - ள்) திணைமுதலாகச் சொல்லப்பட்ட சொல்வழுவேழி னுள்ளும் பலவேயன்றி யொருவழுச் செய்யுளகத்துப்பொருந்துமாயினு மது சொல்வழுவா மென்றவாறு.

அருட்குணத்துக்கூடாதென்றுய்ந்துரைத்தபின்னும்
பொருட்ககலவலென்றேபுகன்றீர்—மருட்கைமிகுங்
கொன்னுனைவேலபோனறவிழிக்கோதைபொருட்டாற்குறித்திங்
கென்னுனையான்சொலவேனினி. (825)

இதனுள், புகனறீரென்ற வுபசாரபபன்மைக் கென்னுமையான் சொலவே னெனனுது என்னுனையான்சொலவேனென்றதனுற் பால வழுவாயிற்று. (கச)

314. மரூஉக்கட்டுரைசசொலின்வழுவினறவே.

(எ - ன்) சிறபானமை கடியபபடாதென்ப துணர் - ற்று.

(இ - ள்) அசசொலவழு மரூஉமொழியாய்வருங கட்டுரைச சொலலோடுங்கூடிவருமெனின வழுவிலலையாமெனறவாறு.

மன்றலகமழுமலைநாட்டுமவண்டமிழ்தேர்
நன்றிபயிலபாண்டிநாடடகததுமம—வென்றிபயில
சோணாடடகததுந்துயின்மாயனைததுதிப்பார
காணாபிறவிககடல. (826)

இதனுள், மலையமானுடென்பது மலைநாடெனறும, பாண்டியனு டென்பது பாண்டிநாடென்றும, சோழனுடென்பது சோணாடென் றும் மருவா யடிபபடவநதவழககாறறலவநது வழுவினறாயிறறு. துறை- கடவுள்வாழ்த்து. (கடு)

315. ஆறறலசாலெழுததினுளமைததசந்தியின்வகை
மாற்றமதுறவழுவுதலசநதிவழுவே.

(எ - ன்) வைததமுறையானே சந்திவழுவாமா றுணர் - ற்று.

(இ - ள்) பெருமைமயொடுகூடிய வெழுத்திலக்கணத்தினுள விதிக்கப்பட்ட சந்திகளின்கூறுபாடு நூலகூறிய கூறுபாட்டான் வாராது செய்யுளகத்துவழுவுதல் சந்திவழுவென்னுங்குறறமாமென்ற வாறு.

பொய்யில்பொருண்மேறபுரிநதினிநீபோகிலிவண்
மெய்யிலெழினலமும்வேறுபோக்—தொய்யிலுறுத
தோள்டைங்கழையெனலாந்தொல்கவின்போகத்துயில்போம
வாள்கணணிணைக்கெழுதாண்மை. (827)

இதனுள் வாள்போன்றகண்ணிணை வாட்கண்ணிணையென "ளள வேற்றுமையிறறடவுமல்வழி, யவமுன்றேடுறழ்வும்வலிவரினும்" என்னுஞ்சூத்திரத்தான், ளகாரம் டகாரமாக மெய்பிறிதாகமுடியற்பால வழி வாள்கண்ணிணையென வியல்பாய் முடிந்தமையாற் சந்திவழுவாயிற்று. (கசு)

316. ஐயெனுருபுதொகினஃதியல்பாம.

(எ - ன்) அத்திரிபு திரியாது இயல்பாமிடமுணா - ற்று.

(இ - ள்) இரண்டாமவேற்றுமைத்தொகைபுணர்ச்சியில் வல்லெழுத்துமுதனமொழிவந்துழித் திரியா தியல்பாயமுடியவும்பெறுமென்றவாறு.

அஞ்சொன்மடவாயரகைத்தமுதமெனு
மஞ்சணையசெவவிமழைவணணன்—கஞ்சமலாத
தாளகணடாாமாரனறனககிலககாணுற்றுளபத
தோள்கணடாரெனபடாாசொல். (828)

இதனுள், தாளகண்டாா தோளகணடாரென "இயறகைமருங்கினியறகைதோன்றலு, மெய்பிறிதாகிடததியறகையாதலும்" என்பதனு லியல்பாய்முடிந்தன. திணை - பெணபாறகூற்றுகளைக்கிளை. துறை......... (கஎ)

317. பழுதறபபகர்ந்தபாடடினதியலபு
வழுவுதலசெய்யுள்வழுவெனமொழிப

(எ - ன) செய்யுள்வழுவாமாறுணர் - ற்று.

(இ - ள்) அகத்தியன்முதலோா செய்யுளியலுட் குறறமறப பகர்ந்த செய்யுளிலக்கணத்தோடுகூடாது வழுவுமபகுதியாய்வருதல் செய்யுள்வழுவென்றுகூறுவர் பெரியோரென்றவாறு.

முல்லைவெண்ணகைமொய்குழலுமர்வாழ்
மல்லன்மால்வரைக்கெமர்வரைநல்வினையாற்
கூடலருண்மங்கையரைக்கூடிப்பிரிந்துவருந்
தாடவர்க்குவேள்போன்றணித்து. (829)

இது ஆசிரியமுதல்வந்து வெண்பாவாய்முடிந்தது. அவ்வாறு முடிதற் கோத்திலாமையால் வழுவாயிற்று. பகுதி - இயற்கை. துறை - இடமணித்துக்கூறிவற்புறுத்தல் (கரு)

318. தவமுறுபவரவர்போலுணர்சாற்றலு
ணவமுறப்புனைசெயுணடைநவையிலவே.

(எ - ன்) மேற்சொல்லப்பட்ட செய்யுள்வழுச் சிறுபான்மை யொரோவிடங்களுள வருவனவுளவாமென்று வழுவமைப்புணர்-ற்று.

(இ - ள்) தவசரிதையெய்தும்திருநடிகளும் அவர்போலவாருமாகிய முற்றவுணர்ந்த மூதறிவுடைய புலவோரா னவமாகப்பாடப்படுவனவாஞ்செய்யுணடை யாசிரியராலநீக்கப்படுங்குற்றமில்லையாமென்றவாறு.

நாராயணனேநமவென்றுரைப்பவர்பால்
வாராதொருநாளுமவல்வினைதான்
சாராதொருதலையாய்த்தண்டதரனசாரவாம
போதமாயப்பிறப்பு (830)

இது சவலைவெண்பாட்டு, என்னை? இதனுள் முதலே காசு நாள் மலர் பிறப்பு என்னும் வாய்பாட்டாவிறுதி மூவகைச்சீராயிற்ற குறள்வெண்பாவா யதன்பின்னரும்பிறப்பென்னுமவாய்பாட்டாவிற்ற குறள்வெண்பாவாய்த் தனிச்சொலின்றிமுடிந்தமையா லெனவறிக. இதற்கு முன்னோர்கூறியசூத்திரமயாதோவெனின் "தனியிருகுறளாய் நான்கடியுடைத்தாய்த், தனிவரவில்லதுசவலைவெண்பாட்டே" என்பதெனவுணர்க. அன்றியும், "அட்டாலும்பாலசுவையிற்குன்றாதளவளாய், நட்டாலுநண்பல்லார்நண்பல்லர், கெட்டாலுமேன்மக்கண் மேன்மக்களேசங்கு, சுட்டாலும்வெண்மைதரும்" என்னுஞ்செய்யுளானு முணர்க.

எனவே மொழிந்ததைமொழிதன்முதலாகச் செய்யுள்வழுவீறாகச்சொல்லப்பட்டவொன்பதும் பொதுவகையான்வழுவெனக்கூறியவற்றைத் தனிதனி விதிசூத்திரத்தா னிவ்வாறுவரின் வழுவென விதித்துச் சிறப்புவிதியா னிவ்வாறுவரின வழுவமைதியாமென்றவாறாயிற்று. (கசு)

319. உலகிடங்காலங்கலையேநியாய
மாகமமலைவென்றுறொருவகையுள.

(எ - ன) இதுவு மொருவகைவழுவாமாறுணா - றறு.

(இ - ள) உலகமலைவு மிடமலைவுங காலமலைவுங் கலைமலைவுமநியாயமலைவு மாகமமலைவு மெனறுகூறபபடுவனவா மொருவகைமலைவு மாறுளவாமென்றவாறு. ஏகார மீற்றசை. மலைவெனபதனையிறுதிவிளககாக வெங்குமொட்டுக மலைவெனபது மாறுபடுதல். எனவே யவையு மொருவகைவழுவாயிறறு. அஃதேல் ஒழிந்த வழுவுணாததுமாறெடுதத தொகைசசூததிரததுளொருவகைபபட்டபதினைநதெனககூறுது இருவகைததாகப பிரிததுககூறியவா றென்னையோவெனின முனனரொன்பதுங் குறறமாதல பெரும்பான்மையாயச சிறுபானமை பொரோவிடததுக குணமாதலுமுடையவென்றுரைக்கபபடும,பினனராறும வருதலையாகவேகுறறமாயப பொருநதுமிடததுப புனைநதுரைவகையா னனபுலவராற சிறுபானமைமொழியபபடுமெனப தறிவிததறகுககூறியவாறென வுணாக (௨0)

320. ஒழுக்கநடையேயுலகமதாகும

(எ - ன) வைததமுறையானே உலகமலைவாமாறுணர் - ற்று.

( இ - ள் ) அவவாறனுள், பெரியோராலெடுததுவழங்குமொழுக்கநடையே யுலகமெனறுகூறபபடுவதா மெனறவாறு. எனவே உலகமெனபது மககணமேலு நிலததின்மேலு மொழுக்கததின்மேலுநிறகும பலபொருளொருசொலலாதலா னிவவிடத தொழுககததையேகோடற குலகெனறெடுக்கபபட்டது. அவ்வொழுகக மெல்லாருமஅறிவுறககிடநதமையா னினையதென றெடுததுரைக்கவேண்டுவதிலலை. அது மலைதலென்பது உலகததொழுகலாற்றோடு மாறுபட்டவொழுக்கநிகழ்வதாகக் கூறுதல்.

பூமிநடுநின்றுபுணரியேழுநதாவி
நேமிவரைதனினோநினறமரா—கோமகிழவுற
றுணட-துறககமதைபபார்ததவனிபோதுமென
மீண்டவனிவ்வேநதர்க்குவேநது. (831)

எனவரும. இதனுள் ஒருதீவினுளவேந்த னெழுதீவையு மெழுகடலையு மேழ்பூமியையுங கடககபபாய்நது,சககரவாளகிரியி னிமிர்ந்து

நின்று, தேவர்கோனாகிய விந்திரன் களித் தாண்டிருக்குந் தேவலோகத்தைவிட்டிடப்பார்த்தது தனக்கும் பூலோகமொன்றுமாண்டிருப்பதேபோதுமென மீண்டுவந்தவனுக்கு மிந்தவேந்தர்க்குவேந்தனென்று மாறுபடக்கூறினமையா னுலகமல்லவாயிற்று. (௨௧)

321. இடமதுமலைநாடியாறெனமூன்றே.

(எ - ன்) வைத்தமுறையானே இடமென்பதனை விரித்துணர்-ற்று.

(இ - ள்) இடமென வொன்றாய்நின்றவது மலையும் நாடும் யாறுமென மூன்றுமென்றவாறு. மலையென்பன: பொதியமு மிமயமு முதலாயின. நாடென்பன பதினெண்பாடைக்குமுரியநிலங்கள். யாறென்பன: கங்கையும் பொருநையுங் காவிரியுமுதலாயின. இவற்றுள் ஒன்றினுக்குரியவாகச்சொன்னபொருள் பிறிதொன்றனுக்குரியவாகச்சொல்லுதல வழுவாம். அவை,

காரகிலும்பொன்னுங்கவினசெய்மலயத்தினிறபெண
ணாரமுதினமெல்லடிகட்கையனே—பாரபரலாய்ச்
செந்தழல்பாரித்தகடலும்செப்பினசுமப்பூரிமயச
சந்தனச்சோலைத்தடமாந்தான (832)

எனவும்,

பருவமாமழையுகுபஃறுளிதிரண்டுநீ
ரருவிபாடிமிழவளனமாசிலமபாநின
னறைகழலபணிந்தெழுகலிங்கத்தரசா
திறைதருகலினத்திரளவாமபரிகளு
மாளுவராரியர்மராட்டராசோனகரெமை
யாளுகவெனத்தாழ்ந்தருள்கடாக்களிறறுட
னறக்கழிவினராயருளுசமததெதிரந்து
புறக்கொடைபுரிந்தோர்புரந்தனனகர்களுங்
கங்கையுளவலமபுரிகான்றவெணடரளமுந
துங்கவண்பொருநைத்துறையுணமாமணிகளு

பெணணியலபெருக்கியபேரமுதாமெனத
திருமகளாமெனச்சிறந்தவள்
வருமுலைக்கெவனீவிலைவழங்குவதே. (833)

எனவும் வரும். இவற்றுள் இமயத்திற்குரியன பொதியிலகத்துள வாகவும பொதியிலகத்துளவானவை யிமயத்துளவாகவும்புணர்த்த மலையிடமலலவாயிற்று. தணபொருனைக்குரியன கங்கையொடுபுணர்த் தும் கங்கைக்குரியன தணபொருனையொடுபுணாதது மாற்றிடமல வாயிற்று. மாளுவ மாரியமுதலாயினவற்றிறகுரிய கலிங்கததொடு புணர்த்தும் கலிங்கததிறகுரிய மாளுவ மாரியமுதலியவற்றொடு புணர்ததும நாட்டிடமலலவாயிற்று. (௨௨)

322. சிறுபொழுதொடுபெருமபொழுதெனக்கால
மறுவகைததாமெனவறைநதனாபுலவா.

(எ - ன) காலமாமாறு மதனபகுதியு முணா - றறு.

(இ-ள) காலம, சிறுபொழுதுடன பெரும்பொழுதென விரண்டு கூறு யொரோவொன றறுவகைததாமென று ஆசிரியாகூறினு ரென்ற வாறு. அவற்றுள, சிறுபொழுது: விடியல் உச்சி எறபாடு மாலை யாமம வைகறை என ஆறு பெருமபொழுது: கார கூதிர முன்பனி பின்பனி இளவேனில வேனில என ஆறுமாம. அவற்றொடு மலைத லாவது: ஒனறறகுரிய பூவும புளளும பொழுதுந தொழிலும் வே றொன்றிறகுரியவாகப புணாததுரைபபது.

உம்மையினிரநதோரக்கொனறீயாதோ
ரிமமையின்வறுமையெனபவற்றினுககிடமென
விரபபவராயிலமெனவிசைததறகெதிர
புரபபவரிலமெனபபுகலும்வெவவுரையினு
நிரபபெவனெனநிகழ்ததுதனிமிததமதாய்க
கரபபுரையிஃதெனககலுழ்நதகணணீரினை த
தடுபபவாபோற்றுயிலையுநதடுததிருகையி
னெடுத்தணைத்தினையலெனறெனையுமவறபுறுததிப
போரவேலவாதாமபோமுனங்குறிதத
கார்காலததினிறகார்வருமாலையிற
குயிற்குலங்காமாகூகூவெனுநிலை
வெயிறகுலமெனவிருள்வெருளவெண்ணிலவெழப
புரவலர்முகமபோறபொறபுமிக்கதுவா
யிரவலர்தாமரையேமகனமலரே

நின்னிற்பிரியலன்பிரியினுற்றலனெனு
மன்னர்பொய்ம்மொழியினுமடங்கலுமடங்கலுஞ்
சுடுஞ்சுடுநதொடாநதுமனனுயிரை
யடுநகொடுமையவெனுமவாறிலலரே. (834)

எனவரும. இதனுள் வேனிறகாலததிறகுரியகுயிலைக கார்காலத் துடனபுணர்ததும, பகனமலாதாமரையை யிரவுமலர்நததாகப்புணர்த் தும், பெரும்பொழுதுஞ சிறுபொழுதுமாகிய விரண்டுகாலமு மலை வாயிறறு. (உஙு)

323. பொருளுமின்பமுமபுணர்பொருட்டாகிய நூ
லருளுமெணணுனகிரடடியகலையதுவே

(எ - ன) பொதுவகையாற கலைக ளினனதுகருநகருவியாய்த் தோனறுமெனபதூஉ மவறறதுதொகையு முணர் - றறு.

(இ - ள) கலையெனறுசொலலபபடடவது பொருளு மின்பமு மெய்துதறகேதுவாய வேதமுதலியநூலகளுடகூறபபடட வறுபதது நாலாமெனறவாறு. ஏகார மீறறசை. அவறறுடமெலைதலாவது அவவந்நூலகளுடகூறியபடிகூறுது பிறழக்கூறுதல.

நாணமில்செய்கைநாடகக்கணிகையர்
மாணமரபினிலொருவனிதைதன்மைந்தாக்
குறறவெணணிரணடோனுங்கியவுருவம
பெறறவநநிலைததணடியமபிடிததனளா
யாடலுமபாடலுமமைமிலனகொளுதத
நீடலிலயணமொனறினினிரபபினளாயட
படிபுரநதருளுமபாததிபன்முன்னர்க்
கடியரஙகேறறியகாலையிறபிணடியிற
பிணையலுஙகளையாள்பிணையலிறபிணடியு
மணைதரல்களையாதாடலுந்தாள
மெய்யிற்பயிலவுமேதகவுடையிசை
கையிறபயிலவுங்காலியலபயிலவு
நடிததளணடததுட னுதமுமுனனூல
வடிததிடுபானமையினமலைததிடநடததின
ளாடல்சான்றோரவருடன்
பாடல்சான்றோபயிலவைககளததே. (835)

இதனுள் ஐயாண்டிற றண்டியமபிடித்து ஏழாண்டியற்றிப் பன்னீ ராண்டினி லவையரங்கேறினுனென்னுது மைந்தர்க் கிந்திரியகளின முறுவதென்றுவிசாரிக்கபபட்ட பதினுறுமாணடிற றண்டியமபிடித்து ஆடலும பாடலு முறறக்கலலாவாசானு னவை யோரயணத்தின் முறறக்கறறனனாயக் கடியரங்கேறினனெனவுங் கூறியதன்மேல் ஓறறையிறசெய்தகைதசொழி லிரட்டையிறபுகாமலு மிரட்டையிற் செய்தகைத்தொழி லொறறையிறபுகாமலுங் கைகதசொழிலகாட்டாது மலையககாட்டினுனெனவும, இசையைய மெய்யினு மியலைக் கையினுந் தாளததைப பாததிதினுங்காட்டாது மயஙகாகடிததனனெனவும, அவடானே பின்னொருநாள நாதமும நூல்சொனனபடிநடத்தாது பிறழநடததினனெனவுங் கூறினமையானுங் கலைமலைவாயிறறு. கலை யென்பது விததை. இசையைப பிறழநடததினுனெனபது கினறநரம் பிற கைந்தாவது கிளையாதலா னகனைப பகையெனறும, ஆறுவது பகையாதலா னதனைக கிளையெனறும, நானகாவது நட்பாதலா னதனை யினையெனறும இரண்டாவதனைததொடுததல என்னை? “ ஐந்தாநரமபிறபகைவிரவாதாறுகி, வநதகிளைகொள்ளநானகாகி - முந்தை, யிணைகொண்டயாழெழுவுமேநதிழைதனனுவித, துணைவன் புகழேதொடுதது” எனத தெணடி எசசவியலிறகூறியவதனுலறிக. அஃதேல் இநநூலுடகூறிய தொனிக்குத தெணடிகூறியவுதாரணமே யுதாரணமாகக்காட்டியவா றெனனையெனின இநநூற கது முதனூ லாயதாற்காட்டியதெனவுணர்க அவடானே பின்னொருநாளென்பது சொலலெசசம. அஃதனறித தோரியமடந்தை யவளாடியவவைக் களத தங்ஙனம்பாடினுனெனினுமாம. தோரியமடநதையாவாள் ஆடிச்செலவைததவளா யஙஙன மாடினவளகாலுககுப பாடினவள்.

324\. அளவையினுயபல்பொருட்கமைவினைத்திற
முளமுறமதித்துரைபபதுவேநியாயம்.

(எ - ன்) நியாயமாமாறுணர் - ற்று.

(இ - ள்) ஒரோகாரணங்களா லுலகத்துண்டாயபொருள்கட் கமைக்கப்பட்ட வினையினதுகூறுபாட்டைக் காட்சிமுதலாய நால் வகையளவைகளாற குறிததுக் கேட்டோருளததுறுமபடி யுரைப்பது நியாயமாமென்றவாறு. அவை யறுவகைபபட்டசமயங்களோடுங் கூடிய வுலகததுப்பொருள்களினது தோறறமு மழிவு மின்வகைய

வென்றுகூறுதல். அவற்றை யவரவர்கூறியவாறுகூறாது மாறுபாடாக வுரைத்தல் மலைதலேயாம். அது,

அன்றாலிலைததுயின்றவச்சுதனையலலாது
பொன்றுபபொருளெடபுவியிலுள்ள—தென்றான்
றனதகத்தாயெவ்வுலகுநதானடககிக்கொண்ட
புனலகத்தாய்நீநதம்புயன். (836)

எனவரும. இதனுள ஆதிபபிரமகறபாநததநிற சகலகடவுளருஞ் சகலான்மாக்களுமழியச் சகலானமாக்களையு மகிலாணடகோடிகளையுந் திருவுரத்தடக்கி யழிவிலாதிருந்தது ஸ்ரீமநநாராயணனென்று மார்க்கண்டயனுரைததா னெனறபாலதனைப புனலகததாய்நீந்தும்பிரமா வுரைத்தானென்றமையான் நியாயமலைவாயிறறு. அசசுதன் - அழிவிலாதான். அக்காலததுப புனலகததாய் நீநதிக்கணடது மார்க்கண்டயன். ஒழிநதனவு மிவவாறேயொடடிககொள்க. (உ௫)

325. அறம்பகர்மனுமுதலாயினவாகமம.

(எ - ன்) ஆகமமாமாறுணா - றறு.

(இ - ள) அறததினதுமாாககததைக்கூறுநின்ற மனுமுதலாய பதினெணவகை யறநூலுமே யாகமமாமெனறவாறு. அவற்றொடு மலைவாவது: இன்னு ரினனதுசெய்த லற மெனறுவிதிக்கபபடடவிதி யிறபிறழவருவது. அது,

ஓடடினொடுமபொன்னை யொருநிலையாயுடகோடல்
வீட்டினதின்பத்தைமிகவிருமப—லேடடிருண்மென
கூந்தலாரினபமதுட்கொள்ளாமையில்லறத்திற்
றோய்ந்துளார்க்குண்டாஞசுகம. (837)

எ ன வ ரு ம். இதனுள், துறவறமபூண்டார்தொழிலை யில்லறம் புரிந்காரோடுபுணர்த்தலையா னாகமமலைவாயிற்று (உ௬)

326. நாவலர்நாடகவழக்கினுணயந்து
மூவிருமலைவுமொழிவதறகுரிய.

(எ - ன்) எய்திய திகந்துபடாமற்காக்கின்றது.

(இ - ள்) மேறகூறிய வாறுவகைவழுவு நாடகவழக்கத்தாற் கூறுங்கால் நாவலர்க்குரியவாகக்கொள்வதாமென்றவாறு. நாடக வழக்கென்பது “நாடகவழக்கினுமுலகியலவழக்கினும், பாடல்சான்ற

புலனெறிவழக்கம்" எனத் தொலகாப்பியததுரைக்கப்பட்டமூன்ற னுள்ளு முதல்வழக்கு. அஃதாவது இல்பொருளாய்ப புகழ்ச்சி யிடததுபபுனைந்தவுரையாயததோனறுவது. என அவவாறு புகழ்ச்சி யிடததுநீககப்படாவலஙகாரமாயே வருமெனபதாம. அவைவரு மாறு:—

மேலைமலையிறபுகுதுமாதவனைநிறறியென
மீளவருவிததுலகன்வாய
மாலைமதியததினுடனேடேகியமிபபனுரு
மாறிவருவிபபனிமையோ
ராலயநிலததிவென்வேலைவலயததையவ
ளுகவுமமைபபனழகார்
சோலைமலையிறகுடிகோளாதியைநிகர்ததசெதாரு
சோதியைவிதிபபனெனிதே (838)

இதனுள, சமபிரதமாதலி னுலகமலைவுபபொருள்வநதும அலங் காரவழுவின்மையாயிறறு. இநதிரசாலமெனபது மிது.

காழகிறபொழிலுஞசநதனபபொழிலுங்
கமழநறுஞசணபகபபொழிலுங்
கோழரைககமுகுநாளிகேரமுமபொழ
கோஙகுமவேங்கையுமலர்ககுருந்து
மாழையஞ்சுளைமுடபுறககனிபபலவு
மாவுநாகமுமபுனைமருதுந
தாழையுமக்முமவாழையுங்கருமபுந
தனிததனிதழைததெமமருங்கும. (839)

இது தணபொருளையுண மலையிரணடிறகும் பிறநிலங்கட்குமுரிய அகிலுஞ் சநதனமுங் கோஙகும வேங்கையுங் குருநதும புனனையும் வந திடமலைவாயும புகழச்சியிட ததப் பொருநதின அலங்கார மாயிற்று.

காவியங்கண்ணியர்காலையின்மலர்கொய
வாவியுட்குறுகலும்வதனமண்டலத்தினை
மதியெனசசெழுந்தாமரைமலாகுவிதரப்
புதியதண்புனல்படிந்திடபபுகுமாலையி

லாடவர்முகத்தையுமருணேதயமென
வேடவிழாம்பலினத்தொடுமுகிழ்க்கும
பாடல்சான்மருதப்பார்ததிபர்தலைவ
பொழுதுமாறுதனின்புலக்கருபபொருட்கு
முழுதுமுணமையதான்மொழிபலகிளைததெவன
புலநதெவனபொதுவுணின்மார்வங
கலந்தெவன்றீணடலெலஙகாமர்மெலலணையே. (840)

இதனுள் மாலையிறகுவியுங கமலங் காலையிற குவிநததாகவும், காலையிற குவியும் ஆமபல மாலையிறகுவிநததாகவுங்கூறியது காலமலலவாயினுமபுணேந்துரைவகையா னலங்காரமாயிறறு. பகுதி-பரத்தையிற்பிரிதல. துறை - பளளியிடததூடல

வெயிலுழைநதறியாபபணைமரசசெறிவுள்
வெறிவரிவண்டினமிரைததுப்
பயினமுகையவிழ்நதுபணிறறுதெண்ணறவைப
பருவமாமழைபபெயலெனவே
குயிலடங்கலுநதாமபொதுமபருளொளிப்பக்
குறிபபொடுமவெளிபபடவிருந்து
மயிலடங்கலுந்தாமகவலுங்களிபப
வருந்தனீமதர்மழைககண்ணாய். (841)

இதனுள், கார்க்குரியன வேனிறகுபபுணர்த்தும் புணேந்துரை வகையா னலங்காரமாயிறறு.

செறியுமிற்றெருரும்புனன்மலர்முதலியசிறபபின்
குறியமநதிரததமைநதளவுறுபபினிற்கொடுபோழ்
தறிவிழந்தவைமுறைதடுமாறினுமவையே
நெறியவாயிறையுட்கொளநிறைக்குநன்னீரார். (842)

இது கலைமலவாயினும் புணேநதுரைவகையா லலங்காரமாயிற்று.

வண்டுலவுந்தண்டுளபப்பெமமானேயனைத்துயிர்க்கும்வசதியாய வணடரண்டபகிரண்டமகத்தடக்குமுழுமுதனீயாயிற்றென்றூற் பண்டுலகமனைத்தையுமோராடலெயிற்றுவிடநதளந்தபான்மையல்லா துண்டுமிழ்ந்தபடியயல்கணடிருந்தவராரெவணிருந்தன்றுண்டவாறே.

இதீ நியாயமலவாயினும் புணேந்துரைவகையா லலங்காரமாயிற்று.

*இறந்தபல்சென னத்திழைத்த தீவினைநின்
றிடங்கொள்புல்லறிவினரேனுஞ்
சிறந்தவாநகரத்தினியொருபிறவி
சிறக்கவிங்கெனக்கெனத்தியானம
பிறநதவனுதித்தோாவினையுமபபொழுதே
பிறக்கிடுமவரையெனறாத
ாறநதவாவுலகததிருததுவர்நமனுக்
கழலகததலைமைபபாகககணததே. (844)

இது ஆகமமலைவாயினும புனைநதுரைவகைபா லலங்காரமாயிற்று.

327. ஆறெனத்தொகைவகையினிலவிரித்தவற்றைத்
தேறமெய்பொருநானெனதெரிசெய்யுளும்
பாகமோாமூன்றுமபயில்குணமபதது
மாகவெண்ணனகிரடடியபொருளணியு
மடிமொழியெழுததினடுக்கினவாக
முடிவுறவகுததமூவகைமடக்கு
மூவினபபாடன்முதலாமுறைமையின்
மேவினவிருபானறன்மேலாறெனை
விழுமியமிறைக்கவிவிரிததபின்னெஞ்சிய
வழுவமுவமைதியுமிவையெனவகுதது
மொழிந்தவைம்மூன்றுடன்மூறறு
தொழிந்தவுங்கோடலொள்ளியோர்கடனே.

இச்சூத்திரம இந்நூலுளுரைத்தவிலக்கணமனைத்துந்தொகுத்
திவ்வணியிலக்கணத்திற்குப பிறவாறுவருவனவுளவெனினு மவற்
றையுந் தழீஇக்கொள்கவெனப புறநடையுணர்த்துகின்றது.

* இச்செய்யுள் பின்வருமாறு குருகாமான்மியத்துளெழுதப்பட்டிருக்கிறது
“இறந்தபல்செனனததிழைததவினைநினறிடங்கொள்புல்லறிவினோரெனினுஞ்
சிறந்தபேரறிவின்மேலொருசெனனஞ்செறிகவாங்கெமக்கெனத்தியானம்
பிறந்தவனுதிததோாவினையுமப்பொழுதேபிறக்கிடுமவரையென் றாத
ாறந்தவாவுலகத்திருததுவர்நமனுமழலகத்தலைமைப்பணக்கணக்கே.”

இதன்பொழிப்பு, செய்யுளென்த தொகையாறென்றாயதனை வெண்பா வாசிரியமெனபபகுத்த விருவகையினின்றுங் கலி வஞ்சி மருட்பா பரிபாடலென்னு நான்கினொடு மாறெனவிரித் தவற்றைத் தெளியும்படிக்குப பொருள்பெறும நானகெனறுபகுத்த முததகங் குளகந் தொகை தொடர்நிலையென்னுஞ் செய்யுண்மரபும், வைதருப் பம்கௌடம பாஞ்சாலமெனனு மூனறுபாகமும்,அவறறொடுமபயிலவ தான இன்பம தெளிவு செறிவு சமனிலை இனனிசை உதாரம வலி காந்தம் உய்ததலில்பொருணமை சமாதி யெனக்கூறப்பட்ட பதது வகைக்குணமும, தனமைமுதற் பாவிகமீறாக வறுபததுநாலென்னு மெண்ணையுடைய பொருளலங்காரமும, அடியினுனுஞ் சொல்லினுனு மெழுத்தினுனுமடுககபபட்டனவாகி முறறுபபெறவகுத்த மூனறு வகைமடக்கலங்காரமும, வலலின மெல்லின மிடையினமென்னு மூவினப்பாடன்முதலாக முறையினேடுமபொருந்திய விருபததாறின் மேலு மாறுகூட்டி முப்பததிரண்டென விழுமிதாய சித்திரக்கவிகளும் விரித்தபின்னர்க் குறையாய்நின்றனவாய வழுவும, வழுவமைதியு மிவையிவையென விரண்டுகூறுக்கிக்கூறிய பதினைநதினெடு மணி யிலக்கணநிரமபாம லொழிந்தனவாய்வருவனவுளவெனினு மவறறையு மிவற்றினகத்தகபபட்த தழீஇக்கோடல் கறறறிந்தவுத்தமாகடனு மென்றவாறு. அஃதேல முறகூறியனவலலவோ மீண்டுங்கூறிறறுப புனருததியாம் பிறவெனின், ஆகாது; தொகுததுமுடித்தலென்பது தந்திரவுத்தியாகலா னிவ்வாறுரைக்கபபட்டதென்றறிக. அஃதாக, "குறித் துரைபெழுததொடுகூறறவைசெய்யுளி"னென்றமுறையானே எழுத்து மொழி யடி யென்று நீண்டு அடி மொழி யெழுத்தென்று முறைபிறழக்கூறியவாறென்னையெனின் முந்துமொழிந்ததன்றலைதடு மாற்றென்னு முத்திவகையான் அடிமடக்கென்பதும் சொன்மடக் கென்பதும் எழுத்தின்கூட்டமென்ப தறிவித்தற்கும,ஓரெழுத்தானும ஓரினத்தானும் வருவனவு மதன்பாற்படுமென்றற்கும் என்க. நிரோட் டிய மோட்டியமுதலாகக்கூறப்பட்ட மிறைக்கவிகளும் நோக்கியாரா யுங்காற் பெரும்பான்மையும எழுததின்பாற்படுமாயினு மவ்வ வேறு

வேறுசிறப்புப்பெயருடையவா யுலகி னுண்டாக்குகின்றனவாகலாற் சொல்லின்முடியுமிலக்கணத்தா னவ்வாறுசொல்லப்பட்டது. சொல்லின்முடியுமிலக்கணந்தான்யாதோவெனின் ஒப்பினாகியபெயருங் காரணமாகியபெயருங் குறித்துரைக்கப்படுதலா னவற்றினானே யுணர்ந்துகொள்க. அஃதேல் மாலைமாற்றுஞ் சுழிகுளமும் சருப்பதோபத்திரமுங் கோமூத்திரியுமென நான்குமேயன்றே யாண்டாசிரியனால் வடநூலுளுரைக்கப்பட்டன. ஒழிந்தமிறைக்கவி யீண்டுரைத்தல மிகைபடக்கூறிற்றும்பிறவெனின், ஆகா; ஒழிந்தன வொன்றினமுடித்தறனினமுடித்தலென னுந்தந்திரவுத்தியானுரைக்கப்பட்டது. அல்லதூஉம், வடமொழிமுதனூலாதலாற் றனக்கொருவிகற்பம்படக் கூறுதலிலக்கணமென்பது; "முன்னோர் நூலின்முடிபொருங்கொத்துப், பின்னோன்வேண்டும்விகற்பங்கூறி யழியாமரபினது வழிநூலாகும" என்பவாகலின். (உ-அ)

எச்சவியலுரை முற்றும்.

தருகாளமேகங்கவிராயராயன்சடையனன்பாற்
குருகாபுரேசர்புனையலங்காரகுவலயத்தே
கருகாதசெஞ்சொலுரைவிரித்தான்கற்பகாடவிபோல்
வருகாரிரத்னகவிராயன்பேரைவரோதயனே.

# மாறனலங்காரம் முற்றும்.



ஸ்ரீ:

# மாறனலங்காரம்

## மூலமும் உரையும்.



இவை:

மதுரைத்தமிழ்ச்சங்கத்துச்

“செந்தமிழ்”ப்பத்திராதிபர்

திரு. நாராயணையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றன.




செந்தமிழ்ப்பிரசுரம்—ருஎ.

மதுரை:

தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

1915.

ஸ்ரீ:

# மாறனலங்கார

## முகவுரை.



அலங்காரமென்பது அணி, அழகு, வனப்பு என்னும் பெயர்களையுடையதாய்த் தன் முதற்பொருளைக்கண்டோரை யுவப்புடையராக்கு மியல்புடைமையே. அது "உருவின்மிக்கதோருடம்பதுபெறுதலு மரிதே" என்றுசிறப்பிக்குமாறு இருதிணைப்பொருள்களிலும் ஏற்ற பெற்றியமைவதுபோலவே அப்பொருள்களையுணர்த்தும் சொற்றொடர்த்தொகுதிகளிலு மமையத்தகுவதாம். அவ்வமைதியே இங்கு அலங்காரமென்று எடுத்துக்கொள்ளப்பட்டது. சொற்றொடர்கள் உலகநடை செய்யுணடையென இருவகைப்படும். அவற்றுட் செய்யுணடையானது, பாஷையைச்சிறப்பிக்கவல்லதாய்ச் சுருங்கியதிரிசொற்களால் விரிந்தபொருளைவெளியிடுகின்றமையாற் பயில்வார்க்கு மனத்தளர்ச்சிவாராது கிளர்ச்சியும் அகமகிழ்ச்சியுமுண்டாகவேண்டி அலங்காரங்கள் அந்நடைக்கு மிகச்சிறந்தனவாகக்கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆதலால் அலங்காரமுடையபாடல்களே கற்றோராலும் மற்றோராலும் புகழப்படுகின்றன; அஃதில்லாதபாடல்களே யெல்லாராலும் இகழப்படுகின்றன.

இங்ஙனமிருப்பதுபற்றியே "பலசொல்லாற் பொருட்கிடனாக வுணர்வினின், வல்லோ ரணிபெறச்செய்வனசெய்யுள்" எனச் செய்யுட்கின்றியமையாத சொற்பொருள்யாப்போடொப்பவே, அலங்காரங்களும்வேண்டுமென்று நியமிக்கப்பட்டிருக்கின்றன. அவை குணம்பற்றியும் பொருள்பற்றியும் சொற்பற்றியும் பலதிறமாகப் பகுக்கப்பட்டுத் தொன்றுதொட்டே பழையதமிழிலக்கியங்களுள்ளும் மிகப் பயிலப்பெற்றுள்ளன. இங்ஙனம் கண்கூடாகக்காணப்படும் அலங்காரங்களை இலக்கணவகையாலுணர்த்தும் நூற்பகுதி ஆதியில், தமிழிலில்லையென்றும், பிற்காலத்தில் வடமொழியிலிருந்துவந்தேறியதென்றுஞ் சிலர் சொல்லுகிறார்கள்.

பிறபாஷைகளிலில்லாத எண்ணிறந்த பலவேறுவகையானபாடல்களையும் பிரபந்தங்களையுமுடையதாய்ச் செய்யுணடையிற்சிறந்துவிளங்குந் தமிழ்மொழிக்கண்ணே செய்யுளுக்கின்றியமையாத பொருள்யாப்பிலக்கணங்கள் பிறிதொருபாஷையிலிருந்துகொள்ளப்பெறாது தமிழுக்குரியவாய்த் தனியே சுயமாயிருக்கும்பொழுது அவற்றோடொத்த அணியிலக்கணப்பகுதிமட்டு மந்நியபாஷையிலிருந்துவந்ததாகச்சொல்லுவ தநாதரிக்கத்தக்கதே.

அன்றியும், திருவெங்கையுலாவில்,

“.. . . மல்லலுறச்
சந்திபொருத்தித்தகுஞ்சீர்கெடாதகெகிப்
புந்திமகிழப்புதவணித்தாம்—முந்தையோர்
செய்யுள்போற்செய்ததிருக்கோயில்”

என்றதனால், மனமகிழ்ந்த ததிசயிக்கவல்ல சிறந்தஅலங்காரங்களைப் பழமையானபாசுரங்களே யுடையனவென்றும், அப்பாசுரங்கள் தெய்வசாந்நித்தியம்பெறுதற்கு அலங்காரங்கள் உறுப்பாயமைந்துள்ளனவென்றும், ஆதலா லவை தேவாலயத்துக் குவமிக்கத்தக்கனவென்றும், நூன்முறையே செவ்விதிற்செய்யப்பட்டகோயில்போலவிளங்குவதாற் பாசுரங்கள் செய்யுளெனப்படுமென்றும ஆலங்காரிகசார்வபௌமரான சிவப்பிரகாசமுனிவரு மபிப்பிராயந்தந்துபோந்தனர்.

இதனால், கோயிலுள் நூன்முறையானமைக்குங் குணாலங்காரம் (வடிவழகு) போலச் செய்யுளுள்ளும நூன்முறையானமைக்குங் குணாலங்காரங்களுண்டென்றும, கோயிலுள், தெய்வபிம்பம தீபஜாலம் உதஸ்வபரிகரமுதலியவற்றானமைக்கும் பொருளழகுபோலச் செய்யுளுள்ளும உவமை உருவகமுதலியபொருள்வகையானமைக்கும அர்த்தாலங்காரங்களுண்டென்றும, கோயிலுள் வர்ணவிசேஷங்களாலமைக்கும சித்திரகலாபங்கள்போலச் செய்யுளுள்ளும் வர்ண (அக்ஷர) விசேஷங்களாலமைக்கும சப்தாலங்காரங்களுண்டென்றும்,கோயிலுள் ஓரோவழி நிகழ்ந்தபடிவரையுமவிகிருதரூபங்கள்போலச் செய்யுளுள்ளும் ஓரோவழி நிகழ்ந்தபடிவரையும தோஷாலங்காரங்களுமுண்டென்றுங்குறிக்கப்படுகின்றன. இவையெல்லாம முந்தையோர்செய்யுளிற் பல இடங்களிலுங்காணப்படுதலா லவற்றிற்கிலக்கணமில்லாதிருந்ததென்று

கொள்வதுபொருந்துவதன்று. ஆதலால், ஆதியிற் செய்யுளிலக்கணமாக அகத்தியராற்செய்யப்பட்டதொருசெய்யுளியல் தனியாயிருந்ததுபோல அலங்காரலக்ஷணமான அணியியல் என்னும் நூலொன்று தனியாயிருந்திருக்கவேண்டுமென்றுதோன்றுகின்றது.

காலக்கிரமத்திற்றோன்றும் ஒவ்வொருவழிநூலும் முதனூலிலிருந்த முறையேகூறாது சிலபகுதியைத் தொகுத்தும், சிலபகுதியைவிரித்தும், சிலபகுதியை வேறுபடுத்தியும், சிலபகுதியையொழித்தும், வேறுசில பகுதியைப் புதிதாகச்சேர்த்தும் செய்யப்படுவ தியல்பாதலால், தொல்காப்பியத்தைக்கொண்டு அகத்தியமுதலியமுதனூல்களில் அணியிலக்கணமுறை இவ்வாறிருந்ததென் றறியமுடியாதிருக்கிறது. நன்னூலில் ஓரதிகாரம் அணியிலக்கணஞ்சொல்லப்பட்டிருந்ததாகப் பழையவுரையொன்றால் ஊகிக்கப்படுகிறது. அதுவும் இதுகாறுமகப்படாமையா லதன்முறையும்விளங்கவில்லை. ஆயினும் பல்காப்பியத்தும்புலப்படும் அணிவகைபலவுந் தொல்காப்பியத்தும் பலபடியாகச்சொல்லப்பட்டுள்ளன. அவை, உவமவியலால் உவமவகையும், மெய்ப்பாட்டியலாற் சுவையணிவகையும் வெளிப்படையாக விரித்துரைக்கப்பட்டன.

ஒழிந்தன ஒருசில உத்திவகையிலும், ஒருசில பொருள்கோள் வகையிலும், வேறுசில வனப்புவகையிலும், மற்றுஞ்சில வண்ணவகையிலும், பின்னுஞ்சில குறிப்புவகையிலும், பிறவும்பல சொன்முடிபிலக்கணங்களிலும் அமைந்துகிடக்கின்றன. ஆயினு மிவற்றைப் பிறநூன் முடிந்ததுதானுடம்படுதலென்னுமுத்திபற்றித் தனியேவிதந்தோதாது உவமையொன்றேகூறி யொழித்தனர்போலும்.

மத்தியகாலத்தமிழ்ப்பயிற்சி வடமொழிப்பயிற்சியுடன்கூடியிருந்தமையால், பொருள்பற்றியுணரத்தகும் அணியிலக்கணங்களை எளிதின் வடமொழியிற்பயிலத் தமிழணியிய லருகியதுபோலும். இதற்கு இக்காலத்து ஆங்கிலக்கணிதமுறைப்பயிற்சியாற் றமிழ்க்கணிதமுறைப் பயிற்சியருகியிருப்பது திருட்டாந்தமாகும்.

வடமொழிப்பயிற்சிகுன்றியபிற்காலத்து, தொல்காப்பியத்துட் சொல்லப்பட்ட சில பழையதமிழிலக்கணங்களையே சந்தி, காரகம், தத்திதம், தாது, கிரியாபதம் என வடமொழிமுறைதழுவிவரைந்தது போல, அணியிலக்கணமும், வீரசோழியமுடையாரால் ஓரதிகாரமாகத்

தொகுத்தும், தமிழ்த்தண்டியலங்காரமுடையாரால் ஒருதனிநூலாகச் சிறிதுவிரித்தும் வடமொழிமுறைதழுவி வரையப்பட்டிருக்கிறது.

அதுவும் நிரம்புதலின்மையால் அதனைநிரப்பவேண்டித் **திருக்குருகைப்பெருமாள்கவிராயரென்னும்புலவர்பெருமானால்,** அந்நூலைப்பின்பற்றி அதன்கணில்லாதனவாய்ப் பழையவும் புதியவுமாகிய இலக்கியங்களிற்காணும் வேறுசில அணிகளையும், பிறிதொடுபடான்றன்மதங்கொளலாகச் சிலஅணிகளையுங் கூட்டித் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் இலக்கணங்கூறிச் சூத்திரங்களைப்பெருக்கி, தம்மாலும் பிறராலும் பாடப்பட்டபிறகாவியச்செய்யுள்களுடன், கற்பவாக்குப் பழந்தமிழிலக்கியப்பயிற்சியை எளிதிலுண்டாக்குவனவாய்ப் படிப்பவர்க்குத் தெவிட்டாதிருக்கும்படி வெவ்வேறுசுவையுடையவா யகப்பொருள்புறப்பொருட்டுறைகளையமைத்து மானிடப்பாடலைமறக்கும்படி இட்டதெய்வத்தினைத்துதலாயச் செங்கண்மால் கோயில்கொண்டெழுந்தருளியதிருப்பதிகளின்விஷயமாகவும், வேதந்தமிழ்செய்தமாறனென்னுந் திருநாமத்தையுடைய நம்மாழ்வார்விஷயமாகவும் தாமேசெய்த வேறுபலபாடல்களையு முதாரணமாகச்சேர்த்து **மாறனலங்கார**மெனப் பெயரிடப்பட்டுத் தமிழ்வல்லார்க் கிந்நூல் வழங்கப்பட்டிருக்கிறது.

இந்நூலின்வரலாறு,நூலாசிரியர்வரலாறு,உரையாசிரியர்வரலாறு முதலியன விரிவுடைமையா லவற்றைத் தனியேயுணருமாறு **மாறனலங்காரவரலா***றென்னும்பகுதி யடுத்துச்சேர்க்கப்பெற்றிருக்கிறது.

இந்நூல் தமிழ்ப்புலமையடைவோர்க்குப் பெரிதும் உபகாரமாகத்தக்கதாயிருந்தும் உயர்தரக்கலவிகற்பிக்குங்கலாசாலைகளிலலாமையாற் பயில்வோரும் பயிற்றுவோருமின்றிப் பரவுதல்குன்றியிருந்தது.

மதுரைத்தமிழ்ச்சங்கஸ்தாபகரான ஸ்ரீமத்-பாண்டித்துரைத்தேவரவர்களதுநன்முயற்சியாற் சங்கத்துக்குவேண்டும் தமிழேடுகள்தேடும்

---

* இது இந்நூல்பிறந்த திருக்குருகூரிலேபிறந்துவளர்ந்து இப்பொழுது திருச்சி நாஷனல்ஹைஸ்கூலதமிழ்ப்பண்டிதராயிருக்கிற ஸ்ரீமத்-வ. எம். சடகோபராமாநுஜாசாரியரால் நன்குவிசாரித்து விரிவாகவும் தெளிவாகவும் எழுதப்பட்டு முன்னமே மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பன்னிரண்டாம்வருஷக்கூட்டத்துவித்வத்ஸபையிற்படிக்கப்பட்டுச் செந்தமிழில்வெளியிடப்பட்டது.

பொழுது ஆழ்வார்திருநகரியில், தாயவலந்தீர்த்தான்கவிராயர்வீட்டி லிருந்து இதன் ஏட்டுப்பிரதியொன்று கிடைத்தது. அது தமிழ்கற்ப வர்க்குப் பெரிதுமுபகாரமாவதென்றுகருதிச சங்கப்பிரசுரங்களுள் முதலிற்றொடங்கவேண்டியவற்றுளொன்றாக மதிக்கப்பட்டிருந்தது.

அப்பொழுது பரிசோதனைக்குப் போதுமான வேறுபிரதிகள் கிடையாதிருநதமையாற காலநதாழ்க்கபபட்டிருந்தது. பின்பு மற்றொரு குறைப்பிரதியும் சஙகததுகருக்கிடைததிருக்கிறது. அது இன்னாரால் கொடுக்கப்பட்டதென்பது தெரியவில்லை.

செந்தமிழ்ப்பததிராதிபத்தியப்பொறை சிறியேன்மீதேறியபின்பு அதன்பிரசுரததுக் கவசியமாக இந்நூ லெடுததுக்கொள்ளவேண்டிய தாயிற்று. அப்பொழுது சஙகததிலிருநத பிரதிகளிரண்டையுமவைத் துக்கொண்டே யிடர்பபாடுற றசசிடடுச சிலபாரங்கள்வெளியிட்டுவந்த எளியேன்மீ தன்புகூாநது எனதுவேண்டுகோட்கிணங்கி மஹாமஹோ பாதயாயா பிர்ம்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களும, புதுக்கோட் டைக்காலேஜ் பிரின்ஸிபாலாகவிருநத ஸ்ரீமத-எஸ். இராதாகிருஷ்ணையர் B. A., F. M. U. அவர்களும அருமையாயெழுதிவைததிருந்தபிரதி களையருளி யுபகரித்தார்கள். அவாகளதுதாராளசிந்தை மிகவும் பாராட் டற்பாலது.

அப்பிரதிகளுள் மஹாமஹோபாதயாயரவர்களதுபிரதி சிலபிரதி களோ டொப்புப்பார்ததுப் பிரதிபேதஙகுறிககபபட்டதாயுமிருந்தது மிகவும்சாதகமாயிறறு.

அதன்பின்பு பரங்கிப்பேட்டை ஸ்ரீமத-இலக்குமணப்பிள்ளையவர் களா லொருபிரதிகொடுக்கப்பட்டது.

ஆக நான்குபூரணமானபிரதிகளையும் ஒருகுறைப்பிரதியையும் வைதது மேலேபார்க்கும்பொழுது இதனுரையானது செப்பஞ்செய் யாது முற்படவரைந்தவரைவேபோல ஒருமுறைப்பாடின்றிச சில இடததுப் பதவுரையாகவும், சிலஇடத்துக் குறிப்புரையாகவும், சில இடத்து விரிததுரையாகவும், சிலஇடத்துக் கருத்துரையாகவும், சில இடங்களிற் பிரதீகங்காட்டியும, சிலஇடங்களி லவைகாட்டாமலும், சிலஇடங்களிற் சொன்முடிபில்லாமலும், சில இடங்களிற் றிணை,

## முகவுரை

துறைகளின்பெயரெழுதற் கிடம்விட்டும் மேற்கோள்களிற் சில்வற்
றிற்கு ஆகரங்காட்டியும பலவற்றிற்கு அவைகாட்டாமலும பிரதிக
ளெலலாம ஒரேபடியாயெழுதபபட்டிருநதன. பிழைபாடிலலாத பெரும
பாகங்களைப் பிரதிகளிலுள்ளவாறெழுதியும, சொன்முடிபு, பிரதீகம்
இவையிலலாத இடங்களில அவற்றையமைத்தும சிலமுக்கியமான
பிழைகளைத் திருததியும, திணை துறைகளின்பெயரெழுதாத இடங்
களிற் புள்ளியொற்றியும ஒருவா றச்சிடப்பட்டிருககிறது.

குளகவகையுள், **கலாபம்** அலலது **கலாபகம்** என்றுவழங்கத்தகும்
பெயரை மூலததுள்ளும உரையுள்ளும எலலாபபிரதிகளிலும காபா
லிகமென்றெழுதியிருநதமையால எழுததுநிலைமாறி விகாரப்பட்டிருக்க
லாமென்றெண்ணி யிருநதபடியே பதிபபிக்கப்பட்டிருக்கிறது.

அன்றியும், ஓரிடத்தெடுத்துக்காட்டிய இலககணமேற்கோளைப்
பின்னும பல இடஙகளிற்காட்டியும,விரிக்கவேணடாதசிலவிஷயங்களைச
சில இடதது விரிததும, விரிககவேண்டியவிஷயஙகளை ஒ ரோ வ ழி
விரியாதுவிடுததும, எழுதியிருககுமவைகளும இருந்தபடியே பதிக்கப்
பட்டிருக்கின்றன.

ஆயினும, முதலிற் கடவுள்வாழ்ததென்றுகாட்டப்பட்டிருக்கும்
ரு பாடலகளில, ச-ஆமபாட்டினமுன் அவையடக்கமென்றும, ரு-ஆம
பாட்டின்முன் பனுவல்வாழத்தென்றும எழுதிக்கொள்ளவேண்டும. இவ
ற்றுள், "ஆககமுறககாகக" எனனும முதலையுடையபாட்டு அதிகபாட

இநநூலின் மூலசூததிரங்களைபபற்றி,

> "பதிகம்பொதுவெழுபதவொன் றிருபதவொன
> றதிகவொருனூற் றிருபத்தைந்தா—முதுசொல்
> லணியியலைம்பத்துநாலாதரவாமெச்சங்
> கணியிருபத்தெட்டாகுஙகாண்"

என ஒரு தொகைசசெய்யுள் இரண்டுபிரதிகளில்மட்டுங் காணபபட்
டது. அவறறுள் ஒன்று மூலசூத்திரங்கள்மாததிரம எழுதியபாகமா
யுள்ளது.

இச்செய்யுளிற்காட்டியதொகைகள் பதிகத்திற்கும், சொல்லணியியலுக்கும் பொருந்தவில்லை. மூலப்பிரதியில, சொல்லணியியலிற் சித்திரகவிகளைத்தொகுத்துக்கூறியசூத்திரத்தில "இருபானாறும்" என்ற உம்மையாற்றழுவியமாத்திரைச்சுருக்கமுதலியஆறினுக்கும் மூலசூத்திரங்கள் ஆறு காட்டப்பட்டிருக்கின்றன. அவை உரைப்பிரதிகளிற் காணப்படாமையாலும், உம்மையாற்றழுவியதா யுரையிற்காணப்படுதலாலும் உரையெழுதியபின்பு செய்துசேர்த்திருக்கவேண்டுமென்றும், இச்சூத்திரங்களையும் மூலத்துடன்கூட்டிய "பதிகம்பொது"வென்னும் வெண்பா, பின்பு பாடப்பட்டிருக்கவேண்டுமென்றுந் தோன்றுகின்றது. ஆதலால் அவை அவ்வவ்விடங்களிற்சேர்க்கப்பெற்று கீழ்க்குறிப்பிற் காட்டப்பட்டுள்ளன. அவ்வாறையுஞ்சேர்த்து "முதுசொல்லணியியலைம்பத்துநா"லென்றும், பாயிரசூத்திரம் அறுபத்துநாலொடு சிறப்புப்பாயிரம் ஒன்று, தற்சிறப்பு ஐந்து, "தருகாளமேகம்" என்ற உரைச்சிறப்புப்பாயிரம் ஒன்று, ஆக ஏழுசெய்யுளையுங்கூட்டிப் பதிகமெழுபத்தொன்றென்றும் எண்ணினர்போலும்.

சக்கரபெந்தமுதலிய சித்திராலங்காரங்களுக்கு மூலத்தாலும் உரையாலும் நன்குவிளங்காத சித்திரபந்தங்கள் ஒருவாறு புதிதாகச்செய்து இறுதியிற்சேர்க்கப்பட்டிருக்கின்றன. சதுரங்கபெந்தத்தின்கதிவிவரமொன்றும் உரையிற்சொல்லப்படாமையாலும் விளங்காமையாலும், அதற்குச் சித்திரபந்தம மமைக்கப்படவில்லை. சூத்திரம், உதாரணம் முதலியவற்றினிருப்பிடங்காணுமாறு முதற்குறிப்பகராதிகளும், விஷயசூசிகைமுதலியவு மெழுதிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இது முதற்பதிப்பாதலால் எனக்குத்தெரியாதுதவறியிருக்கும் பிழைகளைச் சுத்தப்பிரதிவைத்திருக்கும்பண்டிதசிரோமணிகள்கண்டு எனக்குத்தெரிவிப்பார்களாயின், அவைகளை மறுபதிப்பிற்றிருத்திக் கொள்ளவும், அவர்களுக்கு நன்றிபாராட்டவும் உபகாரமாயிருக்குமென்பது யாரும் அறியத்தக்கது.

இப்புத்தகமச்சிட்டுவெளிவரும்படிக்குப் பிரதிகளளித்துதவிய மஹோபகாரிகளான ஆழ்வார்திருநகரித் **தாயவலந்தீர்த்தான்கவிராயர்** குடும்பத்தார்க்கும், மஹாமஹோபாத்தியாய பிரம்மஸ்ரீ உ. வே. **சாமிநாதையரவர்களுக்கும்**, புதுக்கோட்டை மஹாராஜாகாலேஜ் பிரின்ஸ்பாலாயிருந்த ஸ்ரீமத்-எஸ். **இராதாகிருஷ்ணையர்**, B.A., F.M.U., அவர்களுக்கும், பாங்கிப்பேட்டை ப. அ. **இலக்குமணப்பிள்ளையவர்கள்**குடும்பத்தினர்க்கும் தமிழ்ச்சங்கத்தாரும், தமிழபிமானிகளும் நன்றிபாராட்டக்கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இந்நூற்பரிசோதனவிஷயமாகவும், அச்சிடும்விஷயமாகவும் கருகருப்பாயும் ஜாக்கிரதையாயுமிருந்து பிரதிகளையொப்புநோக்கியும், எழுதியும், பிழைதிருத்தியும், மேற்கோள்களைப் பிறநூல்களினின்றும் இடங்கண்டுதேடியெடுத்துக்கொடுத்தும், பிரதிகளிலில்லாத சித்திரபந்தங்களை இவ்வாறிருக்கவேண்டுமென்று ஊகித்தெழுதிக்கொடுத்தும், உதவிபுரிந்துவந்த பத்திராதிபருதவி **ராமாநுஜஐயங்காரது**வேலைத்திறமை பாராட்டற்பாலது.

இந்நூலையச்சிடுதற்குரியனென் றெளியேனைமதித்துத் தமிழுலகுக்குக்குற்றேவல்புரியும் பெருவாழ்வுகொடுத்த **மதுரைத்தமிழ்ச்சங்கத்தார்க்கு** நன்றிபாராட்டக்கடமைப்பட்டிருக்கிறேன்.

அலங்காரசாஸ்திரநிபுணர்களால் ஆராயத்தக்க இந்நூலை யெளியேனும் அச்சிட்டுதவுமாறு அறிவாற்றலையளித்துத் தலைக்கட்டிய ஸர்வேசுவரன்திருவருளைச் சிந்தித்துவந்தித்துவாழ்த்துவேனாக.

திரு. நாராயணையங்கார்,

**செந்தமிழ்ப்பத்திராதிபர்.**

---

ஸ்ரீ:

# மாறனலங்கார வரலாறு.



அலங்காரமென்பது செய்யுளுக்கு அழகுசெய்யும் லக்ஷணங்களைக் கூறும் சாஸ்திரம், இவ்வலங்காரசாஸ்திரத்தை வடமொழியாளர் மிகவும் விரும்பிக்கற்பர். இந்தச்சாஸ்திரத்தின்பெருமை அக்நிபுராணத்திற் பேசப்பட்டுள்ளது. வாமநசூத்திரம், காவ்யாதர்சம், ஸரஸ்வதீகண்டாபரணம், காவ்யப்ரகாசம், அலங்காரஸர்வஸ்வம், ரஸமஞ்சரி, ஸாஹித்யதர்ப்பணம், ப்ரதாபருத்ரீயம், அலங்காரகௌஸ்துபம், சந்திராலோகம், குவலயாநந்தம், சடவைரிவைபவதிவாகரம் (இது நம்மாழ்வார்விஷயமான வடமொழிமாறனலங்காரம்) முதலிய நூற்றுக்கணக்கானவடமொழி நூல்கள் அலங்காரத்தைப்பற்றிச்சொல்பவைகள். தமிழில் முதன்முதல் அணியைப்பற்றித்தெரிவிக்கும் நூல் தொல்காப்பியம். தொல்காப்பியர்கூறுவது உவமை ஒன்றுதான். அவர் அகத்திணையியலில் ஏனையுவமம் உள்ளுறையுவமம் இவைகளை விளக்கி உவமவியலில் உவமத்தைத் தொழில், பயன், வடிவு, வண்ணம் எனப்பிரித்து விரித்தெழுதியிருக்கிறார். தொல்காப்பியர்காலத்து உவமையொன்றே அணியாகக்கருதப்பட்டது. பிற்காலத்தார் அதிலிருந்து பல அணிகள் கற்பித்துக்கொண்டனர். நச்சினார்க்கினியரும் உவமமொன்றனையே அணியாகக்கருதினர். இவர் தம் காலத்திற் பல அணிவிகற்பவேறுபாடுகளுடன்வெளிவந்த ஒரு அணிநூலைத் தமதுதொல்காப்பியவுரையிற் குறைகூறுகின்றனர். இவர் உவமவிகற்பங்களுக்கு எடுத்துக்காட்டிய உதாரணச்செய்யுள்களிற்சில, தண்டியலங்காரவுரையில் வேற்றுமையணி, தற்குறிப்பேற்றவணிமுதலியவைகளுக் குதாரணமாகக் காட்டப்பட்டிருக்கின்றன. நிரனிறை, சமம் முதலியவற்றை உவமத்தின்விகற்பமாயே கொண்டார், நச்சினார்க்கினியர். இப்படி உவமமே பலவணிகளினுற்பத்திக்குங் காரணமாயிருந்தது என்பதை வடமொழியாளரும் சம்மதிக்கின்றனர். அப்பையதீக்ஷிதர் தாமெழுதிய சித்ரமீமாம்ஸையென்னுங் கிரந்தத்தில் இவ்விஷயத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார். அச்சுலோகம் வருமாறு:—

"𑌉𑌪𑌮𑍈𑌕𑌾 𑌶𑍈𑌲𑍂𑌷𑍀 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾 𑌚𑌿𑌤𑍍𑌰𑌭𑍂𑌮𑌿𑌕𑌾𑌭𑍇𑌦𑌾𑌨𑍍 ।
𑌰𑌞𑍍𑌜𑌯𑌤𑌿 𑌕𑌾𑌵𑍍𑌯𑌰𑌙𑍍𑌗𑍇 𑌨𑍃𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍀 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌾𑌂 𑌚𑍇𑌤𑌃 ॥"

இதன்மொழிபெயர்ப்பு,

" உவமையென்னுநதவலருங்கூத்தி
பல்வகைக்கோலம்பாங்குறப்புனைந்து
காப்பியவரங்கிற்கவினுறத்தோன்றி
யாப்பறிபுலவரிதய
நீப்பறுமகிழ்ச்சிபூப்பநடிக்குமே" என்பதாம்.

இவ்வணியிலக்கணமானது தொல்காப்பியத்திற் பொருளதிகாரத்திற்சொல்லப்பட்டிருக்கிறது. அக்காலத்தில், தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள் என மூன்றுபாகமாகத்தான்பிரிக்கப்பட்டிருந்தது. "எழுத்துஞ்சொல்லும்பொருளுநாடிச், செந்தமிழியற்கைசிவணியநிலத்தொடு, முந்துநூல்கண்டுமுறைப்படவெண்ணி" என்னும் தொல்காப்பியப் பனம்பாரனாரபாயிரத்தால், தொல்காப்பியத்திற்குமுதனூலும் இப்பாகுபாட்டேகொண்டிருந்ததெனத்தெரிகிறது. இறையனாரகப்பொருளுரையை யுற்றுநோக்கும்போது, 'யாப்பு', தனியுறுப்பாகக் கருதப்பட்டு, தமிழிலக்கணம் நான்குபிரிவாகக்கருதப்பட்டதென்று தோன்றுகிறது. அதன்பின்புதான் 'அணி' தனியுறுப்பாகக்கொள்ளப்பட்டு, தமிழிலக்கணம், எழுத்து சொல் பொருள் யாப்பு அணியென ஐந்துபிரிவுடையதாகவகுக்கப்பட்டது. இவ்வைந்திலக்கணமும் ஒருங்கேகூறும்நூல்கள் வீரசோழியம், இலக்கணவிளக்கம், தொன்னூல்விளக்கம், முத்துவீரியம் என்பனவாம். இவை ஒவ்வொன்றிலும் அந்தந்தக்கிரமத்தில் அணியிலக்கணம் கூறப்பட்டுள்ளது. வீரசோழிய அணிகளுக்குமுதனூல் ஆசார்யதண்டியியற்றிய வடமொழிக்காவ்யாதர்சம். இலக்கணவிளக்கமுதலிய மற்ற இலக்கணங்களின் அணியிலக்கணங்களுக்குமுதனூல், தமிழ்த்தண்டியலங்காரமும் அதன் உரைகளுமாம்.

தனியாய் அணியிலக்கணமாத்திரங்கூறுமநூல்கள் அணியியல் அல்லது அணிநூல், தண்டியலங்காரம், மாறனலங்காரம் என்பன. இவற்றுள் அணிநூலைப்பற்றிவிசாரிப்போம். யாப்பருங்கலவிருத்தியில் "உருவகமாதிவிரவியலீறுவரும்.........அலங்காரமென்பது அணி

யியலார்தலின்" என்றுகூறியிருப்பது தண்டியலங்காரவணிமுறைவைப்புக்குப் பொருத்தமில்லாததால் வேறு அணிநூலைக்குறித்ததாகவேண்டும். நேமிநாதவிருத்தியில, "புனையுறுசெய்யுட்பொருளையொருவழி, வினைநின்றுவிளக்கினதுவிளக்கெனப்படுமே" "முதலிடைகடையென மூவகையான" என்பன அணியியல் ஆகலின்" என் றுள்ளது. இதில் இரண்டுசூததிரததாற்குறிதத விளக்கணி தமிழ்ததண்டியலங்காரத்தில், தீபகமென்றபெயரால ஒரேசூத்திரததிறகூறபபட்டிருக்கிறது. ஆதலால இவ்விருததிகாரர்குறிதத அணியியல் என்னுமநூல தண்டியலங்காரததினுமவேறுகவேண்டும. நசசினார்க்கினியா தொலகாபபியவுரையில "இனி இவ்வோத்தினிற்கூறுகின்ற உவமஙகளுடசிலவறறையும சொலலதிகாரததினுள்ளும செயயுளியலுள்ளுஞசொலலுகின்ற சில பொருள்களையுமவாங்கிககொணடு மறறவை செய்யுடகண்ணே அணியாமென இக்காலததாசிரியா நூலசெய்தாருமுளா" எனக்கூறி அவ்வணிநூலுககுத தமது சமமதமின்மையையும தெரிவிக்கிறார். இவ்வாக்கியத்திலுள்ள விஷயம வடமொழியிலிருநதுபெயர்த்த தண்டியலங்காரததைக்குறிககாது வேறு அணிநூலையேகுறிததாகவேண்டும. பரிமேலழகா பக்ஷாநதரமாய்க்கூறும நுவலாநுவற்சி, ஒட்டு என்னும் பரியாயப்பெயாகள் முறையே வீரசோழியததிலும தண்டியலங்காரததிலும காணப்படடபோதிலும அவர் தன்மதமாககூறிய பிறிதுமொழிதல என்பது அணிநூலுட்கண்டதாகவிருநதாலுமிருக்கலாம். இப்படியே வீரசோழியம, தணடியலஙகாரங்களுடகாணபபடாத சில அணிகளின்பரியாயப்பெயர் இவருரையிறகாணபபடுகின்றன. இன்னோரன்ன காரணங்களால, தண்டியலங்காரததினுமவேறாய அணிநூல அல்லது அணியியலென்ற நூலொன்று இருந்துவிழுந்திருக்கவேண்டுமென் றேறறபடுகிறது.

ஆனால், தண்டியலங்காரததிற்கே அணியியலென்னும்பெயர் இருந்திருக்கிறது. அணியியலென்றபெயருடன் அடியார்க்குநல்லாரும் மாறனலங்காரவுரையாசிரியரும் (மா-அ-சூத 25-ன் கீழ்) எடுததுக்காட்டியிருக்கிறமுறையே சூததிரம இரண்டு மொன்றும் தண்டியலங்காரத்துட்காணபபடுகின்றன. இத தண்டியலங்காரசசூததிரஙகள் அணியியலென்னுமநூலிலிருநது முன்னோமொழியாக எடுததுத் தண்டியலங்காரத்துட்சோக்கப்பட்டிருககலாமென்று கருதுவதற்கு இடங்கொடுக்கின்றன.

இனி, 'மாறனலங்காரம்' என்பதைப்பற்றிவிசாரிப்போம். மாறன் என்பது பாண்டியரைக்குறிக்கிற பழம்பொதுப்பெயர்களுள் ஒன்று; இங்கு ஆழ்வார்களுட்சிறந்த நம்மாழ்வாரைக்குறிக்கிறது. இவர் பாண்டியராசாட்சிக்குட்பட்ட பொருநையாற்றின் அடைகரையாகிய திருவழுதிவளநாட்டுக்குரிய சிற்றரசர். மாறன், காரிமாறன், சடகோபன், திருவழுதிவளநாடன், பொருநற் (தாமரபர்ணி) சோப்பன், பொருநற்சங்கணித்துறைவன், மகிழ்மாலைமார்பினன் முதலானபெயர்கள் இயல்பாயும், காரணம்பற்றியும் இவருக்குவழங்கிவந்தனவென்று திருவாய்மொழியால், தெரிகிறது. இவர் பிறந்தபொழுதேதொடங்கித் திருமாலினிடத்துவிசேஷபக்தியுடையராய் உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங் கண்ணனேயென்றதயவசித்துத் தத்தேகத்யானபரராயிருந்து நான்குவேதங்களையும் திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்குதமிழ்ப்பிரபந்தங்களாக லோகோஜ்ஜீவநார்த்தமாகவெளியிட்டருளினர். இவரை அக்காலத்திலிருந்த மதுரகவிமுதலான பராங்குமணசிரேஷ்டர்களும் பிற்காலத்துவந்த நாதமுனி, யாமுனாசாரியர், ராமாநுஜர்முதலான பராங்குமணசிரேஷ்டர்களும் ஆசார்யராகமதித்து நேரிலும் விக்ரகரூபமாயெழுந்தருளப்பண்ணியும் ஆழ்வார்களுட் டலைமையானவராய்க்கொண்டு ஆராதித்துவந்தனர். வடநாட்டிலும் துளசிதாசர்முதலானோரால், பாராட்டிப்பூசிக்கப்பட்டார் இவ்வாழ்வாரெனின், இவரைப்பற்றி நாம் அதிகமாயெழுதவேண்டியதில்லை. இந்நூலாசிரியர் இவ்வாழ்வாரிடத்து ஏழாட்காலும்பழிப்பிலாததொண்டுபூண்டு மறந்தும்புறந்தொழாதவமிசத்துட்பிறந்த வைணவமதாபிமானமுள்ளவராணபடியினாலே, தண்டியலங்காரமுதலிய நூல்கள் அரசர்முதலியவர்களைப்பற்றிக்கூறி லௌகிக திருஷ்டாந்தங்களுடையனவாயிருப்பதுகொண்டு, தாமிந்த அலங்கார நூலையியற்றி இதை ஆழ்வார்க்குச் சமர்ப்பித்து உதாரணங்களை ஆழ்வார்விஷயமாகவும் திவ்யதேசத்து எம்பெருமான்கள்விஷயமாகவும் வைஷ்ணவபரமாய்ச்செய்துசேர்த்தருளிக 'காரிதந்தருள்கலைக்கடலியற்பெயர்புனைந்து' (மா-அலங். பா) 'திருமகிழ்ப்பரமதேசிகன்பெயரால்' (மா-அகப்) இந்நூலைவெளியிட்டருளினர். ஆகவே மகிழ்மாறன் அல்லது நம்மாழ்வாரை நாயகனாய்க்கொண்ட அலங்காரசாஸ்திரமாகுமிது.

வடமொழியிலும் நம்மாழ்வார்விஷயமான ஒரு அலங்காரசாஸ்திரம் 'சடவைரிவைபவதிவாகரம்' என்றபெயருடன் குவலயாநந்தத்தையநுசரித்ததாய்விளங்குகிறது. கூடியசீக்கிரம் அச்சிலவரும். இத்தமிழணிநூல், பாயிர இலக்கணத்தை முதலிற்பெற்று, அது தவிரப் பொதுவியல், பொருளணியியல், சொல்லணியியல், எச்சவியல் என நான்குபகுப்புடையதாயிருக்கிறது.

இந்நூற் பொதுப்பாயிரத்துள் "வெள்ளையினகவலின்விளம்பலு மரபே" என்றபடி இந்நூலாசிரியர் பொதுவியலைமாத்திரம் வெண்பாவாலமைத்திருக்கிறார். அகவலின்வெள்ளையினறைகவென்று முந்து நூல்விதித்தமையுளவாகவும், விதியாதுநீக்கிய கட்டளைக்கலித்துறை, ஆசிரியவிருத்தமென்னும் பாவினத்தாற் பின் பிலக்கணநூல்செய்தோர் இலக்கணங்களைக்கூறியதுபோலவும், சிலப்பதிகாரத்திற் சிலகாதைகள் பாவினங்களாற்பாடியதுபோலவும் இவரு முதலியலை வெண்பாவாலும், மற்றவற்றை நூற்பாவாலும் கூறினர்.

தண்டியலங்காரத்தில் மேற்கூறியநான்கியலுக்கும் சோ்ந்தசூத்திரங்கள் 125 தான. தண்டியலங்கார உதாரணச்செய்யுள்களிலும் மாறனலங்கார உதாரணச்செய்யுள்கள் மிகவு மதிகம். ஆகவே தண்டியலங்காரத்தினும் மாறனலங்காரம் மிகவிரிவுடையது. தண்டியலங்காரம் காவ்யாதர்சத்தைப்பின்பற்றின மொழிபெயர்ப்பு. மாறனலங்காரம், தொல்காப்பியமுதலியவற்றினகருத்துக்களையும், "முதுமொழித்தண்டி முதனூலணியையும், புதுமொழிப்புலவர்புணர்த்தியலணியையும், தனுது நுண்ணுணர்வாற்றருபலவணியையு, மனுதுறத்தொகுத்தும வகுத்துமவிரித்தும், சதுர்பெறவிரண்டிடத்தமிழ் இயசார்பெனலாய்" விளங்குகிறது. ஆயினும், இது தண்டியலங்காரத்தின்வழிநூலாகும். இதனுரையில் வடமொழித்தண்டியாசிரியரை யபூர்வமா யோரோரிடத்தும், தமிழ்த்தண்டியாசிரியரை அடிக்கடி பலஇடங்களிலும் சுட்டியிருக்கிறார். இந்நூலாசிரியர் சிலஇடங்களிற் சிலநியாயமபற்றிச் சிறிதுவேறுபடுவதுமுண்டு. எடுத்துரைப்பிற் பெருகுமாதலால் 84-ம் சூத்திரவுரை முதலியவிடங்களிற் கண்டுகொள்க.

தண்டியலங்காரத்துட்கூறிய பொருளணிகளின்றொகை 35. இந்நூலுட்கூறிய அணிகளின்றொகை 64. இந்நூலார், தண்டியாசிரியர்

கூறிய நுட்பமென்னுமலங்காரம் பரிகரத்துளடங்குதலா லதைக் குறைத்தார். சொல்லிலக்கணத்திலும் பொருளியலிலும் புறத்திணை யியலிலுங்கூறியுள்ளவும் மற்ற அணிநூல்களுட் கூறப்படாதனவுமாகி பூட்டுவில், இறைச்சிப்பொருள்கோள், பொருண்மொழியென்னும் மூன்றையும் செய்யுட்கணிசெய்தலால் அணியுட்சேர்த்துமிருத்தார். வகைமுதலடுக்கு, இணையெதுகை, உபாயம், உறுசுவை, புகழ்வதினிகழ்தலெனனுமைந்தும அழகுசெய்துவதாயிருத்தலின், இலக்கியங்கண்டதற் கிலக்கணமியம்புதலா யிவற்றையு மிருத்தார். தண்டியாசிரியர் உவமவிரியுட்சேர்த்தும, ஏனையாசிரியர் வேறுவேறாகப்புணாத்துமிருக்கிற ஐயம், தெரிதருதேற்றம், பொதுநீங்குவமை என்பவற்றுள் ஐயத்தையும, தெரிதருதேற்றத்தையும ஏனையாசிரியர்மதமுடன்பட்டுப பிறிதோரணியாக்கியும, பொதுநீங்குவமையைத தண்டியாசிரியாமதமபற்றி யுவமையுடபுணர்த்தும, தன்கோட்கூறலெனனுமுத்தியானும, தன்குறியிடுதலென்னுமுத்தியானும், பின்னேனைவேண்டும்விகற்பங்கூறிமுடிக்கும வழிநூலிலக்கணமபற்றியும இவ்வாறெல்லாம்முடித்தார். இவ்வாறு சூக்குமமாய்க்காணப்படும வேறுபாடுகளுக்கெல்லாம மேற்கண்டபடியேகொள்ளவேண்டும்.

தண்டியாசிரியர் ஒரேசூத்திரத்திற் பன்னிரண்டுசித்திரகவிகளுக்குப் பெயாமாத்திரங்கூறிச்செல்ல, இநநூலாா முப்பத்திரண்டுசித்திர கவிகள்கூறி அவற்றுக்கு இலக்கணமுங்கூறிச்செல்கிறார். 'தேவா' 'மாதவனே' 'தண்மதி' 'சேடுறு' என்றுதொடங்குகிற சக்கரபெந்தச்செய்யுள்களில 'திருமலை,' 'தென்குருகூா,' 'வடமலையப்பன்,' 'சீராமராமசெயம்,' 'தருமமேகைதரும்' என்பவைகளும, இரதபெந்தத்தில 'நாராயணாயநம' என்பதும, காதைகரப்பிற 'கோல்லான்புலாலைமறுத்தானை' என்னுங் குறளும அழகாயமைக்கப்பட்டுள்ளன.

தண்டியலங்காரவாசிரியா தாமே மூலமும உதாரணமுங் காட்டினாற்போல, இநநூலாசிரியர் தாமே உதாரணச்செய்யுள்களும செய்தமைத்தாரென்றுதோன்றுகிறது. "இநநூலாசிரியர் இவ்வுதாரணம யாண்டுப்பெற்றாரோவெனின்" என்று உரையில்வருவதுகொண்டும பிற ஆதாரங்கொண்டு மிவ்வாறு ஊகிக்கவேண்டியதாயிருக்கிறது. இந் நூலிற் பரிபாடல், கலித்தொகை, பத்துப்பாட்டு, புறநானூறு, குறுந்

தொகை, அகநானூறு, குறள், நாலடி, சிந்தாமணி, சிலப்பதிகாரம், வெண்பாமாலை, யாப்பருங்கலம், திருவாய்மொழி முதலிய பழையநூல்களிலிருந்து மேற்கோள்காட்டப்பட்டுள்ளன. இந்நூலாசிரியர்செய்தருளிய திருக்குருகாமான்மியம், நம்பெருமாள்மும்மணிக்கோவை, மாறன்கிளவிமணிமாலை, இந்நூலுரையாசிரியர்செய்தருளியதாகநினைக்கப்படுகிற 'மாறன்பாப்பாவினம்' முதலிய வைணவநூல்களிலிருந்தும் அடிக்கடி மேற்கோள்கள்காட்டப்பட்டிருக்கின்றன. திருப்பதிக்கலம்பகம் என்னும் நூலிலிருந்தும் மேற்கோள்காட்டப்பட்டிருக்கிறது. அந்நூலைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. மற்றைய உதாரணச்செய்யுள்களெல்லாம் நம்மாழ்வார்விஷயமாகவும், திவ்யதேசத்து எம்பெருமான்கள்விஷயமாகவும் வெண்பாமுதலிய பாபாவினங்களிற் பெரும்பாலும் அகப்பொருட்டுறைகளமையப்பெற்றனவாய் நூலாசிரியரால் செய்யப்பெற்றுச் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வுதாரணங்களெல்லாம் கற்பனைகளடங்கியமாய்ச் சொற்சுவைபொருட்சுவைநிரம்பி அழகாயிருக்கின்றன. பெரும்பாலும் உதாரணச்செய்யுள்களுக்குத் திணையும் துறையும் கூறப்பட்டிருக்கின்றன. சில உதாரணங்களுக்குப் பொழிப்புரையும், சிலவுதாரணங்களுக்குக் குறிப்புரையும் கூறப்பட்டுள்ளன. நன்னூலின் ஆரம்பத்துட் கூறியிருப்பதுபோல இந்நூலிலும் ஆரம்பத்திற் பொதுப்பாயிரத்திலக்கணம் மிகவிரிவாயும் தெளிவாயுங்கூறப்பட்டிருக்கிறது.

இத் தமிழ்மணி நூலின்பொருளடக்கத்தையும் பெருமையையும் பின்வரும் நூற்பாவானும், வெண்பாவானும் ஒருவாறறிந்துகொள்க.

"ஆறெனத்தொகைவகையினிலவிரித்தவற்றைத்
தேறமெய்பெறுநானகெனத்தெரிசெய்யுளும்
பாகமோராமூன றும்பயிலகுணம்பத்து
மாகவெண்ணன்கிரட்டியபொருளணியு
மடிமொழியெழுத்தினடுக்கினவாக
முடிவுறவகுத்தமூவகைமடக்கு
மூவினப்பாடன்முதலாமுறைமையின்
மேவினவிருபானறன்மேலாறென
விழுமியமிறைகவிவிரித்தபின்னெஞ்சிய
வழுவமுவமைதியுமிவையெனவகுத்த
மொழிந்தவைம்மூன்றுடனமுற்று
தொழிந்தவுங்கோடலொள்ளியோர்கடனே"

"வாய்ந்ததிருப்பதிநூற்றெட்டினையும்வாழ்த்தியே
யாய்ந்ததமிழ்மாறனணியெனப்பேர்—தோய்ந்துளதாற்
காண்டகுசீமற்றோரணியுங்கவின்புணர்க்க
வேண்டுமோவீங்கிதற்குமேல்"

சுமார் நூறுவருஷங்களுக்குமுன ‘கர்னல மெககன்ஸி’ துரையவர்க
ளால மிககதிரவியசெலவுசெய்துசேககபபெற்று இபபோது துரைத்
தனததாரிடமிருக்கும சென்னைஇராஜாங்கப்புததகசாலையில் இந்நூலின்
காகிதககையெழுததுப்பிரதியொன்றிருபபது, சிலபெரியோர்களுககுத
தெரிந்தவிஷயம. கிரநதமந்தணகூடம (Tamil Museum) என்றபெயர்
வைத்துக்கொண்டு அநேகசாஸ்திரங்களைவெளியிடபபோவதாய்முன்
னுக்குவநத S. சாமுவேலபிள்ளை என்பவா, சுமார் 55-வருடததுக்குமுன்,
தாமசசிட்ட ‘தொலகாபபிய நன்னூல ஐககண்டய’புஸ்தகத்தில இந்
நூலைப்பற்றிப் பிரஸ்தாபிததுள்ளார். ம-ா-ா-ஸ்ரீ சூரியநாராயணசாஸ்
திரியாரவர்களும், ம-ா-ா-ஸ்ரீ செலவககேசவராயமுதலியாரவர்களும
தாங்களியற்றிய தமிழ்பபாஷைவிஷயமான நூல்களில இந்நூலைக்குறிப்
பிட்டிருக்கிறார்கள. சென்னையிலவசிதத வைணவவிதவான்களாகிய
மகா-ா-ா-ஸ்ரீ இராஜகோபாலபிள்ளையவாகள்முதலியோர் இந்நூலை
அசசிட எணணிப பொருண்முட்டுப்பாட்டால நின்றுவிட்டனர்.
முதன்முதல்வெளியான செநதமிழ்ப்பகுதியினின்று, காலஞ்சென்ற
ஸ்ரீமாந்-பாண்டித்துரைததேவரவர்களும, முன்பு செந்தமிழ்ப்பததிரா
சிரியராயிருநத ஸ்ரீ உ. வே. ரா. இராகவையங்காரவர்களும் இந்நூலை
அசசிடுவதைசசங்கததின்முதவேலைககங்களுளொன்றாகக்
கொண்டிருநதன ரென்பது தெரிகிறது. எக் காரணங்களாலோ
அவர்கள் எண்ணம் நிறைவேறவில்லை. இததகைய அரியநூல்களை யச்
சிட்டுத தமிழுகததிற்குபகரிததுவரும் தமிழ்சசங்கததார்க்குத் தமிழபி
மானிகள் நன்றிசெலுததக் கடமைப்பட்டிருககிறார்கள்.

## நூலாசிரியர்.

பெயர்:—இவ் வரியபெரியநூலை இயற்றியவர் ‘ திருக்குருகைப்
பெருமாள்கவிராயர்.’ திருக்குருகைப்பெருமாள் என்றால், திருக்குருகை
யென்னும ஆழ்வார்திருநகரிக்குததலைவரான நமமாழ்வார் என்று
பொருள். "திருக்குருகைப்பெருமாள்தன்திருவடிகள்வாழியே" என்பது
அஷ்டகஜம் அப்பிள்ளை அருளிசசெய்த நம்மாழ்வார்விஷயமான

வாழித்திருநாமம். இந்நூலாசிரியர் நம்மாழ்வாருடைய ஆஸ்தானகவி ராயராதலால் அவருக்குத திருககுருகைப்பெருமாள்கவிராயரென்று பெயராயிற்று. இவருக்குச் 'சடையன்' என்னும் இயற்பெயருமுண்டு. 'சடகோபன்' என்பது சடையன் எனத திரிநததுபோலும்.

**தகப்பனார்:**—இவருடைய தகபபனாபெயரும 'திருககுருகைப் பெருமாள்கவிராயர்' என்பதேயாம.

**ஜாதி:**—வேளாளர். 'சீரகததாரவணிகன்' என்று பாயிரத்திலிருப் பதைநோக்க வேளாளருள ஒருவகை வைசியவகுபபிற்சேர்நதவரென் பது வெளியாகின்றது. ஆழ்வார்திருநகரிககோயிற சததாவரண உத ஸவங்களிறபடிககவேண்டிய 'திருபபணிமாலை'படிபபவருக்கு ஏற் பட்ட சுதநதரங்களைததெரிவிககும கோயிற்கணககில திருக்குருகைப் பெருமாள்கவிராயா என்றிருககிறது. அநதசசுதநதரங்களை இப்போது வததராயிருபபுஆழவாரபபிளளை எனபவா பெறறுவருகிறதுகொண்டு இந நூலாசிரியர் இவரின் முன்னோராயிருககலாமென்று சிலாநினைககின் றனா. ஆழ்வாரபபிளளையினபநதுவாகிய அமிருதகவிராயரின்வம சததில்'திருக்குருகைபபெருமாளகவிராயாகள்' சிலரிருநதிருக்கின்றனா. சென்னைராஜாங்ககையெழுததுபபுததகசாலையிலுள்ள திருவரங்கத்தந் தாதியின் பழையவுரையெழுதிவைத்தவா திருக்குருகைபபெருமாள் கவிராயர். இவா இநநூலாசிரியரலலா. இவா 'மாறன்கோவை'இயற்றிய வேங்கடததுறைவான்கவிராயர் வமசததவராயிருக்கவேண்டும். இப பெயரினர் 'O. K. S.' எனற நவீனககுறியாலவழஙகபபடுகிற திருநெல் வேலிஜிலலா வைணவவேளாளவகுபபைசசேர்நதவரென்று தெரிகிறது.

**ஊர்:**—திருககுருகூர் என்னும ஆழ்வாாதிருநகரி. இவற்றிற்குப் பிரமாணம்:—

> "பெருநிலம்புகழ்திருககுருகைப்பெருமா
> ளருள்குருகூர்வருமனகன்செழுநதேன்
> மருக்கமழ்சீரகததாரவணிகன்புகழ்த
> திருக்குருகைப்பெருமாள்கவிராயன்
> அருட்குணத்துடன்வளர்சடையன்
> பொருட்டொடாநவம்புணர்புலமையோனே"
>
> (மாறனலங்காரப்பாயிரம்)

"குருகையம்பதித்திருக்குருகைப்பெருமாள
பொருவில்பேரன்புடன்புரநதருள்புதல்வன
மருககமழ்சீரகததாரவணிகேசன்
திருக்குருகைப்பெருமாள்கவிராசன்
அருட்குணத்தவர்புகழ்சடையன்
பொருட்டொடர்நவம்புணர்புலமையோனே"

(மாறனகப்பொருட்பாயிரம்)

"இருக்குமுதற்பனுவலினுலியற்றமிழ்தோநாவீறனென்னுமேன்மை
யருட்புயலைப்புகழ்புலமைத்திருககுருகைப்பெருமாள்பேரன்புகூருந்
தருக்குலவுமபொழிற்குருகாபுரிவணிகனசடையனிதைததமிழாற்சாற்றித்
திருககுருகைப்பெருமாளவண்கவிராசனெனப்புனைபேர்சிறந்ததொன்றே"

(திருக்குருகாமான்மியப்பதிகம்) முதலியன.

மதம்:—வைணவம இவா, 'மணவாளமாமுநி' முதலிய தென்கலை ஆசார்யசிரேஷ்டாகளை அலஙகார நூலின்மததியிலவணஙகியிருப்பதாலும, ஸ்ரீநிவாசஜீயா எனனும தென்கலை ஆசாாயபுருஷரது சிஷ்யராதலாலும, தெனகலைவகுபபைசசோந்தவா.

ஞாநாசிரியா:—இந நாலாசிரியருக்குப பஞ்சஸமஸ்காரமென்னும் தீக்ஷைமுதலியசெயதவைததஞாநாசிரியா 'ஸ்ரீநிவாஸஜீயா' என்பது, 'சிறகுணசசீநிவாதனினனருளா, னறபொருணமூன்றையுமநலனுற வுணர்வோன்' என்னும மாறனலங்காரபபாயிரததாலும 'சிற்குணத திருமலைசசீநிவாதன், பொற்புடைத்திருவடிபோறறியபுனிதன்' என்னும மாறனகப்பொருட்பாயிரததாலும தெரிகிறது. அன்றியும, மாறனலங்காரத்துள்ளே இவ் வாசிரியரைச சில இடங்களில வாழ்ததியிருக்கிறார். அசசெயயுள்கள்வருமாறு —

"முததிககவனேமுதற்காரணனெனறும்
பததிவிடாதேபயிலென்றுஞ்—சததியமாயச
செலவததிருப்பதிவாழ்சீநிவாதன்பகாநத
சொல்விததகமேதுணிந்து"

(காபாலிகாநதியகுளகம. குரவன்வாழ்தது)

"முப்புரிநூனமாபினுன்முக்கோல்கைககொண்டுளான்
பொயப்புலனைவெனறபொறையுடையான்—மெய்பபொருளைச
சேவிக்குநுண்ணுணர்வான்சீநிவாதன்றமியே
னுவிக்கருளபுரிநதாளவான"

(இணை வாகை. துறை. தாபதவாகை)

இவ்வாசிரியர், ஸ்ரீமணவாளமாமுனிகளின் ஆசிரியர் திருவாய்மொழிப் பிள்ளையால் ஸ்தாபிக்கப்பெற்ற திருநகரி உடையவர் (ராமாநுஜர்) ஸந்நிதி எம்பெருமானார் ஜீயர்மடாதீநபரம்பரையில் 8 (?) வது ஸ்வாமியாக எழுந்தருளியிருந்தவர்; திருப்பதிமடத்திலிருந் தெழுந்தருளியவர். (மேற்குறித்த பிரமாணங்களை நோக்குக) இவர் திருப்பதியிலிருந்தெழுந்தருளும்போது கொண்டுவந்த ஸ்ரீநிவாஸன்பட்டத்திற்கு நாளதுவரை நித்தியபூஜையும் உத்ஸவமும் நடத்திவருகிறார்கள். இச்சீயர், தாம் வீற்றிருந்தமடத்தைச்சார்ந்த உடையவர்ஸந்நிதியை ஜீர்ணோத்தாரணஞ்செய்தாரென்பது, பின்வரும் ஆழ்வார்திருநகரித்திருப்பணிமாலைச் செய்யுளால்விளங்கும்

"இவர்ந்தபூதூரேதிராசன்கோயிலை
யுவந்தனைத்தழகுநகண்டிலகினோங்கினன
சிவந்தபங்கயமுகன் சீநிவாசமா
தவனதிரிகோநகோன்மாதவர்கிரீடமே"

சென்னை ராஜாங்கக்கைகையெழுத்துப்புத்தகசாலைப் புத்தக அட்டவணையில் இவரை ஸ்ரீநிவாஸாசார்யர் என்றெழுதியிருக்கிறது. இச்சீயர்சுவாமி, உபயவேதாந்தபரவாதத்கார்யத் திக்குவிஜயஞ்செய்தவராகமியாயிருந்தாரென்று சொல்லப்படுகிறது.

இந்நூலாசிரியர்செய்தவேறுநூல்கள்:—1. மாறனகப்பொருளும் அதன் உதாரணம் நூற்றெட்டுத்திருப்பதிக்கோவையும். 2. திருக்குருகாமான்மியம். 3. நம்பெருமாள்மும்மணிக்கோவை. 4. மாறன் கிளவிமணிமாலை முதலியன. இவற்றில் முன்னையதைத்தவிர மற்றைய நூல்களெல்லாம் மாறனலங்காரத்தில் உதாரணமாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**காலம்**:—இந்நூலால் இவர்காலம் இன்னதென்று தெரியாமற்போன போதிலும், இவர்செய்த மற்றொருநூலாகிய திருக்குருகாமான்மியம் அரங்கேற்றியகாலம் அதிற் குறிக்கப்பட்டிருப்பதால் அதிலிருந்து இவர்கால மின்னதென்றறியப்படுகிறது. அச்செய்யுள்வருமாறு:—

"அறந்திகழாண்டவையெழுநூற்றிருபான் மூன்றி
லணிகிளர்கார்த்திகைமாதமெட்டில்வாழ்வு
சிறந்திடுதிங்களினுத்தரத்திலேகா
தெசியின்மகரமுகூர்த்தத்திருந்தமுறறத

துறந்தவரெண்மகிழ்மாறர்திருமுன்னுதிச்
சுருதியுடன்மிருதியுஞ்சொற்றமிழின்வாய்மை
பிறந்தபெருங்காப்பியமுந்தெரிந்தோர்கேட்கும்
பெற்றியுடனரங்கேற்றப்பெற்றதன்றே"

இதிற குறிப்பிட்டுள்ளவருஷம் கொலலம ஆண்டு. கொல்லமாண்டு 723-வது எனவே, இப்போது 1090 நடபபதால, 365 வருஷங்களுக்கு முன் இவர் இருநதாரென்றேறபடுகிறது. குருகாமான்மியததிலிருநது இந்நூலுக்கு உதாரணமெடுததிருபபதால இநநூல பின்னுறசெய்யப் பெற்றதென்றுவைததுககொள்வோம. ஆகவே ஏறக்குறைய 360 வருஷங்களுக்குமுன் இநநூலியற்றப்பெற்றதென்பது ஏறபுடைததாகும். ஜீயர்காலம நிா்ணயிககப்புகுமிடததும இக்காலவரையறை சரியாயேற படுகிறது. உரையாசிரியாகாலமும இதுவேயாகும. இதுபறறியேதான் 'செநதமிழில்' இரண்டுமூனறிடங்களில, உரையாசிரியராகிய இரததிந கவிராயர் பிரஸ்தாபமவருமிடததுி, ஸ்ரீ-உவே. இராகவையங்காரவாகள் '350 வருஷங்களுக்குமுன்னிருநத' எனறு குறிபபிட்டிருக்கிறார்கள்.

**இவர்பெருமை** —இவர் பாலியததிலேயே நிகண்டு, இலக்கணம, இராமாயணம, சங்கநூலகள், பழையவுரைகள் இவற்றை ஐயநதிரி பறக்கற்றுச் சிறநதவித்வானுகிய தமது தகபபனுரிடம கற்றுவலலுந ராய், மாணுககாக்குப பாடமோதியும, பழையநூலகளைத் தேடித தொகுததுவைததுக 'கல்விக்களஞ்சிய'மொன்றேற்படுததியும, 'பொருட்டொடாநவம்புணாபுலமையோன்' (மா-அக. & அல) என்றபடி புதுவகையான, பெருங்காப்பியம சிறுகாப்பியமுதலான நூலகளியற்றி யும், தங்காலததுவிதவான்களுடனவாதஞசெய்தும, அரசராற் சன் மானிக்கப்பெற்றும் தமிழைவிருததிசெய்து சிறநத ஸ்ரீவைணவப்புலவ ராய்வீற்றிருந்தாா. இவாவிஷயமாய் அபியுகதர் அருளிசசெய்த பின் வருஞ்செய்யுளையுமநோககுக.

"நேற்றுப்பிறந்துவரும்பாவியானநிலாநெருப்புக
காற்றும்படிதொங்கறந்திலனேயருட்கூடற்சங்கந்
தோற்றும்படிசொன்னசொன்னுற்பததொன்பதையைமடதென்று
சாற்றுந்திருக்குருகைப்பெருமாணஞ்சடைக்குட்டியே"

## இந்நூ லுரையாசிரியர்.

இந்நூலுக்குச் சிறந்தவிருத்தியுரையருளிச்செய்தவர் தென்றிருப் பேரைப்பதியிற்பிறந்த காரிரத்நகவிராயர் என்பவரே. தென்றிருப் பேரையென்னும பாடலபெற்ற திவ்யதேசம ஆழ்வார்திருநகரிக்குக் கிழககே மூன்றுமைலதூரததுள்ளது. இவர், திருக்குருகைப் பெருமாள்கவிராயர் அநேகமாணுக்கர்கருப பாடமோதிக்கொண்டு சிறநதவித்வாநுயிருப்பதைக கேளவியுற்று இவரிடம படிக்க ஆழ்வார் திருநகரிககுவநதார். அவரிடம கலவிகற்றுச சிறந்தவிதவாநுஞர். செந்தமிழ்ப்பததிரிகையில இவரைககுறிக்கநேருமபோதெலலாம இவர் பெயரை இரத்திநகவிராயரென்றே குறிததிருக்கிறது. ஆனுல உற்று நோககுமபோது இவரது இயற்பெயா 'காரிரதந' கவிராயரென்ப தென்றுதெரிகிறது. 'காரிரதநம' என்பது ஆழவார்திருநாமம. காரி ராசன்பெற்ற இரத்திநமபோன்ற புதலவன் என்பது இதன்பொருள். 'காரிதந்தருள்கலைக்கடலியறபெயாபுனைந்து' (மா. அல) 'காரிமாறன் சடகோபன்' (திருவாய்) 'காரி..............ரதநம' (மாறன்கோவை) முதலியவற்றையும நோக்குக. இவருரை மிகவுஞ்சிறந்ததோருரை. இவ்வுரையின்றேல் இநநூலின்பெருமை வெளிப்படாது. சங்கநூல்கள் பிறசான்றோர்நூல்கள் முதலியவற்றிலிருந்து மேற்கோள்காட்டியிருக்கி றூர். சில உதாரணசசெய்யுள்களிலுள்ள உள்ளுறையுவமம், ஏனை யுவமம, இறைசசிப்பொருள்முதலியவற்றை அழகாய்விளக்குகிறூர். சில உதாரணசசெய்யுளுககுக குறிப்புரையும சிலவற்றிற்குப் பொழிப் புரையும் கூறுகிறூர். இவர் வேண்டுமிடங்களில் தண்டிமதம், தொல் காப்பியர்போன்ற பிறநூலாரின்கருத்துமுதலியவற்றையெடுத்துக் கூறித தக்கசமாதானங்கூறுகிறூர். உதாரணச்செய்யுள்களைச சூத்திரப் பொருளோடு அழகாய்ப்பொருததிக்காட்டியிருக்கிறூர். இவர்காலம் முன்னேகூறப்பட்டது. இவாசெய்தவேறுநூல்கள்:—தொலகாப்பிய நுண்பொருண்மாலை, பரிமேலழகருரைநுண்பொருண்மாலை, (இது செந்தமிழில் வெளிவந்துளது). ஆசிரியர்செய்த நம்பெருமாள்மும்மணிக் கோவைக்குவிருத்தியுரை, மாறன்பாப்பாவினம் முதலியன.

இவருக்குக் கோயிலில் 'வாகனமாலை'படிப்பதற்காக அக்காலத்தரசன் சிறந்தமானியங்கள்விட்டிருந்தான். இன்னமும சந்ததியார் அனுபவித்துவருகிறார்கள். இவரைப்போலவே இவர்வமிசத்தோரும் சிறந்தவித்வான்களாயும வைணவர்களாயுமிருநது தமிழையபிவிருத்தி செய்தார்கள். ம-ள-ள-ஸ்ரீ தாமோதரமபிள்ளையவர்கள், வெ|ஹஸ்ரீ| மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்கள், ஸ்ரீ-உ. வே. ரா. இராகவையங்காரவர்கள் முதலியோருக்கு அருமபெறறதமிழ்நூல்களருளிய குடுமபம இதுவே. இக்குடுமபததினா ஏடுகளே திருக்கோவையா ருரையாசிரியர் பேராசிரியரென்றும, அசசிடட தொல்காப்பியச செய்யுளியலுரைமுதலியவை பேராசிரியரது; நசசினார்ககினியரதன் றென்றும், பரிபாடலுரையாசிரியா பரிமேலழகா என்றும அறியுமாறு அருமையான பலவிஷயஙகளைத தெரிவிததன. இககுடும்பததார்காப்பாற்றிவைதத ஏடுகளின்பெருமை வெ|ஹஸ்ரீ| வே. சாமிநாதையரவாகள ஸ்ரீ-உ வே. இராகவையங்காரவாகள் முதலியோருக்கே தெரியும. இவ்வமிசததவா வைணவபரமாய எததுணையோ தமிழ்நூலகள்செய்திருக்கிறாகள். தமிழுரைசெய்திருக்கிறாகள். வடமலையப்ப அரசரின் ஸமஸ்தானவிதவான சிறியகாரிரதககவிராயா இவவமசததவா. சாபாநுகரகசகதியுடன் கவிபாடததகுநதபுலவா் இவவம்சத்தி லநேகாிருநதிருககின்றனர். குமரகுருபரசுவாமிகள்வமசபரம்பரையோரில் ஆழ்வாாதிருநகரிககிளையினா அநேகர் இவவமசததாரிடம பாடங்கேட்டிருக்கிறார்களென்றுதெரிகிறது. இமமாறனலங்கார உரையாசிரியர்விஷயமான சிறபபுப்பாயிரசசெய்யுளையெடுததுக்காட்டி இத்துடன் நிறுத்துகிறேன்.

தருகாளமேகக்கவிராயராயன்சடையனன்பாற்
குருகாபுரேசர்புனையலங்காரங்குவலயததே
கருகாதசெஞ்சொலுரைவிரித்தான்கற்பகாடவிபோல்
வருகாரிரத்நகவிராயன்பேரைவரோதயனே.

A. M. சடகோபராமாநுஜாசார்யன்,

நேஷநல்ஹைஸ்கூல்தமிழ்ப்பண்டிதர்,

திருச்சிராப்பள்ளி.

ஸ்ரீ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்துக்களித்த நன்கொடை.

---

இச்சங்கத்தின் பதினொன்காமவருடத்திய அறிக்கைப்பத்திரத்திற் கண்டபடி, சங்கத்தின் முதலுக்காகவும், கட்டிடமகட்டுவதற்காகவும் பொருளுதவிசெய்துள்ளகனவான்கள் இருபத்தெண்மரில் ரூ. 100க்குக் குறைவாகப்பொருளுதவிசெய்திருக்கிற இருவர்தவிர ஏனைய இருபத்தாறுகனவான்களையும், சங்கத்தின் சாசுவத அங்கத்தினராகச்சேர்த்திருக்கிறது. ஷை யார்களிடமிருந்து வசூலானதும் வசூலாகவேண்டியதும் சேர்ந்து மொத்தம் கூடுதலாகியுள்ளதொகை ரூ. 28,275.

இவ்வருடத்தில் இதுவரையிலும், ஷை காரியத்திற்காக அன்புடனே பொருளுதவிசெய்தும் வாக்களித்துமுள்ள கனவான்களின் பெயர்முதலியன அடியில் விவரித்திருக்கிறது. அவர்களின் சங்காபிமானமும், தமிழபிவிருத்தியிலுள்ள ஊக்கமும், சிரத்தையும், அவர்கள் அன்பும் பெரிதும் பாராட்டற்பாலன. அவர்களுக்கு இச்சங்கத்தார் மிக்கநன்றிபாராட்டுகிறார்கள். இதுபோலவே தமிழபிமானச்செல்வர்கள் அநேகர் முன்வந்து உதவிபுரிவார்களென்றே உறுதியாக நம்புகிறோம்.

## இவ்வருடத்தில் பொருளுதவிசெய்தும் வாக்களித்துமுள்ள கனவான்களின் பெயர்முதலியன.

1. மகா-ள-ள-ஸ்ரீ சித. முரு. முருகப்பசெட்டியாரவர்கள், தேவகோட்டை ... ரூ. 250

2. „ அள. சித. லெ. இராமசாமிசெட்டியாரவர்கள், தேவகோட்டை ... ரூ. 350

3. மகா-ா-ா-ஸ்ரீ அடபு. லெ. ராம. லக்ஷ்மணன்செட்டியாரவர்கள், தேவகோட்டை ... ரூ. 150

4. ,, சே வ ராம அரு. இராமநாதன்செட்டியாரவர்கள், தேவகோட்டை .. ரூ. 200

5. ,, லெ அரு லெ. இராமநாதன்செட்டியாரவர்கள், தேவகோட்டை . ரூ. 100

(இவர் இதற்கு முன் வாக்களித்துள்ள தொகை ... ரூ. 100)

6 ,, அரு வீர செ வீரப்பசெட்டியாரவர்கள், தேவகோட்டை .. ரூ. 350

7 ,, அள வீர. சித லட்சுமணன்செட்டியாரவர்கள், தேவகோட்டை . ரூ. 200

8 ,, பள செ லட்சுமணன்செட்டியாரவர்கள், தேவகோட்டை . ரூ. 200

9 ,, பூலாங்குறிச்சி, R. M P V பழநியப்ப செட்டியாரவர்கள் ... ரூ. 1000

10 ,, T. N. சுந்தரராஜ ஐயங்காரவர்கள், B. A., B. L., ஹைகோர்ட்டு வக்கீல், மதுரை. (சங்கத்தின் கௌரவ காரியதரிசி) ரூ. 250

ஆக மொத்தம் ரூ. 3,050

T C. Srinivasa Aiyengar,

T N. Sundararaja Aiyengar,

காரியதரிசிகள்,

12—7—15.

# மதுரைத்தமிழ்ச்சங்கம்.

---

## இச்சங்கத்தார் ஆனந்த ஸ்ரீ பங்குனி மீ 23, 24, 25, (1915-ஸ்ரீ ஏப்பிரல் மீ 5, 6, 7)-ந் தேதிகளில் நடாத்திய தனித்தமிழ்ப் பரீக்ஷைகளிற் றேறிப்பரிசும், யோக்கியதா பத்திரமும் பெறும் மாணாக்கர்களின் விவரம்.

—(o)—

### பண்டிதபரீக்ஷை

தொடர் நிலை
எண்கள். எண்.

II வது வகுப்பு.

1. 1. சு. ஹரிஹரையர், உபாத்தியாயர், மதுரைத்தமிழ்ச்சங்கக்
[கலாசாலை, மதுரை.

2. 2. சத்தியவாகீசுவரையர். தமிழ்ப்பண்டிதர், தமிழ்லெக்ஸி
[கன் ஆபீஸ், ஸெனட்ஹௌஸ், சென்னை.

### பிரவேச பண்டித பரீக்ஷை

I வது வகுப்பு

1. 10 ரெ இராமையங்கார். மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலை, மதுரை. (முதற்பரிசு ரூ. 50 பெறத்தக்க தங்கப்பதக்கம்)

II வது வகுப்பு.

1. 11. மு. இரத்தினவேற்பிள்ளை, மதுரைத்தமிழ்ச்சங்கக்கலா
[சாலை, மதுரை.

2. 12. நா. கனகராஜையர். ௸ ௸.

---

B. இராஜராஜேஸ்வரஸேதுபதி.
அக்கிராசனாதிபதி,
மதுரைத்தமிழ்ச்சங்கம்.

# விளம்பரம்.



மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும் வெளியாகும் "செந்தமிழில்" பிரசுரமாகவேண்டிக் கருதியனுப்புகிற வித்தியாவிஷயமானதும், சாஸ்திரவுணர்ச்சியுள்ளதுமான விஷயப்பிரசனங்களையும், பத்திரிகைக்கனுப்புஞ் சமாசாரங்களையும், ஆராய்ந்தபிப்பிராயமெழுத அனுப்புகிற புஸ்தகங்களையும், நூதன புஸ்தக ஆராய்ச்சி விஷய சமாசாரங்களையும், "செந்தமிழ்"ப் பத்திரிகை விஷயமாய் ஏற்படக்கூடிய சகலவித லெட்டர்களையும், மணியார்டர் வகையறாக்களையும், ஷை தமிழ்ச்சங்கம் அச்சாபீஸில் செய்யவேண்டிய வேலைகளையும், தமிழ்ச்சங்கத்தோடு சேர்ந்திருக்கிற சேதுபதி செந்தமிழ்க்கலாசாலை விஷயமாகத் தெரிந்துகொள்ளவேண்டிய சகல தகவல்களையும் பற்றி எழுதிக்கொள்ளவேண்டியவர்கள் ஷை தமிழ்ச்சங்கம் மானேஜருக்கு எழுதவேண்டியது.

T. A. SUBBAVENKATARAMA AIYER,

*Manager.*

21—1—15.



மதுரைத் தமிழ்ச்சங்கத்து

# 1915ளு ஏப்பிரல்மீ 1வ முதல் 30வ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை. ரூ. அ. ப. | செலவு | தொகை. ரூ. அ. ப. |
|---|---|---|---|
| புதுக்கோட்டை சமஸ்தானம் தர்பார் ஆபீஸிலிருந்து 1915-ளு மார்ச்சுமீ த்துக்குரிய சந்தா வரவு ரூ. | 50 0 0 | சங்கம் மானேஜ்மெண்ட் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு 1915ளு மார்ச்சு மீ த்துக்கும் ஏப்பிரல் மீ சம்பளத்தினின்றும் அட்வான்சாகவும் செல. ரூ | 114-11-5 |
| சங்கத்து சாஸ்வத அங்கத்தினர்களாகிய பாப்பாநாடு ஜமீந்தார் மகா-ள-ள-ஸ்ரீ R சாமிநாதவிஜயத்தேவரவர்கள், தேவகோட்டை மகா—ள—ள—ஸ்ரீ Al Ar Rm நாராயணன் செட்டியாரவர்கள், திருப்பனந்தாள் ஆதீனகர்த்தராகிய His Holiness ஸ்ரீ காசிவாசி சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமியவர்கள் ஆகிய இவர்களிடமிருந்து சந்தா வரவு ரூ | 283-0-0 | ஷை எடிட்டோரியல் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு மார்ச்சு மீ த்துக்கு செல | 67—0—0 |
| சங்கம் மெம்பர்களிடமிருந்து பிரவேசக்கட்டணம் உள்பட வருஷச் சந்தா வரவு ரூ. | 364-14-0 | ஷை பிரிண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு மார்ச்சு மீ த்துக்கும் ஏப்பிரல் மீ சம்பளத்தினின்றும் அட்வான்சாகவும் செல. ரூ. | 184-10—5 |
| | | ஷை பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு மார்ச்சு மீ த்துக்கு செல் ரூ | 52—0—1 |
| | | ஷை பாண்டியன் லைப்ரேரி சிப்பந்திகளுக்கு ஷை மீ த்துக்கு செல் ரூ | 15—0—0 |

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| சங்கம "செந்தமிழ்" சந்தாதாரிடமிருந்து பத்திரிகைக்குச் சந்தா வரவு ரூ | 197—3—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி சந்தா வரவு . ரூ | | 845 | 1 | 0 |
| சங்கப் பதிப்புப் புத்தகங்கள் விற்ற வகையில் வரவு .. ரூ. | | 46 | 3 | 0 |
| இச்சங்க மாபீசில் நடந்த வேலைகளுக்கு Printing income வரவு ரூ | | 385 | 1 | 6 |
| ஷைக்கு பைண்டிங் income வரவு ரூ | | 99 | 4 | 0 |
| சங்கம் காலிநிலத்தில் வைக்கப்பட்டிருக்கும் மரக்கடைக்கு ஆனந்த ஹு பங்குனிமீ' தத்துக்குரிய வாடகை அரி. அ. பொ. வெள்ளையப்ப நாடாரிடமிருந்து வரவு ... ரூ. | | 65 | 0 | 0 |
| கத்தி சாணை பிடித்த வகையில் வரவு ரூ. ... | 1—8—0 | | | |
| சங்கம் கலாசாலையில் 1910-ஹு த்தில் உபாத்தியாயராயிருந்த Mr. சுந்தரேசையரிடமிருந்து கலா | | | | |

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு 1915ஹு ப்பிரவரி மாசமுதல் மாசங்களுக்கு சம்பளத்திற்காகவும் மாணவர்களுக்கு போஷணைக்காகவும் செல ரூ. 199—7—0, 1910ஹு மாசமீ' வேலை பார்த்த உபாத்தியாய Mr. சுந்தரேசையருக்கு சம்பளம் செல் ரூ. 15-7-9; ஷை யாரால் கலாசாலை சபைக்குச் செல்லாக வேண்டிய தொகையை சபைக்குச் சேர்த்த வகையிற் செல் ரூ. 15-7-9; ஆக மொத்தம் செல் ரூ. .. | 230—6—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி சங்கம் எஸ்டாபிளிஷ்மெண்டுக்கு சம்பளம் செல் ரூ .. | | 663 | 12 | 5 |
| பிரிண்டிங் ஆபீஸ் சம்பந்தமாக இஞ்சின் மெஷின் வகையறாவுக்கு எண்ணெய் வாங்க செல் ரூ | 18—4—9 | | | |
| ஷை ஆபீஸ் சம்பந்தமாக Ink வகையறா கண்டின்ஜென்ஸி சாமான் வாங்க செல் ரூ. | 8—6—4 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செல் ரூ. . | | 26 | 11 | 1 |
| பைண்டிங் ஆபீஸ் சம்பந்தமான வஜ்ஜிரம் வகையறா கண்டின்ஜென்ஸி சாமான் வாங்க செல் ரூ. ... | | 21 | 1 | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| சாலையைச்சேர்ந்த சபைக்குச் செல்லாக வேண்டிய ரூ. 25—6—6 க்கு Partpayment ஆக வரவு ரூ. | 15—7—9 | | | |
| தபாலிலனுப்பிய சாமான்களுக்கும், அக்கிராசனாதிபதி அவர்களின் உத்தரவுப்படி தந்தி கொடுத்ததற்கும் சார்ஜ் வரவு ரூ. .. | 0—11—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி Miscellaneous வரவு ரூ. ... | | 17 | 10 | 9 |

| | | | | |
|---|---|---|---|---|
| சங்கமாபீஸ் உபயோகத்திற்கு Paper வகையறா Stationery Contingencies சாமான்கள் வாங்க செல் ரூ. | 6–10–9 | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் ஆர்டர்கள் உபயோகத்திற்கு டை சாமான்கள் வாங்க செல் ரூ. | 113–14—3 | | | |
| பைண்டிங் ஆபீஸ் ஆர்டர்கள் உபயோகத்திற்கு தோல் வகையறா சாமான்கள் வாங்க செல் ரூ. . | 18—5—3 | | | |
| கலாசாலை உபயோகத்திற்கு Paper வகையறா Stationery Contingencies சாமான்கள் வாங்க செல் ரூ. | 1—3—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செல் | ரூ. | 140 | 1 | 9 |
| பாண்டியன் லைப்ரரி உபயோகத்திற்கு தருவிக்கும் Hindu Swadesamitran பேப்பர்களுக்குச் சந்தா செல்லாக்கியது | ரூ. | 7 | 0 | 0 |
| ஆபீஸ் உபயோகத்திற்குத் தயாரிக்கும் பிளாக்குகளுக்காக அட்வான்சு செல் | ரூ. . | 5 | 0 | 0 |
| பிரிண்டிங் மெஷின் Slight repair செய்த வகையிற் செல் | ரூ. | 0 | 10 | 0 |
| சங்கமாபீஸ் கரெஸ்பாண்டென்ஸ் V. P. etc. சம்பந்தமாக போஸ்டேஜ் வகையிற் செல் | ரூ. .. | 18 | 12 | 0 |
| ஆபீஸ் உபயோகத்திற்குத் தருவித்த சாமான்களுக்கு ரயில்சார்ஜ் செல் | ரூ. ... | 2 | 4 | 0 |
| சங்கமாபீஸ் வைத்திருக்கும் கட்டிடத்திற்கு 1915ஹு ஜனவரி மாதக் | | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | காக ரூ 37-3-0, பிபபிரவரிமீ த துககு ரூ 43 ஆகமொததம வாடகை செல் | ரூ | 80 | 3 | 0 |
| | | | | சங்கம தனிததமிழுபபரீக்ஷை நடைபெறும சமபநதமாகசசெலவு | ரூ | 1 | 11 | 0 |
| | | | | Overtime work செயதசிபபநதிகளுககு சமபளம செல ரூ | 9—4—8 | | | |
| | | | | இராமநாதபுரம வகையரு இடஙகளுககு Bill arrears வகையரு வசூல செயய பில்கலெகடா போயவநத வகையில செல ரூ | 4—3—0 | | | |
| | | | | ஆபீஸ் business சமபநதமாக வண்டி வாடகையிற செல ரூ. | 0—12—3 | | | |
| | | | | ஆபீசைச சோநத இடஙகளை நனருய பெறுககி சுததமசெயத வகையிற செல ரூ | 0—3—0 | | | |
| | | | | ஆக மெறகாட்டிய விவரபபடி Miscellaneous செலவு | ரூ. | 14 | 6 | 11 |
| ஆக மொததம வரவு ரூ. .. | 1508 | 4 | 3 | * By Pass Book No 577 Rs 462—2-6 | ஆகமொததம செலவு ரூ | 981 | 9 | 5 |
| சென்ற மார்சசு மீ 31ந் கடைசித தேதியில் நின்ற பாககிததொகை ரூ | 173 | 12 | 7 | Do 102 Rs. 152-14-2 By cash in hand Rs 85—6-9 | * போகபாககியிருபபு ரூ | 700 | 7 | 5 |
| ஆக மொததம ரூ . | 1682 | 0 | 10 | | ஆக மொததம ரூ | 1682 | 0 | 10 |

Audited and found correct,
V. S. Ramaswami
4-5-15. *Auditor*

T. A Subbavenkatarama Iyer
*Manager.*
3—5—15

# மாறனலங்காரத்தின்சித்திரபத்திரங்கள்.

## க. நான்காரச்சக்கரபெந்தம்.

### ௬௭௭, ௬௭௮-ஆம்பக்கங்களிலுள்ளது.

வானமாதியவானவா
வானவாமனுவானவா
வானவாமனமானவா
வானமாணிறமானவா.




இது, நடுவுநின்று கீழாரின்வழியிறங்கி யிடஞ்சென்று அடுத்த ஆரின்வழிநடுவடைந்து முதலடிமுற்றி, மறித்தும நடுவுநின்று அவ்வாரின்வழிதிருமபி யிடஞ்சென்று அடுத்தஆரின்வழி நடுவுசென்று இரண்டாமடிமுற்றி, அவ்வாறே மூன்றாமடி நான்காமடிகளுஞ்சென்று முற்றியவாறுகாண்க.

## உ. இதுவும் நான்காரச்சக்கரபெந்தம்.

சஎ௮, சஎகூ-ஆம்பக்கங்களிலுள்ளது.

---

தேவாமோகூராதிதமகிபாமாமோக
பூவாளிஒஒபொருதலைக்க—வோவாது
துங்கமுரசாயதேதுன்பமெனுமபூமகடகு
வெஙகணலாவாளேனவிது.




இது, மேலாரின்முனைதொடங்கியிறங்கிக் கீழாரின்முனையிறுதி சென்று முதலடிமுற்றி, இடப்பக்கத்தாரின்முனைதொடங்கி வலப் பக்கத்தாரின்முனையிறுதிசென்று தனிச்சொல்லகப்பட விரண்டாமடி முற்றி, மறித்தும் அம்முனைநின்ற துகரந்தொடங்கி வட்டைவழியே யிடஞ்சுற்றி மூன்றாமடியும நான்காமடியுஞ்சென்று, தொடங்கிய துகரத் தை மறித்துங்கொண்டுமுற்றிக் குறட்டினிடமேதிருமலையெனநின்ற வாறுகாண்க. ஒகார அளபெடையறிகுறியொழியநின்றது.

# ௯. ஆறுரச்சக்கரபெந்தம்.

## ௪௭௬, ௪௮௰-ஆம்பக்கங்களிலுள்ளது.

---

மாதவனேதென்னரங்கேசமான்மருளாகமிகு
போதனுமன்பிற்றொழுகேசவபுரைகூர்பவமே
வாதிதமாருதற்கிங்கேயெனுருயிர்காபொதுவே
வேதநமாநமபோதனைவாக்குள்ளமேதகவே.



இது, இடப்பக்கததாரின்முனைநின்றுதொடங்கி வலப்பக்கத்தாரின் முனையிறுதிமேலேறி ஓரடிமுற்றி, அடுத்த கீழாரின்முனைநின்று மேலாரின்முனையிறுதிமேலேறி இரண்டாமடிமுற்றி, அடுத்த வலப் பக்கத்தாரின்முனைநின்று இடப்பக்கததாரின்முனையிறுதிமேலேறி மூன் றாமடிமுற்றி, முற்றியவேகாரத்தினின்று மறிததுநதொடங்கி வட்டை வழியிடஞ்சுற்றிசசென்று மறித்தும் அவ்வேகாரத்தைக்கொண்டு நான் காமடிமுற்றியவாறுகாண்க.

---

## ச. எட்டாரச்சக்கரபெந்தம்.

### ச௲௦-ஆம்பக்கத்திலுள்ளது.

---

தண்மதிநிகரவதயங்கியவதனம
பொனனணிமுலைநிடதபபுரைவரைநிகா
மடிசோதருதாமதபததாககெட்டா
மாறனறுடரிமலைதனமின்போன்றொளிர்
தணணென்பொறசுனைமனனியமாமல
ரமமடவாரமைபுண்டாட்டமாகணணே.




[மறுபக்கம் பார்க்க.]

இது, இடக்குறுக்காரின்முனைதொடங்கி வலக்குறுக்காரின்முனையிறுதிசென்று முதலடிமுற்றி, அதனையடுதத இடககீழாரின்முனைதொடங்கி அதனெதிா மேலாரின்முனையிறுதி இரண்டாமடிமுற்றி, அதனையடுதத கீழாரின்முனைதொடங்கி யதனெதிாநின்ற மேலாரின்முனையிறுதிசென்று மூன்றாமடிமுறறி, அதனையடுதத வலக்கீழாரின்முனைதொடஙகி யெதிர்நின்ற மேலாரின்முனையிறுதிசென்று நான்காமடிமுற்றி, முதலடிதொடங்கியதகரததினின்று வட்டைவழியே யிடஞ்சுற்றி ஐந்தாமடியாறாமடிகள்முற்றியவாறுகாண்க.

இதனுள், முதலடிதொடங்கிவநத குறடெழுததுககளை யிடஞ்சுற்றிப்படிக்க வடமலையபபனென்னுந திருநாமமவருமாறுகாண்க.

## ௫. இதுவும் எட்டாரச்சக்கரபெந்தம்.

*௪௮௧, ௪௮௨-ஆம்பக்கங்களிலுள்ளது.*

---

சேடுறுதட்டபசீரிமகிரிக்கைவிலின்
போரபொருவீரபுராரிசெற்றத்தடர்த
தின்பமதுறவமரியலருணிருதனோ
முன்புமேதகமராரிமபர்கமபாலுறு
சேர்மழைபோனிறதிருவுறைமுதல்வன்
தாரிணைததாளெதிர்தாளுற்றுன்னெஞ்சே.



[மறுபக்கம் பார்க்க.]

இது, இடக்குறுக்காரின்முன்னைநின்று தொடங்கி அதனெதிராரின் முன்னாயிறுதிசென்று முதலடிமுற்றி, அடுத்தஇடக்கீழாரின்முன்னைநின்று அதனெதிராரினமுன்னாயிறுதிசென் றிரண்டாமடிமுற்றி, அடுத்த கீழாரின்முன்னைநின்று எதிர்த்தமேலாரின் முன்னாயிறுதிசென்று மூன்றாமடி முற்றி, அடுத்தவலக்கீழாரின முன்னைநின்று அதன எதிராரின முன்னாயிறுதி சென்று நான்காமடிமுற்றி, முதலடிதொடங்கிய சேகாரமதொட்டு மடைமடைவழியிடைஞ்சென்று எதிராரினிறுதியில் ஐந்தாமடிமுற்றி, அத னடுத்தஅறைதொடங்கி அம்முறைசென்று முனைதொடங்கிய சேகாரத்தைக்கொண்டு ஆறாமடி முற்றியவாறுகாண்க.

முதலடிதொடங்கிக் குறட்டிலவிழுமெழுத்துக்களை யிடைஞ்சுற்றிப் படிக்கச் சிராமராமசெயமென்னும ராமதோத்திரம்வருதலும், குறட்டி னின்றும ஐந்தாமறைகளில் இடைஞ்சுற்றிப்படிக்கத் "தருமமேகைதரும" எனவருதலுங்காண்க.

# கூ. பதுமபெந்தம்.

௪௮௨, ௪௮௩-ஆம்பக்கங்களிலுள்ளது.

---

மாருமாலாலேமாருமா
மாருமாவேளேமாருமா
மாருமாகோவாமாருமா
மாருமாவாதேமாருமா.




இது, நடுப்பொகுட்டினின்றும் மேலவலக்கோணததுள்ள அகவிதழ்புறவிதழ்சென்று வலமே அடுததபுறவிதழகவிதழ்வழியே பொகுட்டிணிழிந்து அடுதத அகவிதழ்வழிபுறவிதழ்சென்று முதலடிமுற்றி, மறிததும் பொகுட்டினின்றும் கீழ்வலக்கோணததுள்ள அகவிதழ்புறவிதழ்வழி அடுதத கீழ்க்கோணத்துள்ள புறவிதழகவிதழ்சென்றுபொகுட்டிணிழிந்து கீழிடக்கோணததுள்ள அகவிதழ்வழியதன்புறவிதழ்சென்று இரண்டாமடிமுற்றி, மறித்தும் பொகுட்டினின்று கீழிடக்கோணத்துள்ள அகவிதழ்புறவிதழ்வழி இடக்கோணத்துள்ள புறவிதழகவிதழ்சென்று பொகுட்டிணிழிந்து மேலிடக்கோணததுள்ள அகவிதழ்வழி அதன்புறவிதழ்சென்று மூன்றுமடிமுற்றி, மறிததும் பொகுட்டினின்று மேலிடக்கோணத தகவிதழ்புறவிதழ்வழி மேற்கோணத்துள்ள புறவிதழகவிதழ்சென்று பொகுட்டிணிழிந்து முதலடிதொடங்கிசசென்றகோணத்திதழ்களிற்சென்று நான்காமடிமுற்றியவாறுகாண்க.

# ௭. முரசபெந்தம்.

௪௮௫, ௪௮௬-ஆம்பக்கங்களிலுள்ளது.

போதவானதுவாதரா
மாதவாதணவாதநா
நாதவாணதவாரவா
வேதவானதுவாரகா.




செவ்வேவரைந்தநான்கடியுள்ளும் முதலடியுமீற்றடியும் நான்கடிகளிலும் மாறுடிக் கோமூத்திரிபோலமடங்கிச்சென்று முற்றியும், இரண்டாமடிமுற்சதுரத்தின்வலஞ்சென்று நான்கடியிலும் மாறுடி மூன்றுமடிமுதலெழுத்தான்முடிந்தும், மூன்றுமடி, பிற்சதுரத்தின் இரண்டாமடியினிறுதியெழுத்தினின்றுதொடங்கி இடஞ்சென்று நான்கடியினுமாறுடி மூன்றுமடியினிறுதியெழுத்தான் முடியுமாறுகாண்க. அன்றியும் இரண்டுமூன்றுமடிகள் முறையே முற்பாதிபிற்பாதிகளில் வலமிடமாகத் தம்முண்மாறுடிமுடிவதுங்காண்க

## ௧௮. உபயநாகபெந்தம்.

௪அ௪, ௪அ௫-ஆம்பக்கங்களிலுள்ளது.

(இதன் விவரணம் மறுபக்கம்பார்க்க.)

மாறன்சடகோபன்வண்குருகூர்வாழ்பொருநை
யாறணிமேயவன்னமே—யேறுத
தமனுமாமாசரதன்றண்மொழிதற்பாமன்
னெமர்யாயெமையாளிறை.

அறமுமறமமைமந்தவன்பென்பதுவும்
பெறனன்னலமதுண்மைபோா—துறுபாறகோா
மானமணமேநிணைமான்மாமேகததந்தமே
யேணமெமைமயாளியை.

இவ்விரண்டுபாட்டும், இரண்டுநாகங்களின் தலைநின்றுதொடங்கி வான்முனைகளிறுதியாக இடையிடையே ததந்தம்முடலினும, பிறிது பிறிதுடலினும் மாறாடி முடிபுமாறு காண்க.

## ௯. இரதபெந்தம்.

௪௮௬, ௪௮௭-ஆம்பக்கங்களிலுள்ளது.

---




(இதன் விவரணம் மறுபக்கம்பார்க்க.)

நாரரரரராயநயனயணாவிண்ண்
ணாராமணாயனிலமாயவா—சீராய
நன்காநமநமநன்காநமநம
மன்காமன்றுதாய்நம.

மாயவனேவேதமதியேவயநாக
பாயவனேதேநளினபாதாபராபரா
தூயவனேகாரணாபூரணாதோணிலமா
ணாயகனேசீராகநாராயணாயநம.

இவற்றுள், முதற்பாட்டு, மேற்பாதியின்சிகரத்தினின்றும் இரு மருங்கிலுமிடையிலும நாராயணாயநமவென்னும்மந்திரம்நிற்க வலமிடமாகமடங்கியிறங்கிமுடியுமாறும, பிற்பாட்டு, கீழ்ப்பாதியின் மேற்றளததின்முதலறைதொடங்கி வலமிடமாகமடங்கியிறங்கி அடியறையினின்று நடுப்பத்தியில நாராயணாயநமவென்றேழ்தளத்தும மாறுடியேறி முடியுமாறுங்காண்க. இதனுள விண்ண் என்னுமொற்றளபெடையோரெழுத்தாதலால அறிகுறியொழிய வோரறையுள்நின்றது.

## ௧௦. சருப்பதோபத்திரம்.

**௪௬௦, ௪௬௧ - ஆம்பக்கங்களிலுள்ளது.**

தேமாபூமாமாபூமாதே
மாதாகாவாவாகாதாமா

மாவாலாநீநீலாவாமா.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தே | மா | பூ | மா | மா | பூ | மா | தே |
| மா | தா | கா | வா | வா | கா | தா | மா |
| பூ | கா | வா | லா | லா | வா | கா | பூ |
| மா | வா | லா | நீ | நீ | லா | வா | மா |
| மா | வா | லா | நீ | நீ | லா | வா | மா |
| பூ | கா | வா | லா | லா | வா | கா | பூ |
| மா | தா | கா | வா | வா | கா | தா | மா |
| தே | மா | பூ | மா | மா | பூ | மா | தே |

இது, நாற்புறமும் தலைப்பாகவைத்து வரிசையாய்ப்படித்தாலும், மடக்கிப்படித்தாலும், நான்கடியையும் மேனின்று கீழிறங்கியும் கீழ்நின்று மேலேறியும்படித்தாலும் சொரூபங்கெடாமல் மாலைமாற்றாய் முடியுமாறுகாண்க.

## கக. கூடசதுர்த்தம்.

சகூக, சகூஉ - ஆம்பக்கங்களிலுள்ளது.

நாதாமானதா தூயதாருளா
ணீதாணுவாசீராமணுமணு
போதாசீமாணுதரவிராமா
தாதாதாணீவாமணுசீதரா.

இப்பாட்டின் நான்காமடியானது, முதன்மூன்றடியையும் கீழ்கோட்டியவாறு மேனின்றுகீழுங் கீழ்நின்று மேலுமாக வெழுதத்தோன்றிய பத்தெழுத்துவரிமூன்றினுள் இடைவரியாய் மறைந்துகிடப்பதுகாண்க.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| தா | தூ | ய | தா | ணு | ணு | ம | மா | ணு | மா |
| தா | தா | தா | ணீ | வா | ம | ணு | சீ | த | ரா |
| மா | ன | ரு | ளா | சீ | ரா | போ | தா | ர | வி |

## கஉ. கோமூத்திரி.

சகூஉ, சகூங-ஆம்பக்கங்களிலுள்ளது.

---

மாயாமாயாநாதாமாவா
வேயாநாதாகோதாவேதா
காயாகாயாபோதாகாவா
பாயாமீதாபேதாபேதா.

மா யா மா யா நா தா மா வா வே யா நா தா கோ தா வே தா

கா யா கா யா போ தா கா வா பா யா மீ தா பே தா பே தா

இது, முன்னிரண்டடிமேலவரியாகவும், பின்னிரண்டடிகீழ்வரியாகவுமெழுதி, அவ்வரியிரண்டையும் கோமூத்திர ரேகைவழிபடிக்க ஒன்றுவிட்டொன்றுமாறுடிமுடியுமாறுகாண்க.

---

## ௧௫. சுழிகுளம்.

௪௬௫-ஆம்பக்கத்திலுள்ளது.

சதிதகனடறுட
திதிதிகாண்ஞாறு
ததிதாகார்கண்ட
கதிகாகிளர்கான.




இது, செவ்வேயெழுதிய நாலடிநான்குவரியுள், முதலடிமுத லெழுத்தினின்றும சுழிரேகைவழியே இடஞ்சுற்றிப்படிக்க நாலடியு முடியுமாறுகாண்க.

# கரு. சதுரங்கபெந்தம்.

## ருoஉ - ஆம்பக்கத்திலுள்ளது.

*மானவனுமேவலாமா றனிததமாமாலை
யானதவபோதனுமாயாய்ந்தகோ—மானவடி
நாதனின்மேனன்கலன்பூணென்முனீவர்தெவனென்
றுதயமாவன்புலமாய.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |

*இசசெய்யுளை இச்சதுரங்கஅரங்கின் நாலுபக்கமும் மையங்களி னுனின்குபதினாறறையிலும நடுவினாலறையிலும் மாதவன் என்னுந் திருநாமமிற்குமாறு ஆராய்ந்து அமைத்துக்கொள்க.

## க௭. இதுவும் கடகபெந்தம். (வேறு)

௫0௩-ஆம்பக்கத்திலுள்ளது.

---

நாகநகராகநிதிநாகரிகராகநிறை
யேகநகராசியிணையில்லா—தாகணிகழ்
தென்னரங்கனுளாயசீராளராஞான
நன்னரங்காக்கையடியேனை.



இது, பூட்டுவாய்நின்று வலப்பக்க மிரண்டாமறைசென்று கீழறையினிறங்கி யவ்வழியே மேலறையிமேலேறியிறங்கி வலஞ்சென்று இடையிடையேயுள்ள குண்டுகளாகிய நான்கறைகளிலுஞ்சென்று மீண்டு மிறுதியறைசென்று முடியுமாறு காண்க. இப்பாட்டிற்கு உரையெழுதப் படாமையாலும் சுத்தபாடந்தோன்றாமையாலும் பெந்தத்திற்குப் பொருந்துமாறு இங்குச சிறிது வேறுபடுத்தியெழுதப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ:

# சூத்திரமுதற்குறிப்பகராதி.

ஸ்ரீ:

# உதாரணச்செய்யுண்முதற்குறிப்பகராதி.

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௭ | ௬ | மாஞேககந் | மாநோககந |
| ௯ | ௯, ௧௩ | பிறனுா | பிறநூா |
| ௧௧ | ௩௨ | இன்றிமையா | இன்றியமையா |
| ௧௪ | ௨ | பாதததை | பததகதை |
| ௧௪ | ௧௯ | மாததிரைவகையு | மாததிரையளவு |
| ௧௬ | ௧௬ | வேறறுமைதானே | வேறறுமைதாமே |
| ௧௭ | ௨௪ | வநதவா | வநதவர |
| ௨௦ | ௧௦ | மொருசாராசிய | மொருசாராசிரிய |
| ௨௬ | ௨௬ | ருணணுப் | ருண்ணும |
| ௩௮ | ௨௭ | முயிறிறு | முயிரிறு |
| ௪௭ | ௨௪ | திருககுகை | திருக்குருகை |
| ௫௦ | ௧௩ | ஒலிகெழு | ஒலிகெழூ |
| ௫௩ | ௧௨ | பொருந் | பொரு |
| „ | ௨௫ | பகலுரைவ | பகலுறைவ |

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௫௭ | ௨௧ | மிரவாதிருப்ப | மிறவாதிருப்ப |
| ௬0 | ௨௪ | வாயமையிலின | வாய்மயிலின |
| ௬௧ | ௨௭ | கோண்டு | கொணடு |
| ௬௩ | ௧௨ | வகலமுறையிற் | வகல முறையிற் |
| ″ | ௧௫ | குறளாய்க | குறளாய் |
| ௬௫ | ௧௬ | பெயாநிலைக்கிளவியும் | பெயாநிலைககிளவி |
| ௬௭ | ௩ | பாடாண் | பாடாண் |
| ″ | ௨௧ | பாட்டுமுதலிய | பாட்டுவினைமுதலிய |
| ௬௮ | ௬ | சீனிவாதண் | சீநிவாதன |
| ௭0 | ௧௭ | நாப்பண் | நாபப |
| ௭௨ | ௨௮ | ஈருததம | ஈருக ஒன்பதும |
| ௭௬ | ௯ | பொருட்டொருஞ | பொருட்டொடருஞ |
| ௮௨ | ௨௬ | மிருமாந | மிறுமாந |
| ௮௬ | ௬ | வணஙகுன | வணங்குந |
| ௯௧ | ௨௫ | றூககின | றூககின |
| ″ | ௨௯ | துறி | துற |
| ௯௨ | ௨ | மென்பதஞனும | மெனபதஞனும |
| *௯௩ | ௬, ௯ | பொருனை | பொருநை |
| ௯௯ | ௨௭ | ஞலாம. | ஞலறியலாம. |
| ௧00 | ௧௪ | மகளீரிடததுத | மகளிரிடததுத |
| ௧0௫ | ௨௭ | புரேசாப | புரேசா |
| ௧௧௨ | ௨ | குரங்கினை | குறங்கினை |
| ″ | ௬ | வான்றோயமதி | வாண்றோய்கதிர் |
| ″ | ௨௪ | இனனென | இலலென |
| ௧௧௩ | ௧௭ | போறையே | பொறையே |
| ௧௧௭ | ௧௨ | கெற்போதகம் | கொப்போதகம் |
| ″ | ௧௨ | வடகோடு | வடகொடு |
| ௧௧௮ | ௨௧ | முறகு | முதற்கு |
| ௧௩௪ | ௧௬ | மன்னவாகன | மனனவாகன |
| ௧௪௨ | ௧௮ | சொலலேனவே | சொல்லெனவே |
| ௧௫0 | ௨௧ | நாவகலாப் | நாவகலா |
| ௧௮௪ | ௧௮ | விருட்பிழம்பின்மேல | விருட்பிழம்பு |
| ௧௮௫ | ௨௩ | விரற்சாடு | விரற்சரடு |
| ௧௮௭ | ௫ | அயிந்திர | ஐந்திர |
| ௧௯௨ | ௧௫ | காக்கை | ,வளாததகாக்கை |
| ″ | ௧௬ | இலகடிநத | இலகடிந்த, |
| ௧௯௩ | ௭ | வருந | வருஉங் |
| ௧௯௬ | ௪ | ஏநதொழில | ஏந்தெழில் |

*௩௬௯, ௩௮௮, ௪0௧, ௪௨௫, ௪௫௫, ௪௮௫, ௫௧௬, ௫௧௭, ௫௨௧-ஆம்பக்கங்களிலுமுள்ள பொருனை யென்பவற்றை பொருநை எனத்திருத்திக்கொள்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| ௨0௧ | ௧௬ | மிளர் | மிளிா |
| ௨0௯ | ௩0 | (என்பது — | என்பது:— |
| ௨௧0 | ௨ | பிணிககு) | பிணிக்கு |
| ௨௧௮ | ௬ | பூண்குனரு | பூண்குநரு |
| ,, | ௭ | றிடுகுனரு | றிடுகுநரு |
| ,, | ௮ | செலகுனரைமீட்குனரு | செல்குநரைமீட்குநரு |
| ௨௨௮, ௨௨௯ | ௨௪, ௨௯ | கெற்பம | கொப்பம் |
| ௨௫௫ | ௨௮ | சிலபபின | சிலம்பின |
| ௨௫௯ | ௯ | விரற்சாடும் | விறசரடும |
| ௨௬௪ | ௨௬ | ஒதிய | ஓதிய |
| ௨௭௫ | ௬ | தரஞ்செய் | தறஞ்செய் |
| ௨௭௬ | ௬ | அகாயமும | ஆகாயமும |
| ௨௮௪ | ௩௧ | பசுதத | பசிதத |
| ௨௯0 | ௧0 | அதனேடும | அதனெடும |
| ௨௯௧ | ௨, ௬, ௧0 | அஃதாணறு | அதாணறு |
| ௨௯௨ | ௭, ௧௨ | வினபத | வின்பந |
| ௨௯௫ | ௨௩ | தறியநா | தறியாநா |
| ௩0௩ | ௨௨ | சிறது | சிறிது |
| ௩௧௭ | ௧௩ | நாடாக | நாளாக |
| ௩௨௯ | ௫ | சோரூப | சொரூப |
| ,, | ௯ | திரையஙகளை | திரயஙகளை |
| ௩௩௪ | ௩0 | வுன்னியிர் | வுனனுயிர் |
| ௩௪௪ | ௨௩ | புகழவண | புகழவன் |
| ௩௬௪ | ௨ | பொறிககறி | பொரிககறி |
| ௩௭௬ | ௧௩ | புரேசர்ப | புரேசா |
| ௪௩௪ | ௨௩ | ஆது | ஆ அது |
| ௪௭0 | ௧௪ | குருகளோடுங் | குருகுகளோடுங் |
| ௫௨0 | ௧0 | திருவுர | திருவுதர |
| ௫௨௨ | ௨௩ | ஞெருும | ஞெறும |
| அவையடக்க[ம்] | | மெயயிழாய் | மொய்யிழாய் |

முகவுரை ஏழாம்பக்கத்தில் 13-ம்வரியிற் சிறப்புப்பாயிரமெனபதுதொடங்கி அப்பத்திமுடிவுவரையுள்ளதொடாகளை எடுத்துவிட்டு, 'பாயிரவுரையிலும், பொதுவியலின்முதற்சூததிரவுரையிலும இந்நூலாசிரியர்கூறியதாக மேற்கோள் காட்டிய, "பொற்புறவிழுமிய," "கடவுள்வணக்கமுங்," "உட்கோள்கண் ணழிப்," "கருத்துரைசூத்திரம்,' "தொகுத்தசொற்றேனும்," "ஒலிகெழு சொற்பொருள்," "மனுநூறும்யாப்பின்" என்னும் முதற்குறிப்புடைய சூத்தி ரங்களேழையுங்கூட்டிப் பதிகமெழுபத்தொன்றென்று மெண்ணினர்போலும்' எனச் சேர்த்துக்கொள்க.

ஸ்ரீ:

# திருப்புல்லாணிமாலை.



இது

மதுரைத்தமிழ்ச்சங்கத்துச்

செந்தமிழ்ப்பத்திராதிபர்

திரு. நாராயணையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப்பிரசுரம்—கூஅ.


மதுரை:

தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1915.

ஸ்ரீ:

# முகவுரை.

தெய்வப்புலமைத்திருவள்ளுவராற் செய்யப்பெற்ற திருக்குறளின் றிட்பநுட்பம்பொருந்திய கருத்துக்களைத் தொன்றுதொட்டுப் பல தமிழ்ப் பெரும்புலவரும் தத்தம்பாடல்களினிடையே வேண்டுமிடங்களில் எடுத்தாளுவது பலருமறிந்ததே.

அம்மட்டினமையாது "முன்னோர்மொழிபொருளேயன்றியவர் மொழியும் பொன்னேபோற்போற்று"வாராகித "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப்பெய்யும் (பெரு)மழை" யென்றவப், பொய்யில் புலவன் பொருளுரை* என மணிமேகலையிற் சீத்தலைச் சாத்தனாரும், "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின்" எனவும், "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" எனவும் திருக்களிற்றுப்படியாரில் உய்யவந்ததேவரும், "தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி, வலைப்பட்டார் மற்றையவர்" என நெஞ்சுவிடுதூதிற் கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியரும், சொற்றொடர்களாகவும், முழுச்செய்யுள்களாகவும் அருமை பாராட்டி எடுத்தாளுவாராயினர்.

பின்னுஞ்சிலர், திருக்குறளினோரோரதிகாரப்பொருளுக்கு மொவ்வொரு சரித்திரத்தை உதாரணமாகக்காட்டி, அதனைமுடிக்கும் ஒவ்வொருகுறள் வெண்பாட்டை யிறுதியிற்கூட்டி, வேற்றுப்பொருள்வைப்பென்னுமணிபெற வெவ்வேறுபாமாலைகளுஞ் செய்துபோந்தனர்.

அப்பாமாலைகளாவன — சோமேசர்முதுமொழிவெண்பா, சிவசிவ வெண்பா, இரங்கேசவெண்பா, வடமலைவெண்பா என்னுமிவை முதலியனவாம்.

இம்முறைபற்றியே இப்பாமாலையும், திருக்குறளினோரோரதிகாரத்தில் ஒவ்வொருகுறட்பாவைமேற்கோளாகவைத்து அதற்கிசைந்த விஷயங்களையமைத்துத் திருப்புல்லாணியிற் கோயில்கொண்டெழுந்தருளிய தெய்வச்சிலைப்பெருமாள்பேரிற் றோத்திரரூபமாகிய கட்டளைக் கலித்துறைச்செய்யுளால் இயற்றப்பட்டிருக்கிறது.

---

* மணிமேகலை காதை 22. அடி 59—61.

# முகவுரை

இதில், கட்டளைக்கலித்துறையுள், குறள்வெண்பாவையமைத்த திருக்குந்திறமையினருமை பாராட்டத்தக்கதே. இசையாலும் எதுகை மோனைகளாலும் ஒன்றற்கொன்று வேறுபட்ட விருத்திறப்பாட்டிற்கேக தேசத்தில் ஐக்கியந்தோன்றப்பாடுமிடத்துண்டாகுமிடர்ப்பாடு பலவாதலால், ஓரோவழி மேற்கோளில் ஓரோவெழுத்து விரித்தும், தொகுத்தும், வகையுளிகொண்டும் படிக்கத்தக்கதாயிருக்கிறது. இடையிடையே சிலகுறள்களுக்குள்ள அதிகாரப்பொருளைக்கருதாது, தோத்திரத்துக்கேற்றவாறு பிறிதுபொருள்கொள்ளவும், சொற்சுவை பொருட்சுவை சுருங்கவும் பாடப்பட்டிருக்கிறது.

ஒருபிரதியேகிடைத்தமையால், பிழையறப்பரிசோதிப்பதற்கும், சிதைந்த இடங்களில் உண்மைப்பாடங்கண்டெழுதுவதற்கும் இயலாமற்போயிற்று. ஆயினும், ஒருவாறு இடையிடையேவீழ்ந்திருந்த எழுத்துப்பிழையைத்திருத்தியும், சிதைந்த இடங்களில் வேண்டுஞ் சொற்களைப் பிறைக்குறி () கொடுத்தமைத்தும் இம்முறை வெளியிடப் பெறுகிறது. இப்பாமாலையியற்றியவரது பெயர்முதலியவொன்றும் நன்கு விளங்கவில்லை. விளங்கியபின் வெளியிடப்படும்.

இந்நூலெழுதிய ஏட்டுப்பிரதியைச் சங்கத்தார்க்குக்கொடுத்துதவிய ஸேதுஸம்ஸ்தானவித்வான் ஸ்ரீமத்-ரா. ராகவையங்காரவர்களுக்கு இச்சங்கத்தார் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இங்ஙனம்,

திரு. நாராயணையங்கார்,

செந்தமிழ்ப்பத்திராதிபர்.

ஸ்ரீ

# திருப்புல்லாணிமாலை.

காப்பு.

பொன்மாலை சாத்தும புயமாலை யேழ்புவ னம்புரக்கு
மன்மாலை மேல்வைத்த புல்லாணி (மாயனை) வள்ளுவனார்
சொன்மாலை யேற்றிக் கவிநூற்று முப்பத்து மூன்றுரைக்கப்
பன்மாலை நாடுங் குருகூரன் (பாதம் பணிகுவனே)

(அவையடக்கம்)

திருவள் ளுவர்குறட் பாவைக் கவித்துறைச் செய்யுளிற்சேர்த்
தருள்புல்லை மாலைக் க(ழலபணிந் தேத்தலின் யாருமன்னோன்)
பெருமைகண் டென்சொல்லைப் புன்சொலென் னாதன்பு(பெற்றதெனக்)
கருதி மதிப்பா பரிதி மதிப்பெருங் காலமுமே.

## நூல்.

### அறத்துப்பால்.

கடவுள்வாழ்த்து.

மூதுரை வள்ளு வரக ரமுத லவெழுத்தெல்லா
மாதி பகவன் முதற்றே யுலகென லாயமைத்த
நீதி யுனையன்றி நீணில முய்ய நெறிமற் றுண்டோ
மாதவ புல்லைத் தலத்துமென் னெஞ்சத்தும் வாழ்பவனே. (1)

வான்சிறப்பு.

விண்ணன்று விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசியென லாற்புல்லை யூரின்மழை
வண்ணனா சிறந்தவன் வந்தரு ளாவிடில் வாடுமுயிர்த்
தண்ணம் பயிரெனற் கையமுண் டோவிச் சகத்தலத்தே. (2)

நீத்தார்பெருமை.

குறைந்தா ரெனாத்துறந் தார்பெரு மைதுணைக் கூறின்வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்றென லாவிற வாதுனைச்சேர்
துறந்தார் பெருமை யறிந்துமென் போலிகள் சொல்லவற்றோ
மறந்தார்க ணீமறந் தேனுஞ்சொல் லாய்புல்லை வாமனனே. (3)

